ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் தேசிகன் திருவடிகளே சரணம்.

பெரியாழ்வார் அருளிச்செய்த

பெரியாழ்வார் திருமொழி

முதற்பத்து—முதல் திருமொழி

# திருப்பல்லாண்டு.

இஃது

திருக்குடந்தை, கருணைக்கொல்லை அக்கிரஹாரம்
ஸ்ரீ-உ-வே. இளையவில்லி தி. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி
இயற்றிய "அம்ருதவர்ஷிணீ" என்னும் உரையுடன்
திருக்குடந்தை ஸ்ரீ பராங்குச பக்த ஸபையாரால்

ஸ்ரீ ஜனார்த்தன பிரிண்டிங் ஒர்க்ஸ், லிமிடெட்டில்
அச்சிடுவிக்கப்பட்டது.

தாத்ரு-ஹு

1936.



ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் தேசிகன் திருவடிகளே சரணம்

# பெரியாழ்வார் வைபவம்.

இவ்வாழ்வார் பாண்டியநாட்டில், நாட்கமழ்பூம் பொழில் வில்லிபுத்தூர், என்றும், வேயர்புகழ் வில்லிபுத்தூர் என்றும், செங்நெலோங்கி விளைகழனிப்புதுவை என்றும், சொல்லுகிறபடியே பற்பல பெருமைவாய்ந்த ஸ்ரீவில்லிபுத்தூரில், ஓர் ஆனிமாதம் ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் வேயர் தங்கள் குலத்தில் அவதரித்தார்.

இவர்தாம் பகவந் நியமனத்தாலே, நித்யவிபூதியில் நித்ய ஸூரிகள் திரளிலிருந்து, லீலாவிபூதியில், மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து மற்றோர் தெய்வம் பாடியாடிப் பணிந்துழல்கின்ற சேதநர்களைத் திருத்தித் திருமகள் கேள்வனுக்கடிமையாக்கிக் காக்கநினைத்து பகவந்நியமநத்திற் கதீனமான தன்னுடைய சங்கற்பத்தால், வேதமயன்என்று போற்றப்படுகிறபடியுள்ள கருடனை தன்னுடைய அப்ராக்ருத திவ்யமங்கள விக்கிரஹத்திலிருந்து ஒரு அம்சத்தோடு இந்நிலவுலகினில் அவதரித்து, விஷ்ணுசித்தர் எனத் திருநாமம் பூண்டு, பகவத்குணை கதாரகபோஷக போக்யராய், தாமவதாரம் செய்த ஸ்ரீவில்லிபுத்தூரில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கிற வடபெருங்கோயிலுடையான் என்னப்படுகிற ஸ்ரீவடபத்ர சாயிக்குப் பூமாலை ஸமர்ப்பிக்கும் தொண்டுபூண்டு தொல்லை மாலைக்கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றிருந்தார்.

இவர் கருடாம்சமென்பது ஒக்குமாறு எவ்வாறெனஅறிவோம். கருடன் என்பவர், நித்யஸூரிகளின் தலைவர்களில் ஒருவர். இவருக்கு அங்கிருக்கைக்குஸ்தானம் திருமகள் கொழுநனுக்கெதிரில். இவரை எம்பெருமான் திவ்யமங்கள விக்கிரஹபோக்யதை காண்பதற்குரியனவான நிலைக்கண்ணாடியென வனைவரும் நிரூபணம் செய்வார்கள். எப்படி வேதங்களினுள்ளே எம்பெருமான் விளங்குவானோ, அவ்வண்ணமே இவருள்ளும் விளங்குவானயினன்.

இப்படி இவர் நிலைக்கண்ணாடிபோல் விளங்கி நிற்கிறாரென்பதை, மணிமுகுர மிவாக்ரேமங்களம் ரங்கதாம்ந: என்று ஸ்ரீரங்கராஜஸ் தவத்தில் பட்டரும், அக்ரே திஷ்டந்நுதக்ரோமணி முகுரஇவாநந் யத்ருஷ்டேர் முராரே: என்று கருடபஞ்சாசத்தில் ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகனும், அருளிச்செய்து போந்தார்கள். அதுபோலவே இவ்வாழ்வாரும் தன்பரபந்தத்தில் அனேக இடங்களில் அப்பெரு மான் தன்னுள் விளங்குகிறானென்று தாமே யருளிச்செய்கிறார். மேலும் தாம் வேதமயமானவனின் அம்சமென்பது புலப்படுமாறு வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை விட்டு சித்தன் விரித்தன, என்கிறார். எம்பெருமான் தன்னுள் தோற்றும் தோற்றமோ, அரவத்தமளியினோடு மழகிய பாற்கடலோடு மரவிந்தப் பாவையுந்தாமுமாக என்கிறார். அதோடு இவரவதரித்த திருநக்ஷ த்திரமும் கருடன் அவதாரத் திருநக்ஷத்திரமான ஸ்வாதீநக்ஷத்தி ரமே. இப்படியாக அனேக உபபத்திகள் உள்ளது கொண்டு இவர் கருடனின் அம்சமாக அவதாரம் செய்தவரென அறியக்கூடியதாக விருக்கிறது. இவ்வாழ்வாருக்குத் தனியனிட்ட முன்னோர்களும் சரித்திரமிட்ட முன்னோர்களும் இவர் கருடாம்சரெனவே அருளிச் செய்துள்ளார்கள்.

இவ்வண்ணம் இவ்வாழ்வார் வடபெருங் கோயிலுடையா னுக்குப் பூமாலைசாத்தத்திருநந்தவன மமைத்து, செண்பகமல்லிகை யோடு செங்கழு நீரிருவாட்சி யெண்பகர் பூவுங்கொணர்ந்தேன் இன்றிவை சூட்டவாவென்று என்கிறபடியில் அவனுக்குப் பாங் கான பல புஷ்பங்களையும் ஸமர்ப்பித்துக்கொண்டு எழுந்தருளி யிருக்கும் அந்நன்னாளில், தென்மதுரைமாநகரந்தன்னில் ஸ்ரீவல்ல பதேவ பாண்டியன் என்கிற அரசனொருவன் ஆட்சிபுரிந்து வந்தான்.

அவ்வரசன் ஒருநாளிரவில் நகரசோதனையின் பொருட்டு வீதி வலம் வந்து கொண்டிருக்கையில் ஒருவீதியில் திண்ணையின்மேல் தனியே ஒருவர் படுத்திருக்கக்கண்டு அவரையணுகி யெழுப்பி, நீர், யார், இந்த நள்ளிரவு வேளையில் இங்கே தனியேகிடந்து உறங் கக்காரணமென்ன என்றுகேட்க, அதற்கு, அவர், அரசனைநோக்கி, ஐயா, நான்ஒரு ப்ராஹ்மணன் ; கங்கைநீர் குடைந்தாடும் வேட்கை

யால் கங்காயாத்திரையாகச் சென்றிருந்து கங்கைநீர் குடைந்தாடித் திரும்பித் திருவணைகாண்பதற்கென்று திருவணை யாத்திரையாக வந்துகொண்டிருக்கையில் இன்று யாத்திரையில் இந்நகரில் வந்து சேர்ந்ததும் இராப்பொழுது நேர்ப்பட்டு இருள்மூடியதால் ப்ரயாணம் தடைப்பட, விடியுங்காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு இங்கே படுத்திருக்கிறேன் என்ன, அதுகேட்ட அரசனும் அவ்வந்தணரை நோக்கி, ஓய் அந்தணச்ரேஷ்டரே, நீர் தேசஸஞ்சாரம் செய்திருப்பவராதலின், நல்லமார்க்கத்தைக் காண்பிக்கக்கூடிய நீதியேதாகிலும் அறிந்ததுண்டாகில் அதையெனக்கருளல் வேண்டுமென வேண்ட அவரும், மழைகாலமான நான்குமாதத்தில் வெளியில் சென்று பொருளீட்ட முடியாதானதால் அக்காலத்தில் அனுபவிப்பதற்குப் போருமான பொருள்களை மற்ற எட்டு மாதங்களில் சேகரித்துவைத்துக்கொள்ள வேண்டுமென்றும், இராத்திரிகாலத்தில் அநுபவிக்க வேண்டியவைகளுக்கு பகலில் ப்ரயத்தனப்பட்டுத் தேடிவைத்துக்கொள்ள வேண்டுமென்றும், வயதுமுதிர்ந்த காலத்தில் அனுபவிக்க வேண்டியவைகளுக்கு இளம் பிராயத்திலேயே ஏற்பாடுசெய்து வைத்துக்கொள்ள வேண்டுமென்றும், பரலோகத்தில் சென்று அனுபவிக்கவேண்டிய போகங்களுக்கு வேண்டியவைகளை இந்த ஜன்மத்திலேயே நல்லயத்னம் செய்து ஸம்பாதித்துக் கொள்ள வேண்டு மென்றும் பொருள்களைப் பொதிந்து கொண்டிருக்கிற

வர்ஷார்த்த மஷ்டௌப்ரயதேத மாஸாந்
நிசார்த்த மர்த்தந் திவஸம்யதேத |
வார்த்தக்ய ஹேதோர் வயஸா நவேந
பரத்ர ஹேதோரிஹ ஜந்மநாச ||

என்ற ச்லோகத்தைச்சொல்ல அரசனும் அறிவுடையாரொருவனைகையினாலே ச்லோகார்த்தத்தை நன்கு தெரிந்துகொண்டு இந்த ச்லோகத்தில் மூன்றுபாதத்தில் சொல்லப்பட்ட விஷயங்களான,இந்தலோகத்தில் அனுபவிக்கவேண்டிய போகங்களைப் பற்றித்தான் யாதொரு குறையுடையானுமல்லனுனது கொண்டு, இதுவரையில்தான் கவலை கொள்ளாமலிருந்தது முக்கியமான விஷயமெனப்பட்ட பரலோக ஸாதனமான கார்யங்களிலன்றோ வெனக்கலங்கிக் கவலையுற்று,

பழுதேபலபகலும் போயினவென்றஞ்சி யழுதார்படியில் இரவெ லாம் தூக்கம் பிடிக்காதே, ஊழியில் பெரிதால் நாழிகை யென்றும் கங்குலாயிர மூழிகளே யென்றும், கரியநாழிகையூழியில் பெரிய கழியுமாறறியேனே என்றும் சொல்லுகிறபடியே, நின்ற வாநில்ல நெஞ்சினையுடையனாய், கல்பாகாரம் கதமபிநிசாமாவிபாதம் விபே வேற, என்கிறபடியிற் போல் மிகவும் கஷ்டப்பட்டுப் பொழுதுவிடி கிற வரையில் பொருத்துக் கொண்டிருந்து,பொழுதுவிடிந்ததும், தன் னுடைய புரோஹிதரான செல்வநம்பியை அழைத்துவரச்செய்து அவ ரையடிபணிந்து முன்னிரவில்நடந்த வ்ருத்தாந்தத்தை விண்ணப்பம் செய்து, தனக்குப் பரலோகத்தில் அநுபவிக்கத்தக்க பரமபோகம் இன்னதென்றும், அதையடையக்கூடியவழி ஏதென்றும் அப்போகத்தையளிப்பவர் எவரென்றும், மற்றும்வேண்டியவைகளை யும் தனக்குச்செவ்வனே யருளிச்செய்யவேண்டுமென்றும் வேண்டி நிற்க, அவரும், அரசனுக் கிவ்விஷயத்திலுண்டான அவாவின் மிகுதியைக்கண்டு மிகவுகந்து, தாமே எல்லாவற்றையும் தெளியச் சொல்ல வல்லராயிருக்கச் செய்தேயும், பலமஹான்களையிட்டு இவருக்கு இவ்விஷயத்தை அசைக்கமுடியாத தொருபடி பலமாக நிர்த்தாரணம் பெறுவிக்கவேண்டுமெனக் கருத்திற்கொண்டு, தத் வித்திப்ராணிபாதேந பரிப்ரச்னேந ஸேவயா | உபதேக்ஷ்யந்திதே ஞானம் ஞாநிநஸ்தத்வதர்சிந: | (அரசே, இவ்வரியவிஷயத்தை மஹான்களைக்கண்டு நன்றாய்வணங்கி வழிபட்டு நன்றாய்கேட்கும் பக்ஷத்தில், உண்மையைக் கண்டிருக்குமவர்கள், ஆதரவோடடி பணிந்து கேட்குமுன்றனக்கு உபதேசம் செய்வார்கள் ; அதை அறிந்துகொள் ;) என்றுகீதாசார்யன் அருளிச்செய்ததுபோல் நீயும் மஹான்களை எழுந்தருளப்பண்ணி ஸபைகூட்டி அடிபணிந்து கேட் பாயேயாகில் நிர்த்தாரணம் பெறக்கூடும் என்றுஅறிவிக்க, அது கேட்டவனும் அங்ஙனமேயிசைந்து,வேதம் வல்லார்களையெல்லாம் பெருந்திரளாகக் கூட்டியமைத்து பரதத்வம் இன்னதுஎன்று நிச்ச யங்கொள்ள ஆவலுடையவனாய், குருசிச்ரூஷயாவித்யா புஷ்கலே நதநேநவா | (ஆசார்யர்களுக்கு விசேஷமான பணிவிடைசெய்வதி னாலாவது; அன்றி ஏராளமான பொருள்களை ஸமர்ப்பித்தலாலாவது அவரிடமிருக்கும் நல்லவித்யையைக்கொள்ளவேண்டும்) என்பதற்

கிணங்க, அளவற்ற பொருள்களை ஒருபெருமுடிப்பாகவமைத்து வித்வத்ஸபாமண்டபத்தின் நடுவே உயரக்கட்டித் தொங்கவிட்டு வைத்து, பரதத்வம் இன்னதென்பதை, தக்க ப்ரமாணங்களால் நிர்த்தாரணம் செய்கிறவர் எவரோ, அவரே இக்கிழிச்சீரையில் அமைத்திருக்கும் பொருள்முடிப்பிற்கு உரியவர், எனத்தேசமெங்கும்பறைசாற்றுவிக்க, அதையுணர்ந்து,அங்ஙனமே வல்லவந்தணர்கள், வல்லபதேவன்மாளிகை மாமணிமண் டபத்தேவந்து மண்டினார்கள்.

இங்ஙனம் மதுரைப்பதியின் நிலைமைநிற்க, ஸ்ரீவில்லிபுத்தூரில் இவ்வவஸரப்ரதீக்ஷைபண்ணி, ஸ்ரீவிஷ்ணு சித்தரைக்கொண்டு சேதனர்களின் அகவிருளையகற்றி அவர்களையடிமைகொள்ள, அருள் புரிந்த சிந்தையடியார்மேல்வைத்து, உறங்குவான்போல்' பாலாவிலையில் துயில்கொண்டிருக்கும் பரமனும், ஸ்ரீ விஷ்ணுசித்தர்கனவிலேயெழுந்தருளி' நீர், மாடமாளிகைசூழ் மதுரைப்பதிநாடி, வல்லபதேவபாண்டியன் ஸபாமண்டபத்தில் சென்று, வம்பவிழ்போதமர் மாதருகந்த வம்மாநிதியான நம்மையே, பரதேவதையெனப்பலர் முன் பகர்ந்து, இம்மாநிதியைக் காட்டிய உம்மிடம் தாழ்ந்து வணங்கிவந்துசேரும், வித்யாசுல்கமான அம்பொற்கிழியையறுத்து வாருமென நியமித்தருள, அதுகேட்ட விஷ்ணுசித்தரும் திடுக்கிட்டெழுந்து,தொழுது தொழுது,ஸ்வாமிந், அது,என்னாலாகக் கூடியதில்லையே, எனவிண்ணப்பிக்க, எம்பெருமானும், அது என்னுடைய பரமன்றோ, உம்முடைய நாவின் நுனியாகிற ஸிஹ்மாஸனத்தமர்ந்து நாமன்றோ, அதுதலைக்கட்டக்கடவோம், என்றருளிச்செய்தங்கு நின்றுமகல; அதன்பின்னர், விஷ்ணுசித்தரும், நித்திரைதெளிந்து ஸ்வப்னவ்ருத்தாந்தத்தை நினைத்து விஸ்மிதராய் எழுந்திருந்து, நல்லஸ்வப்னங்கண்டால் தனக்கு நல்லராயிருப்பாரிடம், சொல்லவேண்டுமென்கிறபடியில், அதைத்தான் தன் இஷ்டஸுஹ்ருத்துக்களிடம் இயம்பி, நீராடி,திருப்பரியட்டமுடுத்து, பன்னிரு திருநாமங்களிட்டு துளஸீநளிநாக்ஷமாலைகளினால் அலங்கரிக்கப்பட்ட விசாலமான திருமார்பையுடையவராய், நித்யகர்மானுஷ்டானங்களைக் குறைவறமுடித்துக்கொண்டெழுந்தருளி யிருக்குமளவில், எம்பெருமான் விஷ்ணுசித்தருக்குப்போலவே, தன்னுடைய ஸன்னிதிகாக்கும் அநந்தகொத்து பரிஜனங்கள் ஸ்வப்னத்திலும்

எழுந்தருளி, ஸ்ரீ விஷ்ணுசித்தரைத் தென்மதுரைக்கு, நம்முடை ஸகலவிருதுகளுடனும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போய்வ வேண்டுமென, நியமனம் செய்திருந்தானுகையினுலே, அவர்களெ லோரும் பகவந்நியமனமிருக்கும்படி என், எனவியந்து, விஷ்ணு சித்தர் திருமாளிகையையேகி, எம்பெருமான் நியமனத்தை விஎ ணப்பம்செய்ய, விஷ்ணு சித்தரும், தந்யோஸ்மி, அநுக்ரஹு தோஸ்மி, என்று, நியமனத்தை சென்னியிற்சூடிக்கொண்டு தெ மதுரை மாநகரந்தன்னுள், எம்பெருமானின் திவ்யபரிஜனபரி சதங்களுடன் பாண்டியன் ஸபாமண்டபத்தருகேசெல்ல, அங்கு மஹான்களை எதிர்கொண்டெழுந்தருளப் பண்ணக்கார்த்துக்கொன டிருக்கிற, அரசனும், புரோஹிதரான செல்வநம்பியும், இவர்எழு தருளுகிற காம்பீர்யத்தையும் மற்றும் பெருமையையும் கண்ணார கண்டுகளித்து, இவருடைய தோற்றமே இவர்மிகமஹிமைதங்கி வரென்பதை விளக்குகிறது, இம்மஹாநுபாவரால்தான், நம் சி தையின் வெந்துயராறுத்தல்கூடும் என்று தங்களுக்குள்ளேதேற் இவரை, எதிர்சென்று பலதடவைபணிந்து தெண்டனிட்டு விசேஷ பஹுமானத்துடனே உபசரித்து, ஸபாமண்டபத்திற்குகெழுந் ருளப்பண்ணிக்கொண்டுபோய், ஸபையின் நடுவே, ஆணிப்பொன் னுலமைக்கப்பெற்ற சீரிய சிங்காசனத்தே எழுந்தருளியிருக்குமாறு வேண்டியதும், அப்படியே எல்லாரும் சூழச்சிங்காசனத்தே வீற்றிருப்பாராயினர்.

இப்படி அரசனும், செல்வநம்பியும் இவரை விசேஷமாக வ தித்து உபசாரம் பண்ணினபடியைப்பார்த்துக் கொண்டிருந்த ஸபை யிலுள்ள வனைவர்களும்கண்டு கடுஞ்சினங்கொண்டு, மிக்கவேதியா களான தாங்கள்நிற்க, ஒன்று மறிவொன்றில்லாத வொருவனை கௌரவிப்பது தகாதசெய்கை என்ன, அதுகேட்ட செல்வ நம்பியும் கேட்பார் செவிசுடுமவையான அவர்கள் வார்த்தைகளையடக்கி ஸ்ரீவிஷ்ணுசித்தர் திருவடிகளிலே ஸாஷ்டாங்கமாக ப்ரணமங்கள் பண்ணி, ஸ்வாமிந், தேவரீர், சடங்கர் வாயடங்கிட, பரதத்வமின்ன தென்பதைப் பணித்தருளவேணுமென்று வேண்ட, இவரும், எம் பெருமானின் ஸ்வப்நநியமனப்படியே, அவனைநினைந்துருகியேத்த, உடனே, கைகொள்கனிபோலகிலங்கண்டு, என்கிறபடியில்,

மின்னுநூல் விஷ்ணுசித்தராக விளங்கி,வேதப்பகைச் சமயவேர்களை க்களைந்து, வேதமுடியில் பரதேவதையாகச் சொல்லப்பட்டிருக்கிற, ஸ்ரீமந்நாராயணனே பரதத்வமென்றும், அப்பரம்பொருளையடைய அவனைச்சரணமடைவதே ஏற்றஉபாயமென்றும், அவனையடைந்து அவனுக்காட்செய்கையே அரிய பெரிய பயனென்றும், ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸபுராண ப்ரஸித்தியுடைய பல ப்ரமாண வாக்கியங்களை, பூர்வபக்ஷ—ஸித்தாந்தமுறையில் விரித்துக்காட்டி மற்றமதங்களெல்லாவற்றிலும், ஸ்ரீவைஷ்ணவமதமொன்றுமே மிகச்சிறந்ததென்றும் உபந்யஸித்து பரதத்வநிர்த்தாரணம் பண்ணி நின்றவுடனே, வித்யாசுல்கமாய் உயரக்கட்டித் தொங்கவிடப்பட்டிருந்த கிழியும் தன்னடையே இவர்திருவடிகளின் கீழேதாழ்ந்து வந்து தோன்ற அக்கிழியை அறுத்தருளினார்.

இந்த ஆச்சர்யத்தைக்கண்ணுற்ற அரசனும், செல்வநம்பியும், இவரை, முன்உபசரிக்கும்பொழுது பொறாமை பாராட்டின வித்வத் ஜனங்களும் ஒரேமனதாக மிகுந்த ஸந்தோஷத்துடன் இவரைக் கொண்டாடி,வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்தவிளக்கைவிட்டு சித்தன் விரித்தனன், என ஆரவாரித்துப்பணிந்தேத்த, உடனே இவரைப் பட்டத்து யானைமேல் எழுந்தருளப் பண்ணுவித்து, அரசன், புரோஹிதர், முதலான எல்லாப்பரிவாரங்களும், வெண் கொற்றக் குடை, வெண்சாமரம் திருவாலவட்டம் முதலியவற்றை ஏந்திக் கொண்டு, மதுரைமாநகரின் மங்கலவீதிகளில், இம்மஹாநுபாவர் மஹிமைதோன்ற இவருக்குப் பட்டர்பிரான் என்றதிருநாமம் சாத்திப் புகழ்ந்தேந்திக்கொண்டு, பட்டர்பிரான் வந்தார், வேதப் பயன் கொள்ளவல்லவிட்டு சித்தர்வந்தார், வில்லிபுத்தூர் பட்டன் வந்தார், வேண்டிய வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்வந்தார் என்றிப்படியெல்லாம் பலபிருதாவளிகளைச் சொல்லிக்கொண்டு திருச்சின்னம் பரிமாறவும், சங்கமெடுத்தூதவும், மங்களவாத்தியங் களனைத்தும் முழங்கவும், பெரியவைபவத்துடனே, ஆழ்வாருக்கு மஹோத்ஸவம் கண்டருளப்பண்ணினார்கள்.

இந்நிலைமையில், எம்பெருமான், ஒண்டொடியாள் திருமகளும் தானுமாக, பெரியதிருவடி திருத்தோளிலே யேறியருளி, ஆழ்வார், வாரணமேல் வலம்வந்துகொண்டிருக்கிற வீதிதன்னிலே எழுந்தருளி, ப்ரஹ்மவித்யா பாரங்கதனை தன்குழந்தை ப்ரஹ்மஜ்

ஞானிகளான பெரியோர்கள் திரளில் பஹுமானம்பெற்று வரிசைகளுடனே வீதியில் வரப்பெற்றால், அப்பெருமையைக்காண மாதாபிதாக்கள் ஓடிவந்து கண்ணாரக்கண்டுகக்குமாப்போலே ஆழ்வாரைக் குளிரக் கடாக்ஷிக்க, அவ்வெம்பெருமானை ஸேவிக்கப்பெற்ற ஆழ்வாரும் அவனுடைய ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களிலீடுபட்டு, காலத்தின் கொடுமை செல்லவொண்ணாத திருநாட்டிலே, வானிளவரசாய், சீரியசிங்காசனத்திலே, பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகு மங்காதும் சோராமே செங்கோல் செலுத்திக்கொண்டெழுந்தருளியிருக்கும் எம்பெருமான், இவ்விருள் தருமா ஞாலத்தே, கலிஸாம் ராஜ்யம் செய்யுமிக்காலத்தே, காணப்படுவதே என்று, மதியெல்லா முள் கலங்கிமயங்கி, எம்பெருமான், ஸர்வரக்ஷகன் என்பதைவிவேகியாமல்,அவனுடைய திருவடி வழுக்குக்குத்தீங்கொன்றுமின்றி நித்யமாய்ச்செல்லவேண்டுமென்ற ப்ரஸந்தி பண்ணிக்கொண்டு, தானேறியிருந்த அவ்யானையின் மணியையே தாளமாகக்கொண்டு, மணியைவானவர் கண்ணனைத்தன்னதோரணியை, என்னப்படுகிற திருமாலைப் பல்வகையாலும் பல்லாண்டு பாடியருளினார்.

இதையடியொத்தி, இராமானுச நூற்றந்தாதியில், சோராத காதல் பெருஞ்சுழிப்பால், தொல்லைமாலையொன்றும் பாராதவனைப் பல்லாண்டென்று காப்பிடும் பான்மையன், என்றும், ப்ரபந்த ஸாரத்தில், வாரணமேல் மதுரைவலம் வரவே வானின்மால் கருடவாஹனனாய்த்தோன்ற வாழ்த்தும், என்றும், பேசப்பட்டது

இவ்வாறாக ஆழ்வார் மஹோத்ஸவங்கண்டருளி திருவீதிவலம் வந்து, தன்னையடிபணிந்து நிற்குமரசனை ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளில் ஒருவனாக்கிக்குளிரக் கடாக்ஷித்து விடையருளியனுப்பி, தாமும், வில்லிபுத்தூருறைவான்றன் பொன்னடி காண்பதோராசையினால், மீண்டும், ஸ்ரீவில்லிபுத்தூருக் கெழுந்தருளி, அறுத்துவந்த அக்கிழியை அவனிடம் ஸமர்ப்பித்து அவன் நியமனம்பெற்று, திருமாளிகைசேர்ந்து, முன்போல், வடபெருங்கோயிலுடையானுக்கு பூமாலை கைங்கர்யம் செய்துகொண்டு, பகவத்குணாநுபவமே பொழுது போக்காயிருந்து, அவ்வநுபவ பரீவாஹமாய் தோன்றியபடிகளை பெரியாழ்வார் திருமொழி என்கிற(473) பாட்டுக்கள்கொண்ட ப்ரபந்தமுகமாக வெளியிட்டு இவ்வுலகை, வாழ்வித்தருளினார்.

பெரியாழ்வார் வைபவம் முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானார் தேசிகன் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் தேசிகன் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் அருளிச்செய்த நாலாயிர திவ்யப்ரபந்தத்துள்

# முதலாயிரம்.

## பெரியாழ்வார் திருமொழித் தனியன்கள்.

𑌗𑍁𑌰𑍁𑌮𑍁𑌖𑌮𑌨𑌧𑍀𑌤𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌹 𑌵𑍇𑌦𑌾𑌨𑌶𑍇𑌷𑌾𑌨𑍍
𑌨𑌰𑌪𑌤𑌿𑌪𑌰𑌿𑌕𑍢𑌪𑍍𑌤𑌂 𑌶𑍁𑌲𑍍𑌕𑌮𑌾𑌦𑌾𑌤𑍁𑌕𑌾𑌮𑌃
𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌮𑌮𑌰𑌵𑌨𑍍𑌦𑍍𑌯𑌂 𑌰𑌙𑍍𑌗𑌨𑌾𑌥𑌸𑍍𑌯 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍
𑌦𑍍𑌵𑌿𑌜𑌕𑍁𑌲𑌤𑌿𑌲𑌕𑌂 𑌤𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌨𑌮𑌾𑌮𑌿 ॥

குருமுக மநதீத்ய ப்ராஹ வேதாநசேஷாந்
நரபதி பரிக்ல்ப்தம் சுல்கமா தாதுகாம: |
ச்வசுரம மரவந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத்
த்விஜகுல திலகம் தம் விஷ்ணுசித்தம் நமாமி ||

| | |
|---|---|
| ய: | எந்த ஆழ்வார் |
| நரபதி பரிக்ல்ப்தம் | அரசனால் ஏற்படுத்தப்பட்ட |
| சுல்கம் | பந்தயப்பொருளை |
| ஆதாதுகாம: | க்ரஹிக்க ஆசையுடையவராய் |
| குருமுகம் | ஆசார்யர் முகமாக |
| அநதீத்ய | ஓதாமல் |
| அசேஷாந் | ஸமஸ்தமான |
| வேதாந் | வேதங்களை |
| ப்ராஹ | நன்றாய் எடுத்துரைத்தாரோ |
| ரங்கநாதஸ்ய | ஸ்ரீரங்கநாதனுக்கு |
| ஸாக்ஷாத் | நேராக |
| ச்வசுரம் | மாமனாரும் |
| அமரவந்த்யம் | நித்யஸூரிகளாலும் ஸேவிக்கத்தக்கவரும் |

| | |
|---|---|
| த்விஜகுலதிலகம் | { அந்தணர் குலத்திற்கு அலங்காரமாய் விளங்குபவரும் |
| தம் | மிகவும் ப்ரஸித்தியுடைய |
| விஷ்ணுசித்தம் | பெரியாழ்வாரை |
| நமாமி | ஸேவிக்கிறேன். |

எந்த ஆழ்வார், வல்லபதேவனென்கிற பாண்டிய நாட்டரசனால் வித்யாசுல்கமாக ஏற்படுத்தப்பட்டிருந்த பணமுடிப்பை க்ரஹிக்கவேண்டுமென்கிற அவாவினால் வெளி நாடுகாண ஆசார்யரை அடிபணிந்து ஓதாதே எல்லாவேதங்களையும் உபந்யஸித்தாரோ? ரங்கநாதனுக்கு நேரான மாமனாரும், ஆகவே, விண்ணவரால் வணங்கத்தக்கவரும் அந்தணர்கள் ஸமூஹத்திற்கலங்காரமாய் விளங்குகிறவரும் மிகவும் புகழையுடைய பெரியாழ்வாரை வணங்குகிறேன் என்பதாம்.

குருமுகமநதீத்ய—என்றது, சக்கிரவர்த்தி திருமகனான ஸ்ரீராமபிரானும், வஸுதேவர் திருமகனான கண்ணபிரானும் வஸிஷ்டர் விச்வாமித்திரர் ஸாந்தீபினி,முதலான ஆசிரியர்களையணுகி வேதமோதியிருக்க அப்படி இவ்வாழ்வார் குருகுலவாஸம் செய்து வேதமோதாததை நினைத்துச் சொல்லப்பட்டதாகிறது. சாஸ்திரங்களில், ஒருவன் நல்ல வித்யையை அடையவேண்டுமானால் நல்ல ஆசார்யர்களிடம் சென்று முறைப்படி வணங்கி அவர்சொன்னபடியே கேட்டுப்பணிவிடைகள் செய்து அவரிடமே வஸித்துவந்து அவருக்குக் கருணையுண்டாகும் காலத்தில் சிஷ்யனைநோக்கி அவர் உபதேசம் செய்தால் அக்காலத்தில் அதை ச்ரத்தை, பக்தி முதலியதுடன் க்ரஹித்து, மேன்மையுடன் விளங்குவன் என்றும், அப்படி குருவினிடம் கற்ற வித்யைதான் எல்லாப்படிகளாலும் பெருமை பெற்று விளங்குமென்றும் குருவினிடமடிபணிந்து கற்காமல் தானே புஸ்தக உதவி முதலியனகொண்டு ஏற்படுத்திக்கொள்ளுகின்ற கல்வியறிவு உபயோகமற்றதென்றும் சொல்லியிருக்க, இங்கு ஆழ்வார் பெருமைபேச ஆரம்பித்த முதல்தனியனில், முதல்பதமே ஆழ்வார் குருவினிடம் ஓதவில்லையென்பதையறிவிப்பதினாலே, ஆழ்வாருக்குப் பெருமையுரைப்பதையும்விட்டு இகழ்வாகவுரைப்பது போலன்றோ தோற்றுகிறதென்னில்? அப்படியல்ல; இத்தனியன்

அருளிச்செய்தவர் மன்னு பெரும் புகழ்படைத்த ஸ்ரீமந்நாத முனிகள்; இவர் மிகப்பெருமைகொண்ட யோகீந்திரானபடியினாலே ஆழ்வாருக்கேற்பட்ட ஆசார்ய ஸம்பந்தம் இன்னதென்று அறிவார்; ஆகிலும், அதை சிறிது மறைத்துப்பேசுகிறார்; ஏனெனில் ஆழ்வார் வெளிநாடுகாண ஒரு ஆசிரியரிடமும் கல்விகற்காததுபற்றி ஒரு சமத்காரமாகப்பேசுகிறார். இவ்வாழ்வார் பெற்ற ஆசார்ய ஸம்பந்தம்தான் எவ்வகைப்பட்டதெனில், லோகத்திற்கெல்லாம் குருவாய் விளங்குகின்ற நாராயணன் எனக்கும் குருவென்றும், உலகத்திற்கெல்லாம் குருவாகவும் நற்கதியாகவும் விளங்குகிறீர் என்றும் இப்படியெல்லாம் பேசப்படுகிற ஸர்வலோகத்துக்கும் பரமாசார்யனை ஸர்வேச்வரனிடம்தான். இப்படி ஸர்வேச்வரனே தமக்கு ஆசார்யனாய் ஸர்வார்த்தங்களையும் அநுக்ரஹம் செய்தருளினார் என்பதை, "எயிற்றிடை மண்கொண்டவெந்தையிராப் பகலோதுவித்து எம்மைப் பயிற்றிப்பணி செய்யக்கொண்டான்," என்றும், "என்னுள்ளே பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து" என்றும், இவ்வாழ்வார்தாமே அருளிச்செய்வதால், அதை திருவுள்ளத்திற்கொண்டு அருளிச்செய்தார்.

அன்றிக்கே, எம்பெருமான், முழுவேழுலகுக்கும் நாதன் வேதமயன், என்கிறபடி, வேதமயனாக சிலவிடத்தில் பேசப்பட்டாலும், பின்னும் சிலவிடத்தில், வேதவேத்யனான பரம புருஷன் தயாத குமாரனாக அவதரித்த காலத்தில், வேதமும், ராமாயணமென்று பெயர்பூண்டு அவதரித்தது, என்று சொல்லப்படுவதினாலே, வேதம் என்பது, வேறு; வேதத்தால் சொல்லப்படுகிறவன் வேறுபட்டவன்; என்றும் தோற்றுவதால், வெவ்வேறாகப் பிரிந்துள்ளவைகளுக்கு சேர்த்தி ஸம்பாதிக்க வேண்டியது அவசியம்; ஆனதாலே, ராமகிருஷ்ணாத்யவதாரங்களில் அவர்கள் ஆசார்யர்களிடம் சென்று வேத நூலோத வேண்டியிருந்தது. இங்கு ஆழ்வார் அவதாரத்தின் தன்மையை ஆராய்ந்தால் ஆசார்யரிடம் ஓதிக்கற்க வேண்டியதில்லை; ஏனெனில், உலகில் கற்குமவர் ஒருவர்; கற்கப்படும் பொருள், ஒன்று; கற்குமவரும் கற்கப்படும் பொருளும் வெவ்வேறாக உள்ளவையே யன்றி இரண்டும் ஒன்றே என்று ஒருவரும் சொல்லமாட்டார்கள்; ஆனதால் ஆழ்வார் கருடாம்சர் என்னப் படு

வதினலே, அக்கருடன், வேதாத்மா என்றும் அக்கருடனுடைய ஒவ்வொரு அங்கங்களும் வேதத்தின் வடிவுகொண்டதென்றும் சாஸ்திரங்கள் பேசுவதால், வேதமே வேதத்தைக் கற்றதென்பது பொருத்தமற்ற விஷயமானதாலே குருமுகத்தைத் தேடாமலே எல்லாவேதங்களும் ப்ரகாசிப்பது இயற்கையெனக்கொண்டு, குருமுக மநதீத்ய, என்னதாகவாகலாம்.

அன்றிக்கே, பின்னும் ஓர்முக்கிய விஷயமும் இதில் புலப்படுவதாகத் தோற்றுகிறது. வானாட்டில் இருக்குமவர்களுக்கும் சேருமவர்களுக்கும் பிறகு கர்மஸம்பந்தமடியான மறுபிறவியில்லையென்று சாஸ்திரஸித்தமானதால் அங்குள்ளவர்கள் இங்குவந்து அவதாரம் பண்ணநினைத்தாலும், அங்குள்ளமேன்மை யொன்றும் குறையாதே வந்து தோற்றுவர்களானபடியினலே, இவரும் அங்கு கருடனயிருக்கும் தன்மையின் ஒரு அம்சத்துடனே இங்கு வந்து தோன்றினவராதலால் இவருக்குப் புதிதாக இங்குவந்து கற்கவேண்டியதொன்று மிருப்பதற்கு நியாயமில்லையென்பது கொண்டு, குருமுகமநதீத்ய, என்று சொன்னதாகவாகலாம்.

இப்பதத்தை இத்தனியனில் முதலில் சேர்த்திருப்பதற்கு ஓர் பெரிய சுவையும் உளதென்று கொள்ளலாம்; அதாவது, ஸ்ரீமந்நாதமுனிகள் நம்மாழ்வாரிடம் யோகதசையில் நாலாயிரத்தையும்பெற்று, அவைகளை, முதலாயிரம், திருமொழி, திருவாய்மொழி, இயற்பா என நான்கு பிரிவுகளாகச் செய்து, அவைகள் இன்னதின்னதென்று வரம்பிட்டு ப்ரவசனமும் செய்து, கோயில் குடந்தை முதலான திவ்யதேசங்களிலே தாமிட்ட ப்ரபந்தவரிசைக் கிரமமாகவே, பகல்பத்து, இராப்பத்து, இயற்பாச்சாற்று, என, இருபத்தொரு நாளில் திருவத்யயன உத்ஸவத்தையும் நடப்பிவித்துப் போருகிற நாளில், முதலாயிரத்தில் பெரியாழ்வார் திருமொழிக்கு இத்தனியன் அருளிச்செய்யப்பட்டதாகவிருக்கும். இத்தனியனில், குருமுகமநதீத்ய, என்கிற பதமே முன்தோன்றிநிற்கிறது. இதன் ஸ்வாரஸ்யம்தானென், என்னில், இவ்வாழ்வார் நித்யசூரிகளில் ஒருவராகையினல், இவருக்கு கல்விகற்கவேண்டியதில்லையென்று கொண்டு இவர் தனியனில், இப்பதமிடப்பட்டிருக்கிறதென்பதை முன்பே சொன்னேம்; ஆகவே, ப்ரபந்தங்கட்கெல்லாம் முதல் ப்ரபந்தமான

பெரியாழ்வார் திருமொழியில், ஆழ்வாரெல்லாரிலும், பெரியாழ்வார் எனத் திருநாமம்பெற்ற இவர் விஷயத்தில், ஒரு பெருமையை வெளிக்காட்டிப் பேசிவிட்டால், மற்றையாழ்வார்களும் நித்யஸூரிகள்தான், என்பதும், எம்பெருமானால் மயர்வறமதி நலமருளப் பெற்றவர்களென்பதும், இவ்வுலகில் வந்து அவர்களுக்கு கற்கவேண்டியவைகள் ஒன்றுமில்லையென்பதும், பின்னுமுள்ள பெருமைகளெல்லாம் சொல்லப்பட்டதாகிறதில்லையோ ?

மழிசைப்பிரான் முதலிய சிலர் கல்விகற்றதாகச்சொல்லும் சரிதைகளுக்கு ஸமாதானம் அதற்குரிய தலங்களில் ஆய்ந்துணர்வோம். மேலும், ஆழ்வார், பெரியாழ்வார், முதலிய திருநாமத்தின் போக்யதையையும் இவர் ப்ரபந்தம் முன்னேர்ந்து நிற்கும்படியையும் ப்ரபந்தாவதாரிகையின் அனுபவத்திற்கு நிறுத்திவைத்துக் கொண்டு இங்கு, மேல்பதங்களின் அனுபவத்தில் செல்வோம்.

ப்ராஹ, என்றது நன்றாய்ச் சொன்னாரென்பதை விளக்குகிறது. அதாவது, ஆக்ஷேப ஸமாதான ரூபமாக பெரிய உபந்யாஸம் செய்தார் என்றபடி.

அப்படிச் சொன்னதும் ஏதோ சில வேதங்களோ, என்னில் எல்லாவேதங்களையும் எடுத்துரைத்தாரென்பதை எடுத்துக்காட்டுகிறது அசேஷாந் என்று. இங்கு, வேதங்களையென்றும், அதிலும் எல்லாவேதங்களையென்றும் சொல்லியிருப்பதால், இன்ன இன்ன வேதங்களையென்று குறிப்பிட்டு மற்றதை விலக்கி வரம்புகட்டிப் பேசாதபடியினாலும், தெளியாத வடமொழிமறைநிலங்கள் தெளிய தென்மொழிவேதம் மிக அவச்யமானதாலும், உபந்யஸித்தவிடம் தென் மொழியில் ப்ரஸித்திபெற்ற தென்மதுரைப் பதியானதாலும், இருமொழி வேதங்களையும் எடுத்துரைத்தே எளிதில் பரதத்வநிர்த்தாரணம் செய்தருளினாரென விளங்குகிறது.

வேதங்களை எடுத்தோதினதுதான் யாதுகாரணம் பற்றியென்னில், அதைச்சொல்லுகிறது. நரபதி பரிக்லப்தம் சுல்கமாதாது காம: என்று. வித்யாசுல்கமாக அரசனால் ஏற்படுத்தப்பட்டபொருளை பெருமானுக்கு கொண்டு ஸமர்ப்பிக்க வேண்டுமென்கிற அபிஸந்தியினால் தாம் அக்கிழியறுக்க ஆசைகொண்டமை குறிப்பிடப்படுகிறது.

இப்படி, இவர். குருவினிடம் ஓதாமல் எல்லாவேதங்களையும் ஸபையில் விரித்துரைத்து, வித்யாசுல்கமான அம்பொற்கிழியை யறுத்து எம்பெருமானிடம் கொண்டு ஸமர்ப்பித்த பெருமையை முன்னடியில் பேசி, பின்னடியின் முதற்பாதியில், பெருமாளுக்கு பொன்னைக் கொடுத்ததோடு, உலகில், மாப்பிள்ளைக்கு வரதக்ஷிணை கொடுத்து பின்னை பெண்ணைக் கொடுப்பதுபோல, தன் பெண்ணான ஆண்டாளையும் கொடுத்து நேரேமாமனாராக ஆகி, அதனாலே, நித்ஸூரிகளாலும் ஸேவிக்கத்தகுந்தவராய் விளங்கினாரென்று சொல்லுகிறது ச்வசுர மமரவந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத் என்று. ஸ்ரீ ரங்கநாதன் ஆண்டாளைப்பற்றினவுடனே, நம் மாமனாரான பெரியாழ்வாருக்கு அருளப்பாடு, என்று நியமித்தானென, ஐதிஹ்யமும் பெரியோர் கூறுவர்.

இங்கு, ரங்கநாதஸ்ய, ஸாக்ஷாத், ச்வசுரம், என்கிற பதங்களில், ஆழ்வார், ஸ்ரீ ரங்கநாதனுக்கு நேராக மாமனார், என்கிற அர்த்தம் வெளியாகின்றது ; ஒருவருக்கு, ஒருவர், நேரே மாமனென்றால், உலகநீதியில், அவர், மற்றும் சிலர்க்கு, ஒருபடிபெயர்ந்து மாமனாராக இருப்பர், என்கிற அர்த்தமும் ஒலிக்குமானதால் ஆழ்வார், பின்னும் சிலர்க்கு எப்படியாவது மாமனாராக இருக்கவேணும்; இது கூடும்படி எங்ஙனே யென்னில், (ஆண்டாள், என்னை ஓர் மனிதனுக்கு மனைவியாக்கக்கருதி, அப்பேச்சு என் காதிற்பட்டாலே, நான் உயிர்துறந்திடுவேன்) என்றாளேயன்றி, திருமாலுக்கு எவ்வகையிலும் மாலையிடத்தேறி நின்றாள்; அதிலும் எம்பெருமானின் எல்லாப்படிகளையும் பெரும்பாலும் அர்ச்சாவதாரத்திற்கொண்டு, எல்லா அர்ச்சா திவ்யமங்கள விக்கிரஹங்களிலும் வேட்கையுற்றவளாய் விளங்கினாலும், தான் கொண்டிருந்த விபவ அவதாரத்தின் ஒரு ரூபத்தோடு, எல்லா விக்கிரஹங்களினிடமும் சேர்க்கை அவ்வளவு ரஸமுள்ளதாக ஆகாதெனக் கருத்திற்கொண்டு, எந்த திவ்யமங்கள விக்கிரஹத்தை யணுகினால், எல்லா திவ்யமங்கள விக்கிரஹத்துடன் சேர்ந்தது போலாகுமோ, அப்படிப்பட்ட, திவ்ய மங்கள விக்கிரஹத்துடன் கூடின, ஸ்ரீ ரங்கநாதனென்கிற அர்ச்சையில் முதலில் கலந்து, பின்பு, தானும், அனேக திவ்யார்ச்சாதிவ்ய மங்கள விக்கிரஹ ரூபங்களை பரிக்ரஹித்துக்கொண்டு திவ்ய தேசங்கள்

தோற்றும் எழுந்தருளியிருக்கிற எம்பெருமான்களின் பக்கத்தில் திவ்ய மஹிஷியாய் விளங்கிக்கொண்டிருக்கையாலே, எல்லா எம் பெருமான்களுக்கும் ஆழ்வார், மாமனாராகத்தானே, ஆகவேணும். ஆகையால், இந்த ஸ்வாரஸ்யத்தைத் திருவுள்ளத்தில் ஆசார்யாள் கொண்டே, ஸாக்ஷாத் என்கிற பதத்தை இச்சுலோகத்தில் பதித் திருக்கலாமெனத் தோன்றுகிறது.

இவர், நித்ய ஸூரிகளால் தான் பூஜிக்கத்தக்கவரோ, தாமி ருக்குமிடத்தே பெருமை படைத்தவரன்றோ என்னில், அவ்வூரில் உள்ள வனைவர்க்கும், அல்லது இம்மண்ணுலகில் உள்ளவனைவர்க் கும் அலங்காரமாக விளங்குமவர் என்பதைச் சொல்லுகிறது த்வி ஜகுலதிலகம் என்று. இங்குசிறிது கவனித்தல் வேண்டும்: இந்தப்பதத்தால் அந்தணர்கள் தலைவர் என்று சொல்லப்பட்ட தோடு குருமுகமநீத்ய என்கிற பதப்ரயோகத்தின் தாத்பர்ய ஸ்வாரஸ்யத்தால் வெளியிட்ட கருடாம்சர் இவர் என்று சொன் னதை நேரே சொன்னதாகவுமாகலாம் த்விஜ என்கிற சப்தம் பக்ஷியையும் சொல்லுமானதாலே. ஆகர்ஷந்த்விஜ ராஜமபி, என் கிறபடி பல பெரியோர் கூறியிருத்தலும் காண்க.

இவரை கருடாம்சரென்றால் கருடனாகிற நிலைக்கண்ணாடியில் தோற்றுவதுபோல் இங்கு பெருமாள் தோற்றுகிறாரோ என்னில், அதற்காகச் சொல்லப்படுகிறது, விஷ்ணு சித்தம் என்று. ஆழ்வார் மனதை அரைக்கண மேனும் அவன் பிரிந்திருப்பதில்லை யென்று சொன்னபடியாம். விஷ்ணுசித்தம் என்பதற்கு, விஷ்ணுவின் மன தில் தாம் உள்ளவர் என்றும் பொருளானதாலே, பெண்ணைக் கொடுத்த மாமனார், மாப்பிளை மனதில் நிலைக்கொண்டவர், என்றும் பெண்ணைக்கொண்ட மாப்பிள்ளை, மாமனார் மனதில் நிலைகொண்டவர் என்றும், ஒரு சாதுர்யமும் சொல்லல் தகும். விஷ்ணுசித்த ரென் பதற்கு பொருள்கூறுபவர்போல் இவரே, உன்னைக் கொண்டென் னுள் வைத்தேன், என்னையு முன்னிலிட்டேன், எனப் பாசுரமு மிட்டார்.

ஆயிரம் பெருமை பேசியென் ஆழ்வார் பெருமை எப்படியும் சொல்லி முடிக்கவொண்ணா தெனக்காட்ட (தம்) என்று பத மிடப் பட்டது.

அன்றிக்கே, (தம்) என்கிற இப்பதத்தை. தம் த்விஜகுல திலகம், என்று சேர்த்து அந்வயங்கொண்டாலும், மிகப்பெருமை தங்கிய அப்பெரிய திருவடியான கருடனின் அவதாரமாகவே யுள்ள என்கிற அர்த்தத்தையும் புகட்டுமதாயிருக்கும்.

இங்ஙனம் பெருமைபடைத்த ஆழ்வாருக்கு நம்மால் செய்யக் கூடிய குற்றேவல் இன்னதென்று சிந்தித்து ஒன்றுமறியாதே செயலற்று, உன் திருவடிகளில் இடைவிடாதே கைங்கர்யம் செய்யும் படியையும் தேவரீரே அருள் புரிய வேண்டுமென்று பெரிய ஆர்த்தியோடே 'வசஸா மநஸாச மூர்த்நா என்கிறபடி மநோவாக்காயங்களாகிற மூன்று கரணங்களாலும் சரணமடைகிறேனென்பதைச் சொல்லுகிறது நமாமி, என்று. எப்பொழுதும் ஆழ்வார் திருவடிகளில் ஸேவித்து நிற்பதிலுங்காட்டில் சீரிய புருஷார்த்தம் இங்குமங்குமெங்கு மொன்று மில்லையென்று சொல்லப்பட்டதாக

இந்நூல் முதற்ப்ரபந்தமான இப்பெரியாழ்வார் திருமொழியை அநுஸந்திக்கும்பொழுதெல்லாம் முந்துற பெரியாழ்வார் திருவடியைப்பணிந்தே ப்ரபந்தத்தை அநுஸந்தானம் செய்யவேண்டும் என்பதைச் சொல்லிற்றாயிற்று.

மின்னார் தடமதிள் சூழ் வில்லிபுத்தூரேன்றோருகால்
சொன்னார் கழற்கமலம் சூடினோம்—முன்னாள்
கிழியறுத்தானென்றுரைத்தோங் கீழ்மையினிற் சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து.

| | |
|---|---|
| நெஞ்சமே | (எனது) மனமே |
| வந்து | (நீ எனக்கு ஹிதனாய்) வந்ததனால் |
| மின் ஆர் | தேஜஸினாலே பரிபூர்ணமாயும் |
| தட | பெரியதாயுமுள்ள |
| மதிள் | திருமதிள்களாலே |
| சூழ் | சூழப்பட்டதான |
| ர் என்று | ஸ்ரீவில்லிப்புத்தூர் என்று |
| ஒருகால் | ஒருதடவையாகிலும் |
| சொன்னார் | உச்சாரணம் பண்ணினவர்களுடை |
| கழற்கமலம் | தாமரைபோன்ற திருவடிகளை |

| | |
|---|---|
| சூடினோம் | (சென்னிமேல் அலங்காரமாக) அணிந்துகொண்டோம் |
| முன் நாள் | (வல்லபதேவன் பாதத்வநிர்ணயம் கொள்ளக்கருதிய) அக்காலத்தில் |
| கிழி | (வித்யாசுல்கமாக நிருமித்துவைத்திருந்த) பொருள் முடிப்பை |
| அறுத்தான் என்று | அறுத்தருளினார் என்று |
| உரைத்தோம் | அநுஸந்திக்கப்பெற்றோம். |

(இப்படிப்பட்ட பாக்கியம் நமக்கு வாய்த்த பின்பு)

| | |
|---|---|
| கீழ்மையினில் | தாழ்ந்தவிடமான நரகத்தில் |
| சேரும் | (போய்) சேரக்கூடிய |
| வழி | மார்க்கத்தை |
| அறுத்தோம் | போக்கிக்கொண்டோம் |

ஓ மனமே, நீ என்னோடு உதவியாய் சேரும்படியான நற்காலம் வந்து நீயும் நானும் ஒருபடியாகச் சேர்ந்ததனால், பெரியாழ்வார் அவதாரஸ்தலமான திருநகரியை, ஸ்ரீ வில்லிபுத்தூரென்று ஒரு தடவை சொல்லுவார் திருவடியை சென்னிமேலணியப் பெற்றோம். பரதத்வநிர்த்தாரண ப்ரஸக்தி வந்தகாலத்தில் வித்யாசுல்கமான கிழியை ஆழ்வார் அறுத்து வந்தருளினாரென்று சொல்லப்பெற்றோம். ஆகவே, நரகவாசலைக்கிட்டும் வழியையும் பாழ்படுத்தி விட்டோம் என்பதாம்.

மின்னார் தடமதிள் சூழ்—என்றது, ஆழ்வார் அவதரித்த திருநகரியில் உள்ள திருமதிளின் பெருமையைச் சொல்லுகிறது. ஆழ்வாரைத் தன்னுள்ளடக்கித்தான் அரணாக அமைந்தாலும், ஆழ்வாரின் ஒளி புறம்பொசிந்து காட்டுமாப் போலேயிருக்கிறது. செம்பொனார் மதிள்சூழ் திருக்கோட்டியூர் என்றும், மின்னப் பொன் மதிள்சூழ் திருவிண்ணகர் என்றும், செம்பொனேய்ந்தமதிள் சூழ்திருக் கண்ணபுரம் என்றும் திவ்யதேசங்களின் திருமதிள்களில் ஆழ்வார்கள் ஈடுபாடு உண்டிறே? இவ்வொளிகள்தான் தன்னைக்கண்டு உகப்பாரை அழகால் அருகிலழைக்குமதாயும், உகவாதாரை ஒழிக்குமதாயுமிருக்கு மன்றோ! எம்பெருமானின் திவ்யாயுதங்கள் முதலிய பரிகரங்களும், அநுகூலர் வாழும்படியும், ப்ரதி

கூலர் மாளும்படியும் அமைந்திருப்பது என்பதுதான் அனைத்துலகு மறியாத தில்லையே ; பாரதப்போரில் கண்ணன் சங்கமெடுத்தூத, அச்சங்கினொலி துர்யோதனாதியரின் ஹ்ருதயங்களைப் பிளந்தது என்று ப்ரஸித்தியுமுண்டே; அங்கு ஒலிகேட்டு அநுகூலர் வாழ்ந்தார் கள். ப்ரதிகூலர் மாண்டார்கள் ; இங்கு மதிளின் ஒளிகண்டு அநு கூலர் வாழ்வர்கள்; ப்ரதிகூலர் மாள்வர்கள் என்றபடி. அப்படி மதி ளின் அழகே, ஆச்ரிதரை அகமகிழச் செய்து, எம்பெருமான் தடக் கையால் ஆச்ரிதரை அருகிலழைத்துத் தழுவுமாப்போலே, தானும் நடமதிளானதால் ஆச்ரிதரை அருகிலழைத் தணைக்கு மதாயிருக்கு மென்று சொல்லி நிற்கிறது.

வில்லிபுத்தூர்—என்றது, திருநகரியின் திருநாமம் இன்ன தென்பதைச் சொல்லுகிறது. இத்திவ்யநகர், பாண்டியநாட்டில் உள்ளது. இத்தலத்தில் எம்பெருமான் வெகுகாலத்திற்கு முன் பலகாரணங்கள் பற்றி எழுந்தருளியிருந்து, ஒரு காலவிசே ஷத்தில் அது கானகமாக மாறி, அதன் பின்னர் வில்லியென்கிற வேடர்குலத்தவன் ஒருவனுக்கு பகவந்நியமநமாகி அவனால் எம்பெரு மான் எழுந்தருளியிருந்த அக்கானகம், பொன்னியல் மாடங்கள் முதலியதால் புதுப்பிக்கப்பட்டு, ஸ்ரீ வில்லிபுத்தூர் என்கிற பெயரி னைக்கொண்டது என்கிற வரலாறு இங்கறியத்தக்கது.

என்றொருகால் சொன்னார் கழற்கமலம் சூடினோம்-என்றது, ஒருதரம் எம்பெருமான் திவ்ய நகரியின் திருநாமத்தைச் சொன்ன வர்கள் திருவடியை தலைமேல் கொண்டமையைக் காட்டுகிறது. கல்லிலேய்ந்த மதிள்சூழ் திருக்கண்ணபுரம் சொல்ல நாளும் துயர் பாடு சாரவே என்றும் அரங்க மென்றழைப்பராகில் பொறியில் வாழ் நரகமெல்லாம் புல்லெழுந் தொழியுமன்றே, என்று மன்றோ பராங்குச பக்தாங்க்ரி ரேணுக்களின் பணிப்பும். இப்படிச் சொல் வது தான், சில மந்திரங்கள், ஒருதரம் சொல்லப்பட்ட மாத்திரத் தில், ஸம்ஸாரத்தை தாண்டும்படிசெய்து, பரம புருஷார்த்தத்தை யும் கொடுக்குமதாயிருக்கும், என்று சொல்லுகிறாப்போலே, எம் பெருமானாகிற வடபத்ரசாயி, பிராட்டியாகிற ஆண்டாள், இவர் களையே பரதேவதையாகக்கொண்டு நிற்கிற பெரியாழ்வார், இம்

மூவர்களையும் தன்னுள்ளடக்கி ப்ரணவம் போல் விளங்கும் இந்த ஸ்ரீ வில்லிபுத்தூரை ஒரு தரம் சொன்னால் அது எல்லாப் பயன்களை யும் அளிக்குமென்றபடி. ஆனாலும், இங்குள்ள "சொன்னார்" என் கிற சொற்போக்கை ஆராய்ந்தால், வில்லிபுத்தூரென்று நாமே சொல்லவும் வேண்டா ; அல்லது, இப்பொழுது, ஒருவர் சொல்லிக் கொண்டிருக்கவும் வேண்டா ; என்றேனுமொருநாள் யாரேனு மொருவர் ஏதேனுமொருபடியில் சொல்லியிருந்தாரேயானால் அதுவே அமையும் ; அப்படிப்பட்டவர் திருவடியை நம் சென்னிமேற் கொள்வதே சாலச்சிறக்குமென்றறுதியிட்டமை குறிப்பிடப்படுகி றது. கங்கைகங்கையென்ற வாசகத்தாலே கடுவினைகளைந்திட கிற்கும் என்கிறபடியே, கங்கையென்று சொன்ன மாத்திரத்தி லேயே, அது எல்லாத்தீவினைகளையும் நாசம் செய்து விடுமென்றால், பெருமாள் ஆண்டாள், பெரியாழ்வார், என்கிற மூவர்சேர்த்திபோல், கங்கை,யமுனை, ஸரஸ்வதி, என்கிற மூன்று புண்ணிய தீர்த்தங்கள், வந்துசேர்ந்து, திருமுக்குள மென்கிற திருநாமத்துடன் இன்றள வும் வழங்கிவருகிற, ஸ்ரீவில்லிபுத்தூரை ஒருதரம் சொல்வது அதிக மில்லையோ ? என்றும் காட்டியபடியாம்.

முன்னாள் கிழியறுத்தானென்றுரைத்தோம்—என்றது, பர தத்வமறியாதே பரிதபித்த பாண்டியனுக்குப் பலருமறியப் பரதத்து வத்தைப் பகர்ந்து கிழியறுத்தார் ஆழ்வார் என்று ஆழ்வார்தாம் செய்த செயலைச்சொல்லி ஏத்தினபடியை இயம்புகிறது.

கீழ்மையினிற் சேரும்வழியறுத்தோம் என்றது, இனியார் புகுவாரேழு நரகவாசல் என்கிறபடியே, ஆழ்வார் அவதரித்த திருநகரியான ஸ்ரீ வில்லிபுத்தூரை ஒருதரம் சொன்னவர் சேவ டியை சென்னியிற் சூடினோம் ; ஆழ்வார் செய்தருளிய செயலையும் சொல்லப்பெற்றோம்; ஆனபின்பு, நமக்கு நரகிற்கு ச்செல்லக் காரண மில்லையானதால், அவ்வழி, இனி, நடப்பாரின்றி பாழ்படுமெனக் கருதி, அவ்வழியை யறுத்தொழித்தோ மென்பதைப் பேசி நிற் கிறது. கர்மஸம்பந்தமில்லாத ஆழ்வார் பிறவியையும், நற்செய்கை யையும் அனைவரும் அறிந்தேத்தினால், அவர்களுக்கு, ஜந்மகர்ம சமேதிவ்யம் ஏவம் யோவேத்தி தத்வத: | த்யக்த்வாதேஹம் புநர்

ஜ்ந்மகேதிமாமேதிஸோர்ஜ்-ந11 (என்னுடைய அவதார ரஹஸ்யத்தையும், திவ்யசேஷ்டிதத்தையும், இவ்வண்ணம் உள்ளபடியே எவன் அறிகிருனே, அவன், இந்ததேஹத்தைவிட்டு மறுபிறவியை அடைகிறதில்லை, என்னையே அடைகிருன்) என்றுகீதாசார்யன் அருளிச்செய்தபடியில், மறுபிறவிதொலைந்து, வானுயரின்பம் மன்னி வீற்றிருக்கத்தகும் பெருமையுண்டாகுமென்றபடி.

நெஞ்சமேவந்து—என்றது ,இப்பெருமை பெற்றதெல்லாம், நீ, வந்து என்னுடன் சேர்ந்தபடியினுலன்றே! என்று தம்மனதைக் கொண்டாடுகிறபடியைச் சொல்லுகிறது. முந்துற்றநெஞ்சே, என்றும், நெஞ்சமே நல்லை நல்லை உன்னைப் பெற்ருலென் செய்யோம் என்றும், வானவர் தங்கள் சிந்தைபோல என்நெஞ்சமே இனிது வந்து என்றும். இப்படியேயன்றே, ஆழ்வார்கள் தாமும், தங்கள் மனது, பகவத்பஜனம் செய்வதில், தங்களுக்கு அனுகூலமாய் இருந்தமையைப் பலவாருகப் புகழ்ந்துபேசி நின்ருர்கள். ஆகவே, இனி நமக்கு கைகூடாதபயனும் உலகில்உண்டோ என்றபடி.

பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்று
  ஈண்டிய சங்கமெடுத்தூத—வேண்டிய
வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்
  பாதங்கள் யாமுடைய பற்று.

| | |
|---|---|
| பாண்டியன் | வல்லப தேவனென்கிற பாண்டிய நாட்டு அரசன் |
| பட்டர் பிரான் | ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு உபகாரகரான ஸ்வாமி |
| வந்தான் என்று | எழுந்தருளினர் என்று சொல்லி |
| கொண்டாட | பெருமையுடன், புகழ |
| ஈண்டிய | திரளாய்க் கூடின |
| சங்கம் | சங்குகளை |
| எடுத்து | கையில் எடுத்துக்கொண்டு |
| ஊத | அனேகர் சப்திக்க |

| | |
|---|---|
| வேண்டிய | பரதத்வநிர்ணயத்திற்கு மிகவும் உபயோகமான |
| வேதங்கள் | எல்லா வேதங்களையும் |
| ஓதி | நன்றாய் உபந்யாஸம்செய்து |
| விரைந்து | காலதாமத மன்னியில் |
| கிழி | வித்யாசுல்கமாய், கட்டித் தொங்கவிடப்பட்டிருந்த பொருள் முடிப்பை |
| அறுத்தான் | அறுத்த பெரியாழ்வாருடைய |
| பாதங்கள் | திருவடிகளே |
| யாமுடைய | எங்களுக்கு |
| பற்று | ரக்ஷகமாயுள்ள ஸ்தானம். |

எவர், பட்டர்பிரான் வந்தானென்று பாண்டியன் கொண்டாடவும், அனைவரும் தங்கள் தங்கள் சங்கங்களை யெடுத்துக்கொண்டு பெரிய ஆரவாரம் உண்டாகும்படி நாதம்செய்யவும், தான், அக்காலத்திற்கு ப்ரமாணமாய் உள்ள எல்லா வேதங்களையும் பரக்க உபந்யஸித்து வித்யாசுல்கமாய் நிருமித்திருந்த அம்பொற்கிழியை அறுத்தருளினரோ அப்பெரியாழ்வார்திருவடிகளே, எங்களுக்கு குறைவற்ற ரக்ஷணஸ்தானம், என்பதாம்

பாண்டியன் கொண்டாடப்பட்டர் பிரான் வந்தானென்று என்றது, தன்னால் ஏற்படுத்தப்பட்ட வித்வத்ஸபைக்கு எழுந்தருளும் மஹான்களை, எதிர் சென்று வணங்கிவழிபட்டு நல்வரவு கூற ஸபைவாசலில் நின்று கொண்டிருந்த அரசன், ஆழ்வார் எழுந்தருளும் பொழுது ஸேவித்து இவர் தேஜஸ்ஸில் ஈடுபட்டு, இம்மஹாநுபாவரே, நாம்கொண்டகார்யத்தை இனிதுமுடித்துத்தர வல்லவரென அறிந்து மகிழ்வுற்று, அம்மகிழ்ச்சிதோற்ற, (தன்னையடிபணிந்த பக்தனுக்கு உபகாரம் செய்யுமவர் என்கிற பொருளையுட் கொண்டிருக்கிற) பட்டர்பிரான் என்கிற திருநாமத்தைச் சாற்றியே, பட்டர் பிரான் வந்தான் எனக்கூறி உபசரித்தமையைக் கூறுகிறது.

ஈண்டிய சங்கமெடுத்தூத—என்றது, இப்படி இவரை அரசன் உபசரிக்கவே, அரசனின் பரிஜனங்களனைத்தும், திரள் திரளாய் சங்கங்களை யெடுத்து, ஜயஜய என்றாற்போலே ஊதிநின்றமையை உணர்த்துகிறது.

வேண்டிய வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்—என்றது, பரதத்வம் இன்னதென்று தெளிவாய்க் காட்டக்கூடியவைகளான செந்தமிழ் வடமொழி வேதங்களெல்லாவற்றையும் விரிவாக உபந்யாசம் செய்து தாமதியாமல் பந்தயப்பொருளான கிழியை அறுத்தருளினமையை அறிவிக்கிறது. நிற்க, விரைந்து என்பதை வேண்டிய வேதங்களோதி என்கிற விடத்தில் சேர்த்துக் கொண்டும் பொருள் கொள்ளலா மெனத்தோன்றுகிறது. அப்படிக்கொண்டால், ஆழ்வார், ஸபைக்கு, எழுந்தருளி, செல்வநம்பியால், பரதத்வ நிர்த்தாரணம் செய்தருளவேண்டுமென ப்ரார்த்திக்கப்பட்டதும், யாதொரு யோசனையுமின்றி கங்காப்ரவாஹம் போல் தட்டுத தடங்கலில்லாமல் அமுதமொழிகளாலான உபன்யாஸம் செய்தருளினமை விளக்கப்பட்டதாக ஆகும்.

பாதங்கள் யாமுடையபற்று—என்றது, பாமரர்களான நம்போலியரும், ஸ்ரீமந் நாராயணனே பரதேவதையென்று எளிதில் அறியும் வண்ணம், தாம், ப்ரமாணங்களை பூர்வபக்ஷ—ஸித்தாந்த முறையில் ஸ்ஃலபமாக எடுத்துக் காட்டியுரைத்த ஆழ்வார் திருவடிகளையே யன்றோ நாம் தஞ்சமாகக் கொண்டோம், ஆகவே, நஸம்சயோத்ர தத்பக்த பரிசர்யா ரதாத்மநாம் (அவன் நல்லடியார்கள் திருவடிகளின் பணிவிடையில் ஆசையுடையோர்க்கு, பலங்கிடைப்பதில் ஸந்தேஹமில்லை) என்கிறபடியே, ஆழ்வார் திருவடிகளை அரணாகக் கொண்டிருக்கிற நமக்கு, எம்பெருமான் விஷயத்தில், இங்குமங்கு மெங்கும் பல்லாண்டு பாடப் பெறுகையாகிற கைங்கர்யத்தில் ஸந்தேஹமொன்று மில்லையென்று ஸந்தோஷத்துடனிருக்கும் பெருமை பகரப்படுகிற தென்பதைக் காட்டுகிறது.

ஆக, இவ்வளவால், பெரியாழ்வார் திருமொழி யென்கிற (473) பாட்டுக்கள் கொண்ட திவ்ய ப்ரபந்தத்தை வெளியிட்டருளின பெரியாழ்வார் ப்ரபாவ மிருக்கும்படி தெளிந்து அவரை ஏத்திப் பணிந்து, பின்னர், ப்ரபந்தானு பவத்திலிழிந்தால், அதிலுள்ள விசேஷார்த்தங்கள் நமக்குப் புலப்பட்டுப் பாங்காக பகவதனுபவம் பண்ணி பெறற்கரிய பேறு பெறலாமென அறியலாயிற்று.

## இப்பெருமைகளை யடியொத்தி, ஸ்ரீதேசிகன் அருளிய ப்ரபந்த ஸாரப்பாட்டு.

பெருஞ்சோதி தனிற் றோன்றும் பெருமானே—முன்
சீரணிந்த பாண்டியன்றன் நெஞ்சு தன்னிற்
துயக்கறமால்பரத்து வத்தைத் திறமாச்செப்பி
வாரணமேன் மதுரை வலம் வரவே வானின்
மால் கருட வாகனனாய்த்தோன்ற வாழ்த்தும்
ஏரணிபல்லாண்டு முதற்பாட்டு நானூற்
றெழுபத்தொன்றிரண்டு மெனக்குதவு நீயே॥

ப்ரஹ்மதந்த்ரஸ் வதந்த்ரஸ்வாமி அருளிச்செய்த
திவ்யஸூரி ஸ்தோத்திரத்தில் உள்ள
இவ்வாழ்வார் விஷயமான சுலோகம்.

ஜ்யேஷ்டேஸ்வாதீ பவம் விஷ்ணு ரதாம்சம் தந்விந:புரே।
ப்ரபத்யேச்வசுரம் விஷ்ணோ: விஷ்ணுசித்தம் புரச்சிகம்॥

## வாழித் திருநாமங்கள்.

---

திருப்பல்லாண்டென மாலைப்பாடுமவன் வாழியே
செஞ்சொல் நானூற்றெழுபத்துமூன்று சொன்னான் வாழியே
பெருக்க முறுவானிதனில் சோதிவந்தான் வாழியே
பெருமைமிகும் ஆண்டாளைப் பெற்ற பிரான் வாழியே
மருப் பொசித்த மாதவனே பரனென்றான் வாழியே
மாசறவே சகத்துக்குக் கிழியறுத்தான் வாழியே
விருத்தமுடை வில்லிபுத்தூர் விளங்கவந்தான் வாழியே
விஷ்ணுசித்தன் மலர்ப்பதங்கள் வாழி வாழி வாழியே॥

ஆழ்வாரெம்பெருமானார் தேசிகன் திருவடிகளே சரணம்.

திருக்குடந்தை இளையவில்லி தி. ஸ்ரீநிவாஸாசாரியர் இயற்றிய
பெரியாழ்வார் திருமொழித்தனியன்களின் உரை முற்றிற்று.

---



ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் தேசிகன் திருவடிகளே சரணம்.

# முதலாயிரம்.

## பெரியாழ்வார் திருமொழி ப்ரபந்தாவதாரிகை.

கீழ், பொதுத்தனியன்களின் உரை ஆரம்பத்தில், ஆழ்வார்கள் அவதரித்த காரணங்களும், அவதரித்த வண்ணமும், உலகுய்ய வேண்டி, த்ராவிட வேதங்களான திவ்ய ப்ரபந்தங்களைக்கண்டு வெளியிட்டார்களென்பதும், இவ்வுரை இன்ன பயன்கருதி எழுதப்படுகிறதென்பதும், எழுதும் ப்ரகாரமும் அநுபவத்தை வெளியிடுங் கிரமத்திலென்பதும், ஆகவே, யாதொரு தூஷணமின்றி ஆழ்வார்களின் திருள்ளக்கருத்து இவ்வாறிருக்கலாமென ஆசார்யர்கள், தோற்றுவிக்கும், அநுபவத்தையே எடுத்துக்காட்டுங் கிரமத்தில் இவ்வுரை அமையுமாறுகண்டு, மஹான்கள் அடியேன் பாலருள் புரிந்து அடியேனை இவ்வடிமைகொள்ள வேண்டுமென்பதும் விண்ணப்பிக்கலாயிற்று.

திவ்ய ப்ரபந்தங்களின் பெருமையும் அதன் அநுஸந்தானச் சீர்மையும் மற்றுமுள்ளதெல்லாம், தனியே சில அவஸரங்களில் விரிவுடன் வரையப்படும்; இங்கு, சிற்சில விஷயங்களே ஆராய்தலையடைகிறது.

நாலாயிரம் திவ்ய ப்ரபந்தங்களை வெளியிட்டருளினவர்கள் திருநாமங்களையும், அவர்கள் அருளிச்செய்த ப்ரபந்தங்களையும் அவைகளின் எண்ணிக்கையையும் மற்றுமெல்லாம், ப்ரபந்த ஸாரத்தில் தனித்தும், சேர்த்தும், விசதமாக ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்தார்.

ஆழ்வார்கள் என்றால், எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களாகிய இன்னமுதக்கடலில் ஆழ்ந்து இன்புற்றிருக்குமவர்கள். இப்படியுள்ள இவர்களை, எம்பெருமானின் புதியதோர் தசாவதாரங்களே யென குருபரம்பராஸாரத்தில் ஸ்ரீ தேசிகன் ஏத்திநின்றார்.

இவர்களில், எல்லாரைக்காட்டிலும், எம்பெருமானிடம் மிகப் பரிவு தோன்றப்பல்லாண்டு பாடியதால், ஸ்ரீ விஷ்ணுசித்தரென் பவரைப்பெரியாழ்வாரெனப் பேசி நின்றார்கள்.

இவரருளிய ப்ரபந்தம், பல்லாண்டு என்று ஆரம்பித்து—சாயை போலப் பாடவல்லார் தாமுமணுக்கர்களே, என்று தலைக்கட்டப் படுகிற, (473) பாசுரங்கள்கொண்ட பெரியாழ்வார் திருமொழி யென்பதே.

இப்பிரபந்தம் தான், மங்களங்களுக்கெல்லாம் மங்களமாய் மலிந்து நிற்கும் மாலுக்கே மங்களத்தை மனதாரப்பாடிக்கொண்டு, மந்திரங்கட்கெல்லாம் ப்ரணவம் முன்தோன்றிநின்று, ஸர்வார்த்தங் களையும் தெளியக் காட்டுகிறாப்போல், ஸர்வார்த்தங்களையும் மிக அழகாக, மிகுதி குறைவற, க்காட்டிநிற்கிற பல்லாண்டென்கிற ஓர் பன்னிரண்டு பாட்டுக்களாலமைந்த திருமொழியை முதலிலே கொண்டிருப்பதாலும், இதனடுத்த திருமொழியான, வண்ணமா டங்கள், என்கிற பாசுரம் முதல், கண்ணனின் அவதாரமே தொடங்கி பாலலீலைகள் முதலியவைகளையே பெரும்பாலும் தாயின் அநுபவம்போல் பேசியிருப்பதாலும், இம்மண்ணுலகிலும் அவ் விண்ணுலகிலும் எம்பெருமானைப் பல்லாண்டென்றே பாட வேண்டுமாதலாலும், இப்பிரபந்தமனைத்தும் பல்லாண்டு பாடுகையே எங்கும் பரந்து நின்று இறுதியிலும், பாடவல்லார், என்றே, பாடு மவர்களுக்குப் பலம்சொல்லித் தலைக்கட்டுகையாலும், ஸ்ரீமந் நாத முனிகளால் ஆழ்வார்கள் அருளிய ப்ரபந்தங்களான நாலாயிரங்க ளில் முதலாயிரத்தில் முதன்மை பெற்றதாக அமைக்கப்பட்ட தென்கிற பெருமை பெற்றிருக்கும்.

திவ்ய ப்ரபந்தம் என்றால், எம்பெருமானையும் 'தன்னுடைய பெருமையால் ஈடழிக்கப்பண்ணுமதாய், செவிக்கினிய செஞ்சொற் களின் சேர்த்தியானதாலே, எம்பெருமான் தன்னையும் நன்றாகக்கட் டுப்படுத்த வல்லதாயிருக்கும் பெருமைகொண்ட பாசுரங்கள் என்று பொருள்.

திருமொழி, என்றும் திருவாய்மொழி என்றும், சொல்லும தெல்லாம், மேன்மை தங்கியவொருவர் திறமாக மேன்மை பொருந்

தியவர்கள் கண்டுரைத்துப்பேசிய நல்வார்த்தைகள், என்றபடி,

இவைகளுக்குள்ளே, இயற்பா வொழிந்த மூவாயிரங்களில், முதலாயிரம், பெரியதிருமொழி இரண்டிலும், 9–10–11–12–13–14 21–என்றிப்படியெல்லாம் ஒருகோர்வையாய் பாசுரங்கள் அமைந்திருந்தாலும், அவைகள், திருமொழிகள், எனவழங்கப்படும். அப்படியே திருவாய் மொழியில் (11) என்கிற கணக்கில் அமைந்திருக்கும் (99) கோர்வைகளையும், பன்னிரு நாமப்ரபாவமாய் (2)ம் பத்து (7) ஆவதான (13) பாட்டுக்கள்கொண்ட ஒரு கோர்வையையும் ஆக (100) கோர்வைகளையும், தனித்தனியே அந்த அந்த வரிசைக் கிரமத்தில், திருவாய்மொழிகள் என்னப்படும். இவற்றில் நூற்றுக் கணக்காய் சேர்ந்த ஒவ்வொரு பாகங்களையும் பத்துக்கள் என்று சொல்லப்படும். அவைகள் அடைவே 1–2–3 இப்படி, இயம்பப்படும், அவற்றில் ஏதாவது ஒரு பாகத்தைச் சுட்டிக்காட்டவேண்டுமானால், அந்தப் பத்தின் எண்ணிக்கையையும் திருமொழி எண்ணிக்கையையும் குறிப்பிட்டுக் கூறவேண்டும். உதாஹரணமாக,முதலாயிரத்தில் வண்ணமாடங்கள் என்கிற பாசுரங்கள் எங்கேயுள்ளவை என்பதைச்சொல்ல வேண்டுமானால், முதலாயிரம் இரண்டாந்திருமொழி என்றும், அவற்றில் நடுவேயுள்ள சிலபாசுரத்தைக் காட்டும்பொழுது, இன்ன எண்ணிக்கையுடைய பாசுரம் என்றும், சொல்லவேண்டும். இப்படியே மேலும் கண்டுகொள்க. தவிரவும் இங்கு, முதலாயிரத்தில், முதல்திருமொழி, திருப்பல்லாண்டென்றும், இரண்டாவது திருமொழி, வண்ணமாடங்கள் என்றும், மேலும் மற்றெல்லாத் திருமொழிகளும் அவையவைகளின் தலைப்பில் ஆரம்பிக்கப்படுகிற, பதங்களையிட்டு வ்யவஹரிக்கப்படும். இதற்குமேல், நீராட்டத்திற்கும், பூச்சூடவும், காப்பிடவும், எழுந்தருளவேணுமென்று எம்பெருமானை விசேஷித்துப் பாடப் பெறும் பாட்டுக்களைச்சொல்லும்போது, நீராட்டம், பூச்சூடல் காப்பிடல், என்கிற திருநாமத்துடன், திருத்திப்பேசப்படும். இங்கு சொன்ன கிரமங்களை, மேல் மற்ற ஆயிரங்களிலும் பொருத்தமுள்ளபடியில் பொருத்திப் பேசிக்கொள்வது தக்கது. ஆகவே, இந்த, முதலாயிரம், முதல்திருமொழி, பல்லாண்டென்கிற பதத்தைக்கொண்டே ஆரம்பமாகியிருப்பதாலும், ஒவ்வொரு பாட்டுக்கள்தோறும் பல்லாண்டென்கிற பதத்

துடனேயே அப்பாட்டுக்கள் பூர்த்தியடைகிறபடியாலும், எவ்விதத்திலும் மிகப் பொருத்தமுடைய திருப்பல்லாண்டு என்கிற திவ்ய திருநாமத்தைக் கொண்டதாக விருக்கும்.

இத்திருப்பல்லாண்டு அவதரித்த காரணம், பெரியாழ்வார் வைபவத்தில் பேசப்பட்டது. இனி இப்படி எம்பெருமானுக்குத் திருப்பல்லாண்டு பாடுவது தகுமா என்பதை ஆராய்வோம்.

ஏனெனில், உலகில் உயர்ந்தவரொருவரைத் தாழ்ந்தவனொருவன் தலைதாழ்த்தி வணங்குங்கால், உயர்ந்தவரின் அனுக்கிரஹத்தை தாழ்ந்தவன் பெறுவது இயல்பு; அப்படியிருக்க, ஸர்வஜகந்நாதனை பிரபு, ஆழ்வாருக்கு ஸேவை ஸாதித்தவப்பொழுது அப்பிரபுவிற்கு ஆழ்வார் பல்லாண்டு கூறினாரென்றால், இவ்விஷயத்தில் தக்க ப்ரமாணங்கள் இருந்தேதீரவேண்டும்; ஆழ்வாரோ மிக மஹிமையுள்ளவர்; அப்படியுள்ளவர், ஓர் அநுஷ்டானத்தைக் கைக்கொண்டாரென்றால் மேலையார் செய்வனகள், என்கிறபடியே முன்னோர் அநுஷ்டானங்களை முற்றிலும் தழுவியதாகவிருக்குமென்று கொள்ளத்தட்டில்லை; மேலும் எம்பெருமான் ஆழ்வாருக்கு ஸேவை ஸாதிக்கும்பொழுது தன்னுடைய ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளை நன்றாகக் காட்டியருளினான்; அவைகளைக் கண்டவுடன் அக்குணங்களிலாழ்ந்து அந்தரத்தில் தேவருக்கு மறியலாகாவந்தணரென்கிற சுந்தரமூர்த்தி இப்பாரிலுள்ளோர் பலருங்காண இங்கு அம்பரத்தில் தோன்றுகிறதே யென அலமந்து இவ்வடிவழகிற்கு யாதொருதீங்கும் வாராதே காத்தலையே கருத்திற்கொண்டு வேறு ஒரு படியும் பேச நாவெழாதே முதலெடுப்பிலேயே. பல்லாண்டு பல்லாண்டெனப் பதறிக்கொண்டு பாடினார். இப்படி இவர் எம்பெருமான் திறத்தே ரக்ஷ்ய ரக்ஷக பாவத்தை மாறுடிக்கொள்ளலாமோ? மயர்வறமதிநலமருளப் பெற்றவர்களுக்கு இப்படி மாறி விபரீத ஞானம் வரலாமோவென்னில், ஊழ்வினையின் பயனாக ஏற்படும் விபரீதக் கொள்கையே த்யாஜ்யமாகுமேயன்றி, எம்பெருமானுடைய கல்யாணகுணங்களின் பெருமை கண்டு கலங்குவது மிகவும் கொண்டாடத்தக்கதேயாகும்; அன்றியும் எம்பெருமானுக்கு சேஷபூதன் என்று சொல்லுகிற எவனும் இத்தன்மையுடையவனாகவே இருக்கவேண்டும் என்பதை, ஆஹ்லாதசீதநேத்ராம்பு: புளகீக்ருதகாத்ரவாந் | ஸதா பரகுணாவிஷ்ட

த்ரஷ்டவ்ய: ஸர்வதேஹிபி:11 (எம்பெருமானின் திருக்கல்யாண குணங்களை நினைந்து ஸந்தோஷத்தினால் குளிர்ந்த கண்ண நீரையுடையவனும், மயிர்க்கூச்சலுடையதாய் செய்யப்பட்ட உடம்பையுடையவனும், எப்பொழுதும் எம்பெருமான் குணங்களினால் சூழப்பட்டவனுமான மஹாபுருஷன் தான் தேஹம்படைத்தவனெவராலும் ஆசைப்பட்டுப் பார்க்கத்தக்கவன்) என்று சொல்லிப் போந்தார்கள். நம்மாழ்வாரும், இப்படி எம்பெருமான் திறத்துப்படாதேயிருக்குமவர்களைச் சுட்டிக்காட்டி, பாஞ்சுடரை நினைந்தாடி, நீர்மல்குகண்ணினராகி நெஞ்சங்குழைந்து நையாதே, ஊன்மல்குமோடு பருப்பாருந் தமர்கட்கென்செய்வாரே, என்று, வெறுப்புடன் பேசினர். ஸ்ரீ பாகவதத்திலும், காமகாரத்தினால் பசுவைக்கொல்லும் தன்மைவாய்ந்தவரைத் தவிர வேறு எவர்தான் உத்தம ச்லோகனை பகவானின் குணத்தைக் கேட்டு நையும் மனமுடையவராக ஆகமாட்டார், என்று சொல்லப்பட்டது.

இவ்வண்ணம், எம்பெருமானிடம் பரிவுகொண்டு பேசுவது, பரமபதம், பாற்கடல், பாருலகம், என்கிற வேறுபாடின்றி எங்கும் ஒருபடியே உள்ளது.

அயோத்யை என்றும், ஒரு வாலும் ஜயிக்கப்படாத பட்டணமென்றும், கலங்காப் பெரு நகர் என்றும் கூறுகிறபடி கட்டுங்காவலுமாயுள்ள ஸ்ரீவைகுண்டத்தில், எம்பெருமானுக்குத் திருப்பள்ளிமெத்தையாயிருந்துகொண்டு, அவ்வெம்பெருமானின் மார்த்தவாதி குணங்களை அநுபவித்துப்போருகிற ஆதிசேஷனும், அங்கு எப்பொழுதும் பண்ணப்படுகிற ஸாமகாநத்தைக் கேட்டுக்கொண்டிருக்கச்செய்தே, அதிஸ்நேஹ: பாபசங்கீ, என்கிறபடியில் எம்பெருமானிடம் மிகப்பரிவாலே, தான்கேட்டுக்கொண்டிருக்கிற ஸாமகோஷத்தையே, அரக்கசுரர் அட்டஹாஸமோ இது எனத்திடுக்கிட்டு சங்கித்துச் சினங்கொண்டு சீறி தன்னுடைய ஆயிரமுகத்தினாலும் அழலையுமிழாநிற்பரென்றார், மழிசைப்பிரானும்.

சுவேதத்வீபவாஸிகளும், ஜிதந்தே, என்றே ஏத்தி நிற்பர்களாம்.

நாவிஜித்ய நிவர்த்ததே, (வென்றிகொள்ளாதே திரும்பமாட்டார்) என்கிறபடி, அஸஹாய சூரனும், அநபாய ஸாஹஸனுமாயும்

விளங்கின, ஸ்ரீராமபிரானுக்கு அறிஞர், அறிவிலிகள் என்கிற வேறுபாடின்றி, பரிவுடன், ரக்ஷையைத் தேடிநின்றார்களென்பதை, விச்வாமித்திரர், தன்வேள்வியைக்காக்குந்தன்மைவாய்ந்தவனாக காகுத்தனைக்கரடேற அழைத்துப்போகும்பொழுது, அவன் திருவடிவழகிலீடுபட்டு, இவ்வழகு குன்றாதிருக்கவேணுமெனக் கருதி பலை, அதிபலையென்கிற மந்திரத்தை வெளியிட்டாரென்றும், பின்பு, தாடகை ஸுபாஹு மாரீசாதியர்களைவென்று வேள்வி காத்து கல்லைப்பெண்ணாக்கி, மிதிலையேகி, மிக்கப்பெரும் சபைநடுவே வில்லிறுத்து, மிதிலைச்செல்வி தன்னை மணம் புணர்ந்து, மீண்டும் அயோத்திமாநகருக்கு எழுந்தருளும்பொழுது, எதிர்ப்பட்ட பரசு முனிவன் தன்னைக்கண்ட தயாதந்தானும், தன் தநயனின் வன்மையனைத்தும் கேட்டிருக்கச்செய்தேயும், பரிவின் மிகுதியாலறிவிழந்து பரசுமுனிவனடிபணிந்து, பிள்ளைகள் பிழைத்திருக்கவருளுமெனப் பிதற்றி நின்றானென்றும், யௌவராஜ்யபட்டாபிஷேக மந்திராலோசனைகாலத்து, நகரஜனங்கள், தங்கள் ஸ்தீரீகளெல்லாம், ராமன்வாழவேண்டுமென வாய்த்த தெய்வங்களின் கால்களிலெல்லாம் விழுந்து தொழுது நிற்கிறார்கள், என்பதைச் சொன்னார்களென்றும், சுமந்திரர், ஸ்ரீராமபவனம் சென்று ராமனையணுகி கைகேயியுடன்கூடியிருக்கும் உன் தகப்பன் உன்னைக்காணவிரும்புகிறாரென்றதும் புறப்பட்ட ராமனை, அவனுடன் வேறுபடாதவள் என்கிற ஸீதாப்பிராட்டியும், வாயற்படிவரையில் வாழ்த்தி வழிகொண்டுவிட்டு அதோடும் நில்லாதே, தீராத்மாவான ராமனின் திருவடிதீண்டி திக்குகளில் நிற்கிற திக்பாலகர்களை, திக்குகள்தோறும் ராமனைக்காக்கவேண்டுமென்று திகைத்துவேண்டினளென்றும், தண்டகாரணியம் புகுந்தவுடன், அரக்கர் தின்ற அழுக்குடம்பைக்காட்டி அழுதுகொண்டு அடிபணியவந்த அரண்யவாஸிகளும், அவனழகிலாழ்ந்து பல்லாண்டு பாடத்துடங்கிவிட்டார்களென்றும், ரஹஸ்யமாயும் வெளிப்படையாயுமுள்ள யாவற்றையும் உள்ளபடியேகண்டுரைக்கும் மஹிமை வாய்ந்த மஹர்ஷியும் அருளிச்செய்தாரன்றோ.

இவ்வாறாகவே கண்ணன் திருமேனியழகில் பரிந்து வஸுதேவ தேவகிமுதலானோர்கள் செய்த செய்கையும் உணரத்தக்கது.

ஆக, இப்படிப் பல்லாண்டு பாடுகை, தர்மஜ்ஞஸமய: ப்ரமாணம், என்கிறபடியே, சிஷ்டர்களான முன்னோர்கள் அநுஷ்டித்துப் போந்ததொன்றானபடியினாலே, வேதாந்தார்த்தத்தை நன்கு வெளிப்படுத்திப்பேசும் பெருமைவாய்ந்த பெரியாழ்வாரும், ஸர்வ ஜகந்நாதனான பிரபுவிற்கு, அடியவர்கள் செய்யக்கடமைப்பட்ட உகப்பானகைங்கர்யமிதுவே என்று, பல்லாண்டு பாடியருளினார்.

இப்பிரபந்தம் முழுவதையும் திருப்பல்லாண்டு என்றே கொள்ளலாம். இதில், முதல்திருமொழியில், பல்லாண்டென்கிற பதங்கள் மலிந்துகிடந்து, மேல்பத்துக்களில் இடையிடையே காப்பிடவாராய் என்றும், என்பிள்ளைக்குத் தீமைகள் செய்வார்கள் அங்ஙனமாவர்களே, என்றும், கோலம் செய்திங்கே இரு, என்றும் உன் கண்கள் சிவந்தாயசைந்திட்டாய் நீ எம்பிரான் என்றும், கன்றின் பின்போகேல் என்றும், எல்லாவிடத்திலுமெங்கும் பரந்து பல்லாண்டொலி சொல்லா நிற்கும் சீர் என்றும், உறகலுறகலுறகல் ஒண்சுடராழியே சங்கே, அறவெறிநாந்தகவாளே அழகிய சார்ங்கமே தண்டே, இரவு படாமலிருந்த எண்மர் உலோகபாலீர்கள் என்றும் அருளிச் செய்கிறபடியே, பலபடி எம்பெருமானின் மங்களத்தை வேண்டியும், எம்பெருமானுக்கு தீமை செய்வார்களை சபித்தும், எம்பெருமானின் சக்கரத்தையும் சங்கையும் கத்தியையும் சார்ங்கவில்லையும், கதையையும், அஷ்டதிக் பாலகர்களையும், அவனுக்கு அரணாகவேண்டியும் பல்லாண்டுபாடி, இறுதியிலும், சாயைபோலப் பாடவல்லார், தாமுமணுக்கர்களே, (எம்பெருமானுக்கு இப்படிப் பாடவல்லர்கள் அவன் திருவடி நிழல்போல் விட்டுப்பிரியாது அந்தரங்க வடியாராகயிருப்பர்) என்றும் பலம் சொல்லித் தலைக்கட்டுகையாலும் முழுப்ரபந்தமும் திருப்பல்லாண்டென்றே சொல்லக்கூடியதாகவிருந்தாலும், மிகப் பரிவுகொண்டு பாடிய ஆழ்வார் திருநாமமும் இப்பிரபந்தத்திற்கு ஒரு ரக்ஷைபோல் விளங்கவேண்டுமெனக் கருதி இப்பிரபந்தமனைத்தையும், பெரியாழ்வார் திருமொழி என்றும், முன் சொல்லியபடிக் கிணங்கி, முதல்திருமொழியை திருப்பல்லாண்டு என்கிற திருநாமத்துடனும் முன்னோர்கள் கொண்டாடிப் போந்திருப்பர்களென ஊஹித்தறியலாயிருக்கிறது.

ஆழ்வாரெம்பெருமானார் தேசிகன் திருவடிகளே சரணம்.





ஸ்ரீ:

ஸ்ரீ ஆராவமுதாழ்வான் கோமளவல்லித்தாயார் திருவடிகளே சரணம்

ஆழ்வாரெம்பெருமானார் தேசிகன் திருவடிகளே சரணம்

# முதலாயிரம்

பெரியாழ்வார் அருளிச்செய்த பெரியாழ்வார் திருமொழி

திருக்குடந்தை, இளையவில்லி, தி. ஸ்ரீநிவாஸாசாரியர்

இயற்றிய

உரையுடன்கூடியது.

## முதற்பத்து முதல் திருமொழி.

# திருப்பல்லாண்டு.

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு*
பல்கோடி நூறுயிரம்*
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணு* உன்
சேவடிசெவ்விதிருக்காப்பு * (1)

மல்லாண்ட — மல்லர்களை ஜயித்த

திண் தோள் — வலிமைகொண்ட திருத்தோள்களை யுடையனுய்

| | |
|---|---|
| மணிவண்ணா | இந்திர நீல ரத்நம்போன்ற திருமேனி நிறத்தையுடையவனே |
| பல்லாண்டு பல்லாண்டு | பற்பல வருஷங்களிலும் |
| பல்லாயிரத்து ஆண்டு | அநேகமாயிரம் வருஷங்களிலும் |
| பல்கோடி நூறு ஆயிரம் | அநேகம்கோடி லக்ஷம் வருஷங்களிலும் |
| உன் சே அடி | உன்னுடைய சிவந்த திருவடிகளுடைய |
| செவ்வி | அழகுக்கு |
| திருக்காப்பு | அழகிய ரக்ஷை உண்டாகவேணும். |

மல்லர்களுடன் போர்புரிந்து வென்ற புஜபலங்கொண்டவனாக இருக்கச்செய்தேயும் அச்சத்ரு நிரஸனத்தால் சிறிதேனும் திருமேனி வாட்டமிலாது நீலநிறத்துடன் அடியார்களுக்கு ஸுலபனாய் ஸேவை தந்தருள்பவனே, இப்பொழுது காணப்படும் உன் திருவடி முதலான திவ்யாவயவங்களின் திவ்ய சோபைக்குத் தீங்கொன்று மெக்காலத்துமின்றியே, இவ்வடிவழகு ஓங்கிவளர்ந்து நித்யமாயிருக்கவேண்டுமென்றார்.

இவ்வாழ்வார், தென்மதுரைமாநகரந்தன்னில் ஆகாயத்தில் காயாம்பூவண்ணனாய் ஸேவைதந்தவெம்பெருமானைக்கண்டு செய்வதொன்றுமறியாதே திகைத்து அவனைப் பெயர்சொல்லிக்கூப்பிட்டுப் பின்னை சொல்லுமளவும் பொருக்கமுடியாது முதலெடுப்பிலேயே பல்லாண்டு பல்லாண்டென்கிறார்.

பல்லாண்டுபல்லாண்டு—இப்படிப் பல்லாண்டென்கிற இது தான் என் என்னில்; ஆண்டு என்கிற சப்தம் சதாயு: புருஷ:, என்றும், வேதநூற்பிராயம்நூறு என்றும் சொல்லுகிறாப்போல், ஆயுளைக் குறிப்பிடுமென்று சொல்லப்பட்டதாயிருக்கும். இதில், முதல் பல்லாண்டென்பதால், மனிதர்களின் படியில் உயர்ந்த ஆயுள் எவ்வளவு பெருக்கிக்கொள்ளலாமோ அவ்வளவைக்கொண்டு, அவ்வளவுகாலம், எம்பெருமான் திருவடிவழகு தீங்கின்றி இருக்க வேண்டுமென்று அருளிச்செய்து, இரண்டாவது பல்லாண்டென்பதால், தேவர்களின் படியில்உள்ள காலமுள்ளதனையும் அப்படியே தீங்கின்றிச் செல்லவேண்டு மென்றும் அருளிச்செய்யப் பட்டதாக

வாகிறது. மனிதர்களின் ஆயுளின் கிரமத்தை முன்னிட்டுப் பேசுவானேன் என்னில்; வடமொழி வேதத்தலையில், பரப்ரஹ்மத்தின் ஆநந்தத்தை அளவிட முயன்றவிடத்தில், மனிதரின் ஆநந்தத்தை முதலில் கணக்கிட்டு அதன் பின் மேன்மேலெனச் சென்ற வாறு போலவே, இவ்வநுபவக்கிரமமும் இத் தமிழ் வேதத்தில் விளங்குகின்றதெனக் கொள்வது சாலச் சிறக்குமன்றோ?

இங்கு, எம்பெருமான் திருநாமத்தை முன் சொல்லி விளித்து பின்பு பல்லாண்டு பல்லாண்டு என்று அருளிச்செய்யாதே, பல்லாண்டென்றே முன்அருளிச்செய்திருக்கிற சொல் நயத்தைச் சிந்தை செய்தால், உலகத்தார், தன்னை வணங்குமொருவரை, ஆயுஷ்மாந்பவ ஸௌம்ய, சர்மா, என்றே ஆசிகூறுவது; என்கிற சிஷ்டானுஷ்டத்தின் சீர்மையை ஒருவாறு வெளிப்படுத்திக் காட்டினபடியாகலாம்.

மேலும், பல்லாண்டென்று பல்காலும் சொல்லாதே ஒருதரம் சொன்னாலே, அது, எண்ணிறந்த காலங்களின் அளவைக் குறிப்பிடாதோ என்னில்; குறிப்பிடும்; ஆகிலும், ஒருவர்க்கு ஓர் விஷயத்தில் கரைபுரண்ட காதல் ஏற்பட்டுவிட்டால், அப்படியுள்ள பேரமர் காதல் தோன்ற, பெருவிடாய்ப் பட்டவன் தன்விடாய் ஆறப்பெறுமளவும், தண்ணீர், தண்ணீர் என்றே பலதரம் பிதற்றித்தீருமாப் போலே, இவ்வாழ்வாரும் தன் பயம் தீருமளவும் பல்லாண்டு பல்லாண்டென்றே பலகாலும் பாடி நிற்கின்றார்.

இவ்வாழ்வாருடைய ஸம்பந்தம் பெற்றவரின் ஸம்பந்தம்பெற்ற த்விஜ: என்கிற ஒருவரே, எம்பெருமான் விஷயத்தில் மிகவும் பரிவுடையவராய்ப் பேசி நின்றாரென்னில், த்விஜகுலதிலகர் என்று போற்றப்படுகிற இவ்வாழ்வார் தன்மையைப் பற்றி தனியே பேசவும் வேண்டுமோ?

அதாவது, இவ்வாழ்வார்தான் கருடனின் ஓர் அவதார விசேஷமே யென்பது முன்பே சொல்லப்பட்டது; கருடனும், அருணனும், ஸஹோதரர்கள்; இவர்களில் அருணனின் புதல்வர் ஜடாயு என்பவர்; இவருக்கு ஸம்ப்ரதாயத் திருநாமம் பெரியவுடையார் என்று; பெருமாளிடம் மிகப் பரிவுகொண்ட இவ்வாழ்வாரை எப்படிப் பெரியாழ்வாரெனப் போற்றி நிற்கிறோமோ அப்படியே ஜடாயு

வையும் பெருமாளிடம் ஆத்மாந்தமாகத் தனது தாஸ்ய வ்ருத்தியை மிகவும் பரிவுடன் செய்து போந்த ஒருவர் எனக் கொண்டு, பெரிய வுடையார் எனப் பெயரிட்டுப் பெரியோர் போற்றிப் போருவர் எனக் கொள்வது சாலச் சிறக்குமென்று சொல்லுவது மிகையாகாது; இவர்தான், ஸ்ரீ ராமபிரான் கானகத்தில் கமலையுடன் எழுந்தருளினவப் பொழுது, கண்டு கந்து தன்குலத்தின் பெருமையையும், தன் பெயரினையும், தயரதனோடு தனக்குள்ள உறவின் உயர்வினையும், ஒருங்கே உரைத்து, என்னை உனக்கு உற்ற துணையாகத் திருவுள்ளம் பற்றினையேயாகில், அவ்வாறே அரணாக இருக்கிறேன் என்று சொல்லி, பின்பு, ஸீதாப்பிராட்டியைப் பிரிந்த இராமன் தம்பியொடு தாமொருவராய் தன் துணைவியைத்தேடித் திரிகின்றவப் பொழுது, ராவணனால் இறக்கையறுபட்டுக் கிடக்கிற விடத்தில் நேர்பட்ட இராமனை நோக்கி என்னப்பனே, அந்த உன் தேவியும் என் பிராணனும் ராவணனால் கொள்ளை கொள்ளப்பட்டதெனக் கூறுகிற அக்காலத்தில், காதுஷணதியர்களான பதினான்காயிரம் அரக்கர்களைத் தானொருவனாகவே தடிந்திட்ட திறமை கொண்டவனென்பதைத்தான் நன்கு அறிந்திருந்தும், ஸ்ரீராமனிடம் உள்ளபரிவின் மிகுதியால், கொத்துங் குறையுயிருமாய் மிகவும் மரணவேதனையுடன் சாகுந்தருவாயில் தானிருப்பதையும் பொருட்படுத்தாதே ஆயுஷ்மந் என்ற சொல்லையிட்டு தன் ஆசையெல்லாம் அங்கே தோன்ற ஆதரவோடழைக்கின்றானன்றோ.

ஆக இப்படி, சேஷபூதரானவனைவர்க்கும், தாம் துஞ்சும் பொழுதும், துயருறும் பொழுதும், துயரிலாதவப்பொழுதும், எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடுகைதான் பாங்கான பணிவிடையாகுமென்கிற பொருளைப் பரக்கக் காட்டுகிறவர்போல் ஓர் ஜடாயுவே நல்வழிகாட்டிப் பேசியிருந்தால், இவ்வாழ்வார், பல்லாண்டென்று பவித்திரனைப் பலகாலும் பாடிநிற்பது ஓராச்சர்யமோ?

பல்லாயிரத்தாண்டு—கீழ், மனிசர், தேவர் இவர்களைக்குறிப்பிட்டு, அப்படிகளிலுள்ள நீண்ட ஆயுள்காலத்தைக்கொண்டு அக்காலமுள்ள தனையும் குறைவறவே வாழவேண்டுமென விரும்பி, அக்காலவளவை நிரூபித்து, பூர்ணமாகக்கொண்டாலும் மனிசர்களின் அளவு தேவர்களின் நாறுநாள்கொண்டவகையில் அது

சிறிதாகத்தோற்றி நிற்குமானதாலே அதைவிட்டு, தேவதைகளின் படியைப்பற்றும்பொழுதும், அது பிரமனின் ஆயுளளவைக்காணவே அதுவுமோர், ஆயுளாகுமாவென்றே அறுவறுக்கத்தக்கதேயானபடியினாலே, தேவதைகளின் படியையும்விட்டு பிரமனின் படியைப்பற்றி அப்படி ஒரு பிரமகல்ப்பாந்தம் வரையில் வாழவேண்டுமென்கிறார்.

பல்கோடி நூறாயிரம்—அனேகம் பிரமகல்ப்பங்களிலும் வாழவேண்டுமென்கிறார். இவருக்கு ஒரு படிகட்டிப் பேசும்படியென்னவெனில், திடீரென்று எம்பெருமான் இவருக்கு ஸேவைதந்தார் கண்டதும் இவர் கலங்கி, முதலிலே, உன்வடிவழகு குறையாதே விளங்கவேண்டுமென்று பல்லாண்டென்றார். அதை நிரூபிக்கவே, மனிதரளவாகவுமாகக் கூடுமானதாலே, வைய மனிசரின்படி பொய்யெனக்கொண்டு, தேவரின்படியை நினைந்து மறுபடி பல்லாண்டென்றார் அப்படியும் நிரூபிக்கவே பிரமனின்படி உயர்ந்து தோன்ற அப்படியை நினைந்து, பல்லாயிரத்தாண்டென்றார்; அதன் மேலும் பிரமனின் ஆயுள் அளவை ஆராய்ந்தால் அதுவும் அஸாரமெனவே தோன்றலுற்றது; அதன்மேல், காலதத்வமுள்ள தனையும் குறைவொன்றுமின்றி ஸுகமாக வாழ்ந்திருக்கவேண்டுமென்ற விருப்பத்துடன், பல்கோடி நூறாயிரம், என்று கடைப்படியை ஒரேபிடியாகப்பற்றிப்பேசிநின்றார்.

பிரமனின் ஆயுள் அளவும் மிகவும் சிறியதென்பது ஒருபிரமன் முடிந்தால், ஒரு உரோமம் உதிரும், என்கிறபடி, பெருமைவாய்ந்த ரோமசமாமுனிசரிதையால் காணத்தக்கது. இச்சரிதையை பெரிய திருமொழி, 3—4—2 நான்முகநாள் மிகத்தருக்கை யிருக்குவாய்மை நலமிகு சீருரோமசனால் நவிற்று, என்கிற கலியன் ஸூக்தியாலும் காண்க.

இப்படி இவ்வாழ்வார், மேல் மேல் நாள்களையடுக்கிக்கொண்டு போவதைக் கேட்கலுற்ற எம்பெருமான் தானும், இனி நாம் நம் தன்மையைக் காட்டாதே தாமதித்திருந்தால், என்விளையுமோவென நினைந்து, ஆழ்வீர், என்னுடைய தோளின் வலிமையும் பெருமையையும் காணாது மெய்மறந்து ஏன் இங்ஙனம் பதறிப்பணிந்தேத்தி நிற்கிறீர்! நான் மல்லரையட்டும் மேனிமெலிவெய்தாதேயிருக்

கும் படியையும் காணுமெனத் தன்னுடைய திருத்தோள்களையும் திருவடிவழகையும் காட்டியருள, அதை அப்படியே பேசுகிறார். மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா, என்று.

எம்பெருமான் இவ்வாறு தன் திருமேனியின் வலிமையைக் காட்டுவானேன் என்னில்? தன்னிடம் பரிவுகொண்டு கலங்கின அடியவர்க்கு அதுதான் முன் அவதாரத்தில் அனுபவம் கைக்கண்ட மருந்தாகையாலே.

ராமாவதாரத்தில், கடற்கரையை அணுகி நின்ற ஸ்ரீராமபிரானை ராவணன் தம்பியான விபீடணன் அடைக்கலமடையவேண்டி ஆகாயத்திலிருந்துகொண்டே அலற, அந்த ஆர்த்தநாதத்தைக்கேட்ட ஸ்ரீராமபிரானும், அவன்பக்கல் ஆவாவென்றிரங்கி அருள்புரிய நினைக்க, அவ்வமயம், அரக்கரிடம் அச்சத்தாலும் ஸ்ரீராமனுடைய திருமேனியில் மிகப்பரிவாலும் கலங்கி, எவ்விதத்திலும் சத்ருவான அரக்கர் பக்ஷத்திலிருந்து வந்திருக்குமவனுக்கு அபயமளித்தல் கூடாதெனக் கூக்குரலிட்ட சுக்கிரீவனை, பிசாசாந்தாநவாந்யக்ஷாந் ப்ருதிவ்யாஞ் சைவராக்ஷஸாந் | அங்குள்யக்ரேண தாந் ஹந்யாமிச்சந் ஹரி கணேச்வர | (குரங்குகட்கரசே, அரக்கர்கள் எந்த உருப்புக்களைக்கொண்டு எங்கு சென்றிருந்தாலும் நினைத்தேனாயாகில் விரலின் நுனியால் நீறெழச் செய்துவிடுவேன்) எனத் தன் பெருமை பேசி அவன் பயந்தீரத்தெளிவித்தானன்றோ?

அங்கு தன் வன்மை சொன்னதே சுக்ரீவன் பயம் தீரப்போரு மாயிருந்தது. இங்கு அதுவும் போருமோ போராதோ என்று, ஆழ்வாருக்கு தன்தோளின் வன்மையைக் காட்டுகின்றான்; அப்படிக்காட்டியும் அதுவே அதிக பய ஹேதுவாக ஆயிற்று; ஏனெனில், உலகில் ஸ்திரீகள் பெரியோர்களை வணங்குங்கால், பாக்யவந்தம் ப்ரஸூயே தா: மாசூரம் மாசபண்டிதம் | (நற்பாக்கியம் வாய்ந்த பிள்ளையைப் பெறுவாய்; சூரனையும், பண்டிதனையுமுள்ள பிள்ளைவேண்டாம்) என்றே அவர்கள் ஆசி கூறுவர்களானபடியினாலே அதை நினைத்திருக்குமவர்கள் தன் பிள்ளையிடம் வீரத்தன்மையைக்கண்டுவிட்டால், தன் வலிமையால் எங்கு சென்று என் செய்வானோ இவன் உயிரோடு வாழ வேண்டுமே, என நடுநடுங்கியிருப்பர்களானதால், அது போலவே

இவ்வாழ்வாரும் பரிவுகொண்டபடிக்கேற்ப, எம்பெருமான் வீரத் தன்மையைக் காட்டக் கண்டு மிகவும் தளர்ச்சியுறுகிறார்.

எம்பெருமானின், ஸ்வபாவமான திருமேனிவடிவழகை நினைந் தே பல்லாண்டு பாடலுற்றவிவருக்கு அவன் வீரத்தன்மையையும் காட்டவே அது மல்லயுத்தப்ரஸ்தாவத்தை நினைப்பூட்டியபடியால் அது எப்பொழுது எங்கு நடந்தது என்பதை உணராமல், இப்பொ ழுதே நடந்ததென்றும், இப்பொழுது எம்பெருமான் காக்ஷிதருகிற தென்மதுரையே, வடமதுரையென்றும், க்வயௌவ நோந்முகீ பூத ஸுகுமார தநுர் ஹரி: | க்வவஜ்ர கடிநாபோக சரீரோயம் மஹாஸுர: (யௌவனப்பருவம் வந்து புகுந்துகொண்டிருக்கிற அழகான கண் ணபிரான் திருமேனியெங்கே, வச்சிரம்போல் கடினமான சரீரமு டைய பெரிய அஸுரன் எங்கே) என்று கதறி அதற்குமேல் பல் லாண்டென்று பாடாதே கைவிட்ட மதுரை ஸ்திரீகளின் செய்கை யும், இப்பொழுதுதானென்றும், தோன்றவே, மல்லாண்ட திண் டோள் மணிவண்ணா என்பதற்குமேலே வேறே ஒன்றும் சொல் லப்பெறாதே அலமந்து உடனே, உன் சேவடி செவ்விதிருக்காப்பு, என ரக்ஷை கட்டுகிறார் போலப் பேசுகிறார்.

உன் சேவடி, என்பது திருவடியைச் சொல்லுமாயினும், எம் பெருமானையும் சொல்லுமானதாலே அதையே முதலில் கொள்ள லாம்; உன் சேவடி செவ்வியென்பதால், உனக்கு உன் தன்மை அறியமுடியாது; அப்படி ஏதேனுமொரு படியே உன்படியடங்க லும் நீ கண்டுவிட்டாயாகில்' லோகரக்ஷண சிந்தையும் அற்றுப் போய் எப்பொழுதும் உனக்கே பல்லாண்டு பாடக்கிளம்பிவிடுவாய். ஆகவே, உன் ஸௌந்தர்யாதிகளாலான பெருமை அளவிட முடியு மோ; அதெல்லாம் என்போல்வார்க்கன்றோ அறியமுடியும்; ஆகவே எனக்கு ஆறியிருக்கப்போமோ? ஆனதால் உன் திருவடி வழகிற்குத் தீங்கொன்றுமில்லாதே இருக்கவேண்டுமென்கிறார்.

திண்டோள்மணிவண்ணா என்கிறபடியேயுள்ள வுன்னழகைக் காட்டிக் கொடுத்தால், அதைக்கண்டு எவர்தான் உன்னைப் பல்லா ண்டு பாடமாட்டார்; எம்பெருமான் திருமேனி இந்திர நீலப்பச்சை நிறமுடையது; உலகில் அனேக கிளைகளோடு கூடின ஒரு பச்சிலை மரமானது வெயிலில் வருந்துகிறவனைவர்க்கும் தங்கு நிழலைக் கொ

டுத்து தாபத்தைத் தீர்த்துவைக்கிறது காண்கிறோம்; அப்படியிருக்க நிவாஸவ்ருக்ஷஸ்ஸாதூநாம், (ஸாதுக்களுக்கு வஸிக்கத் தக்க வ்ருக்ஷம்) என்றும், பாஹுச்சாயாமவஷ்டப் தோயஸ்யலோகோம ஹாத்மந: (லோகமானது, எந்த மஹாத்மாவின் திருக்கைகளாகிற கிளைகளின் நிழலைப் பிடிப்பாகக் கொண்டுவாழுகிறதோ) என்றும், கஜம்வாவீக்ஷ்யஸிம்ஹம் வாவ்யாக்ரம்வாவநமாச்ரிதா। நாஹாரயதி ஸந்த்ராஸம் பாஹூ ராமஸ்யஸம்ச்ரிதா ।। (ராமனின் திருக்கைகளை நன்றாக அடைந்த ஸீதையானவள் காட்டையடைந்து யானை சிங்கம் புலி முதலிய துஷ்டமிருகங்களைக் கண்டும் பயத்தையடைவதில்லை) என்றும், கற்பகக்காவன நற்பலதோள் (கல்பக வ்ருக்ஷங்கள் நிறைந்த சோலை போன்ற நல்லபலதோள்) என்றும், இப்படியாக, எம்பெருமான் விருக்ஷமென்றும், அந்நிழலே அனைத்துலகும் அண்டிப் பிழைக்கிறதென்றும், அதை அண்டினார்க்கு பயலேசமுமில்லையென்றும், அதற்கு மேலும், கற்பகச்சோலை தழைத்தாற்போலே யிருந்து கொண்டு, நீர், நிழல் முதலியன யாதுமில்லாத ஸம்ஸாரமாகிற காட்டிலே திரிந்துழன்று இளைத்து வந்து விழுகின்றவனைவர்க்கும் அஞ்சேல் என்று அபயமளித்து தங்குநிழல் கொடுத்து தாபங்களையெல்லாம் தவிர்ப்பதற்கும் மேலே, வேண்டும் பெரும்பயனான வீடும் தந்துதவும் தன்மை வாய்ந்தபடியினாலே, அனைவரும் பல்லாண்டு பாடத்தக்கதாயிருக்கும் அவ்வரிய வஸ்துவை அடியேன் பல்லாண்டு பாடாதிருக்குகை சாலவழகியதுதானென்கிறார் போலும்.

சேவடி, என்பதால், எம்பெருமான் திருமேனியழகைப் பேசுவதும் நிற்க சேவடி, என்கிற பதத்திற்கு, நேரே பொருளாகத் தோற்றி நிற்பது திருப்பாதமானதாலே, அப்பாதார விந்தங்களின் பாங்கான ஸௌகுமார்யத்திற்குப் பல்லாண்டு பாடுகிறார் என்றபடி.

எம்பெருமானை யடையவேண்டியவனைவர்க்கும், காண்மின்களுலகீரென்று கண்முகப்பே நிமிர்ந்த தாளிணையன் (உலகிலுள்ளோர்களே, உங்களுக்குப் புகலிடமான வித்தைக் காணுங்கள், என்று அவர்கள் கண்ணுக்கெதிரே காட்டிநிற்கிற திருவடிகளையுடையவன்) என்கிறபடி, எம்பெருமான் திருவடிகளே அவனாலே முந்துறக்காட்டிக் கொடுக்கப்படுமானதாலே, அவைகளைக்கண்டு, அவைகளின் செவ்வி குன்றுதிருக்க மன்றாடி நிற்கிறார் என்னலாம்.

திண்டோள்மணிவண்ணா வென்கிறபடி தோள்வலியால் செய் தசெயலைச் சிந்தித்து திருத்தாள்களுக்குப் பல்லாண்டு பாடுகைதான் தக்கதோ, என்னில், அது தக்கதேதான்; தாளையூன்றிக் கொண் டேதான் தோள்வலி வீரத்தை நன்கு காட்டவேண்டும்; தோள் வலிக்குத் தாள்வலிமை தேடவேண்டியது முக்கியமன்றோ; கன்று குணிலா வெறிந்தாய் கழல்போற்றி, (பசுங்கன்றை எறிதடியாகக் கொண்டு, விளங்கனியுதிரத்தாளுகநதெறிந்தவன் திருவடி தீங்கி ன்றி யிருக்கவேண்டும்) என்கிறபடியுள்ள திருப்பாவை திவ்யஸூ க்தியின் சுவையும் இங்கு காண்க.

அன்றியும், ஆழ்வாருக்கு, பெருமாள் ஆகாயத்தில் ஸேவை தந்தார்; அப்பொழுது கீழே தாழ்ந்து தோன்றியது பெருமாளின் திருவடிகள்; ஆகவே அச்சேவடியைக்கண்டு, இந்தப்ராக்ருதி மண் டலத்தில் அத்திருவடி பாவுவதே; இதென்னைப் விளையுமோ; திரு வடியின் திருவடிவழகு நிலைத்திருக்கவேண்டுமே; எனக் கொண்டு அச்சேவடியின் செவ்வி குன்றாதிருக்கப் பாடுகிறாரென்க.

எப்படிப் பாடியும், பாட்டின் அர்த்தத்தை முடித்துக் கொடுக் கும் ஓர் க்ரியாபதமிடாமலே பாடும் சாதுர்யமும் போற்றத்தக்கதே யாம்; ஏனெனில், எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடுகைக்கு ஓர் முடிவு கண்டாலன்றோ அது செய்ய வடுக்குமென்றிருக்கிறார் போலும்; நிற்க, பல்லாண்டென்கிற, இது வேண்டுகோளா, அல் லது ஆசிகூறுவதா, எப்படியில் கொள்ளல், எம்பெருமானுக்குத் தக் கதோ, அப்படியே, அவனேகொண்டு தலைக்கட்டக்கடவன்; ஏதோ நான் ஆற்றாமை விஞ்சிபலற்றிப் போந்தேன்; என்றதைக் காட்டு கிறபடியுமாகலாம்.

இப்பாசுரத்தைத் தனித்து அநுஸந்தியாமல் அடியோமோடும் என்கிற இதனடுத்த பாசுரத்துடனே ஒரு தொடர்ச்சியாகச் சேர்த் தே அநுஸந்திப்பது, ஆசாரஸித்தமாகவிருக்கச் செய்தேயும், பல் லவி போல், பல்லாண்டென்கிற இத்திருமொழியிலுள்ள எல்லாப் பாசுரங்களுடனும் அநுஸந்திக்கத்தக்க சதிரும் பெற்றிருக்குமெனக் கொண்டு அவ்வாறே அநுஸந்திக்கத்தக்கதெனவும் அறிக.

இப்பாசுரத்தில், பல்கோடி, என்றும், நூறுயிரமும் என்றும், சேவ்வடி என்றும், பாடபேதங்கள் காண்கின்றன; எல்லாம் பொருத்தமுடையனவே; ஆகிலும், பலகோடி நூறுயிரம், என்றும், சேவடி என்றும், இவ்வண்ணமே பெரும்பான்மையோர் ஓதிவருவதாகத் தோற்றுகிறது. இவைகளில் சேவடி என்கிற பதம், இத்திருமொழி 5–4–7 ஆவதான, பருப்பதத்து என்கிற பாசுரத்தில் திருப்போலிந்த சேவடி என்று பேசப்படுகிறது; இதற்குள் இவர்க்குக் கிருஷ்ணவதாரத்தில் ஓர் ஊற்றமும், ப்ரபந்த ஆரம்பம், முடிவு இவைகளில் ஒரு பொருத்தமும் காண்மின், முதற்பாட்டான இதில் மல்லாண்ட திண்டோள்மணி வண்ணு, உன் சேவடி என்று; மல்ல நிரஸநத்தை, முன் பேசி, பின், சேவடி என்கிறுர்; இப்படி, தான் ப்ரபந்தாரம்ப தசையில் பேசின சரிதையை ப்ரபந்தம் முடியும் தருவாயிலும் ஒற்றுமைப் பட்டிருக்குமாறு பேசத்திருவுள்ளங் கொண்டு, சேவடி என்பதை முன்பேசி, பின் மல்லடர்த்தாய் என்பதைப் பேசுகிறுர். ஆகவே, இங்கும், ப்ராஸத்திற்கு சிறிது வேறுபாடுபோல் கண்டாலும் மேலில் போலவே, சேவடி என்றே கொள்வது சிறக்குமெனத் தோற்றுகிறது.

பின்னும், முதலாயிரம் பெருமாள் திருமொழியில், 4–10ல் போன்னியலும் சேவடிகள் என்றும், பெரிய திருமொழி 3–5–4ல் மன்னுசேவடிக்கே என்றும் 6—3—10ல் சேவடி சென்னியிற் சூடியும் என்றும், திருவாய்மொழி, 3—8—6ல் தீர்த்தனுலகளந்த சேவடிமேல் என்றும், இயற்பா, திருவாசிரியம் 1ல் மூவுலகளந்த சேவடியோயே, என்றும், முதற் திருவந்தாதி, 93ல் நின் சேவடி மேல். என்றும், 100ல், ஒண்மலர் சேவடியும், என்றும், இப்படியே பின்னும் பல விடங்களிலும் காண்பதாலும் சேவடி என்றே பெரும்பான்மையோர் ஓதி நிற்பர்போலும்.

இப்பாட்டில், மல்லாண்ட என்கிற பதத்தால், கண்ணன், கோகுலத்தில் குழந்தைப்பருவம்முதல், தன்னைக்கொல்ல ஒளிந்துவளருவதைக் கேட்கலுற்ற கம்ஸன் பூதனை முதலான பலரை ஏவி கண்ணனைக்கொல்ல நினைக்க அந் நினைவெல்லாம் பழுதேபோக பின்னர் மதுராமாநகரில் வில்வேள்வியென்று ஓர் வ்யாஜமிட்டு கண்ணன் பலராமன், இவர்களை வரவழைத்து, தந்திரமாய், குவலயாபீட

மென்கிற கொலையானையாலும், அது தப்பினால் மல்லர்களோடு போர்புரியச் செய்தாயினும் கொலைசெய்யக்கருதின அக்காலத்தில் ஸ்ரீகண்ணபிரான், பலராமனுந்தானுமாக மதுரைப் பதிநாடி, ஓடமாமதயானையுதைத்து, உள்ளே சென்று அங்கு நின்ற மல்லவர்க்கங்களை அவர்கட்குப் பயிற்சியுள்ள மல்யுத்தத்தினாலேயே அநாயாஸமாக அழித்திட்டனன்; என்கிற சரிதை வெளியிடப்படுகிறதென்பது, அறியத்தக்கது.

குறிப்பு. மல்யுத்தமென்றால் ஆயுதத்தின் உதவியின்றி தேஹத்தின் திறமைகொண்டே, செய்யப்படும் ஓர்வகைப்போர் என அறிக. ராமாவதாரத்தில் ராமன், பதினான்காயிரம் அரக்கரோடு தானொருவனாகப் போர்புரிந்தான். இவ்வவதாரத்தில் பல்கோடி நூறாயிரம் மல்லாண்டான்; ஆகவே, ராமனைக்காட்டிலும், மிகவும், பயமின்றி அசுரர்மேல்பாய்ந்து போர்புரியுந் துணிவுகொண்டவனொருவனிவன், எனக்கொண்டு, முதற்பாட்டான இதில், கண்ணன் சரிதையில் கால் தாழ்ந்து முந்துற அவனுக்குப் பல்லாண்டு பாடுகிறாரென்னலுமாம்.

மல்லாண்ட திண்டோள்மணிவண்ணா என்பதற்கு அந்வயக் கிரமம் வேறுபட்டிருந்தாலும், பல்கோடிநூறாயிரம், என்கிற பதத்துடன் சேர்த்து ஓர் விநோதமாகக் குறிப்பில் வரையப்பட்டதென ரஸிகர்கள் கொள்க. (1).

அடியோமோடும் நின்னோடும்
பிரிவின்றியாயிரம் பல்லாண்டு
வடிவாய் நின்வலமார்பினில்
வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதிவலத்துறையும்
சுடராழியும் பல்லாண்டு
படைபோர் புக்கு முழங்கும்
அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டே (2)

| | |
|---|---|
| அடியோமோடும் | அடியவர்களான எங்களோடும் |
| நின்னோடும் | ஸ்வாமியான உன்னோடும் |
| பிரிவு இன்றி | பிரிதலில்லாமல் |

| | |
|---|---|
| ஆயிரம் பல்லாண்டு | பல ஆயிரம் வருஷங்களும் இந்த ஸம்பந்தம் நித்யமாய் செல்லவேணும் |
| வடிவு ஆய் | உனது திருமேனிக்கும் புகரூட்டத் தக்க அழகையுடையவளாய் |
| நின் | உன்னுடைய |
| வலமார்பினில் | திருமார்பின் வலப்பக்கத்தில் |
| வாழ்கின்ற | நித்யவாஸம் செய்துகொண்டிருக்கிற |
| மங்கையும் | நித்யயுவதியான பெரியபிராட்டியாரும் |
| பல் ஆண்டு | பல வருஷங்களிலும் மங்களத்துடன் வாழவேண்டும் |
| வடிவு ஆர் | உனது திருமேனியைச் சூழ்ந்துகொண்டிருக்கிற |
| சோதி | ஒளியையுடையதும் |
| வலத்து | உன்வலது திருக்கையிலே |
| உறையும் | நித்யவாஸம் செய்கின்றதும் |
| சுடர் | பகைவரை எரிக்கத்தக்க அழலாய் விளங்குமதான |
| ஆழியும் | திருச்சக்கரமும் |
| பல்லாண்டு | எப்பொழுதும் வீரஸ்ரீயுடன் நித்யமாய் வாழவேண்டும் |
| படை | சதுரங்கசேனைகளோடுகூடின |
| போர் | யுத்தத்தில் |
| புக்கு | புகுந்து |
| முழங்கும் | பேரொலிசெய்கின்ற |
| அப்பாஞ்சன்னியமும் | அளவற்ற பெருமையோடுகூடின பாஞ்சசன்னியமென்கிற திருச்சங்கும் |
| பல் ஆண்டு | எப்பொழுதும் மங்களத்துடன் வாழவேண்டும் |

தாஸ பூதர்களானவடியோங்களும், ஸர்வஸ்வாமியான தேவரீரும், எங்கும், எக்காலத்தும், எவ்வகையிலும், விட்டுப்பிரியாதே ஸுகமாக வாழவேண்டும்; உனது வலத்திருமார்வில் வஸிக்கின்ற அழகிற்சிறந்த இலக்குமீ தேவியும் நித்யமங்களத்துடன் வாழவேண்டும்; பரம்பினவொளியுடன் நின் வலக்கையில் வஸிக்கின்ற

திருவாழியும் தீங்கின்றி வாழவேண்டும்; சேனை நடுவே சென்று புகுந்து அதிருங்கடுங்குரலுடைய அத்திருச்சங்கமும் வாழவேண்டும்; என வாழ்த்துகிறார்.

கீழ்ப்பாட்டில், எம்பெருமானைக்கண்டு, அவ்வழகிற்கு உடனே பல்லாண்டு பாடாதே, அரைக்கணமேனும் ஆறியிருக்கமாட்டாமையாலே, தாமொருவரானபடியிலேயே முந்துறப்பல்லாண்டு பாடியருளினார். அப்படிப்பாடுகையிலும், பல்லாண்டென்று முதலில் ஆரம்பித்து மேன்மேல் பெருக்கிக்கொண்டுபோய், பல்கோடி நூறாயிரம் என்று சொல்லி, அதை எண்ணிறந்த காலங்களின் அளவாக அமைத்து, அப்பெருமானின் திவ்யமங்கள விக்கிரஹச் சேர்த்தியையும், திருக்கல்யாண குணங்களின் சேர்த்தியையும், அழகாக அநுஸந்தித்து, அதனால், எம்பெருமான்தான் பரதேவதையென்றும், அடியவர்களானவனைவராலும் பல்லாண்டுபாடி அடையத்தக்கவனும் அவன் தானேயென்றும், நிரூபித்துக்கொடுத்து, ஈச்வரன், ரூபமில்லாதவன், குணமில்லாதவன் என்றிப்படியெல்லாம் வருகிற கலக்கங்களைப் போக்கடித்துப்பேசி, இப்பாட்டில், எம்பெருமான்தானும், நித்யமான ஓர் சரீரத்தையுடையவன், அச்சரீரத்தை எப்படி எப்பொழுதும் விட்டுப்பிரியாதிருப்பனோ, அப்படியே, ஜீவாத்மாக்கள் எம்பெருமானுக்கு சரீரபூதராயுள்ளவர்கள் எம்பெருமான் அச்சரீரத்தை ஆள இட்டுப்பிறந்துவைத்தவன் சரீரீ என்று சொல்லப்படுகிறவன்; ஆகவே ஜீவர்களும், எம்பெருமானும் பிரியாதிருக்கும் தன்மை படைத்தவர்களென்பதையும், லக்ஷ்மியின் நித்ய ஸம்பந்தத்தையும், ஸ்ரீய: பதி என்பதற்கு அறிகுறியான, சங்க சக்கராதி திவ்யாயுதங்களையுடையவன் என்பதையும், ஆகவே உபய விபூதிநாயகனுமவனே என்பதையும், பெருமை வெளிப்படவிளக்கிக் காட்டி, இப்பெருமையுடையானொருவனுக்குத் தாமொருவராய்ப் பல்லாண்டுபாடுவது போராதெனக்கருதி, அவனடியார்களான அனைத்துலகிலுள்ளாரையும் தம்மோடு கூட்டிக்கொண்டு பல்லாண்டு பாடிக்களிக்கிறார் அடியோமோடுமென்று.

தன் ஸத்தையை ஒரு பொருளாகமதியாதே, எம்பெருமான் குறைவின்றி வாழவேண்டுமென்று அவனுக்கே பல்லாண்டு பாடப் புறப்பட்டவிவர், அடியோமோடுமென்று தம்மையும் சேர்த்துப்

பல்லாண்டு பாடுவது தக்கதோ? என்னில், இவர் தமக்கு எம்பெருமானிடம் உள்ள கரைபுரண்டகாதலால், தம்மைப்போல் வேறு ஒருவரும் எம்பெருமானுக்குப்பரிந்து பாடுவார் இல்லையெனக்கருதி, அவனுக்குப் பல்லாண்டுபாட தம் ஸத்தையும் குலையாதிருக்கவேண்டுமாதலால், எம்பெருமான் கைங்கர்யத்திற்காக தம் வாழ்நாளை வேண்டுவது ஸ்வரூபவிருத்தமில்லையெனக்கொண்டு, தம்மையும் அவனையும் சேர்த்துப் பல்லாண்டு பாடுகிற இது பாங்கான செய்கைதான்.

அடியோமோடும்:— தாஸ பூதர்களான வெங்களோடும், என்கிறது. எம்பெருமான் திருவடியே அனைவராலும் அடையத்தக்க உயரியஸ்தானமென்றும், அதையடைவிக்க ஸாதனமாகவுள்ளதும் அதுவே, என்றும், நிச்சயமான நினைவுடன் அத்திருவடிகட்குத் தொண்டுபூண்டிருக்கையேதொழிலாகக்கொண்ட தூய்மையுள்ளவன்பர்கள் எவர்களோ, அவர்களே அடியார்களெனப்படுவர்களானதால் அப்படியுள்ளவர்களைச் சொல்லி அவர்களுடன் தம்மையும் சேர்த்துக்கொண்டு, அடியோமோடும் என்று அனுபவத்தை ஆரம்பிக்கிறார்; ஏனெனில் ஏக: ஸ்வாதுநபூஞ்ஜீத—இன்கனிதனியருந்தான், என்கிறபடி, நல்லதோர் வஸ்து கிடைக்கப்பெற்றால் அதைத்தனியே அநுபவிக்கலாகாதென, இருமொழிகளிலுமுள்ள பழமொழிகளின்படிக்கிணங்கி, தாம் அப்படி சாஸ்திரவச்யர் என்பதைக் காட்டிக்கொடுத்து, யத்ய தாசரதிச்ரேஷ்ட: தத்ததேவ இதரேஜநா:] (உலகிற் பெரியவராய்த் தோற்றுமொருவர் எந்த எந்த ஆசாரத்தைக் கைக்கொள்வரோ, அந்த அந்த ஆசாரத்தையே மற்றும் ஜனங்களெல்லாரும் கொள்வர்கள்) என்கிறபடியே, நன்நடத்தையை நாட்டிக் நன்றாக நாட்டிவைப்பதோடு, அதற்கு மேலும், அடியார்கள் குழாங்களை, உடன் கூடுவதென்று கொலோ (எம்பெருமான் தாஸ பூதர்களின் கூட்டத்துடன் சேர்வது எந்நாள்) என்றே, ஆழ்வார்களின் பேரவாவுள்ளதானதால், அதற்கேற்பவும், அதற்கும்மேலே, ப்ரவாஹத்தையுடைய ஆற்றில் இறங்க நினைக்குமவர்களும் தனியே இறங்க மனங்கூசி, பலரையும் துணைகொண்டு செல்லுமாப்போலே பகவத் குணானுபவப்ரவாஹத்தில் இழிய எல்லோரையும் கூட்டிக்கொண்டு அனுபவிக்க ஒருப்படுகிறார். இப்பதத்தால், தாஸபூதா: ஸ்வத:

ஸர்வேஷ்யாத்மாந: பரமாத்மந: (பரமாத்மாவானஎம்பெருமானுக்கு எல்லா ஜீவாத்மாக்களும், தன் நடையே வேலைக்காரர்கள்) என்கிற படிகளிலுள்ள ப்ரமாணங்கள் எல்லாம் ப்ரகாசிப்பிக்கப்பட்டதாகின்றன. மேலும், இவ்வாழ்வாருக்கு அனைவரிடமுமுள்ள, பேரன்பும், விசாலமான மனப்போக்கும், தயையும், இவ்வளவென வெளியாகின்றன. பின்னும், பெருமாளிடம், பரிவுகொண்டு, பெரியாழ்வார், எனப்பட்டாரென்பதற்கு மேலே, அடியாரிடம் அளவற்ற அன்புகொண்டு அதனாலும் அப்பெயரை அடைந்தாரென்றும் அழகாகச் சொல்லாம். பகவானிடம் பக்தியிருப்பது வாஸ்தவமானால், அது அவனடியாரளவும் வளர்ந்து நிற்கவேண்டுமென்கிறபடியையும் உணர்த்தினாரென்னலாம்.

பிரிவின்றி, என்றது, விட்டுப்பிரியாமல் என்கிறது. ஆக, தாஸபூதர்களான நாங்களும், ஸ்வாமியான நீயும் பிரியாமலிருக்க வேணுமென வேண்டப்படுகிறது. ஏனெனில், அடியோம்; அடியென்றால் ஸ்வாமி, ஸ்வாமியையுடையவனேவரும் தம்மைச் சொல்லிக்கொள்ளும்போது அடியோமென்று சொல்லிக்கொள்வர்கள். இப்படித் தங்களுடையவும், உன்னுடையவும் ஸம்பந்தத்தை (ஸ்வ, ஸ்வாமிபாவத்தை) உள்ளபடியேயறிந்தவர்கள், ஞானிகளென்னப் படுவர்கள். அவர்களை நீ, ஞாநீத்வாத்மைவமேமதம், (ஞாநியானவரோவென்றால் என்னுடைய ஆத்மாவென்று என் அபிப்ராயம்) என்று சொன்னாய்; ஆனதால், ஞானிகள், ப்ராணபூதர்களானால், நீ, அப்பிராணனைக்கொண்டு விளங்குமவனாக ஆகிறாய்: அப்பொழுது அவர்களைப்பிரியில், நஜீவேயம் க்ஷணமபி, (க்ஷணகாலங்கூட பிழைத்திருக்கமாட்டேன்) என்கிற தன்மை உனக்கு நேரும்; அக்காரணத்தால், நீ, அடியார்களைவிட்டுப் பிரியமுடியாது. க்ஷணே பிதேயத் விரஹோதி துஸ்ஸஹ: (எந்த மஹான்களுடைய பிரிவு உனக்குப் பொறுக்கமுடியாததோ) உன்னையுள்ளபடி உணர்ந்தாரை விட்டுப் பிரிந்து எப்படி நீ உயிர்வாழமாட்டாயோ, அப்படியே நாங்களும் நின்னோடும் பிரிவின்றியிருந்தால் தான் வாழலாம்; சராசராணி பூதாநிஸர்வாணி பகவத்வபு:, (ஜங்கமம் ஸ்தாவரம் என்கிற பாகுபாடுள்ள அனைத்தும் பகவானின் சரீரம்) என்றும், துழாய் முடியானுடம்பாய் விலையின்றி நாமடியோம் (நாம், திருத்

துழாயை முடியிலுடைய பெருமானுக்கு உடம்பாக விருந்துகொண்டு தன்னடையே தாஸபூதர்களாகவுள்ளோம்) என்றும், சொல்லுகிற படியே, நாங்களும் எம்பெருமானுக்கு மெய்யாக (சரீரமாக) விளங்கி அதனால் மெய் (ஸத்யமான) அடியார்களாக விளங்குமவர்களான தால், எங்களுக்கு பிராணனாக விளங்கும் நீ, சிறிது எங்களைவிட்டுப் பிரியில் எங்கள் இருப்பே இல்லையானதால் எங்களாலும் உன்னை விட்டுப்பிரியமுடியாது. நசஸீ தாத்வயாஹீ நா நசாஹமபிராகவ— முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யா விவோத்ருதௌ, (ஹே ராகவ, உன்னைப்பிரிந்து, ஸீதையும்நானும், ஜலத்திலிருந்து கரையில் எடுத்துப் பொகடப்பட்ட மீன்களைப்போல் முஹூர்த்தகாலம்கூட உயிர்பிழைத்திருக்கமாட்டோம்) என்கிறபடி, லக்ஷ்மணன் பேசின பேச்சு, அவர்கள் இருவர்க்குமட்டில் என்றே இருந்தீரோ, அனை வர்க்குமுள்ளபடியையே அவர் அறிவித்தாரென்பது அறியீரோ? இப்படியேயன்றோ, நன்றாக ,நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே நீ யென்னையன்றியிலே (நாராயணசப்தத்தால் அழைக் கப்படுகிறவனே, நாரசப்தத்தால் சொல்லப்படுகிற நான் உன்னை விட்டு வாழமுடியாதவன், நீயும் என்னைப்பிரிந்து வாழமுடியாது) என்கிற ஸூக்திகளும் உலகத்தார்படியையே உணர்த்தியிருக்கிற படி பாரீர்; பின்னும், பஹூநிமேவ்யதீதாநி ஜந்மாநி தவசார்ஜுந (என்னுடைய பிறப்புக்கோர் அளவில்லை பலகழிந்தன; அர்ஜு னனே, உன்னுடைய பிறவிகளும் பல கழிந்தன) என்கிறபடி, சேதனர்களைத் திருத்தியடிமைகொள்ள, எத்தனை பிறவிகள் பிறந்தி ருக்கிறாய்; அப்படிக்கஷ்டப்பட்டுப்பேசியிருக்கிற நீ, அடியார்க ளான எங்களைப்பார்த்து பிரிவின்றியினியிருக்கவேணுமென இரங்க வேண்டியிருக்க, அடியோமோடும் நின்னோடும், என்று நாங்கள் இரக் கும்படியாக வந்த மேன்மையைப் பாராய்; இங்ஙனேயுள்ள மேன் மைவாய்த்தவாறே இதற்குப்பின்னும், எந்நின்ற யோனியுமாய்பிறந் தாய் இமையோர்தலைவா (நித்யஸூரிகள் நாயகனே, எங்களையடி மைகொள்ளவெண்ணி எவ்வகையாய் நின்ற யோனிகளிலும் வந்து பிறந்தருளினாய்) என்கிறபடி, பின்னிட்டார் பரிதபிக்காதவண்ணம் அடியோங்களும் நீயும் நேர்பட்ட இக்காலத்திற்குப்பின் நாம், பிரி வின்றியே வாழவேண்டுமென்கிறார்.

ஆயிரம் பல்லாண்டு:— என்றது, பல ஆயிரம் வருஷங்களைச் சொல்லுகிறது. இங்கும் முன் சொல்லப்பட்ட பல்கோடி நூறாயிரம் என்கிற பதங்களில் உள்ள பொருளனைத்துங் கொள்வதில் குறையொன்றுமில்லை; எண்ணிறந்த காலங்களிலெல்லாம் அடியோங்களும் ஸ்வாமியான நீயும் விட்டுப்பிரியாதே வாழவேண்டும்; உலகில் ஒருவன் யஜமானன் என்றால் மற்றையோர் சிலர், அவனுக்கு வேலைக்காரர்களாக யிருக்கையைக் காண்கிறோம்; வேலைக்காரர்களுக்கு, யஜமானன் என்கிற ஒருவனிராமல், வேலைக்காரத்தன்மை ஸித்தியாது; அப்படியே, வேலைக்காரர்களைக் கொள்ளாத ஒருவனுக்கும் யஜமானத்தன்மை யென்பது நிலைபெறாது; அப்படிக்கிருக்க எல்லாப்படிகளாலும் நிருபாதிகஸ்வாமியாய், உடன்மிசையுயிரென, என்கிறபடி, எம்பெருமானைத் தவிர்த்தவனைத்தும் சரீரமாய், அவனொருவனுமே சரீரியாய், இவ்வாறு, சரீராத்மபாவஸம்பந்தத்துடனே, உன்னாலும், எங்களாலும், எங்கும், எப்பொழுதும் எவ்வகையாலும் ஒழிக்கமுடியாதபடி பெருமைபெற்று விளங்குகிறபடி கண்டால், இப்படி உறவுமுறைமையுள்ளபடிக்கி, எத்தனை காலந்தான் பல்லாண்டு பாடவேண்டாமென்றபடி. இப்படி யெல்லாம் பதறுகிற ஆழ்வாரை நோக்கி, வீணாக இப்படிக் கவலைப்படுவதுண்டோ? மங்களம் மங்களாநாம், (மங்களுக்கெல்லாம் மங்களமாக விளங்குமவள்) என்றும், கல்யாணாநாமவிகல நிதி: (கல்யாணங்களுக்கெல்லாம் குறைவற்ற இருப்பிடம்) என்றும் போற்றப்படும் பெருமையுள்ள பெரியபிராட்டி, என் வலது திருமார்பில் வாழ்ந்துகொண்டிருக்க எனக்கு இனி என்னகுறையுண்டு; எப்படிப், பிராட்டியைப் பிரியாது வாழ்கிறேனோ, அப்படியே, அவளுக்கும் குழந்தைகளான உங்களைத்தான் விட்டுப்பிரிவேனோ? நமக்கும் பூவின்மிசை நங்கைக்கு மின்பன் (சேதனர்களுக்கும், மலர்மேல் மங்கைக்கு மின்பன்) என்கிறபடியே, உங்களுக்கும் அவளுக்கும் நான் இன்பனல்லனோ? உங்களுக்கு முந்துற இன்பனான பிறகேயன்றோ, அவளுக்கு நான் இன்பனாவது; குஹேநஸஹிதோராம: லக்ஷ்மணேநசஸீதயா, (குஹப்பெருமாளோடு சேர்ந்த பிறகே லக்ஷ்மணனுடனும், ஸீதையுடனும் கூடினவனாக ஆனான்) என்கிறபடியே, என்படியை, ஸால்மீகி கோகிலம் கூவியிருப்பது கேட்டறியீரோ? என்னைக் காணவிரும்

புமவரைக் கண்டணுகிய பின்பே, திருவடி, திருவனந்தாழ்வான், பிராட்டி, யிவர்களின் சேர்த்தி எனக்கு உளதாகத் தோற்றும்; மேலும், திருவடி, திருவனந்தாழ்வான், பிராட்டி, இவர்களை விட்டாலன்றோ, உங்களைவிடப்ரஸக்தியுண்டு; ஆகவே, என் பதறுகிறீர்' விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ, (எங்கும் நிறைந்து தோற்றும் பெருமானுக்கு லக்ஷ்மியும் விட்டுப் பிரியாதிருக்குமவள்) என்கிறபடியேயுள்ள லக்ஷ்மியின் நித்திய ஸம்பந்தத்தைக் காணுமென்ன, அவ்விளமங்கையைக் காட்டக்கண்டு அவள் வடிவழகில் ஈடுபட்டு அவளுக்குப் பல்லாண்டு பாடுகிறார்; வடிவாய், இத்யாதியால்.

வடிவாய்:— என்றது, பெருமாளுக்கும் புகரூட்டும்படியான சோபையையுடைத்தானமையைச் சொல்லுகிறது. ச்ரத்தயாதேவோதேவத்வமச்நுதே: பத்நியான பிராட்டியின் நித்ய ஸம்பந்தத்தால் தேவனை எம்பெருமானும் தேவத்வத்தையடைகிறான்)என்று வடமொழி வேதம் விளம்பி நின்றது; மாரீசன் என்கிற ஓர் மாயாவியான அரக்கனும், ஸீதாபிராட்டியை யபஹரிக்கத் தன்னைத்துணையாகக் கொண்டுபோக எண்ணங்கொண்டு தன்னைத்தேடிவந்த, ராவணனைக்குறித்து, ஸ்ரீராமகுணங்களைச் சொல்லிவருகிறபொழுது, அவர் பராக்கிரமம், உன்போல்வார்க்கு எதிர் நிற்கத்தக்கதல்ல, என்று சொல்லுகிறப்ரகரணத்தில், அப்ரமேயம்ஹிதத்தேஜோயஸ்யஸாஜநகாத்மஜா (அவனுக்கு விசேஷமான புகரையூட்டவென்றோ ஸ்ரீ ஜனகராஜன் திருமகள், உளளோ அப்பெருமையையடைய இட்டுப் பிறந்திருக்கிற ஸ்ரீராமபிரானின், அப்படிப்பட்டதே ஜஸ்ஸை ஒருபடியாலும் ஒருவராலும் ஒருகாலத்திலும் ஓரிடத்திலும் அளவிடமுடியாததன்றோ) என்றிப்படியாகப் பிராட்டியின் சோபையைப் பேசிநின்றான். அதன் பின்னும், ஸீதாதேவியைத் தேடப்புறப்பட்டுக் கடலைக்கடந்து இலங்கையில்: ராவணனின் அந்தப்புரத்தில் சென்று, அங்கு ராவணனுக்கு விதேயைகளாய்க் கண்டபடி படுக்கை வாய்ப்பிலே கிடந்த ஸர்வாங்க ஸுந்தரிகளான ஸ்திரீகளைத் தான் தனியேகண்டும், அதனால் மனதிலும் சிறிதேனும் வேறுபாடு கொள்ளாதே, ஜிதேந்திரியனாய், உலகத்தாராலும், ஸ்ரீ பீஷ்மரோடொக்க ஒரு சேர்த்தியாகக் கொண்டாடப்படுகிற, காடுவாழ்ந்து கிளைதாவும் சாதியுமாகப் பிறவிபிறந்த ஹனுமானும், சீதையைப்

பிரிந்து ராமன் இப்பாடுபடுகிறாரே,ஒரு பெண் காணவிடில் தேட இவ்வளவு வருத்தமுறுகிறாரே, இது என்னே! என்றே ஒரு படி முதலில் எண்ணமிட்டுக் கொண்டிருந்தும், அசோகவநிகையில் உபவாஸத்தால் மேனி மெலிவெய்தி அதற்கும் மேலே புழுதிபடிந்துள்ள திருமேனியுடனும் தோற்றுகிற பிராட்டியைக் கண்டமாத்திரத்தில், அவளுடைய திவ்யாவயவ ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களில் முதலிலே கால் தாழ்ந்து, மதியெல்லாமுள் கலங்கி மயங்கி, துஷ்கரம் க்ருதவாந் ராமோஹீநோயதநயாப்ரபு:l தாரயத்யாத்மநோ தேஹம் நசோகே நாவஸீததிll (ப்ரபுவான ராமன் எந்த இவளால் விடுபட்டதும். தன்னுடைய தேஹத்தை விடாது தரிக்கிறரோ; சோகத்தால் தளர்ச்சியுற்று முடிந்துவிடவில்லையோ; அப்படி அவர் செய்ததானது, தேஹம் படைத்த ஒருவராலும் செய்ய முடியாத செயலே யெனச் சொல்லத் தட்டுண்டோ) என்கிறபடி, ஸீதையைப் பிரிந்து இராமன் வாழ்கிறானே; தனக்கு சோபையை உண்டுபண்ணக் கூடியவளாய் 'அநங்யை' என்று சொல்லப்படுகிற இவளை விட்டும் இராமன் ஸத்தை பெற்றிருப்பது எதற்காக; இவளைப் பிரிந்து இருக்கிறனென்று பழிபடைத்திருக்குமதிற்காட்டில், இவளைப் பிரிந்து இறந்தான் என இனிதாகப் புகழுப் படைக்கக் கூடாதோ? ராமன் என்ன கார்யம் செய்தான்; ஒருவராலும் செய்யமுடியாத இக்கார்யத்தையே செய்தான்; என்னென்றே பலவாறுகப் பித்தேறிப் பிதற்றிக் கிடந்தான்ரே? அங்ஙனேயுள்ள சோபையையுடைய லக்ஷ்மியின் படியைக் கண்ட இவ்வாழ்வார், அந்த லக்ஷ்மி தேவியின் சோபையை செவ்வனேயிருக்கவேணுமென்று சிந்தைசெய்து அவ்வடிவை முதலில் பற்றி அவ்வனுபவத்தில் இழிகிருர்.

இங்கு, பிராட்டியினல் பெருமாளுக்கு சோபையுண்டாகிறதெனச் சொல்வதால் அப்பெருமாளுக்கு சிறிது குறைகூறப் பட்டதாகிறதில்லையோ வென்னில், அல்ல, புஷ்பத்திற்கு உடன் சேரும் வாஸனையால் பெருமையுண்டானல், அப்பெருமை புஷ்பத்தினுடையதாகவே போற்றப்படுவது போலவும், மாணிக்கத்திற்கு, மிக்க வொளியால் மஹிமையுண்டாகி பெரியவிலை திப்பைக் கொண்டாலும், அம்மஹிமை மாணிக்கத்தினுடையதாகவே மதிக்கப் படுவது போலவும், ஆயிரங்கிரணங்களால் சூரியனுக்கு ஏற்றம்ஏற்பட்டு

அதனால் அவன் எல்லாராலும் ஏற்றப்பட்டாலும் அவ்வேற்றம் சூரியனுடையதாகவே சொல்லப்படுவது போலவும், பத்னியான பிராட்டியின் ஸம்பந்தத்தால் பதியான ஸ்வாமிக்கு பெருமை ஏற்பட்ட போதிலும், அப்பதியின் பிரதானத் தன்மையையே ப்ரகாசிப்பித்துக் கொண்டு விளங்குமாதலால், ஓர் குறைவுமில்லை; இவ்வர்த்தத்தை மூதலித்துக் காட்ட, இங்கு சொன்ன மூன்றாவது திருஷ்டாந்தத்திற்கனுகுணமாக இப்பிராட்டிதானே, அநந்யாராகவேணுஹம் பாஸ்கரேணப்ரபாயதா (எப்படி, ஒளியானது சூரியனுடன் சேர்ந்து, அவனுடனே ஒன்றுசேர்ந்தே தோன்றுகிறதோ, அப்படியே நானும் ஸ்ரீ ராமனுடன் சேர்ந்தே வேறுபடாது தோன்றுமவள்) என்று அருளிச்செய்தாள். மாரீசன், ராவணனுக்குச் சொல்லுமிடத்தும் ஸீதையின் சோபாதிசயத்தைப் பேசி, அச்சோபையைக் கொண்ட வொருவர் தேஜஸ்ஸை தெரியுமா உனக்கு, அது அளவிட முடியாததென்று நிரூபித்துக் காட்டுமிடத்தில், பிராட்டியினால்பெருமானுக்கு புகர் என்று சொல்லியிருந்தும் எம்பெருமானின் ப்ராதான்யம் வெளிப்பட, தத்தேஜ:, என்று இவ்வாறுள்ள தத்வார்த்தத்தைத்தெளிவாகத் தெரிவித்துப் பேசினான்.

இவ்வண்ணம் புகர்படைத்த பிராட்டி வஸிக்கும் ஸ்தானத்தை ஏத்துகிறார் நின் வலமார்பினில் என்று.

நின்வலமார்பினில் என்றது, எம்பெருமான் வலத்திருமார்பைச் சொல்லுகிறது. இலக்குமிதேவி, தனக்குப் பிறந்தகமான தாமரைமலரையும் தன் ஸௌகுமார்யத்திற்குத் தக்க திதென்னென்று தள்ளிவிட்டிட்டு, மாலின் மலர்ந்த மார்பையன்றோ மனதிற்கிசைந்ததென மகிழ்ந்து மன்னி நின்றாள். இப்பெருமையை யடியொத்தி, அகலகில் லேனிறையுமென்ற லர்மேல் மங்கையுறை மார்பா (பத்மவாஸினியான பெரிய பிராட்டியாரும் க்ஷணகாலங்கூட இவ்விடத்தைவிட்டுப் பிரிந்திருக்க மாட்டேனென்று சொல்லிக்கொண்டு நித்யவாஸம் பண்ணுகிற திருமார்பையுடையவனே) என்று, நம்மாழ்வாரும், பூமன்னுமாது பொருந்திய மார்பன் (பூவில் மன்னியிருக்கிற பெண்ணரசி, பொருந்திநிற்கிற திருமார்பையுடையவன்) என்று, அமுதனாரும், மாமலர் மன்னிய மங்கை மகிழ்ந்துறை மார்பன் (உயர்ந்த மலரில் மன்னியிருக்கிற மங்கை

தானும் பெருமகிழ்ச்சியோடுறைகின்ற திருமார்பையுடையவன்) என்று, மிகவும் அழகாக, ஸ்ரீதேசிகன் திருக்குமாரரான நயினாராசார்யரும், தென்மொழியில், திருமார்பை, தேன்மொழியால் தெளியப் பேசிநின்றார்கள். வடமொழியிலும், இவ்வைபவத்தை, வேதாந்தா: தத்வ சிந்தாம் முரபிது ரஸியத்பாத சிஹ்நைஸ்தரந்தி (எம்பெருமானின் திருமார்பில் பிராட்டியின் நித்ய வாஸத்தால் ஏற்பட்ட அடிச்சுவட்டினால், பாதத்வமின்னதெனவறியாது பரிதபித்த வேதாந்தங்களெல்லாம் அக்கவலை தீர்த்துக்கொள்கின்றனவோ) என்றிப்படி., ஆழ்வான் முதலிய, அனுபவத்தில் சிறந்தோர்களும் அறிந்தேத்தி நின்றார்கள்.

வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு:— என்றது, அத்திருமார்பில் நித்யவாஸம் பண்ணுகிற யுவதியான பெரிய பிராட்டியாரும் எண்ணிறந்த காலமெல்லாம் வாழவேணுமென்கிறது. அதாவது, பிராட்டியானவள் க்ஷணகாலங்கூட எம்பெருமான் திருமார்பை விட்டுப் பிரிந்து தன்னால் இருக்க முடியாதென மொழிந்துகொண்டு முகில் வண்ணன் திருமார்பை பற்றியிருக்கிறாளாகையாலே, அவ்விள மங்கை, நின் வலமார்பினில் தீங்கின்றி வாழவேண்டுமென வேண்டி நிற்கிறார். மங்கை என்றால் பன்னிரண்டாவது வயதிலிருந்து பதிமூன்றாவது வரையில் உள்ள காலமென்பர். ஆகவே என்றும் இதே வயதான தோற்றத்துடன் தோற்றியிருக்க வேணுமென்றபடி.

"நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" என்கிற சொற்களின் சேர்த்தியை சிறிது நோக்குமின். பிராட்டியைப் பல்லாண்டுபாடுகிறவிவர், அவளுக்குப்பிறந்தகமான, தாமரைமலரில் இருக்கும் இருப்பைக்காட்டியாவது, அல்லது திருப்பாற்கடலான அவதாரஸ்தலத்தைக்காட்டியாவது பாடவில்லை. அன்றிக்கே, காட்டில் ராமனோடு செல்லுகிற தசையிலோ, காதுஷணயுத்த ஸமயத்தில் இலக்குமணனிடம் குஹையிலிருந்த இருப்புக்கோ அசோகவனிகையில் தனியே இருந்த இருப்புக்கோ பரிந்து பாடவில்லை. பர்த்தாவின் திருமார்பிலிருக்கும் பெருமைகொண்டு மிகுந்த பாதுகாப்புடன் விளங்கும் தன்மைக்குத் தான்பாடிநிற்கி

ருர். இதுதான், என், என்னில்? இவனோ, மல்லாண்டதிண் டோள் மணிவண்ணன்; இவனுக்கோ துணிவும் அதிகம், இவன் குறும்புதான், கோதைதன்னாலும், குறும்புசெய்வானோர்மகன், எனக்கூறத்தக்கதாகவிருக்கிறது, ஆகவே, தான், எதிரிகளிடம் சண்டைக்கு முன் நிற்குமவன், எதிரிகள் குறிப்பாகக்கொள்ளு மிடமோ, "மார்பு", ஆனதால், திருமார்பில் வஸிக்கும் தன்மைக் குத்தான் யாதொரு தீங்கும் வாராதிருக்கவேணுமெனப்பாடுகிறுர் போலும்.

இப்படி அலர்மேல் மங்கையிடம் பரிவுகொண்டுபாடியதைக் கேட்கலுற்ற பெருமானும், ஆழ்வாருக்கு ஸம்பத்திவ்யாமது விஜ யிந: (மதுவென்றவஸுரனை வென்றவனின் அழகிய ஸம்பத்து) என்று சொல்லப்படுகிற லக்ஷ்மிக்கு வாஸஸ்தானமான திருமார் பைக் காப்பாற்ற, லக்ஷ்மீதாம்ந: ப்ருதுளபரிகை:. (லக்ஷ்மியின் ஸ்தானத்துக்கும் பெரியதாழ்ப்பாள்) என்று போற்றப்படுகிற திருக் கைகளையும், ஆச்ரித ரக்ஷணத்தில் விளம்பம் பொறுக்கமாட்டாதே எப்பொழுதும் சங்கசக்கிராத்யாயுதங்களைத் தரித்திருக்கிற படியை யும் முதலெடுப்பிலேயே காட்டி பயந்தீர்த்துவிடாமல், இவருக்குத் தன் படியைச் சிறிதுசிறிதாகத் தோற்றுவித்து இவருடைய பரி வின் மிகுதியை பாரோரனைவரும் பார்த்துப் பரக்கப் பேசுமாறு, செய்யக்கருத்துக்கொண்டு, ஆழ்வாரை நோக்கி, ஓய், உம்மை, வெளியே வெறுமனே, வாயினால் பல்லாண்டு பாடிக் காப்பிடக் கொண்டிருக்கிறேன்; உமக்கு மேல் பரிவுகொண்டு, எதிரிகள் இன் னவிடத்திலிருக்கிறுரெனக் கருதினால், அவ்விடம் தான் சென்று கொன்று வென்றி கொண்டு வரும் தன்மைகொண்ட திருவாழி யாழ்வானை வலத்திருக்கையில் காணீர் என்ன, அந்த திவ்யாயுதத் தின் திவ்யசோபையிலீடுபட்டு அதற்குப் பல்லாண்டு பாடுகிறுர். வடிவார் சோதியென்றாரம்பித்து.

வடிவார் சோதி:—என்றது தன் வடிவுமுழுவதும், எம்பெரு மான் வடிவத்தோடும், பரம்பினவொளியுடைமையைக்காட்டுகிறது.

வலத்துறையும்:—என்றது, வலதுபக்கத்தில் பற்றி நின்ற மையைப் பகருகிறது. வலத்துறையும் என்பதால், வலது மார்பில்

இலக்குமிதேவி வாஸம் செய்கிறாளானதால், அவளைக்காக்கவேணு மென்றே மிகப்பரிவுகொண்டு தானும் அவ்வலது பக்கத்தையே நாடிக்குடிகொண்டமை குறிப்பிடப்படுகிறது. மேலும், சங்கமா னது இடதுபக்கத்தே இருந்தாலும், அதற்கு இங்குபோல் பக்கத் தைக் காட்டும் அடைமொழி இடப்படாமையும் காண்க.

சுடராழியும்:—என்றது, இவ்வாழியைக் காண்கைக்கு மற் ரோர் உதவி தேடவேண்டாதே, தன்னைத்தானே காட்டிநிற்கும் ஒளியுடைமையை உணர்த்துகிறது. உலகுக்கெல்லாம் மங்கள தீப ரேகையாக விளங்கும் பிராட்டிவஸிக்கும் பக்கத்தில் இச்சுடராழி யுள்ளது கொண்டு பெரிய நிதிகளின் ஸமீபத்தில் விளக்கேற்றி வைப்பது உலகவியற்கையாகையாலே, எம்பெருமானுக்கு நிதி போன்ற இப்பிராட்டியிருக்கும் பக்கத்திற்கு, நிதியின் பெருமைக் குத் தக்கபடி, கோடிஸூர்ய ஸமப்ரப (கோடிக்கணக்கான சூரி யர்கள் ஒரேகாலத்திலுதித்தாற்போலுள்ள வொளியுடையவனே) என்கிறபடியுள்ள திருவாழியாழ்வான் திருவிளக்காய் அமைந்தானோ எனவும் கூறலாம். மேலும், அநுகூலருக்கு இவ்வொளி அநுபவ யோக்யமாய் தோற்றச் செய்தேயும், ப்ரதிகூலருக்கு நெருங்க முடியாதபடி, பேரழலாய்த் தோற்றி நிற்குமென்னலாம்.

பல்லாண்டு:—என்றது, இப்பரிவுடைய சக்கரமும் தீங்கின்றி வாழவேணுமென்கிறது. கார்கலந்த மேனியான் (மழை முகில் போன்ற வடிவையுடையவன்) என்கிறபடி, ஒரு ஆயுதமும் ஏந்தா தே இருக்கும் திருமேனி அழகிற்கே பல்லாண்டு பாடவேண்டி யிருக்க, கைகலந்தவாழியான் (கைவேறு; திருவாழிவேறு, என் றறியமுடியாதபடி ஒரே படியாகக்கலந்த திருச்சக்கரத்தையுடைய வன்) என்கிறபடி, கையும் திருவாழியுமாய், அதிலும் வலத்து உறை யும் அவ்வழகிற்குப்பல்லாண்டு பாடவேண்டாவோ என்றபடி.

வலத்துறையும் சுடராழி, என்கிறபடி சக்கரத்தை பிரியாதே வலக்கையில் தரிக்கிறான் என்பதை, எப்போதுங் கைகழலா நேமியான், என்றும், மழுங்காத வைந்நுதிய சக்கரநல்வலத்தை யாய், என்றும் "நம்மாழ்வாரும்" அருளிப்போந்தார்.

இங்ஙனம், திருவாழியாழ்வானைக்காட்டி ஆழ்வாரைத் திகைக்கச் செய்தபின், அதோடும் நில்லாதே, சேனை நடுவே சென்று முழங்கும் கடுங்குரலுடைய சங்கையும் காணீர் என்று காட்ட, அதைக் கண்டு அதற்குப் பல்லாண்டு பாடுகிறார் படைபோர் என்றாரம்பித்து.

படை போர்புக்கு முழங்கும்:— என்றது, தேர், யானை, குதிரை காலாட்கள், என்கிறபடி, நான்குவகுப்பான சேனைகளோடு கூடின யுத்தக்களத்தில், சென்று, அதிரும் குரலுடைத்தானமையைச் சொல்லுகிறது. சக்கிராயுதமானது, எதிரிகளை வெல்லுவதற்காக சற்றுநேரமாவது, திருமாலின் கையை விட்டுச் செல்லவேண்டியதாகவிருக்கும்; சங்கோ வென்றால், அப்படி நாமும் சென்றால் காப்பாராரிவ்விடத்து என்று கலங்கி திருமாலின் கையைவிட்டுப் பிரியாதே கைத்தலத்தே ஏறிக் குடிகொண்டிருக்கும் தன்மையிலேயே தன் குரலை போகவிட்டு பகைவர் குடலைக்கிறிக் கூறுசெய்து கொலை செய்து நிற்கும். இப்பெருமைதான், ஸகோஷோதார்த்த ராஷ்ட்ராணும் ஹ்ருதயாநிவ்யதாரயத் (அந்த சங்கின் பேரொலியானது கௌரவர்களுடையக் குடலை நன்றாகப் பிளந்தது) என்றும், யஸ்யநாதேந தைத்யாநாம் பலஹாநிரஜாயத (யாதொரு சங்கத்தினுடைய முழக்கத்தாலே அசுரர்களுக்கு பலக்குறைவு உண்டாயது) என்றும், ச்லோகங்களால் பேசப்பட்டதேயாகும். படைபோர் புக்கு முழங்கும், என்பதற்கு, சங்கானது, தான் ஆயுதமாய் ப்ரவேசித்து கார்யம் கொள்ளுமாற்றை இங்கு குறிப்பிட்டமை அறிக.

அப்பாஞ்சசன்னியமும்:— என்றது, மிகவும் பெருமை கொண்டசங்கம் என்று சொல்லுகிறது. சக்கரத்தைப்போல் கையைவிட்டுப் பிரியாதே இருந்த விடத்திலிருந்தே கார்யத்தை முடித்துவைக்கிற படியைச் சொல்லலாம். அன்றிக்கே, ஆளுக்குத் தகுந்த வேடம் பூண்டு கொள்ளும் சங்கம் என்னலாம். அதாவது, அநுகூலர் வாழவும் ஆநிரையினம் மேயுமிடமிருந்து மீளவும், ஆகாதார் இவ்வொலி கேட்டு மாளவும், என்றிப்படியன்றோ இது கொண்ட கோலமிருப்பது. அதுவுமன்றிக்கே, அன்று பாரதப்போரில் செ

ன்று முழங்கின சங்கம் என்னலாம்; ஈதெல்லாமு மன்றிக்கே, கோலப் பெருஞ்சங்கே என்றும், செல்வப் பெருஞ்சங்கே என்றும், கோதை, கொஞ்சி குலாவிப் பேசுகிற, சங்கின் அழகு, இன்னபடியென்று ஒரு வார்த்தையிட்டுச் சொல்லமுடியாமையாலும், இப்படியுள்ள அழகைத் தன் கண்ணால் கண்டால் அவ்வழகிற்கு, என்ன கெடுதிவருமோ என்றஞ்சி, தன் குழந்தைகளை அலங்காரம் செய்த தாய்மார்கள், தன் குழந்தைகளின் அழகைத் தான் நேரில் நன்றாகத் தன் கண்களால் காணில் திருஷ்டி தோஷம் ஏதாவது ஏற்படுமோவென்று எதிரேயுள்ள குழந்தைகளையும் ஒருவாறு அரைக்கண்ணால் பார்க்குமாப்போலே, ஆழ்வாரும், தன்னில் காட்டில் பரிவு கொண்டு எம்பெருமான் கையைவிட்டுப் பிரியாதே எல்லோருக்கும் எதிராக நோக்கிக் களிக்கும்படி சேவைதருகிற அழகிய பாஞ்சன்னிய மென்கிற சங்கத்தை மறைவில் இருக்கும் வஸ்துவைப்போல் நேரே இருக்கும் தன்மையிலும் தான் முகத்தை மாற வைத்துப் பேசி நிற்கிறார் என்னலுமாம்.

பல்லாண்டு:— என்றது, இவ்வாறு மேன்மையுள்ள சங்கந்தானும், எண்ணிறந்த காலம் எம்பெருமானுக்குப் பரிவுடன் பணி செய்து கொண்டு வாழவேணுமென்று வாழ்த்தி நிற்பதைக் காட்டி நிற்கிறது.

குறிப்பு:—இவ்விரண்டு பாட்டுக்களையும், திருமந்திரம் என்று சொல்லப்படும் திருவஷ்டாக்ஷரத்தின் அர்த்தங்களை வெளியிடுகின்றனவாக, முன்னோர்கள், வ்யாக்யானங்களில் மொழிந்துள்ளார்கள். அவைகளிலும் விஸ்தாரமானபடிகளை அனுபவரஸிகர்களான அறிஜ்ஞர்களிடம் அடிபணிந்து கேட்டு அகமகிழ ப்ராப்தம். மற்றும் இங்கு புலப்படும் பொருத்தமான ஓர் அனுபவ விசேஷத்தை இத்திருப்பல்லாண்டின் இறுதியில் அனுபவிப்போம். மேலும் இப்பாட்டுக்களில், மல்லாண்டதிண்டோள் என்று அஸுரனை நிரஸனம் பண்ணின பராக்கிரமத்தைப் பேசியபடியில், அவனுடைய வீரத்தன்மையான மற்றும் குணங்கள் பேசப்பட்டதாகவும், மணிவண்ணா என்பதாலும் உன் சேவடிசெவ்வி என்பதாலும், அவனுடைய ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதி குணங்களான கல்

யாண குணங்களெல்லாம் பேசப்பட்டதாகவும், வடிவாய்........... மங்கையும் என்பதால் மற்றுமுள்ள மஹிஷிகளையெல்லாம் பேசப்பட்டதாகவும், அப்படியே, சுடராழியும், அப்பாஞ்சசன்னியமும், என்பவைகளால், பின்னும், அவன் கொண்டிருக்கிற திவ்யாயுதங்களெல்லாம் பேசப்பட்டதாகவும், ஆக எண்ணிறந்த கல்யாணகுணங்களையுடையனும், ஸ்ரீ, பூமி, நீளாதி நாயகனும், சங்க, சக்ர கதா சார்ங்காதி, திவ்யாயுதங்களையுடையனுன, ஸ்ரீமந்நாராயணனுக்குப் பல்லாண்டு, பாடப்பட்டதென அறிக.

அப்படியே, அடியோமோடும், என்கிற முதற்பாதத்தால், ஸ்வோஜ்ஜீவநேச்சாயதிதேஸ்வ ஸத்தாயாம் ஸப்ருஹாயதி | ஆத்மதாஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வாபாவ்யஞ்சஸதாஸ்மர (உனக்கு உயர்ந்த ஜீவனத்தில் எண்ணமிருந்தாலும், உன்னுடைய ஸத்தையில் ஆசையிருந்தாலும், ஆத்மாவிற்கு அடிமைத்தனமுள்ளதென்பதையும், எம்பெருமானுக்கு யஜமானத்தன்மையுள்ளதென்பதையும், இது எப்பொழுதும் உள்ளதென்பதையும் எப்பொழுதும் நினை) என்கிறபடியுள்ள ப்ரமாணங்களால் காட்டப்படுகிறபடி, எம்பெருமானை விட்டுப்பிரியாது சேதனர்களெல்லாம் அவனுக்கு அடிமை செய்து கொண்டு அம்மகிழ்ச்சியுடனேயே வாழ்ந்திருக்கத்தக்கதென்பதுவும் வெளிப்படுத்தப்பட்டதாகவுமாகிறது. (2)

வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல்
　வந்து மண்ணும் மணமுங்கொண்மின்*
கூழாட் பட்டு நின்றீர்களை யெங்கள்
　குழுவினிற் புகுதலொட்டோம்*
ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள்
　இராக்கதர் வாழ்* இலங்கை
பாழாளாகப் படைபொருதானுக்குப்
　பல்லாண்டு கூறுதுமே* (3)

| | |
|---|---|
| வாழ் | நல்வாழ்வையுண்டாக்கத்தக்க |
| ஆள் | அடிமைசெய்வதில் |
| பட்டு | ஆசைப்பட்டு |

| | |
|---|---|
| நின்றீர் | நிலைத்துநிற்குமவர்கள் |
| உள்ளீரேல் | யாரேனும் இருப்பீர்களேயானால் |
| வந்து | நீங்கள் எங்கள்கூட்டத்தில் ஒரு சேர்த்தியாகவந்துசேர்ந்து |
| மண்ணும் | திருமுளைத் திருநாளுக்குவேண்டிய மண்சுமக்கும் கைங்கர்யத்தையும் |
| மணமும் | அந்தத்திருநாளுக்கு அபிமானத்துடன் ஸர்வகைங்கர்ய நிர்வாஹம் செய்யும் பெருமைகளையும் |
| கொள்மின் | கைக்கொண்டு அனுபவியுங்கோள் |
| கூழ் ஆள்பட்டு | ஓர் அகப்பை கூழ்கிடைக்குமென்று அதற்காகக் கீழ்ப்பட்ட பிறரிடத்தில் அடிமை ஓலை எழுதிக்கொடுத்து |
| நின்றீர்களை | கண்டவிடத்திலும் நிற்கிறவர்களை |
| எங்கள் குழுவினில் | எங்களுடைய கூட்டத்தில் |
| புகுதல் | வந்துசேர்ந்துகொள்ள |
| ஒட்டோம் | சம்மதிக்கமாட்டோம் |

அப்படிக்கு எங்களுக்குள்ள பெருமைதான் என்ன, என்று கேட்பீர்களேயாகில்

| | |
|---|---|
| நாங்கள் | எம்பெருமானுக்கு அடிமை செய்கையே சிறந்ததெனத் தீர்ந்திருக்கிற நாங்கள் |
| ஏழ் ஆள்காலும் | மூவேழுதலைமுறைகளாகவே |
| பழிப்பிலோம் | யாதொரு குற்றத்தையும் உடையோமல்லோம் |

இவ்வாறு புகழ்படைத்திருக்க அறிகுறியாக நாங்கள் கொண்ட கைங்கர்யம்தான் ஏதேன்னில்

| | |
|---|---|
| இராக்கதர் | அரக்கர்கள் |
| வாழ் | நிலையாகவாஸம் செய்கிற |
| இலங்கை | லங்காப்பட்டணத்திலிருந்த |
| ஆள் | துஷ்டர்களான அனைவர்களும் |
| பாழ் ஆக | மாண்டுபோகும்படி |
| படை | குரங்குமுதலிய சேனையைக்கொண்டு |

பொருதானுக்கு — போர்புரிந்த பெருமானுக்கு

பல்லாண்டு — { எண்ணிறந்த காலங்களிலெல்லாம் ஸுகமாக எழுந்தருளியிருக்கவேணுமென்று

கூறுதும் — மங்களத்தை வேண்டிப்பாடிநிற்போம்

எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்யவேணுமென்கிற நல்வாழ்வில் ஆசையுடையவர் யாரேனுமுளராகில், அவர்களெல்லாம், எங்களுடன் ஒரு கோஷ்டியாக வந்துசேர்ந்து, எம்பெருமான் உத்ஸவத்துக்குப் பூர்வாங்கமான திருமுளைத்திருநாளன்றைக்கே, பாலிகைக்காகவேண்டி, கொண்டுவருகிற புழுதிமண்ணை சுமந்துகொண்டு ஸந்நிதிசேர்த்தும், மேல், அவ்வுத்ஸவத்தின் கைங்கர்யங்களெல்லாவற்றிலும் பெரிய ஆதரத்துடன் நிர்வாஹங்களெல்லாம் செய்து, அதனால் ஏற்படும் ஆனந்தானுபவத்தைச் செய்யுங்கோள். சாண்வயிற்றுக்கு, ஓர் அகப்பை கூழ் கிடைக்குமாவென்று கீழ்ப்பட்ட பிறருக்கு அடிமை ஓலை எழுதிக்கொடுத்து, அதையே பெரிய போகமாய் நினைத்துக் கண்டவிடமெல்லாம் அல்லாடி நிற்கிற நீசர்களை எங்கள் அழகிய கோஷ்டியில் புகவிட சம்மதிக்கமாட்டோம். அப்படிக்குள்ள மேன்மையான உங்களுக்கென்ன என்னில், நாங்களெல்லாம் இருபத்தொரு தலைமுறைகளாகவே, ஒருவகையான குற்றமுமில்லாதவர்களாய், இலங்கையைப்பாழ்படுத்தின இராமபிரானுக்குப் பல்லாண்டு பாடாநிற்கின்றோம்.

கீழ், இரண்டு பாட்டுக்களில், எம்பெருமானைத் தன்னுடைய ஆசைக்கனுகுணமாகப் பல்லாண்டுபாடி, அவ்விடத்தில், அவர் போமோடும் என்று தன் மநோபாவத்தால் பலரையும் கூட்டிக்கொண்டதாக வைத்துப் பாடிய படியை ப்ரத்யக்ஷமாகவே அனுபவிக்க ஆசையுள்ளவராய், சதுர்விதாபஜந்தேமாம் ஜநாஸ்ஸுக்ருதிநோர்ஜுந | ஆர்த்தோஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீசபரதர்ஷப || (பரதச்ரேஷ்டனான அர்ஜுனனே, தான் கொண்டிருந்து இழந்த செல்வம் வேணுமென்றும், இன்று புதிதாக செல்வம் வேணுமென்றும், கேவலம் ஆத்மாநுபவம் வேணுமென்றும், எம்பெருமானைப் பற்றியடிமை செய்கையே ஸர்வவிதமான போகமானதால் அதுவே

வேணுமென்றும், வேண்டிநிற்கிற புண்ணியசாலிகளான நான்கு வகுப்பாகவுள்ள ஜனங்கள் என்னை யடைகிறார்கள்) என்கிறபடியே யுள்ள, நான்கு அதிகாரிகளுடனும் சேர்ந்து அனுபவிக்க நினைத்து, இவர்கள், நால்வராகிலும், செல்வம் வேணுமென்ற இருவரும், செல்வத்தை வேண்டுகிறவர்கள் என்கிற கணக்கில் ஒத்துமைகொண்டவரானதால் அவ்விருவரை ஒருவராகவைத்து, (1) செல்வத்தை இச்சிக்குமவர். (2) கேவலம் ஆத்மானுபவத்தை ஆதரிக்குமவர். (3) எம்பெருமானை எல்லாமுமாகக்கொண்டவர், என, மூவராக்கி, இம்மூவரில், முதல்வரான வொருவரென்கிற ஞானியின் வகுப்பாரை முதலில் அழைத்து, மூவருள்ளும் முதலாவான் மூரிநீர்வண்ணன் (மும்மூர்த்திகளுள் முதன்மை பெற்றவன் முகில்வண்ணன்) என்கிறபடி, முழுமுதற் கடவுளான, எம்பெருமானை அனுபவிக்கிறார் அவர்களுடன் கூடி இப்பாட்டில், வாழாட்பட்டு என்றாரம்பித்து

வாழாள்:— என்றது, எல்லைகடந்த ஸுகத்தைத் தரக்கூடியதான அடிமையைச் சொல்லுகிறது; அதாவது, எம்பெருமானைத் தவிர்த்த இதரதேவதைகளுக்கு அடிமைசெய்கையில் பலமும் அல்ப்பமுமாய், செய்வதும் மிகவும் கஷ்டமுமாய், அதற்காக வேண்டிச் செய்யுங்கார்யங்களும் அருவருக்கத் தக்கவையாய், கிடைக்கும் அல்ப பலத்திலும் துக்கத்தின் சேர்க்கையே அதிகமுமாய், மேலும் அது துக்கத்தையுண்டுபண்ணிக் கொடுக்கவே காரணமுமாய் இருக்கும். ஆகவே, அதை வெறுத்துப் பேசுமிடத்தில், ப்ரஹ்மாணம் சிதிகண்டஞ்சயா:சாங்யாதேவதாஸ்ம்ருதா: | ப்ரதிபுத்தா நஸேவந்தே யஸ்மாத்பரிமிதம் பலம்|| (நன்றாய் அறிந்தவர்கள், பிரமனையும், கறுத்த கழுத்தையுடைய ருத்திரனையும், பின்னும் வெவ்வேறாக நினைக்கப்பட்ட தெய்வங்களையும் தொழுகிறார்களில்லை; ஏனெனில் எந்த தெய்வங்களைத் தொழுவதிலிருந்து ஏற்படும் பயனானது, மிகவும் ஓர் வரம்புகட்டி அளவிடப்பட்டிருக்கிறதோ) என்று இப்படியாகப் பேசி நிற்கின்றன. அப்படி அறியாமையால் தகாதவர்களுக்கு அடிமைசெய்கையை, ஸேவாச்வவ்ருத்திராக்யாதா (நீசஸேவைசெய்வது நாயின்வேலையென்றும் சொல்லப்பட்டது.) ஆனதால், எம்பெருமானுக்கடிமை செய்கைதான் வாழத்தக்க அடிமை. இது, அடிமையேன்னுமக்கோயின்மை (அடிமையென்கிற அந்த

ராஜகுல மஹிமை) என்று, இவ்வாழ்வாரால் மேலே பேசப்படுகிறது. குலசேகரப் பெருமாளும், அரசமர்ந்தானடிசூடுமரசையல்லாலரசாகவெண்ணேன் மற்றரசுதானே (ராஜ்யாதி பத்திய ஸ்ரீயில் பொருந்தினவனுடைய திருவடியைத் தலைமேல் கொள்வதாகிற அழகிய ராஜ்யாதி பத்தியத்தையல்லது மற்ற எல்லாவற்றையும் ஓர் ராஜ்யாதி பத்தியமாக நினைக்கமாட்டேன்) என்றார். நந்தேசிகனும், கிங்கரத்வா திராஜ்யம் (வேலைக்காரத்தன்மையாகிற ராஜ்யாதிபத்தியம்) என்று வெகு அழகாக அருளிச்செய்தார். இப்படி இவ்வடிமையில் பெருமைகண்டு வேண்டிநின்ற படிகளெல்லாம், எனக்கேயாட் செய் எக்காலத்துமென்று, என்றும், ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி, வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம், என்றும், பலவிடங்களிலும், பரக்கப் பேசப்பட்டது.

பட்டு:— என்றது, அடிமை செய்கையில் அங்கீகாரம் செய்ய ஒருப்பட்டு நின்றமையை உரைக்கிறது. உப்புக்கடலில், முத்துமிருக்குமாப்போலே, அஹங்கார, மமகாரங்களால், நல்லறிவு தடைப்பட்டு, இதரவிஷயங்களில் ஆசையைவளர்க்கக்கூடிய ஸம்ஸாரத்திலிருக்கையிலேயே, எம்பெருமானுக்கு ஆள்ப்பட்டிருக்கவேணுமென்று, அபிப்ராயமிருக்கும்படியான, ஓர் பாக்கியமிருப்பதே என்று கொண்டாடிப்பேசுகிறபடி.

நின்றீர்:— என்றது, அவ்வடிமையிலேயே, ஆத்மாவுள்ளதனையும் நிலைத்திருக்குமதை நினைப்பூட்டுகிறது நின்றவாநில்லாநெஞ்சினையுடையேன் (நின்றபடியே நிலைத்து நில்லாத நெஞ்சினையுடையவனாகவிருக்கிறேன்) என்கிறபடியே, சஞ்சலப்படாமல், நிலைநின்று ஸந்தோஷமாய்க் காலங்கழிக்கும் தன்மை படைத்திருக்கும் மேன்மையைச் சொன்னபடி.

உள்ளீரேல்:— என்றது, தாம் தேடுகிற வஸ்துவிற்கு ஓர் அருமையுள்ளதெனக் காட்டிநிற்கிறது. உள்ளீரேல் என்பதால் இவ்வருமையான வஸ்து, இருப்பது அரிதென்றும், ஒரு ஸமயம் இருந்ததேயானால், என்று ஸந்தேஹம் தோற்றவே பேசுகிறது. ஏனெனின்? ஸர்வேச்வரனை எம்பெருமான் தானே, வாஸுதேவ

ஸ்ஸர்வமிதி ஸமஹாத்மாஸுதுர்லப: (வாஸுதேவனொருவனே தமக்கு எல்லாமுமாகவுள்ளவன், என்று, உயர்ந்த முடிவைக் கொண்டு விளங்குகிற அப்படிப்பட்ட மஹாத்மா, துர்லபன்; மிகவும் துர்லபன்) என்று, துக்கத்துடன் பேசியிருந்தால் அப்படிப்பட்டவர்களை ஆராய்ந்து காண்பது எவ்வளவு அருமையுடன் கூடினதாக விருக்கும், அப்படிப்பட்டவர்கள் இப்பூவுலகில் கிடைப்பதரிது என்பதை, ஜகதி பவிதாதைவாத்க:சித் ஜிஹாஸிதஸம்ஸ்ருதி: (லோகத்தில் வெறுக்கப்பட்ட ஸம்ஸாரத்தையுடையவன் தெய்வசங்கற்பத்தால் எவனோ ஒருவன் உண்டாவன்) என்று, ஸ்ரீ தேசிகனும் அருளிச்செய்தாரன்றோ? இதனால், துர்லபோமாநுஷோதேஹ: தேஹிநாம்க்ஷணபங்குர: | தத்ராபி துர்லபம்மந்யே வைகுண்டப்ரியதர்சநம், (உடம்புபடைத்தவர்கட்கு சிறிது காலத்துக்குள்ளே நாசத்தையடையக்கூடிய, மனித தேஹங்கிடைப்பதே அரிது; அதிலும் எம்பெருமானைக்கண்டு ப்ரீதியுடன் ஸேவிக்கத்தக்க தேஹத்தைக்கொள்வது மிகவும் அரிது என நினைக்கிறேன்) என்கிற ப்ரமாணங்களெல்லாம் நினைப்பூட்டப்பட்டமை காண்க.

வந்து:— என்றது, இவ்வாறு ஆழ்வார் அருளியதைக் கேட்கலுற்ற அவர்கள் ஸமீபத்தில்வர அவர்களை ஆதரவோடு அழைத்து அன்புகாட்டிப்பேசுகிறபடியை அறிவிக்கிறது. அதாவது, எழுந்தருளவேணும் எழுந்தருளவேணும், இப்படி எழுந்தருளி அநுக்கிரஹம் செய்தருளிற்றே; என்கிறபடியாம். அன்றியும், வந்து, இப்படி எழுந்தருளி, மண்ணும் மணமும் கொண்மின், என்று, மேல் வாக்கியத்திற்கு உதவியாகக்கொண்டும் அநுபவிக்கலாம்.

மண்ணும் மணமும் கொண்மின்:— என்றது, பெருமாள் திருநாளுக்குப் பாலிகைகள் வைத்து, அங்குரார்ப்பணம் செய்வதற்கு வேண்டிய தானே புழுதிமண் சுமக்கையையும், அதற்குமேல் நடக்கிற மஹோத்ஸவத்தில், எம்பெருமானுக்கு எவ்விதமானகைங்கர்யங்கள் செய்கையையும், அங்கீகரிக்கவேணுமென்று வேண்டுகிறபடியைச்சொல்லுகிறது. வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல், என்றதும், அப்படிப்பட்ட மஹான்கள் அருகில் வந்தார்கள்; அவர்களைப்

பவைபடியும் ஆராய்ந்து பிறகு தன்னுடன் அடிமையில் கொள்ளாமல் அப்படிப்பட்டவர்கள் கிடைப்பது மிக அருமையாகவிருந்தபடியி னுல், அவ்வடியார்களைக்கண்டமாத்திரத்தில், மிகவும் ஸந்தோஷத் தினுல், வரிசைக்கிரமமாகச் செய்வதொன்றுமறியாமல், நெடுநாள் வந்திருந்து பழகின சிலரைச்சொல்வதுபோல, உடனேவந்து மண் ணும் மணமும் கொண்மின், என்று, கூடியாடிக்களிக்கிருர். இங்கு, வந்து மண்ணும் மணமும் கோண்மின் என்கிற வார்த்தையில் வழங் கப்படும் விசேஷம் கண்டறியவேண்டும். இச்சேதநர்கட்கெல் லாம் எம்பெருமானுக்கு அடிமை செய்கை என்பது எப்பொழுதும் உள்ளதென்பதும், அது ஏதோ சிலகாரணத்தால் நடுவே சிறிது தடைப்பட்டிருக்கிறதென்றும், அந்தத்தடை நீங்கியதும் அவ்வ டிமை செய்கையை அவர்கள் தானே ஏற்கிருர்கள் என்றும், அவ்வ டிமை புதியதல்லவாதலாலும், பழமையாய் இவர்கட்கே உரிய தோன்றுனதாலே, வேருெருவர் அதை எடுத்து இவர்கட்கு வழங் கவேண்டாதே, தன் ஸொத்தைத்தானே தனக்கதீனமாகச் செய்துகொள்வது போலவே இவர்கள் கொள்கிருர்களென்றும், இதுபோன்ற தத்வங்கள் இங்கடங்கியிருக்கின்றன. இவ்வர்த் தத்தை, ஸ்ரீ தேசிகனும், அடிமையினங்கூறுகவர்ந்து (கைங்கர்யத் தில் நமக்குள்ள பாகத்தைக் கைக்கொண்டு) எனத் தெளியவருளி னுர். ஆகிலும், கொள்மின் என்று சொன்னதால், இதை எடுத் துக்கொள்ளுங்கோள் என்று அதிகாரத்துடன் பேசினதாகவாகா தோவென்னில் ஆகமாட்டாது. இதைக்கைக்கொள்ளவேண்டு மென இரந்தபடியாம்.

இப்படி, இவர் அழைத்த அநந்ய ப்ரயோஜன பார்களின் கூட் டங்கள் வருகிற அக்காலத்தில், கூட்டத்துடன் கூட்டமாக, ப்ர யோஜநாந்தர பார்களும் வந்து புகுர, அவர்களை வெளியேதள்ளி வாசலடைப்பவர்போலச் சீறிப் பேசுகிருர், கூழாள் என்று ஆரம் பித்து

கூழாள்— என்றது, ஒரு அகப்பைக் கூழுக்கு, ஒருவனுக்கு அடிமை செய்யுமவனைச் சொல்லுகிறது.

பட்டு:—என்றது, ஒருவனுக்கு உள்பட்டு இருந்தமையைச் சொல்லுகிறது. பாழும் வயிற்றைவளர்க்கவேண்டி ஒருவனுக்குக் கட்டுப்பட்டு, அவனிட்ட வேலைகளெல்லாம் செய்வதாக அடிமைச் சீட்டு எழுதிக்கொடுத்து அநர்த்தப் பட்டமையை அறிவிக்கிறது. பட்டு, என்கிற சொல், பாழாய்ப்போனபடியையும் உணர்த்துமாதலால், அதையும் இங்கே கொள்ளலாம். ஒரு மரமானது, பச்சையான நன்தன்மையுடன் வாழுங்காலத்தில், இது நல்லமரம் என்று பலவாறு பெருமை யுடன் பேசப்படும், சருகாய் உலர்ந்துபோன காலத்தில், இது பட்டமரம் என்று இகழ்வாகச்சொல்லப்படுவது போல, இச்சேதநன் எம்பெருமான் பெருமையை அறிந்து, அவனுக்கு அடிமைசெய்ய தான் முற்பட்டிருந்து செய்தால்த்தான் அவன் உள்ளவன் என்றும், அப்படியில்லையாகில், ஸத்தையில்லாதவன் (பட்டுப்போனவன்) என்று, வடமொழி உபநிடதத்தில் உள்ளபடியையுணர்த்தியுரைத்தபடியாம்.

நின்றீர்களோ:— என்றது, நின்றுகொண்டிருக்குமவர்களைச் சொல்லுகிறது. நல்லோர்களைப் பேசுங்கால் நின்றீருள்ளீரேல், என்று நல்லவர்கள் காணக்கிடைப்பதின் அருமையை அறிவித்துப் பேசிற்று. ப்ரயோஜநாந்தரபரர்களான இவர்களைப்பேசுமிடத்து பார்த்த பார்த்தவிடங்களிலெல்லாம் இப்படிப்பட்டவர்களே பரவி நிற்கின்றார்களே, என்று மிகப்பதட்டம் தோற்றப்பேசி நிற்கிறது.

எங்கள் குழுவினிற் புகுதலொட்டோம்!—என்றது, எங்களுடைய கூட்டத்தில் நீங்கள் வந்து பிரவேசிக்க நாங்கள் ஒப்புக்கொள்ளமாட்டோம் என்று சொல்லுகிறது. எங்கள் என்றது, இப்பொழுது தம்முடன் சேர்ந்த அவன் நல்லடியார்களும் தாமுமான ஒரு சேர்த்தியைக்கொண்டு சொன்னபடி. தாம் எப்பொழுதும் பகவத் ப்ரவணராகவேயிருக்க, இப்பொழுதுதான் புதிதாகவொருவர்நல்லதன்மைகொண்டு விளங்கிவந்து சேர்ந்தால், அவரைப் புதிதானவரெனத் தனிப்படுத்திப்பேசாதே, அவரோடு தாம் ஒரு நீராய்க்கலந்துகொண்டு பேசும்பெருமையை வெளிப்படுத்திக்காட்டியபடியாம். நித்ய விபூதியான, ஸ்ரீவைகுண்டத்தில் சென்றால் நடக்கும் ஓர்பரிமாற்றம், இப்பாருலகிலும் பரவிநிற்பது காண்மின்கள்-

எங்கள்குழு, என்று சொல்லுவதால், தேஹமே ஆத்மா, என்கிற கலக்கம், எம்பெருமானைத் தவிர்த்த சிலருக்கு அடிமையென்கிற கலக்கம், அல்பமான சிலபயன்களில் பற்றுதல், இவை முதலான யாதொரு தோஷமில்லாதவர்கள் தாங்கள் என்பதைச் சொன்னபடி. நீனைய வேனும் தோஷமில்லாத எங்கள் கூட்டத்தில் உங்களுக்குவந்து சேர அநுமதிகிடைக்கமாட்டா; போங்களென்றபடி. இவ்விடத்தில், அத்யப்ரப்ருதி ஹே லோகா: யூயம் யூயம் வயம் வயம் | அர்த்தகாமபராயூயம் நாராயண பராவயம் | நாஸ்தி ஸங்கதிரஸ்மாகம் யுஷ்மாகஞ்ச பரஸ்பரம் | வயந்துகிங்கராவிஷ்ணோ: யூயமிந்த்ரியகிங்கரா: | (உலகிலுள்ளோர்களே இது முதலாக, உங்கள் கூட்டம் வேறு, எங்கள் கோஷ்டிவேறு, நீங்கள் பொருளையும் போகத்தையும் போற்றி நிற்கிறீர்கள் ; நாங்கள், எல்லாம் நாராயணனே என்றிருக்கிறோம் ; உங்களுக்குமெங்களுக்கும் ஒருவர்க்கொருவர் ஸம்பந்தமேயில்லை; நாங்களோவென்றால் விஷ்ணுவின் வேலையாட்கள்; நீங்கள் இந்திரியங்கட்கெல்லாம் அடிமைப்பட்டிருப்பவர்கள்) என்றிவை முதலான ப்ரமாணங்கள் நினைக்கத்தக்கவை.

இவ்வாழ்வார், மிகவும் தயையுள்ள மனதையுடையவராய் விளங்குமவர் என்று கொண்டாடப்பட்டிருக்கச் செய்தேயும், சிலரைத் தன்னுடன் கூட்டிக்கொண்டும், சிலரைவிலக்குவது தகுதியுள்ளதோ என்னில்? தகுதியுள்ளதேதான். கீழே உதாஹரித்தப்ரமாணங்களும் நிற்க, ந சௌரிசிந்தா விமுக ஜந ஸம்வாஸவைசஸம் | வரம்ஹுதவஹஜ்வாலபஞ்சராந்தர்வ்யவஸ்திதி:|| (எம்பெருமானின் தியானத்தில் விமுகரான ஜனங்களுடன் சேர்ந்து வஸிக்குமதிற் காட்டில் நெருப்பின் சுடரால் சூழப்பட்ட கூட்டினுள்ளே நிலைத்திருப்பதே உயர்ந்தது) என்றிப்படியுமுள்ள ப்ரமாணங்களுக்கு அநுகுணமாகத்தானே, ப்ரமாணங்களைப் பற்றி நிற்கின்ற பெரியோர்களின் அநுஷ்டானமும் விளங்கும். இங்கு, வஸிஷ்டன் பரமதயாளுவாலும் சண்டாளனை அக்னிகார்யத்திலே கூட்டிக்கொள்ளானிறே, என்கிற படியுள்ள பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யான வாக்கியத்தின் சொற்சுவை பொருள் சுவைபோற்றத் தக்கவை.

இவ்வாறு, எங்களை உங்கள்கூட்டத்தில் கொள்ளாமலிருக்க, உங்களிடம் அனைவருமறியும்படியான ஏற்றந்தானேதாகிலுமுண்

போ, என்ன, அதையுரைக்கிறார் ஏழாட்காலுமென்று ஆரம்பித்து.

ஏழாட்காலும் பழிப்பிலோம்நாங்கள்:— என்றது, நாங்கள் ஏழு தலைமுறையாகக் குற்றமற்றவர்கள் என்று சொல்லுகிறது ஏழாட்காலுமென்ற வித்தால் மேலேழு தலைமுறைகளையும் சொன்ன படியிலே நோக்கு. நம்மாழ்வாரும், கேசவன் தமர்கீழ்மேலெமரே ழெழுபிறப்பும் என்கிற பாசுரத்தில், இவ்வர்த்தத்தை அருளிச்செய்தார். பழிப்பிலோம் என்பதாவது, விஷயாந்தரங்களில் ஆசை, வேறு தெய்வங்களிடம் விச்வாஸம், இவை முதலியன தோஷங்கள் எங்களிடம் கிடையாதென்று சொன்னபடி. இப்படிப் பழிப்பில்லாத படியினால்த்தான், நாங்கள், நாங்கள் என்று சொல்லிக்கொள்ளத்தக்கவர்களானோம், என்றும் சொன்னபடியாம்.

இவ்வண்ணம், நீங்கள் சொல்லிக்கொள்ளுகிற வார்த்தையைக் கொண்டே நீங்கள் குற்றமற்றவர்களென்று நாங்கள் எங்ஙனே நம்பக்கூடும்; உங்கள் செயலைக் கொண்டன்றோ உங்கள் தன்மையறிவது சிறக்கும், ஆகவே உங்களிடம் ஏதாகிலும் நற்செய்கையிருந்தால் அதைச் சொல்லுங்கோளென்ன, அதை விளம்புகிறார். இராக்கதர்வாழிலங்கை என்று தொடங்கி, பாட்டின் மிகுதியால்.

இராக்கதர்வாழிலங்கை பாழாளாகப் படைபொருதானுக்குப் பல்லாண்டு கூறுதும்:— என்றது, அரக்கர்கள் நிர்ப்பயராய் நிலைத்து வாழ்ந்த இலங்கையைப் பாழ்படுத்த ஆயுதத்தை விட்டவனுக்குப் பல்லாண்டுகூறுவோம் நாங்கள் என்று சொல்லுகிறது. அக்காலத்தே நடந்த செயலுக்கு இக்காலத்தில் பல்லாண்டு பாடுவது வெகு அழகுதான். கதேஜலேஸேதுபந்த: 'போன ஜலத்திற்கு அணை கோலுங் கணக்கிலிருக்கிறதே, பின்னும் அக்காலத்தில் பெருமாளிடம் பரிவுடையார் யாருமில்லையோ? பரிவுகொண்டு ஒருவரும் பல்லாண்டு பாடாதிருப்பரோ என்னில்? சொல்லுகேன் கேண்மின், பிரமன் முதலியவர்கள், சீதையை ராவணன் அபஹரித்த அன்றே, நம்முடைய கார்யம் முடிந்துவிட்டதென இருமாந்திருந்துவிட்டார்கள். வாநர முதலிகளோ, ராமனின் ப்ரயோஜனத்திற்குப் பாடுபட முன்வந்து, தங்கள் பிராணனிடத்தும் ப்ரீதி பாராட்டினார்களில்லை.

ஆகவே அக்காலத்தில் ஒருவரும் பல்லாண்டுபாடாததாலும், அக்காலத்தில் நடந்த அச்செய்கை எங்கள் மனோபாவத்தால் இப்பொழுதே நடக்கிறதாகத் தோற்றுவதாலும், அவ்வெம்பெருமானின் வீரச்செயலுக்குத் தோற்று, ஐயோ, இருந்தவிடத்திலிருந்து, தன் சங்கற்பத்தால் அரக்கரை அழிக்கலாகாதோ, எதிரிகள் விட்ட அம்புகள் தன் திருமேனியின் மேல் பாயும்படி எதிரே நின்று அம்பு கோர்த்துப் போர்செய்யவேணுமோ பிரானே. இவ்வாறு ஆச்ரிதர்க்காக உன் திருவுடம்பையும் ஒருபொருட்டாகவெண்ணாதே போர் செய்யும் உன் திருமேனியின் வடிவழகு மாறாதேயிருக்கவேணுமே என்று வயிறுபிடித்து நாங்கள் பரிவுடன் பல்லாண்டு கூறுகிறவர்கள் அன்றோ ? ஆகவே எங்கள் பரிசுத்தி பிறப்பாலும் செயலாலும் மேம்பட்ட தொன்றன்றோ என்று சொல்லித் தலைக்கட்டுகிறானென்றறியலாகிறது.

இப்பாட்டில், இராக்கதர்வாழ் ................ பொருதானுக்கு, என்கிற வித்தால், இராவணன் என்கிற அரக்கன், இலங்கையில், தன் தம்பிகள், பிள்ளைகள், ஸ்நேஹிதர்கள், பந்துவர்க்கங்களோடு வாழ்ந்துகொண்டு பிரமன் முதலிய தேவர்களுக்கும், விச்வாமித்திரர் முதலிய ரிஷிகளுக்கும், மற்றுமெல்லோருக்கும், மிகக் கொடுமைகள் செய்துகொண்டு போருகிறநாளில், அவன் கொடுமை தாங்கமுடியாததேவர்கள் பிரமனை முன்னிட்டுப் பரமனைச் சரணமடைய, அப்பரமனும் இப்பாருலகில், தயாதன் தன் மகனாய்த்தோன்றி, இலங்கையிற் சென்று, ஆச்ரித விரோதிகளான, அவ்வரக்கர்களுடன் எதிரம்பு கோத்துப் போர்புரிந்து அவ்வரக்கர்களையெல்லாம் அழித்திட்டனன், என்கிற ரகுவீரனின் சரிதை வெளியிடப்படுகின்றதென்பது அறியத்தக்கது.

குறிப்பு:— ஆக இப்பாட்டின் முதலடியால், ஸத்பிரேவஸஹாஸீத ஸத்பி: குர்வீதஸங்கமம் (ஸாதுக்களான ஸத்துக்களுடனே கூட இருக்கவேணும், அவர்களுடன் சேர்க்கையைச் செய்யவேணும்.) என்கிறபடியே நல்லோர்களுடன் நண்ணியிருத்தலே நன்கெனவும், இரண்டாமடியால், நீசஸேவை செய்யும் நீசர்களுடன் நெருங்காதே தூரவிலகியிருத்தலே தக்கது எனவும், பின்னிரண்டடி-

களால், எம்பெருமானின் திவ்யகல்யாண குணங்களை எப்பொழுதும் பாடுவதே, மூவேழு தலைமுறைகளளவுமுள்ள தோஷங்களை நீக்கி ஜன்மஸாபல்யத்தைத் தரும் எனவும், உள்ள உண்மையான விஷயங்களெல்லாம், உணரத்தக்கது. (3)

ஏடுநிலத்திலிடுவதன் முன்னம்
வந்தெங்கள் குழாம் புகுந்து*
கூடுமனமுடையீர்கள் வரம்பொழி
வந்தொல்லைக் கூடுமினோ*
நாடுநகரமும் நன்கறிய
நமோ நாராயணாயவென்று*
பாடுமனமுடைப்பத்தருள்ளீர்வந்து
பல்லாண்டுகூறுமினே* (4)

| | |
|---|---|
| ஏடு | பொல்லாததான |
| நிலத்தில் | பூமியில் |
| இடுவதன் முன்னம் | சேர்ப்பதற்கு முன்னமே |
| வந்து | (நீங்கள்) வந்து |
| எங்கள் குழாம் | எங்களுடைய கூட்டத்தில் |
| புகுந்து | பிரவேசித்து |
| கூடுமனமுடையீர்கள் | கூடியிருக்கவேணுமென்கிற மனதையுடையவர்களாயிருப்பீராயின் |
| வரம்பொழிவந்து | வரம்பையொழித்துக்கொண்டுவந்து |
| ஒல்லை | சீக்கிரமாக |
| கூடுமின் | சேருங்கோள் |

அப்படிச்சேர்ந்து

| | |
|---|---|
| நாடும் | நாட்டிலுள்ளவர்களும் |
| நகரமும் | பட்டணத்திலுள்ளவர்களும் |
| நன்கறிய | நன்றாக வறியும்படி |
| நமோநாராயணாய வென்று | எம்பெருமானின் திருமந்திரமான, நமோ நாராயணாவென்கிறவித்தைச் சொல்லி |
| பாடும் | பாடத்தக்க |
| மனமுடை | மனதையுடைய |

| | |
|---|---|
| பத்தருள்ளீர் | பக்தியையுடைவராயுமிருப்பீராயின் |
| வந்து | எங்களுடன் சேரவந்து |
| பல்லாண்டுகூறுமின் | எம்பெருமானுக்குப் பல்லாண்டு பல்லாண்டென்று மங்களாசாஸனம்பண்ணுங்கள் |

பொல்லாத பூமியில் உங்களையிடுவதற்கு முன்பே எங்கள் கூட்டத்தில் வந்துசேர்ந்து எங்களுடன் கூடியிருக்க விருப்பமுண்டேயாகில் வரம்பையொழித்துக்கொண்டு சீக்கிரம் வந்துசேருங்கள். அப்படி வந்து சேர்ந்து, நாட்டிலுள்ளோர் நகரத்திலுள்ளோர் அனைவரும் நன்றாக அறியும்படி நமோநாராயணாய வென்னுமித்தை அழகாகப்பாடவேணுமென்கிற பக்தியுடன் கூடினவர்களாயிருந்தீராகில் சீக்கிரம் வந்து பல்லாண்டு கூறுங்கள்.

கீழ்ப்பாட்டில், எம்பெருமானையே எவ்விதபயனாகவும் எண்ணி மற்றொன்றையும் மதியாத மனமுடைய மஹாநுபாவர்களான அநந்யப்ரயோஜன பரர்களை அழைத்து அவர்களுடன் கூடி எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடிக் களித்ததாகத் தன் அநுபவத்தைக்கொண்டார். இப்பாட்டில் ஆத்மப்ராப்திகாமரை அழைக்கிறதான அநுபவத்தை வெளியிடுகிறார். இப்படி, அநந்ய ப்ரயோஜன பரருக்கு அடுத்தபடியில், ஆத்மப்ராப்திகாமரையழைப்பதால், முதலில், மிக, வும் ச்ரேஷ்டரான ஞானிகளுக்கு அக்ரமர்யாதை செய்து, அதன் பின்னர், ஆத்மப்ராப்தி காமர், அம்மர்யாதைக்குத்தக்கவரென்று கொண்டு அழைக்கிறாரில்லை. ஞானிகளைத் தவிர்த்து (1) ஆத்மப்ராப்திகாமர்கள். அதாவது, கைவல்யமென்கிற புருஷார்த்தத்தையே (தன்னையேதான் நன்றாகப் பார்த்துக்கொண்டிருக்கலையே) வேண்டிநிற்குமவர்கள். (2) ஐச்வர்யத்தை விரும்பிநிற்குமவர்கள்; இவ்விருவர்களில், ஐச்வர்யார்த்திகள் காலவளவு இங்கு நீண்டதானதால் என்றேனுமொருநாள், அஸ்திரமான இந்த ஐச்வர்யத்தையும் ஸாஸ்திர ஐச்வர்யமான பகவானையநுபவித்தலையும், எடுத்துச்சொல்லி சேர்திருத்திவிடலாமானதால் அவர்களைப்பற்றி முன்னதாகக் கவலைகொள்ளவேண்டியதில்லையென்றும், ஆத்மாநுபவத்தில் ஆசையுள்ளவர்கள் அதற்குவேண்டுவன செய்து, அவ்வநு

பவத்தைக் கைக்கொண்டுவிட்டார்களேயானால், அதிலிருந்து அவர்களையகற்றி எம்பெருமானை அநுபவிப்பிப்பது அஸாத்யமான கார்யமானதால், அநியாயமாய் ஆத்மாநுபவகாமர்கள், எம்பெருமானை அநுபவித்தலை நெடுநாளும் இழந்தேபோவார்களேயென, இரக்கமுற்று அப்பேரிரக்கத்தாலே ஐச்வர்யார்த்திகளுக்கு முன்னதாக, ஆத்மப்ராப்திகாமர்களை அழைக்கிறார் போலும். இப்படி இவர் அவர்களை இரக்கத்துடன் அழைத்தாலும், அவர்கள் இசைந்துவருவார்களோ வென்னில், அதற்காகத்தான், கைவல்யத்திற்கும், எம்பெருமானைப்பற்றி ஆனந்தாநுபவம் பண்ணுவதற்கும் உள்ள ஏற்றத்தாழ்வுகளை எடுத்துரைக்கிற வழியாலே, சீர்படுத்தி, அழைக்கிறார். அதிலும், தன்னுடைய நிர்ப்பந்தத்தாலின்றி அவர்கள் தாங்களே ஸம்மதித்து, அவ்வெண்ணம் வெளிப்பட வரவேணுமென்கிறார். இன்ன, இன்ன, கார்யங்களில் இஷ்டமிருந்தால் இனிதுவாருங்கள் என்று மிக விநோதமாகப் பேசுகிறார் ஏடுநிலத்தில் என்றாரம்பித்து.

ஏடுநிலத்திலிடுவதன் முன்னம்:—என்றது, பொல்லாத நிலத்தில் எங்களைச்சேர்ப்பதற்கு முன்பே, என்பதைச் சொல்லுகிறது. ஏடு என்கிற பதத்திற்கு இதழ் என்றிவை முதலிய பல அர்த்தங்களிருந்தாலும், இங்கு ஏடு பொல்லாதது, ஸூக்ஷ்மசரீரம், இவை முதலிய சில அர்த்தங்களைக்கொள்வது. பொல்லாத நிலத்தில் சேர்ப்பதற்கு முன்பே, என்பதால், ஆத்மாக்களுக்கு உயர்ந்த ஸ்தானமாய்ச் சொல்லப்பட்டது ஏதென்றால், எந்த இடத்தை எப்பொழுதும் நித்ய ஸூரிகள் பார்க்கிறார்களோ, அப்படிப்பட்ட ஸ்ரீவைகுண்டமேயானதால் அங்கு போய்ச்சேர்வதைவிட்டு, கைவல்யாநுபவமென்கிற ஓர் தடையில் அகப்பட்டுத் தடுமாற்றமுற்றால், அது பொல்லாதது ஆனதாலே, அதில் சேர்வதற்கு முன்னதாக என்று சொல்லுகிறது. இக்கைவல்யாநுபவத்தின்கேட்டை, நம்மாழ்வார், அற்றது பற்றெனில் என்கிறபாட்டில், செற்றது என்றும், குறுகமிக என்கிறபாட்டில், சிறுக நினைவதோர் பாசமுண்டாம் பின்னும் வீடில்லை என்றும், குறுகா, நீளா என்கிறபாட்டில், உனக்கேயாளாகும் சிறுகாலத்தையுறுமோ, என்றும், அதுவே வீடு என்கிறபாட்டில். எது வேவீடேதின்பமேன்றெய்த்தாரெய்த்தா

ரெய்த்தாரே, என்றும் பாக்கப்பேசினர். இவைகளில், அற்றதுபற்றெனில் என்கிற, திருவாய்மொழி, முதற்பத்து, இரண்டாந்திருவாய்மொழி ஐந்தாவது பாசுரத்தில், ப்ராக்ருத விஷயங்களில் ஆசையெல்லாமொழிந்த உடனே ஆத்மாவுக்கு கைவல்யத்தில் ஆசையுண்டாகும், அந்த ஆசைக்கிடங்கொடுக்காமல், முன்னால் எம்பெருமானைப்பற்றி, விஷயங்களில் ஆசையைவிட்டால், அது மிகவும் மேன்மையையேதரும்; என்கிற அர்த்தத்தைக்காட்டுகிற திருவாறாயிரப்படியின் போக்கியதையை நோக்குமின்.

கைவல்யமென்று சொல்வதானது, கேவல ஆத்மாநுபவம், அவ்வநுபவம் இருவகைப்படும் இவற்றின் மற்றும் விரிவுகளெல்லாம் வேதாந்த சாஸ்திரம் கேட்டறியும் முறையில் கேட்க ப்ராப்தம், இவை கீதாபாஷ்யம், ஸ்ரீமத்பாஷ்யம் முதலியதில் விஸ்தாரமாக அருளிச்செய்யப்பட்டிருக்கும்.

இக்கைவல்யாநுபவத்திற்கும், படாதபாடெல்லாம் படவேண்டியிருத்தலாலும், எம்பெருமானையே வழிபட வேண்டியிருந்தாலும் இவனுடைய இச்செய்கைக்கு அவன் எல்லையில்லாத ஆநந்தத்தையே இவனுக்குக் கொடுக்கக்கார்த்துக்கொண்டிருக்கையாலும் இக்கைவல்யாநுபவத்தில் இச்சைகொள்வது எப்படியும் இழிவான தேயாகையாலும், எம்பெருமானுக்கு அடிமைசெய்ய ஆசைப்படுகையே சிறந்தது என்றும், இது தாழ்ந்ததேத, என்றும், அறிக. ஆகவே' கைவல்யஸுகத்தில் ஆழ்ந்துவிட்டால் பகவத்கைங்கர்யாநந்தாநுபவத்திற்கு அது தடையாகுமே, அப்படி அதில் சேர்வதற்குமுன்னே இங்கே சேரவேணுமென்கிறார்.

அன்றிக்கே, ஏடு நிலத்திலிடுவதன் முன்னம், என்பதற்கு. ஸூக்ஷ்மசரீரமானது தன்னுடைய நிலமான மூலப்பிரகிருதியில் லயிப்பதற்கு முன்னே என்றும், அர்த்தங்கொள்ளலாம். ஏடு என்று ஸூக்ஷ்ம சரீரத்தை எப்படிச்சொல்லுகிறது என்னில், காய்ச்சினபாலில் அதின் ஸாரம் ஏடாகப்படியுமாப்போலே, ஸ்தூலசரீரத்திற்காட்டிலும் பிரதானமாய் ஸாரமெனத்தோற்றுகையாலே சொல்லுகிறது.

வந்து:—என்றது, மிகவும் ஆதரம் தோற்றவரவேண்டுமென்பதைச் சொல்லுகிறது.

எங்கள் குழாம்புகுந்து:—என்றது, எங்களுடைய கோஷ்டியில், பிரவேசித்து, என்பதைச் சொல்லுகிறது. இங்கு, எங்கள் குழாம் என்பதால், மற்றவர்களைக் காட்டிலும், எங்கள் கூட்டத்திற்கு மேம்பாடு உண்டு காணும் என்கிறது. அதாவது, எங்கள் திரளில் யாரேனு மொருவர் ஒரு கைங்கர்யம் செய்து அதனால் வரும் ஆநந்தத்தை யனுபவித்தால், அதை எல்லோருக்கு முள்ள ஆநந்த"நுபவமாகவே கொள்வோம்; ஒருவர்க் கொருவர் எப்பொழுதும் பாகவதர்க்கு அடிமையாக விருத்தலையே ஆசைப்படுகிறவர்களாக விருப்போம். இத்தன்மை வாய்ந்தது எங்கள் திரள் என்று சொன்னபடி.

இவ்விடத்தில், கூரத்தாழ்வான், ஸ்ரீ வைகுண்டஸ்தவத்தில் கைங்கர்யநித்யநிரதை: பவதேகபோகை: நித்யைரநுக்ஷண நவீந ரஸாநுபாவை: | நித்யாபிவாஞ்சித பரஸ்பரநீசபாவை: மத்தைவதை: பரிஜநைஸ்தவ ஸங்கஸீய || (எம்பெருமானின் கைங்கர்யத்தில் எப்பொழுதும் விசேஷமான ஆசைகொண்டு இருப்பவர்களாயும், உன்னையொருவனையே அநுபவிப்பவர்களாயும், நித்யர்களாயும் க்ஷணந்தோறும் புதிதாக அநுபவிக்கப்படுகிற ரஸத்தினால் ஈரமான மநோபாவத்தையுடையவர்களாயும், எப்பொழுதும் ஆசைப்பட்ட ஒருவர்க்கொருவருடைய தாழ்ந்த தன்மையை யுடையவர்களாயும் எனக்கு தெய்வங்களாகவுள்ளவர்களாயுமுள்ள உம்முடைய பரிஜனங்களுடன் சேர்ந்தவனாக ஆகக்கடவன்) என்றருளிய உயர்ந்த ச்லோகம் நினைக்கத்தக்கது.

உங்கள் கோஷ்டியின் பெருமை இவ்வாறிருக்க, நாங்கள் அந்த கோஷ்டியில் வந்து சேரத் தகுதியுடையவர்களோ? நாங்கள் யாதொரு யோக்கியதையையும் உடையோமல்லோமே? ஆகவே உங்களுடன் சேர்வது எங்களுக்கு எங்ஙனே ஸம்பவிக்கும், என்று அஞ்சவேண்டாங்காண் நீங்கள்; உங்களுக்கு மிகவும் ஸ்வல்பமாக உள்ள அதிகாரமே போரும்; அதுதா னேதென்னில், அதையுரைக்கிறார் மேலில்.

கூடு மனமுடையீர்கள்:— என்றது, சேரவேண்டு மென்றும் மனமுடைத்திருக்க வமையு மென்பதைச் சொல்லுகிறது. எங்கள்

மனதிற்கிசைந்த மனதைக் கொண்டிருந்தாலே போருமென்னலாம். இவர்களுடன் கூடுவோமென்று நினைத்தலே போருமென்னலுமாம்; ஏனெனில், ஒரு கார்யத்தில் ஒருவனுக்கு நல்ல எண்ணம் ஏற்பட்டு விட்டால் அக்கார்யத்தில் அதில் சேரும் வழியோடு தானே இறங்கச் செய்யுமானதாலே.

ஆகிலும், சிறிது உரைக்கிறார் வரம் பொழி என்று.

வரம்பொழி என்றது, வரம்பை அழித்துக் கொண்டு என்பதைச் சொல்லுகிறது. இங்கு, வரம்பொழிய, என்பதே, வரம்பொழி, என்று, கடைசி எழுத்துக் குறைந்து கிடக்கிறது. வரம்பென்றால், கழனிகளில் ஒவ்வொரு கழனியின் அளவுக்கும், எல்லையாக ஓர், மண்மேடு இடப்பட்டிருக்கும்; அதை வரப்பென்பார்கள். அதைக்கொண்டு, இக்கழனி, இவ்வளவு அகலம், நீளம், உள்ளதெனக் கணக்கிடுவார்கள். அதுபோல, ஜீவாத்மாக்களில், சிலர், தங்களுக்கு, ஜராமரணமோக்ஷாய (மூப்பும் இறப்பும் விடுதலின் பொருட்டு) என்கிறபடி, பிறப்பிறப்பு மூப்புப்பிணி யெல்லாமுடைய சரீர ஸம்பந்தம் தொலைந்து, தன்னைத்தான் பார்த்துக் கொள்ளுதலாகிற ஸுகமான கைவல்யம் கிடைத்தால் அதுவே எல்லாம் என்று எண்ணி, அதோடு தங்கள் அநுபவத்துக்கு வரம்பு (எல்லை) கட்டிக் கொண்டிருக்கிறார்களே, எம்பெருமானைப் பற்றி சரீர ஸம்பந்தத்தை யறுத்தும், எல்லைகாணவொண்ணாத, எம்பெருமான் கைங்கர்யாநந்தாநுபவம் செய்கையன்றோ சிறந்தது; ஆதலால் கைவல்யாநுபவமாகிற வரம்பை யொழிக்கையன்றோ உசிதமான கார்யம், என்று கொண்டு, அவ்வரம்பை யொழித்துவரவேணுமென்று சொல்லுகிறது.

வந்து ஒல்லைக்கூடுமினோ:— என்றது, சீக்கிரமாகவும் வரவேணும், சீக்கிரமாகவும் கூடவேணு மென்பதைச் சொல்லுகிறது. கீழ் இருந்தவிடம் அருவருக்கத்தக்கதானதாலும், மேலில் சேரப் போகுமிடம் மிகவும் சீரியதானதாலும், அங்கு அருவருப்புத் தோன்றினவுடன், அங்கு கால் பாவி நிற்காமல் உடனே கிளம்பி விடவேண்டும்; கிளம்பினதும் தாமடையப்போகும் ஸ்தானத்தின் பெருமையை நினைத்து அதை அரைக்கணமிழக்கிலும் ஆற்றமாட்டாத தன்மையுடன் பதறி அடியிட்டுவந்து கூடவேணும் என்றபடி.

இங்ஙனமே வந்து கூடுவதிலும் செய்யுங்காரியம் சில வுண்டென வுரைக்கிறார் பின்னடிகளால்.

நாடுநகரமும்....கூறுமினே— என்றது, நாட்டாரும், நகரத்தாரும், நன்றாகவறியும்படி திருமாலின் திருமந்திரமான திருநாமத்தைப் பாடவேணுமென்கிற வெண்ண முடையவர்களா யிருந்தீராகில் எங்களுடன் வந்துசேர்ந்து பல்லாண்டு கூறுங்கள் என்பதைச் சொல்லுகிறது. நாடு என்றதால் சிறியவூரைச் சொல்லி அதனால் அவ்வூரிலுள்ளாரெனக் கொண்டு, அவர்கள் சிறியவூரிலுள்ளதாலே அதிக ஸாமர்த்தியமின்றி யிருப்பார்கள்; ஆகவே, அவர்கள் ஏதோ சில விஷயங்களையே தெரிந்துகொள்ளும் புத்தியை யுடையவர்கள் எனநிச்சயித்து அப்படியுள்ளவர்களும் உங்கள் செய்கையைச் செவ்வனே அறியுமாறும், எல்லாம் தெரிந்த நகரத்தாரும் நன்றாய் அறியுமாறும், அவன் திருநாமத்தைப் பாடவேண்டும், இவ்வாறு பாடுகையும் ஏதோ ஒரு நிர்ப்பந்தத்தாலின்றி ஸ்வயம் ப்ரயோஜன மாகவே மனமாரப் பாடவேண்டும் இவ்வண்ணம் திருந்தினீர்களாகில் வந்து இத்திருப் பல்லாண்டைப் பல்லாண்டும் பாடுமின்கள், என்றபடி.

துறவறம் பூணத்துணிவுள்ள தூய்மையாளர்கள், துக்கமயமான ஸம்ஸாரத்தில் வெறுப்புற்று வெளியேறி அந்த ஸம்ஸாரப் பற்றுதலை விதிப்படி விட்டொழித்த பின்னர், சில சொல்லவேண்டுவன் சொல்லி, ஸமீபத்தில் உள்ளவரும், தூரத்திலுள்ளவரும் நன்றாக அறியுமாறு, மெள்ளவும், உரக்கவும் கூவுமாப் போலே, இக்கைவல்ய நிஷ்டரைத் தங்கள் திரளில் சேர்த்துக்கொள்ளச் செய்விக்கும் கிரிகைகளிருக்கிறபடி.

இப்படி இவர்கள், எம்பெருமான் திருநாமத்தைச் சொல்லவே, இவர்களுடன் கூடியிருந்த நாட்டார் என்கிற சிற்றறிவாளர், இவர்களின் காரியத்தைக்கண்டு, இவர்கள் இப்பொழுது முன் போலில்லை, தங்கள் தன்மை மாறிவிட்டார்கள், ஆனதால் இவர்களுடன் இனி நமக்குறவில்லையென வொழியவும், நகரத்தார் என்கிற மூதறிவாளர்கள், இவர்கள், மனமார எம்பெருமான் திருநாமத்தைச் சொல்லுகிற இனிமையைக் கேட்கலுற்று, ஐயோ இப்படிப்பட்டவர்களையன்றோ

நாம் இதுவரையில் இழந்திருந்தோம், இனியாகிலும் இவர்களுடன் சேர்ந்தினி திருக்கவேண்டுமென விரைவில் ஓடிவருவார்களென்றும் அதற்காகவே இவ்வாறு இச்செயலைச் செய்யவேண்டுமெனத் திருத் தியருளுகிறார் போலும்.

நாட்டார், நகரத்தார், இருவரில், நகரத்தார் என்பவர், அரசன் வஸிக்கும் நகரத்திலேயே இருப்பதால், ஸமீபத்திலிருக்குமவர்கள். ஆகவே அரசனை யறிந்தவர்கள், அறிவாளர்கள், அரசனுக்கு வேண் டியவர்கள், இப்படிச் சொன்னதால் எம்பெருமானாகிற ராஜாதி ராஜனுக்கு, ஸமீபத்திலுள்ளவர்கள், அவனுக்கு மிகவும் வேண்டிய வர்கள், அவன் படிகளையெல்லாம் நன்றாய் அறிந்தவர்கள், ஞானி கள் என்று சொல்லப்படுகிறவர்கள், அப்படிப்பட்ட அவர்கள் ஸந் தோஷித்து உங்களிடம் கருணைகாட்டித் தங்களுடன் ஒரு கோஷ்டி யாய்ச் சேர்த்துக் கொள்ளும்படியும், நாட்டார், என்பவர், அரசனை யறியாது தூரத்திலிருக்குமவர்கள், விசேஷமாய் ஒன்றும் தெரியாத வர்கள், அப்படிப்பட்டவர்கள், உங்களை விடும்படியும் செய்யவேணு மென்றும் இங்கு மநோபாவம்.

நாடு நகரமும், நன்கறிய வென்கிற இக்கதை, முன்பாதத்தில், வரம்பொழி என்றிவை முதலியவிடத்தும் சேர்த்து அர்த்தங்கொண்டு அநுபவிக்கலாமெனவும் தோற்றுகிறது.

குறிப்பு:— இப்பாட்டில், கைவல்ய மென்கிற புருஷார்த்தம் ஸாரமற்றதென்றும் அஸாரமானவற்றில் அருவருப்புத் தோற்றினால் அரைக்கணமேனும் பிறகு அங்கிருக்கை அழகல்லவென்றும் இவை முதலியன சில விசேஷங்கள் அறியலாகிறது. (4)

அண்டக் குலத்துக் கதிபதியாகி
அசுர ரிராக்கதரை*
இண்டைக் குலத்தை யெடுத்துக்களைந்த
இருடீகேசன்றனக்கு*
தொண்டக் குலத்திலுள்ளீர் வந்து
அடிதொழு தாயிரநாமஞ் சொல்லி*
பண்டைக் குலத்தைத் தவிர்ந்து
பல்லாண்டு பல்லாயிரத்தாண் டென்மினே* (5)

| | |
|---|---|
| அண்டக்குலத்துக்கு | அண்ட ஸமூஹத்திற்கு |
| அதிபதியாகி | யஜமானனாய் |
| அசுரர் | அஸுரர்களென்ன |
| இராக்கதரை | ராக்ஷஸர்களென்ன (இவர்களுடைய) |
| இண்டை | நெருங்கின |
| குலத்தை | கூட்டத்தை |
| எடுத்து | களையெடுப்பதுபோல் எடுத்து |
| களைந்த | வேரோடும் போக்கின |
| இருடீகேசன் தனக்கு | இந்திரியங்களுக்கு யஜமானனை எம்பெருமானுக்கு |
| தொண்டக் குலத்தில் | அடிமை செய்யுமவர்கள் கோஷ்டியில் |
| உள்ளீர் | இருக்கிற நீங்கள் |
| வந்து | எம்பெருமானிடம் வந்து |
| அடிதொழுது | அவன் திருவடிகளை ஸேவித்து |
| ஆயிர நாமம்சொல்லி | அவனுடைய திருநாமங்களெல்லாவற்றையும் வாயாரச் சொல்லி |
| பண்டைக் குலத்தை | முன்பு பழகிக்கொண்டிருந்த கூட்டத்தை |
| தவிர்ந்து | விட்டு நீங்கி |
| பல்லாண்டு | அநேகம் ஸம்வத்ஸரங்கள் |
| பல்லாயிரத்தாண்டு | அநேக மாயிரம் ஸம்வத்ஸரங்கள், நித்ய மங்களத்துடனே எழுந்தருளியிருக்க வேணும் |
| என்மின் | என்று மங்களாசாஸநம் பண்ணுங்கள். |

அண்டங்களுக்கெல்லாம் அதிபதியாய் அசுர ராக்ஷஸர்களையெல்லாம் வேர்ப்பிடுங்கலாய்ப் பிடுங்கிக் களைந்த ஹ்ருஷீகேசனுக்கு அடிமைசெய்யுங் குலத்திலுள்ள நீங்கள் எம்பெருமானிடம் வந்து சேர்ந்து அவன் திருவடிகளை ஸேவித்து அந்த போக்கியதைக்குத் தோற்று அவனுடைய கல்யாணகுணங்களெல்லாவற்றையும் வெளியிடுகிற திருநாமங்களனைத்தையும் சொல்லி முன்பு பழகின சேர்க்கையை விட்டொழித்து, பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்று அவ் வெம்பெருமானுக்கு மங்களா சாஸனம் பண்ணுங்கோள்.

கீழிற் பாட்டில் கைவல்யார்த்திகளைக் கைங்கர்யத்திற்கு அழைக்கிறதாக அநுபவத்தைக்கொண்டார். இப்பாட்டிற் ஐச்வர்யார்த்திகளை அவனுக்கு அடிமைசெய்ய வாருங்கள், என அநுபவிக்கிறார்.

ஐச்வர்யத்தை ஆசைப்படுமவர் இருவகுப்பினராவர். செல்வத்தால் சிறப்புற்றோங்கியிருந்து, அது சிதறிப்போகவே, ஐயோ, நமக்கிருந்த செல்வம் சென்றுவிட்டதே, எனச் சோர்வுற்று செல்வ நாராயணன் சேவடியைச் சென்று சேருமவர் ஒரு வகுப்பினர். ஜன்ம தரித்திரனாகவே திரிந்து தரித்திராமல் தாராளமாய்த் தனங்கொள்ள திருமால் திருவடி தீண்டி திகழ்ந்து நிற்குமவர் ஒரு வகுப்பினர். இவர்களை, இருந்த செல்வம் போனதற்குக் கஷ்டப்படுகிறவர் என்று பொருள்பட, ஆர்த்தர் என்றும், புதிதாகப் பொருள் வேண்டுமவர் என்று பொருள்பட அர்த்தார்த்தீ என்றும், கீதாசார்யனும் முறையே மொழிந்துள்ளான்.

இப்பாட்டு ஐச்வர்யார்த்திகளை யழைக்கிறதாக விருக்கிறதென எவ்வாறு அறியலாகிற தென்னில், இண்டைக் குலத்தை யெடுத்துக் களைந்த என்கிற வாக்கியத்தினால், என், ஐயனே, என் செல்வம் ஒளித்து விட்டதே, என் செய்வேன், நானோ சக்தியற்றவன், உன்னைச் சேர்ந்தவன், உன்னைத் தொழுகிறேன், நீயோ, ஆச்ரித விரோதியைப் போக்கி, என் செல்வம் என்னை வந்தடையும்படி செய்ய வேணும்; மஹாபலி முதலியவர்களை வென்று, போன செல்வத்தை மீட்டுக் கொடுத்த புண்ணிய புருஷனில்லையோ நீ. என் இந்திரியங்கட்கெல்லாம் நீயோ சனகியும் என்னைனில்லை அறியாயோ? என்றிப்படி யெல்லாம் பொருள்படப் பேசுகிறதாகத் தோற்றுமான தாலே, போன பொருளை வேண்டுமவர்களையும், அண்டக்குலத்துக் கதிபதி என்பதால், நீ ரொம்பச் செல்வமுடையவன் என்று சொல்லுவதைக்கொண்டு, எனக்கு சில பொருள் அளிக்கக் கூடாதோ, என்று கேட்பதுபோல் தோற்றுமானதாலே, புதிதாகப் பொருள் வேண்டுமவர்களையும் குறிப்பிடுகிறதெனக் குறிக்கொள்க. உலகவியற்கையும் இதுவே யன்றோ? ஒருவனிடம் ஒரு பொருள் கண்டக்கால் அதை விரும்பிப் பார்க்குமவன், அது தனக்கு வேண்டுமென்பதை வெளிப்படையாக விரித்துரைக்காமல், இப்பொருள், என்ன அழகு,

என்ன அழகு, இப்படி எவ்வளவோ தங்களுக்குண்டல்லவா, என்றப்படியெல்லாம் பல ஸ்தோத்திரபாடம் படிக்கக் காண்கிறோம், அதைக்கேட்கும் உதார குணமுள்ள உத்தம புருஷன் எவனும், கேட்பவன் மனதறிந்து கொடுக்காமல் ஓரடியும் தாண்டி வைக்கிறதுமில்லை இப்படி உலக வியற்கை யிருக்க, வாஸ்தவமான உத்தம புருஷனுக உள்ள எம்பெருமான், இவர்கள் வார்த்தைகேட்டு அப்படியேகொடுப்பனன்றோ? அப்படி அவர்களுக்குத்தான் கொடுத்து, தானே உதார குண முள்ளவனுய்த் தோற்றியிருக்கத் தன்னை வேண்டிவந்தவர்களை யன்றோ, இவர்களெல்லாம், உதாரகுண முள்ளவர்களென்று பொருள்பட உதாரா: ஸர்வ ஏவைதே, என்றும் சொல்லிவைத்தான். இவர்கள் தன்னைவந்து இரக்காதிருக்கில், தான், அவர்களுக்கு யாதொன்றும் ஈவது ஏற்படாதே, அப்படியின்றி, அது ஏற்பட்ட படியாலன்றோ, தன்னுடைய ஔதார்யம் வெளியாகிறது. ஆகவே தன்னுடைய ஔதார்யம் ஒளிவிட்டோங்க உபகாரம் செய்தவர்களை, உதாரா: என்று தாம் கொண்டாடுவது தகுதியுள்ளதே என்றன்றோ அவன் மனோபாவம். இந்த உத்தம புருஷனிடம் இவர்கள் படிக்கும் சில ஸ்தோத்திரப்பாடம் தான் இங்கு, அஸுர சத்ரவேநம:, என்றும், அண்டாதி பதயே நம: என்று மன்றோ? இப்படிச் சொல்லித் தொழுதால் பலத்தில் என்ன குறையுண்டு. எல்லாமறிந்த ஈச்வரன் அதைத் தலைக்கட்டியே வைப்பன். எம்பெருமானிடம் எந்தப் பெருமையுள்ள குணத்தைத் தான் முக்கியமாகக் கொண்டு, எவன் உபாஸனம் செய்வானே, அவ்விதமே அநுபவிக்கப் பெறுவன் என்று ஒரு நியாயமுமுண்டு, அதை, தத்க்ரதுந்யாயம் என்பார் வட நூலார். ஆக இப்பாட்டு ஐச்வர்யார்த்திகளை அழைக்கிறதான அனுபவத்தைக் கொண்டதென்பதில் ஐயமொன்றில்லை.

நிற்க, ஐந்தாம் பாட்டில் ஐச்வர்யார்த்திகளை அழைக்கிறுரென்கிற அவதாரிகையில் அழகையும் நோக்குக.

அண்டக்குலத்துக்கு—என்றது, அனேக அண்டங்களின் கூட்டத்தைச் சொல்லுகிறது. அண்டம் என்றால், உருண்டை உருண்டையாகவுள்ள உலகம். குலம், என்றால், அதன் ஸமூஹம்.

அனேக உலக உருண்டைகள் என்றபடி. அண்டங்கள் அளவற்றவை என்பது, அண்டா நாந்து ஸஹஸ்ராணும் ஸஹஸ்ராண்யயுதாநிச | ஈத்ருசாநாம் ததாதத்ர கோடி கோடி சதாநிச | என்கிறபடி, எத்தனையோ ஆயிரம், எத்தனையோ பதினாயிரம், எத்தனையோ கோடி என்று சொல்லப்பட்டிருக்கும்.

அதிபதியாகி—என்றது, இவைகளெல்லாவற்றையும் தானொருவனாகவே நிர்வாஹம் செய்து நிற்கிற பெருமையைச் சொல்லுகிறது. ரோமகூபேஷ்வநந்தாநி ப்ரஹ்மாண்டாநி ப்ரமந்திதே (உன்னுடைய உரோம கூபங்களில் எண்ணிறந்த ப்ரஹ்மாண்டங்கள் சுழல்கின்றன) என்றிவை முதலிய பல ப்ரமாணங்கள் அவன் நிர்வாஹகனாக நிற்கிறபடியை நிலைநிறுத்திப் பேசுகின்றன. இவ்வண்ணம், அண்டாதிபத்தியம், அவனதானது கொண்டு, யுக கோடி ஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ: | புநஸ் த்ரைலோக்ய தாத்ருத்வம் ப்ராப்தவா நிதிசுச்ரும (பூவிற் பிறந்த பிரமனும், எங்கும் நிறைந்த திருமாலை எண்ணிறந்த காலங்கள் ஏத்திப் பணிவிடைசெய்து, மூன்றுலகங்களுக்கும் தான் தலைவனாக விருக்கும் தன்மையை மறுபடியும் பெற்றான், என்று கேட்டிருக்கிறோம்.) என்கிற ப்ரமாணங்களையும் காண்க.

அண்டக் குலத்துக் கதிபதி, என்பதால், அனேக அண்டங்களினுள்ளே அடங்கியிருக்கிற அனைவரையும் ஆண்டிடும் தன்மையுடையானென்பதைக் காட்டுகிறது இவ்வர்த்தத்தை யடியொற்றி அவனுடைய விபூதிகள் அளவற்றவை யென்று, யதண்ட மண்டாந்தர கோசரஞ்சயத்............பராத்பரம் ப்ரஹ்மசதே விபூதய:] என்கிற ஸ்தோத்திர ரத்ன ச்லோகத்தில் ஆளவந்தாரருளிச் செய்தார்.

அசுரரிராக்கதரை:—என்றது, முன் சொல்லிய ஸ்தோத்திர பாடத்தை ஜபம்செய்து, அதன் மூலமாக அண்டாதிபத்தியம் முதலிய ஐச்வர்யத்தைப் பெற்று,வாழக்கடவ ப்ரஹ்மா முதலானோர்க்குத்தீங்கிழைக்கையே தங்கள் ஸ்வபாவமாகப்பெற்றமதுகைடபர் முதலான அசுரர்களென்ன, ராவணன் முதலான அரக்கர்களென்ன, இவர்களைச் சொல்லுகிறது. இவ்வர்த்தத்தையும்அடியொற்றி,

ஆளவந்தார், வேதாபஹாரகுருபாதகதைத்ய பீடாத்யாபத்வி மோசந மஹிஷ்ட பலப்ரதாநை: | கோந்ய: ப்ரஜாபசுபதீ பரிபாதி (வேதாபஹாரம் ஏற்பட்டபொழுதும், குருவினிடம் பாதகம்செய்த பொழுதும், அஸுர பீடைகள் முதலியன ஆபத்துக்கள் ஏற்பட்ட வப்பொழுதும், அவ்வாபத்துக்களிலிருந்து விடுதலை செய்வித்தும், அதற்கும்மேல் பெரியபலன்களையும் கொடுப்பதினாலே பிரமனென்ன, உருத்திரனென்ன, இவர்களை, திருமால் தவிரவேறு எவன் பரிபாலனம் செய்கிறான்) என அருளிச்செய்திருக்கிற, ஸ்தோத்திர ரத்ன ச்லோகரத்னத்தின் அழகையும் இங்கு நினைக்க.

இவ்விருவகுப்பினரையும் சேரவெடுத்தது, சாது சனங்களை நலிவதில் இருவகுப்பினரின் தன்மையும் ஒத்திருக்குமானதாலே.

இண்டைக்குலத்தை:—என்றது இவர்களின் நெருங்கின கூட்டத்தைச் சொல்லுகிறது. கொடியவர்கள் அவ்வாறு சேர்ந்து சாதுக்களை நலியவர்த்திக்கிறபடி. இங்கு, தொண்டர் + குலம், தொண்டக்குலம் என்பதுபோல் இண்டர் + குலம், இண்டக்குலம் என்கிற பாடபேதத்தையும், கொண்டு வ்யாக்யாதாக்கள், உரையிட்டார்கள். அப்பொழுது, இண்டர், என்றால், சண்டாளர். அதாவது மிகவும் நிஹீநரென்கிற நினைவாலே. பிறர், ஸம்ருத்தியையே பேணுவது உயர்ந்த தன்மையின் எல்லையென்பதும், பிறர் ஹிம்ஸையையே பேணுவது, தாழ்ந்த தன்மையின் எல்லையென்பதும், எவர்க்கும் சொல்லாமலே விளங்குமன்றோ? ஆகவே இவர்களைத் தாழ்ந்த வகுப்பினராகவைத்துப் பேசியபடி. இப்பாடத்தை முன்னால், விவரிக்காமல், பாடபேதமாய்க் கொண்டு, அர்த்தமெழுதியதும், ஒருவாறு முன்விரித்த பாடத்திலேயே பூர்வர்கள் நோக்கிருக்கலாமெனத் தோன்றுகிறது. அப்படிக் கொள்வதில், ப்ராஸமும் ஒருபடியிருக்கக்காண்மின்கள். அண்டக்குலம், இண்டைக் குலம். தொண்டக்குலம் பண்டைக்குலம் என்று. இண்டை முள் என்று, முள்ளில் கொடியதொன்று உண்டெனக் கேட்டிருக்கையாலே அதுபோல் கொடியவர்கள் இவர்கள்என்று சொல்ல இண்டை என்றே ப்ரயோகம் இருக்கலாம். உணர்ந்த மெய்ஞானியர், உசிதப்படி கொள்க.

எடுத்துக்களைந்த:—என்றது, நுனிப்புல் மேய்வதுபோல, வளர்ந்த மேல்பாகத்தை மட்டில் அறுத்துப்போகடாதே, பயிரில் களைபோலசுரரைக்காய்ந்தான், என்கிறபடியே ஆச்ரிதர்களாகிய நற்பயிருக்குக்களைபோல் தோன்றுகிற அஸுர ராக்ஷஸர்களை கிழங்கொடுகிளரியெடுத்துக் கிள்ளிக்களைந்தமையைச் சொல்லுகிறது. இங்கு எடுத்துக்களைந்த, என்கிற பதஸ்வாரஸ்யத்தை நோக்குமின். ஆச்ரிதர்களின் நடுவே வைத்தே இவர்களை நலிந்தால், இவர்களைச் செய்யுங்கொடுமை ஒரு ஸமயம் ஆச்ரிதரிடமும் அணுகுமோ என்றஞ்சி இவர்களைத் தனிப்படுத்தி அழிக்கிற அழகைக்காட்டிப் பேசியபடி. இலங்கைபாழ்படுத்தியவன்றும், விபீஷணபரிக்ரஹங்களிடம் பரிவாலே அவர்கட்கு யாதொரு தீங்கும் ஏற்படாதவண்ணமன்றோ இவனும் இவன் சிறிய திருவடிதானும் செய்து போந்தது.

இருடீகேசன்தனக்கு:— என்றது, இந்திரியங்கட்கெல்லாம் யஜமானனானவனுக்கென்பதைச் சொல்லுகிறது. ஆச்ரிதர்ன் கருத்தறிந்து காரியம் செய்யுமவன் என்றபடி. நமக்கு ஈசர்களாய்த் தோற்றுகிற இந்திரியங்கட்கெல்லாம் ஈச்வரன். ஆகவே இவ்வுறவு கொண்டு நங்காரியம் செய்யக்கடமையுண்டு அவனுக்கு, என்று ஓர் உறவு முறைமையும் உணர்த்தியபடியாம்.

தொண்டக்குலத்திலுள்ளீர்:—என்றது, எம்பெருமானிடம், எல்லைக்கடந்த ஆசையுடன் அடிமை செய்யும் கூட்டத்திலுள்ளமையை, உரைக்கிறது. எம்பெருமானிடம் எல்லை கடந்த ஆசையுடைமையை ஸ்ரீராமபிரான், பட்டாபிஷேகமான பின்பு, திருவடியை நோக்கி உமக்கு வேண்டுவது, ஏது, என்று வினவுமிடத்து அத்திருவடியும், ஸ்நேஹோமே பரமோராஜந் த்வயிநித்யம்ப்ரதிஷ்டித; | பக்திச்சநியதாவீரபாவோ நாந்யத்ரகச்சதி || (அரசே, அடியேனுக்கு உத்க்ருஷ்டமான ப்ரீதியானது தேவரீரிடத்தில் எப்பொழுதும் நிலையாய்வைக்கப்பட்டது, பக்தியும் நியதமாகச் செய்யப்பட்டது. வீரனே, என்மனோபாவமும் வேறோரிடத்தும் செல்லுகிறதில்லை) யென்று சொன்னானன்றோ. அப்படியுள்ள பக்தியை எம்பெருமானிடம் கொண்டு தொண்டுசெய்யுமவர்களின் கோஷ்டியைத் தொண்டக்குலமெனத்தூய்மை தோற்றச்சொன்னபடி.

இங்கு, பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானத்தில் தொண்டக் குலம் என்று தனியே ஒரு ஸந்தானம் போலேகாணும். தேஹமே, ஸ்வரூபம், என்றிருப்பார்க்கும், சேஷத்வமே ஸ்வரூபம் என்றிருப் பார்க்கும், இத்தனை வாசியுண்டிறே? என்கிற வாக்கியசைலியின் போக்கை நோக்கிக் களிக்கை ரஸிகர்க்குச் செயல்.

வந்தடிதொழுது—என்றது, தொண்டக் குலத்திலுளரானமை தோற்ற அவ்வவாவுடன் ஓடிவந்து அவனடிபணியவேணு மென் பதைச்சொல்லுகிறது. அவனுடைய ஸ்வரூபரூபகுண விபவங்களறி யும் குலத்திலுளராய் அவைகளறிந்தால் உடனே செய்யவடுப்பது நமஸ்தே,—என்கிறபடி, அவனடி தொழுவதன்றோ? அதைச் செய்யுங்கோள். என்றபடி.

அவனடி தொழுவதற்கு அவன் நாமமேதாகிலும் சொல்ல வேண்டாவோ வென்னில், அதை அடுத்தபடியிலுரைக்கிறார் ஆயிர நாமமென்று.

ஆயிர நாமஞ்சொல்லி—என்றது, அவனுடைய திருநாமங்க ளெல்லாவற்றையும் சொல்லுங்கோள் என்றுசொல்லுகிறது. இதற்கு முன்னெல்லாம், சொல்லிப் போந்த நாமங்கள், அவரவர்கள் வேண் டியிருக்கு மவற்றுக் கீடாக ஒன்றிரண்டு திருநாமங்களே; இனி. அவனிடம் வந்தடி தொழுதபின்னர், அப்படியொரு கணக்கு வேண்டாங் காண் அவன், எண்ணில் பேராளன், என்பதற் கேற்ப, அவனுடைய எண்ணிறந்த திருநாமங்களை யெல்லாம் உங்கள் ஆனந்தத்திற்குப் போக்கு வீடாகச் சொல்லாம். அப்படிச் சொல் லுங்கோள் என்றபடி.

அதற்குமேல், அவர்கள், நாங்கள் நெடுநாளாகப் பழகின கூட் டத்தின் வாஸனை யெங்களை விடவொட்டுமோ, அது விடாதேயிருக் கில், எங்களுடைய இந்த நற்செய்கை நீடித்திருக்கும்படி எங்ஙனே, என்று வினவியதாகவைத்து, அதற்காக அருளுகிறார், பண்டைக் குலத்தை யென்று.

பண்டைக் குலத்தைத் தவிர்ந்து—என்றது, முன்பு பழகி வந்த கூட்டத்தை விட்டொழித்து என்பதைச் சொல்லுகிறது. மறு படி, அந்த ஸஹவாஸம் ஏற்பட ஹேதுவின்றி விட்டொழிக்கவே

அது என்ன செய்யும் என்றபடி. அவன் ஸஹஸ்ரநாமத்தைச் சொல்லவே, அதடியாக அந்த நன்மை பிறக்குமென்று திருவுள்ளம். இவ்வாறு பகவன் நாம ஸங்கீர்த்தனத்தையே நல்லோர்கள் செய்து வருவார்களானதால் அவர்களுடைய ஆசாரம் விலக்ஷணமாக விருக்குமென்றும் மனோபாவம். இதைக் குறிக்கொண்டு, ஸ்ரீபரகாலஸ்வாமி தொண்டக்குல ஆசாரமும், தொண்டக்குலமும் ருசித்தால், பண்டைக்குல ஆசாரம், அஸஹ்யமாம், என்றருளினார் தன் வ்யாக்யானத்தில் வெகு அழகாக. ஆகவே, அதை விடுவது மிக எளிதாயினபடி. பகவன் நாம ஸங்கீர்த்தனத்திலுள்ள மற்றும் பெருமைகளெல்லாம் தனியே தெரிய வெழுதுங்கால் விரிவொடு வரையப்படும், அங்கே கண்டுகொள்க.

இங்கு, பண்டைக் குலத்தைத் தவிர்ந்து, என்கிற விடத்தில், குலம் என்பதற்கு, கூட்டம் என்று அர்த்தம் என ஒரு சாரார் கொள்கை, ஜாதி என்று அர்த்தம் என மற்றொரு சாரார் கொள்கை. கூட்டம் என்கிற அர்த்தத்தைக் கொண்டால், நல்ல ஸஹவாஸமும் நல்ல நடவடிக்கையும் ஏற்பட்டால், முன்பிருந்த கெட்ட ஸஹவாஸம் கெட்ட நடவடிக்கை இவை ஸுலபமாக விட்டொழிக்க முடியும். அப்படி, அதை விட்டொழித்து என, பொருள் ஏற்படுகிறது. ஜாதி என்கிற அர்த்தத்தைக் கொண்டால், பகவத் பாகவத ஸம்பந்தமும் பகவன் நாமோச்சாரணமும் ஏற்பட்டவுடன், முன்பிருந்த ஜாதியே போய்விடுகிறதெனக் கொண்டு அதை விட்டொழித்து எனப்பொருள் ஏற்படுகிறது. இவ்விரண்டு அர்த்தங்களில ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் திருவுள்ளத்துக்குப் பொருந்தியது இங்கு முதலில் சொல்லிய அர்த்தமே. இவ்வாறுள்ள தன் திருவுள்ளத்தை, ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய ஸாரம், ப்ரபாவவ்யவஸ்தாதிகாரத்தில், பூர்வர்களின் திருவுள்ளங்களையும், ப்ரமாணங்களின் பலத்தையும் நன்றாகக்கொண்டு, ஜாதி என்பது, தான்பிறந்த பிறவிக்கேற்றபடிதான், இருக்கும், அந்த சரீரம் விடுமளவும் அது போகமாட்டாது, ஆகவே முன் சேர்ந்திருந்த ஸமூஹத்தையும், தன்மையையும் விடப்பெறலாம், என்கிற பொருள்பட பரக்க அருளிச்செய்திருக்கிறார். ஆகவே அங்கேயுள்ளதை ஆசிரியரடி வணங்கி ஸேவித்துக் கேட்டுத் தெளிக.

மேலும், இவ்வர்த்தத்தில் ஒரு பொருத்தமுங் காண்மின். பாட்டுக்களில், அநேகவிடங்களில், ப்ராஸத்துக்கநுகுணமாக நான்கு பாதத்திலும் ஒரேரீதியான வாக்கியமிடப்பட்டிருந்தாலும், ஒவ்வொன்றுக்கும் அர்த்தபேதம் காண்கிறது. இப்பாட்டிலோ, அண்டக்கும், இண்டைக்குலம், தொண்டக்குலம், பண்டைக்குலம், என்கிற நான்கு பாதத்தில், முதல் மூன்று பாதங்களிலுள்ள, குல சப்தத்திற்கு ஸமூஹம் என்றே அர்த்தமென்பதில், யார்க்கும் வேறு மறுபாவமில்லை. நான்காவது பாதத்தில் உள்ள குலசப்தத்தில்தான் வேறுபாடு காண்கிறது. அதுவும், மற்ற மூன்றுபாதத்திலுள்ளதற்கு வேறுபாடாக இராமல், அவைகளுக்கு ஒத்தவிதமாகவே இருக்கலாமோவென ஊஹிக்கலாயிருக்கிறது. இதுபோல் வனவிஷயங்களில் ஸ்ரீ தேசிகன் அம்ருதாஸ்வாதினியிலருளிய பெரியோ மல்லோம், நன்றும் தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே, என்கிற திவ்யஸூக்தியே (அடியேன்)நெஞ்சம் நாடி நிலைநிற்பது நீதியாகுமெனத்தோன்றுகிறது.

இங்ஙனம் பண்டைக்குலத்தைத் தவிர்ந்து தொண்டக்குலத்திலுள்ளாரானதும், எப்பொழுதும் செய்யவடுக்கும் செயலைச்சொல்லித் தலைக்கட்டுகிறார் பாட்டின் மிகுதியால்.

பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்மினே:— என்றது, அவனைக்கண்ட ப்ரீதியுள்ளடங்காமல் முதலில் அவனுக்குப்பல்லாண்டென்று மங்களாசாஸனம் பண்ணுங்கள். அதற்குமேல் அவன் உங்களைக்குளிர நோக்குவன். அதன் பின்னர் பல்லாயிரத்தாண்டென்று மங்களாசாஸனம் பண்ணுங்கோள் என்று சொல்லுகிறது. அதாவது, பல்லாண்டென்று ஆரம்பித்துள்ள இப்பதிகத்தைப்பாடுங்கள், இதில் அவனுக்கும் பல்லாண்டு பாடலாம். அவன் நம்மைப்பிரித்துப்பண்டைக்குலத்தில் சேரவிடவொட்டாதே, அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றியிருக்கவேண்டுமென்றும் பல்லாண்டு பாடலாம். இத்திருப்பல்லாண்டு பாடுவதால் சாதிக்க முடியாத பலன் யாதொன்றுமில்லை. என்றெல்லாம் காட்டியபடி.

குறிப்பு: இப்பாட்டில், நிலையான ஐச்வர்யத்தை யுடையனை திருமாலிடம் நிலை நில்லாத ஐச்வர்யத்தை விரும்புகை விவேகிகளின்

செயலல்லவென்பதும் அவன் திருநாமங்களைச் சொல்லிப் பல்லாண்டு பாடுமதற்கு யாதொன்றும் ஒப்பாக மாட்டாதென்பதும், அவன் திருநாமங்களைச் சொன்னால் அதனால் கூடாத பயனொன்றுமெங்குமில்லையென்பதும் இவை முதலியன அறியலாகிறது.

5

எந்தை தந்தை தந்தை தந்தைதம் மூத்தப்பன்
ஏழ்படிகால் தொடங்கி*
வந்து வழி வழியாட் செய்கின்றோம்*
திருவோணத் திருவிழவில்
அந்தியம் போதிலரியுருவாகி
அரியை யழித்தவனை*
பந்தனை தீரப்பல்லாண்டு
பல்லாயிரத் தாண்டென்று பாடுதுமே*

| | |
|---|---|
| எந்தை | என்னப்பனும் |
| தந்தை | அவர் தகப்பனும் |
| தந்தை | அவருக்குத் தகப்பனும் |
| தந்தை | அவருக்கும் தகப்பனும் |
| தம் மூத்தப்பன் | அவர் தமக்கும் பாட்டனும் ஆகிய |
| ஏழ்படிகால் தொடங்கி | ஏழு தலைமுறையாக ஆரம்பித்து |
| வந்து | கைங்கர்யம் செய்யவேண்டிய காலங்களிலெல்லாம் தப்பாமல் வந்து |
| வழிவழி | செய்யவேண்டிய கிரமம் தப்பாமல் |
| ஆட்செய்கின்றோம் | கைங்கர்யம் பண்ணுகிறோம் |
| திருவோணத் திருவிழவில் | ச்ரவண நக்ஷத்திரத் திருநாளில் |
| அந்தியம் போதில் | அழகிய மாலைப் பொழுதில் |
| அரியுருவாகி | நரஸிம்ஹ ரூபத்துடன் தோன்றி |
| அரியை | தன் ஆச்ரிதனுக்குச் சத்ருவான இரணியாசுரனை |
| அழித்தவனை | குடலைப்பிளந்து கொன்றவனைக்குறித்து |
| பந்தனை தீர | அந்த ஸம்ஹார ஸமயத்தில், உண்டான, அனுக்கம் போம்படி |

பல்லாண்டு
பல்லாயிரத்தாண்டென்று } ...............
பாடும் மங்களாசாஸனம் செய்வோம்
(அனுக்கம் என்றால் குழந்தைகளுக்குவரும் ஒருவித வியாதியென்பா

நான், என்னப்பன் அவர் தகப்பன், அவருக்குத் தகப்பன், அவருக்கும் தகப்பன், அவர் தகப்பன் பாட்டன் இருவர், ஆக ஏழுதலைமுறையாக நாங்கள் கைங்கர்யத்திற்கு உரித்தான ஸமயங்களிலெல்லாம், காலம் தப்பாமல் வந்து, செய்யவேண்டிய முறை சிறிதேனும் தப்பாமல் கைங்கர்யம் பண்ணுகிறோம். எம்பெருமானின் திருநக்ஷத்திரமான திருவோணத் திருநாளன்று, அழகிய அந்திப்போதில் நாசிங்க ரூபியாய்த் தோன்றி தன்னோக்ஷகனுகச்கொண்டிருக்கிறப்ரஹ்லாதாழ்வானுக்குப் பகைவனான ஹிரண்யனென்கிற வசுரனை, அவன் உருமாய்ந்துபோகும்படி குடலைக்கீறி அழித்திட்டவனுக்கு அவனை ஸம்ஹரித்ததால் ஏதேனும் ஆயாஸம் தோன்றியிருந்தால் அதுதீரப் பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்று பாடுவோம்.

கீழ் மூன்று பாட்டுக்களில், வாழாள் என்கிற பாட்டில், அநந்யப்ரயோஜனபரர்களைத் தன்னுடன் பகவதனுபவம் செய்யத் துணைகொள்ளக்கருதியழைத்ததாக அனுபவித்தார். அதன்மேலும், தன்னுடைய அபாரகருணையாலும், கைவல்யார்த்திகள், ஐச்வர்யார்த்திகள் இவ்விருவகுப்பினர்கள் அபேக்ஷிக்கும் பலன் அஸாரமாகவிருந்தபோதிலும், அப்பலன் கருதியாவது எம்பெருமானைச் சரணமடைகிறார்களே என்பதாலும், அவர்களின் பலாபிஸந்தியை எப்படியாயினும் திருத்திப் பணிகொள்ளலாமென்ற திருவுள்ளத்தாலும், அவர்களையும் இரண்டுபாட்டினால் அழைக்கிறதாகவைத்துத் தன் அனுபவத்தைக் கொண்டார். இது, முதலாக மூன்றுபாட்டுக்களில், இவரால் அழைக்கப்பட்ட அம்மூன்று வகுப்பினர்களும் முறையே தங்கள் தங்கள் தன்மைகளை யுணர்த்திக்கொண்டு தம்முடன் கூட வருவதான அனுபவத்தைக் கொண்டருளுகிறார்.

அவற்றிற்குள்ளே இப்பாட்டில், முதலிலே, வாழாள் என்கிற பாட்டிலே கூப்பிடப்பட்ட அநந்யப்ரயோஜனபரர்கள் அணுகிவந்து

நின்று, எம்பெருமான் கைங்கர்யத்தில் தங்களுடைய தன்மையிருக்கும்படியைத் தமக்குத்தெரியப்படுத்திப்பேசுகிற பெருமையுள்ளதாகக்கருத்துவைத்து அனுபவிக்கிறார்.

எந்தை தந்தை தம் மூத்தப்பனேழ்படி கால்தொடங்கி:— என்றது, தான் முதலாக, தன் முன்னோர்கள் ஆறுதலைமுறையையும் சேர்த்து, ஏழுதலைமுறையாக ஆரம்பித்து,என்பதைச் சொல்லுகிறது. இவ்வாழ்வார், இவர்களைக்கூப்பிடும் பாசுரத்தில், தம்முடையவும், தம் திருவம்சத்தாருடையவும், பெருமையைச் சொல்லும் பொழுது, பொதுவாக, ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள் என்று சேர்த்தருளிச் செய்தார். இவர்களோவென்னில், ஒவ்வொருவராய்க் காட்டிக்காட்டிக் கணக்கிட்டுப் பேசுகிறார்கள். இவர்களின் மனநிலைதான், எவ்வாறு இருக்குமெனில், நீர், நித்யசூரி, உமக்கு மேல் எவ்வாறு எவ்வளவு எண்ணிக்கை காட்ட முடியும், ஏதோமுடியுமானால் உம்முடைய அவதாரத்துக்கு முந்தின கருடனை படியைக்காட்டலாம்; எங்கள் கோஷ்டியில் முன்னோர்களாகவுள்ளவர்களை, ஒவ்வொருவராக நெடுக உரைக்கிறோம் உணர்வீராக; உம்மால் ஒருவரிடம் ஏதேனும் குறைகண்டு கூறமுடியுமோ? எம்பிரானெனை சின்னங்கள் இவரிவரென்றாசைகள் தீர்வனே (இந்த இந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் எம்பிரானுடைய அடையாளமாகவே விளங்குபவர்கள் என்று சொல்லிக்கொண்டு எனக்கு வெகுநாளாய் உள்ள ஆசைகளையெல்லாம் அழகாகத் தலைக்கட்டிக்கொள்ளக் கடவேன்) என்கிற படியன்றோ இவர்களிடம் மன நிலை வாய்க்கப்பெறுவீர்; என்கிறார்கள் போலும்.

ஒருவர்க்கொருவர் ஒரு ஸம்பந்தத்தைச் செய்துகொள்ள விரும்புபவர்கள் ஆதியோடந்தமாகத் தங்களுக்குள்ள வம்சத்தின் வைபவத்தை வாயாரச் சொல்லி வழங்குவதுதான் வழக்கமன்றோ? இவ்வனுஷ்டானத்தை ஜநக மஹாராஜனுடையவும், தசரத மஹாராஜனுடையவும், சேர்க்கையில் நடந்த செய்கையாலுமறிக.

இவ்வாறு வம்சாவளியைச் சொல்வது தக்கதோ? கேவலம் ஒருகுடல் துவக்கையிட்டுக் கொண்டாடலாமோ வென்னில், அது தக்கதே; இங்கப்படியல்ல; சரீர ஸம்பந்தமென்பது ஒருபடியிருக்

கச் செய்தேயும், ப்ரஹ்ம வித்யாப்ரதானத்தினால் எங்களையுண்டு பண்ணி, அதடியாக எங்கள் குருக்கள் குழாங்கள் என்று ஏத்திப் பணியுமாறுள்ள ஓரேற்றமும் எங்கள் முன்னோர்கட்குளதே; ஆகவே, ஏழுதலை முறையென்று ஏதோ ஒரு எல்லையிட்டு ஒரு கணக்கிற்குச் சொன்னோம்; ஆசார்யாணு ம்ஸா வஸா வித்யா பகவத்த: (ஆசார்யர்களுக்குள்ளே, இன்னாரிவர், இன்னாரிவர் என்று எம்பெருமானளவும்) என்கிறபடி, ஒரே சங்கிலித்துவக்காய்ச் சொல்ல வல்ல உத்தமத்தன்மை வாய்ந்தவர்கள் எங்கள் முன்னோர்கள்; எங்கள் குலம் அப்படிப்பட்டது என்றும் உணர்த்திய படியாம்.

வந்து வழி வழியாட் செய்கின்றோம்—என்றது பகவத் கைங்கர்ய ஸமயங்களிலெல்லாம் தப்பாமல் வந்து முறைதப்பாமல் கைங்கர்யம் பண்ணுகிறோ மென்பதைச் சொல்லுகிறது. எம்பெருமானுக்கு ஏதேனு மொருபடி கைங்கர்யம் பண்ணி விடுகிறோ மென்பதே பெரிதல்ல; அக் கைங்கர்யங்களுக்கு வேண்டிய விதி விலக்குக்களை விவேகித்துக்கொண்டு செய்யவேண்டும். யதாயுவா நம் ராஜா நம் யதாசமதஹஸ்திநம் | (எப்படி யுவராஜனை ஆராதிக்கவேணுமோ, எப்படி மதக்களிறை ப்ரீதிபண்ணி பயந்துகொண்டே நடத்தவேணுமோ) என்கிற படியெல்லாம் பேசுகிற ப்ரமாணங்களின் படிகளை நன்கு நோக்கி, அம்முறைப்படியே கைங்கர்யம் பண்ணுவோம் நாங்கள் என்றபடி. வந்து என்கிறவிடத்தில், வழி வந்து என்றும், ஆட்செய்வோம் என்கிறவிடத்தில், வழியாட் செய்வோம் என்றும், ஒருபடி சேர்த்தும் அர்த்தங் கொள்ளலாம்.

இப்படிச் சொன்னவர்களை நோக்கி, ஆழ்வார்; நீங்கள் சொல்வது ஸரிதான்; எப்பொழுது எந்த திவ்யமங்கள விக்ரஹத்திலீடுபட்டு எவ்வாறு என்ன கைங்கர்யத்தைச் செய்து போந்தீர்களென்ன, நாங்கள் ஒரு சிங்கத்தினிடம் அணுகிக் கைங்கர்யம் செய்து போருமவர்கள் என்பதைப் பிரியலருளுகிறார்கள் பின்னிரண்டடிகளால்.

திருவோணத் திருவிழ விலந்தியம் போதிலரியுருவாகி யரியை யழித்தவனைப் பந்தனைதீரப் பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்று பாடுதுமே — என்றது, ச்ரவண நக்ஷத்திரத்தில் ஸாயம் ஸந்த்யா

காலத்தில் நரசிங்கவுருவாய்த்தோன்றி இரணியனையழித்தவனை, அவனுக்குண்டான ஆயாஸம் தீர, பல்லாண்டுப்பாடுவோம் நாங்கள் என்பதைச்சொல்லுகிறது. இவ்வாழ்வார் தங்கள் வம்சத்தார் பெருமையைப் பேசுங்கால், ஸ்ரீராமபிரான் இலங்கையைப் பாழ்படுத்தினவன்று, அவனுக்குப்பல்லாண்டென்று யாரும் பாடாத குறைதீரத் தாங்கள் பல்லாண்டு பாடுமவர்கள் என்றார். இப்படி ஆழ்வார் சொல்லிக்கொள்வதில் ஒரு பொருத்தமுடைமை காண்மின். இங்கு இதிஹாஸத்தை சிறிது ஆராய்ந்துணர்மின்; உணர்வீரே. இவ்வாழ்வார் கருடாம்சரென்பதை முன்பே உணர்ந்துள்ளோம். இலங்கையில் ஸ்ரீராமனும், இலக்குமணனும், இந்திரஜித்தின் நாகபாசத்தால் கட்டுண்டவன்று, மோஹித்துத் தரைக்கிடை கிடக்க, விபீஷண ஸுக்ரீவாதிகள் செய்வதறியாதேதிகைத்து நிற்க, பெரியதிருவடி, என்கிற கருடன் சென்று, விஷவேகத்தை வெருட்டியடித்து, அவ்விருவர்க்கும் பல்லாண்டுபாடி, ப்ரதக்ஷிணமும் செய்து மீண்டனன், என்கிற வரலாற்றை அன்புற்று நோக்கினால், இவ்வாழ்வார், இராமனிடம் பரிவுகொண்டு பல்லாண்டு பாடுகிறவர் என்று சொல்வது ஒக்குமன்றோ. இப்படி இவர், ராமனுக்குப்பல்லாண்டுபாடும் மேன்மையுடையவம்சத்தைச் சேர்ந்தவரென்று சொல்ல, அதற்கு மேலும் தங்கள் வம்சத்தின் மேன்மையே உயர்ந்ததென்கிறார்கள். ஆழ்வார்குலம், ராகவஸிம்ஹத்தைப்பாடும் குலமானாலும், அவருக்கும் முன்னமே அவதரித்த ஓர்நரஸிம்ஹத்தையன்றோநாடி நாங்கள் பாடுகிறவர்கள். ராமன், பிறந்து வளர்ந்து பெரியோனாகிப் போர்வீரனாய்ப் போர்புரிந்த காலத்து அங்கு பல்லாண்டு பாடியது. இங்கு அவதரித்த அக்காலத்தே, அந்த சைசவாவஸ்தையோடே, சலங்கொண்ட இரணியன தகல்மார்பங்கீண்டவச் செய்கைக்குப் பரிந்தன்றோ பாடிப்போந்தது. ஆகவே, எங்கள் படியன்றோ உயர்ந்தது என்றெல்லாம் இவர்கள் மகிழ்வார்.

இங்கு பந்தனைதீர என்ற வாக்கியமுளது. பந்தனை என்றால், அநுக்கம், என்று பதவுரையெழுதி, அநுக்கமென்பது, சிசுக்களுக்குவரும் ஒருவித நோயென்பர், என்றோம், அதன் பொருத்தமும் காண்மின், இவ்வவதாரம் பண்ணினவுடன் இரணியன் நேர்பட்டதானும் அப்பொழுதே அவனைக்கொன்றபடியாலும், அப்பொழுதுதான்,

அவதரித்தக்ஷணமானதால், பெருமாள் சிசுவான தன்மையுடன் கூடினவரென்று வேடிக்கையாய்கொண்டு சிசுவிற்கு அனுக்கம் என்கிற வியாதிவருவது தக்கதேயானதால், அந்த வியாதி தீரப் பல்லாண்டு பாடுவதாயும் கொள்க.

அதற்குமேல், ராமோரமயதாம்வர: என்கிறபடி அழகிற்சிறந்தவர் இராமபிரானனதால் அவனழகு குன்றுதிருக்க நாங்கள் பல்லாண்டு பாடுமவர்கள் என்றால், நீங்கள் ஓர் நரசிங்கத்திற்குப் பல்லாண்டு பாடுகிறவர்கள் என்கிறீர்கள். நாங்கள், நடுப்பகலில், நாடு நகரமும் நன்குடன் களிக்க அவதரித்த வொருவனுக்குப் பாடுமவர்கள் என்றால், நீங்கள், இரவுமின்றிப் பகலுமின்றி யொருவேளையில் புறப்பட்ட வொருவனைப்போற்றி நிற்கிறோம் என்கிறீர்கள், இது சால அழகுதான். என்றெல்லாம் ஆழ்வார், கேட்பதுபோல் வைத்து, விரிய, பதிலுரைக்கிறுப்போலிருக்கிறது நடுவேயுள்ள அடைமொழிகளால்.

என்னப்பன் அவதரித்தநாளின் பெருமை சொல்வோமா? அன்றேல், அவ்வேளையைச் சொல்வோமா? அவதரித்தபோதுள்ள அழகைச் சொல்வோமா? முறையே சொல்லுவோம் கேளீர். என்னப்பன் அவதரித்தது திருவோணமென்னும் திருநக்ஷத்திரங்காணும். இந்த நக்ஷத்திரம்தான் விஷ்ணுவை தேவதையாகவுடையதன்றோ. ஸ்ரீநரஸிம்ஹரூபியான பகவான், இவ்வாழ்வாரின் திருநக்ஷத்திரமான ஸ்வாதீ நக்ஷத்திரத்திலவதரித்திருக்கச் செய்தேயும் அதை வெளியிட்டால், அபிசாரம் செய்வோர், இவ்வெம்பெருமானுக்கும், எம்பெருமானிடம், மிகப் பரிவுள்ள இவ்வாழ்வாருக்கும் ஏதேனும் கெடுதிவிளைப்பார்களோவெனக்கருதி, அதை வெளிப்படுத்தாமல் திருவோணமென்றுரைக்கிறார்கள். இதனாலும் தங்களுக்கு ஒரு மேன்மையுண்டெனக் காட்டுகிறார்போலும். அதாவது, ஆழ்வாரான நீர் எம்பெருமான் திருநக்ஷத்திரம் முதலியதை மட்டில் ஒளிக்கும் மனோபாவத்துடன் பல்லாண்டுபாடுமவர்; நாங்களோ, எங்கள் பெருமானுக்கும், எங்கள் பெருமாள் நக்ஷத்திரத்திலுதித்தவுமக்கு மொரு குறைவுவாராதே யிருக்கவேணுமென்று உள்ளபடியேயுள்ள, ஒரு பெரும் சோதியான, நக்ஷத்திரத்தை (ஸ்வாதியென்பதைச் சோதி

யென்கிறது) மறைத்துத் திருவோணமென்கிறோம் பாரீர். ஆகவே பகவத்பக்தியின் எல்லைநிலமான பாகவதபக்தி எங்கு எல்லை கடந்தது, எனச் சொல்லிக்காட்டுவது போலிருக்கிறபடி.

இவ்வண்ணம் அவதரித்த நாளிருக்க பொழுதின் பெருமை கேட்டீரோ? அவனவதரித்த மாலைப் பொழுதும் அந்தியம் பொழுதானபடி காணீர். அவதரித்தவன் அழகுடையவனானதாலே அந்தப் பொழுதும் அழகுடையதாகவாயிற்று. இவ்வழகை, திருமழிசைப்பரனும், அழகியான்தானே, அரியுருவன்தானே (நரஸிம்ஹரூபியானவனே அழகுடையவன்) என நான்முகன்திருவந்தாதியில் அருளியிட்டார். ஸஹஸ்ரநாமமிட்ட ரிஷிதானும், நாரஸிம்ஹவபு: ஸ்ரீமாந் (நரஸிம்ஹமான சரீரத்தையுடையவன் அழகுடையவன்) என்றார். இப்படி அழகு பொருந்தின வொருவனழகு அரியை யழிக்கு மக்காலத்திலழியாமலிருக்கவேணுமே, என் விளையுமோ, என, ஏங்கி இளைக்குமவர்கள் எங்கள் குலத்தாரன்றோ என்றெல்லாம் இவர்கள் கருத்தெனக் கொள்க.

இங்கு, நாரஸிம்ஹவபு:— பக்தபயாபஹ: ததபேக்ஷாநுகுணம் ப்ரதிபந்நயதாகாம திவ்ய மஹாந்ருஸிம்ஹ ஸம்ஹநந: அத: பரஸ்பர துர்கடாபூர்வ விக்ருதரூப பரிக்ரஹாதபி ஸ்ரீமாந்— அதிமநோஹர திவ்யரூப: என்கிற ஸஹஸ்ரநாம பாஷ்யபங்க்தியையும், பக்தஸ்ய தாநவசிசோ: பரிபாலநாய பத்ராம் ந்ருஸிம்ஹ குஹநாமதிஜக்முஷஸ்தே (அசுரனின் குழந்தையாக ஜநித்திருந்தும் தன்னிடம் பக்தியுடன் விளங்கின ப்ரஹ்லாதனுடைய ஸம்ரக்ஷணத்திற்காக அழகிய நரங்கலந்த சிங்கவுருவையடைந்தவுன்றனுக்கு) என்கிற ஸ்ரீதேசிக திவ்யஸூக்தி தன்னையும் சேர்த்துக் கொண்டனுபவிக்கத் தக்கது.

அவதரித்த நாளும் பொழுதும் ஒரு புறமிருக்க அவதரித்த வண்ணம் கேட்டீரோ? ஸ்ரீராமனைப்போல், பிதரம் ரோசயாமாஸ ததாதசரதம்ந்ருபம் (அரசனை தசரதனை அப்பொழுதுதன் மனதிற்கிசைந்த தகப்பனாகக்கருதினான்) என்கிற படியையும், கௌஸல்யா ஜநயத்ராமம் (கௌசல்யை இராமனை ஈன்றாள்) என்கிறபடியையும் கொண்டவனோ இவன்? தானே அரியுருவானவனன்றோ இவன்!

ராமாவதாரம் பண்ணினவன், பன்னிரு திங்கள் வயிற்றில் கிடந்து கஷ்டம் பொறுக்கப் பழகியிருக்குமவன். ப்ரஹ்லாதன் ப்ரதிக்ஞா ஸம காலத்திலே திடீரென்று தோன்றினவனுக்கு, முன்பே சிரமம் பொறுத்துப் பழகக் காரணமில்லையானதால், அப்படிப்பட்ட தன்மையுள்ளவனை இவனுக்கு என்ன ஆயாஸம் வருமோ என்றல்லவா, கூசிப் பல்லாண்டு கூறவேண்டும். ஆகவே அப்படி யெல்லாம் பரிவுகாட்டவேண்டுமிடத்தே பரிவுகாட்டிப் பல்லாண்டு பாடுமவர்கள் தாங்கள் என்றும் ஸாரவம்.

இவ்விடத்து, அரியுருவாகி அரியை யழித்தானென ஒரு வேடிக்கை வார்த்தையும் காண்க.

இப்பாட்டில், இரணியகசிபு என்கிற ஓர் அசுரன் கொடிய தவம்புரிந்து, தேவர் மனிதர் முதலிய யாவராலும், காலை மாலை முதலிய பொழுதுகளிலும், வீடுவாசல் முதலிய இடங்களிலும், யாதொரு அஸ்திரங்கள் முதலியதாலும் இறப்பு ஏற்படக்கூடாதென வரம்பெற்று, ஒருவரையும் மதியாது தன்னுள்ளடக்கியாண்டு ஹிம்ஸைசெய்து போருகிற நாளிலே, ப்ரஹ்லாதனென்கிற, பகவத் பக்தசிகாமணி, புதல்வனைப் பிறக்க, அவனுக்குத் தங்கள் குல ஆசாரத்துடன், தன்னையே தெய்வமாய்க்கொண்டு வித்யைகள் கற்பிவிக்கும்படி கட்டளையிட, அதற்கிசையாதே நின்ற அவ்வருமைப் புதல்வனையும் பலபடி துன்புறுத்திப் பலநாள் சென்றவளவில் ஒருநாள் ஒரு அந்திப்பொழுதில் தன் மகனைநோக்கி, நீ தெய்வமாகக் கொண்டாடுகிறவன் எங்கிருக்கிறானெனக் கேட்க, அவன் எங்கு முளன் என்றியம்ப, அப்படியாகில் இத்தூணிலு முளனோ வென்றுசொல்லி, அவன் மனதிற்றோன்றிய வொருதூணைத் தட்ட, அந்தத் தூணிலிருந்தே, தன் மெய்யடியான் வார்த்தையை மெய்ப்பிக்கக் கருதி, திருமால் நரங்கலந்த சிங்கவுருவுடன் தோன்றி தனது திருவுகிரால் அவ்வசுரனை குடலைக்கீறி அழித்திட்டனன், என்கிற, அழகிய நாரசிங்கனின் திவ்யசரிதை வெளியிடப்பட்டமை தெளியத்தக்கது.

குறிப்பு—ஆக இப்பாட்டின், பின்னிரண்டடிகளால், நாஸிம்ஹாவதார சரிதை வெளியிடப்பட்டதும் நிற்க, பின்னிரண்டடிகளால், தலைமுறை தலைமுறையாக எம்பெருமானை வழிபட்டு நிற்க

வேண்டியதே சிறந்ததென்றும், நடுவே சில தலைமுறைகள் கூட எம பெருமானைச் சிறந்து ஏத்தாமல் இருப்பதும் ஏற்ற தல்லவென்றும் ஆகவே, தான் முதலாக முன்னோர்கள் அனைவர்க்கும் அவனுக்குப் பல்லாண்டு பாடிநிற்கும் பெருமையே வாய்ப்பது சிறந்ததென்றும், இவை முதலியன அறியலாகிறது.

விசேஷக் குறிப்பு—இப்பாட்டில் எந்தை தந்தை—என்று, தங்கள் பெருமை சொல்லிக்கொள்வதால், இது தற்புகழ்ச்சி தோஷத் தில் சேராதோ, இது அஹங்காரத்தால் ஏற்பட்ட கார்யமன்றோ? இது தக்கதோ, என்று சிந்திக்கில், இவ்வாறு சொல்லிக்கொள்ளு மிடமெல்லாம் ஸாத்விக அஹங்காரத்தில் சேருமானதால் தக்கதே யென்றும், மேலும், ஆழ்வார், இவர்கள் தம்முடன் சேரத்தக்க வர்களா வென்று ஆராயுமிடத்து, ஆழ்வாரின் மனதிலுள்ள பயங் கெடவே இவர்கள் இவ்வாறு சொல்லி நிற்கிறார்களானதால் இது சாலப் பொருந்துமெனவும் கொள்க.

இங் நுபோல் எங்கேயாவது யாரேனும் சொன்னதுண்டோ வென்னில், ஸீதையைத் தேடத்தென்திசைசென்ற வாநர புத்கலிகள் அனுமானைக்கொண்டு கடலைக் கடத்துவிக்கக் கருத்துக்கொண்டு பேசினபொழுது, அவர்கள் பயங்கெட, தான்ஸாமான்னியனல்லன் ஆகாயத்தில் அதிவேகமாய் செல்லக்கூடிய கருடனையும் சூழ்ந்து அனேகம் ஆவ்ர்த்தி செல்வேன் என்று, வாநர வீரர்களைக்குறித்து அனுமன் அருளிச்செய்த, வார்த்தையின் திறத்தையும் இங்கு கூட்டிக் கொள்க. (6)

தீயிற் பொலிகின்ற செஞ்சுடராழி
திகழ் திருச்சக்கரத்தின் *
கோயிற் பொறியாலே யொற்றுண்டு நின்று
குடி குடியாட் செய்கின்றோம் *
மாயப் பொருபடை வாணனை
ஆயிரந்தோளும் பொழிகுருதி
பாய * சுழற்றியவாழி வல்லானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே * (7)

| | |
|---|---|
| தீயில் | சந்திரன், சூரியன், அக்நி முதலிய ஒளியுடன் கூடிய பொருள்களைக் காட்டிலும் |
| பொலிகின்ற | மிகவும் விளங்குகிறதாயும் |
| செம்சுடர் திகழ் | சிவந்த ஒளியுடன் விளங்குவதுமான |
| திருச் சக்கரத்தின் | திருவாழி யாழ்வானெழுந்தருளியிருக்கிற |
| கோயில் | வாஸஸ்தானமான |
| ஆழி | வட்ட வடிவமாகவுள்ள |
| பொறியாலே | அடையாளத்தினலே |
| ஒற்றுண்டு நின்று | அடையாளம் பண்ணப்பட்டவர்களாயிருந்துகொண்டு |
| குடி குடி | எங்கள் குலத்தில் ஒருவரும் விடாதே, (தலைமுறை தலைமுறையாக) |
| ஆட் செய்கின்றோம் | எம்பெருமானுக்கு கைங்கர்யம் பண்ணிக்கொண்டு வருகிறோம் |
| மாயப்பொருபடை | வஞ்சனையாக யுத்தம் செய்யும் சேனையையுடைய |
| வாணனை | பாணாஸுரனுடைய |
| ஆயிரந் தோளும் | ஆயிரந் தோள்களிலிருந்தும் |
| குருதி | ரக்தமானது |
| பொழி பாய | வெளிப்புறப்பட்டுவெள்ளமாய் ஓடும்படி |
| சுழற்றிய | சுழற்றின |
| ஆழி வல்லானுக்கு | திருவாழியாழ்வானை நியமிப்பதில் ஸமர்த்தனனவனுக்கு |
| பல்லாண்டு கூறுதும் | திருப்பல்லாண்டு பாடுவோம். |

சந்திரன் ஸூர்யன் அக்நி முதலிய ஒளிமிக்க பொருள்களைக் காட்டிலும் மிகவும் விளங்குமதாய் சிவந்த வொளியொடு கூடினதாய் திருவாழியாழ்வான் வாஸஞ்செய்யும் திருக்கோயிலாய் வட்டவடிவமான அடையாளத்தினல் அடையாளம் செய்யப்பட்டவர்களாகவிருந்துகொண்டு அநாதி ஸந்தானமாக எம்பெருமானுக்குப் பணிவிடை செய்கின்றோம். மாயையுடன் யுத்தம்செய்யும் சேனையைக்கொண்டிருக்கிற பாணசுரனுடைய ஆயிரந் தோள்களிலிருந்தும் ரக்த வெள்ளம் புறப்பட்டோடும்படி சுழற்றின திருவாழி யாழ்வானையாளவல்லவனுக்குத் திருப்பல்லாண்டு பாடுவோம் நாங்கள்.

கீழ், வாழாள் என்கிற பாட்டில் அழைக்கப்பட்ட அநந்யப்ர யோஜநபரர்கள் அணுகிவந்து நின்றமையை அறிவிக்குமதான அநுபவத்தைக் கொண்டார். இப்பாட்டில், ஏடுநிலத்தில் என்கிற பாட்டிலழைக்கப்பட்ட கைவல்யார்த்திகள் தங்கள் தன்மையை யுணர்த்திக் கொண்டு தம்முடன் வந்துசேருவதாகக் கருத்துக் காட்டி யநுபவிக்கிருர்.

இவ்வாழ்வார், இவர்களை யழைக்குமிடத்தில் வரம்பொழி வந்தொல்லைக் கூடுமினோ என்றும், நாடுநகரமும் நன்கறிய நமோநாராயணாய வென்று பாடுமனமுடைப் பத்தருள்ளீர் வந்து பல்லாண்டு கூறுமினே என்றும் கூறியருளினார். அதாவது, நீங்களே உங்களுக்கு ஒருவரம்பையிட்டுக் கொண்டு இவ்வளவுதான் நம்முடைய அநுபவம் என்றிருக்கிறீர்கள்; அந்த வரம்பையொழியுங்கள்; அதற்குமேல் அளவிறந்த ஆனந்தம் உங்களுக்கு உளது; அதை யநுபவிக்கலாம் வாருங்கள்; அதற்காகச் செய்யவேண்டும் கிரிசை சிறிதுண்டு; அதுதான் ஏதென்னில், அனைத்துலகுமறிய அவன் திருநாமத்தைப் பாடுகைதான்; இவ்வளவுக்கு நீங்கள் உடன் பட்டீராகில், தம்முடன் கலந்து பல்லாண்டு கூறலாம்; அப்படி வாருங்கள் என்றார். அதுகேட்ட அவர்கள், அவன் திருமந்திரமான திருநாமத்தை ஆசிரியரடிபணிந்து க்ரஹித்து ஓத, மூன்றாம் அவ்வாசிரியரிடம் பெறவேண்டியது திருவிலச்சினையானதாலே, அதைப் பெற்று முறையே மூலமந்திரம் முதலியவைகயும் பெற்றிருக்குமவர்களானதால் அப்படியுள்ள தங்கள் பெருமையையும், குடிகுடியாகத் திருமாலுக்குத் தொண்டு செய்வதிலும் தங்கள் நடுவே ஒருவராகிலும் வெறுமனே செய்கிறவர்களல்ல வென்றும், குடிகுடியாக, சக்ராதிதாரணம் பும்ஸாம் பரஸம்பந்த வேதநம் (சக்கிரம் முதலிய அடையாளத்தை தரிப்பது அனைவர்க்கும் அவ்வெம்பெருமானின் ஸம்பந்தத்தை அறிவித்து நிற்கிறது) என்று பேசப்படுகிற எம்பெருமானின் தாஸன் என்று காட்டக்கூடிய ஒப்பற்ற ஓர் அடையாளத்தை எங்கள் பாஹுமூலத்தில் என்றும் குறியழியாமலிருக்கும்படி தரித்துக் கொண்டு, அடிமை செய்கின்றோம். அதற்கு மேல் அவன் வாணனையாயிரந் தோள்களைத் துணித்த வீரஸ்ரீக்கும் பல்லாண்டு பாடிநிற்கின்றோம் என்று சொல்ல ஆரம்பித்து, தாங்கள் திரு

விலச்சினை பெற்றபடியாலன்றே, ஸ்ரீவைஷ்ணவர்களாக ஆகப்பெற்றது; ஸ்ரீவைஷ்ணவர்களாக ஆனபடியாலன்றே, அவ்வெம்பெருமானுக்கு அடிமை செய்ய அதிகாரமுள்ளவர்களாக ஆனது; இந்த அதிகாரம் உள்ளபடியாலன்றே, சக்ராங்கிதா: ப்ரவேஷ்டவ்யா: யாவதாகமநம் மம | நாமுத்ரிதா: ப்ரவேஷ்டவ்யா: யாவதாகமநம் மம || (நான் வருகிற வரையில் சக்கிரத்தினால் அடையாளம் பண்ணப் பட்டவர்கள் உள்ளே பிரவேசிப்பிக்கத் தகுந்தவர்கள்; அப்படியல்லாதவர்கள் பிரவேசிப்பிக்கத் தக்கவர்களல்லர்) என்கிற திருமால் கட்டளைப்படி, அடையாளமில்லாதவர்களாய், வெளியே நிறுத்திப் பரிபவப் படுத்தப்படாமல், அடையாளமுள்ளது கொண்டு, உள்ளே சென்று ஒழிவில் காலமெல்லாம் அடிமைசெய்து இவ்வளவு பெருமையும் எங்களுக்கு வாய்க்கப்பெற்றது; அத்திருவாழியின் பெருமைதான், என்னே, என்று அதன் பெருமையைப் பேசுகிறார்கள் தீயிற்பொலிகின்ற என்றாரம்பித்து.

தீயில் பொலிகின்ற—என்றது, ஒளிமிக்க பொருள்களெல்லாவற்றையுங் காட்டிலும் ஒளி மிக்கிருக்குமாற்றைச் சொல்லுகிறது.

இங்கு, பொதுவாக, தீயில் என்றே சொல்லியிருப்பதாலும், அது ஒளிமிக்க பொருள்களெல்லாவற்றையும் காட்டுமானதாலும், எல்லா ஒளிமிக்க பொருள்களிலும் சிறந்ததாய், ஒளியுள்ள பொருள்களாய்த்தோற்று மெல்லாவற்றிற்கும் ஒளியைக்கொடுத்துதவுமதாய் ஓதப்படுகிற பரஞ்சோதி என்கிற சப்தத்தைக்கொண்ட எம்பெருமானையும் விடாது அர்த்தங்காட்டுமானதால், அவனிலுங்காட்டில் அவன் திருக்கையிலேந்தி நிற்கும் திருவாழியின் ஒளி, உயர்வுபெற்றதென உரைத்ததாகிறது. இங்ஙனேயுள்ள பெருமை, அடியோமோடும் என்கிற பாட்டிலேயே, வடிவார் சோதிவலத்துறையும் சுடராழி என்பதாலும் ஏத்தப்பட்டது. ஸூதர்சநம் பாஸ்கர கோடிதுல்யம் (கோடி ஸூர்யப்ரகாசனை திருவாழி யாழ்வானை) என்றிப்படியெல்லாம் சொன்ன விடங்கள், நம் போல்வார்க்கு, அறிந்த வொருவடையாளத்தையிட்டு அறிவிப்பதில் நோக்கேயல்லது, அதன்பெருமை அவ்வளவுதானென்று அறிவித்தபடியன்று.

திருவாழியாழ்வான் திவ்யதேஜஸ்ஸுதான் சிறந்ததென்கிற விஷயத்தில், நாச்சியார் திருமொழியில் பத்தாவது திருமொழி இரண்டாவதான மேற்றோன்றி, என்கிறபாட்டில் மேற்றோன்றுமாழி என்கிறவிடத்துக்கு பெரியவாச்சான் பிள்ளையருளிச்செய்திருக்கிற "(இவ்வருகுண்டான ஆதித்யாதிகளுடைய தேஜஸ்ஸிற் காட்டில் இந்த்ராதிகளுடைய தேஜஸ்ஸு விஞ்சியிருக்கும்; அதிற்காட்டில் ப்ரஹ்மாதிகளுடைய தேஜஸ்ஸு விஞ்சியிருக்கும்; அதில், காரணத்வப்ரயுக்தமாய் வருமதாகையாலே மூலப்ரக்ருதியினுடைய தேஜஸ்ஸு விஞ்சியிருக்கும்; அதுதான் தமஸ்ஸு என்னும்படி பரமபதத்தில் புகர் அதுக்கு ப்ரகாசத்தைப்பண்ணும்; திவ்யமங்கள விக்ரஹம் அதுக்கு ப்ரகாசத்தைப் பண்ணும்; அதுக்கு மேலேயிறே (திருவாழியாழ்வான் தேஜஸ்ஸு" என்ற வ்யாக்யான பங்க்திகளையும் உவப்புடன் உற்றுநோக்குமின்.

செஞ்சுடர் திகழ்—என்றது, சிவந்த வொளியுடன் விளங்குமாற்றை விளக்குகிறது. இருளன்ன மாமேனி என்கிறபடி, கண்ணுக்குக் குளிர்த்தியாய்த் தோற்று முருவத்தோடுள்ளவனை, தன்னுடைய சிவந்த வொளியால் காட்டிக்கொடுத்துதவுகிறபடியைக் கண்டு களித்துப்பேசியபடி. திருவிலச்சினை பண்ணிக்கொள்ளும் போதும், மிக்கவொளி பொருந்தின திருவாழி யாழ்வானே, அஜ்ஞானத்தால் குருடனான வெனக்கு, எங்கும் நிறைந்த பரம்பொருளுந் தெரியவில்லையே, அந்த விஷ்ணுவின் மார்க்கத்தை எனக்குக் காண்பிக்கவேணும், என்கிற பொருள்கொண்ட திருமந்திரத்தையன்றோ ஆசிரியர் சொல்லுவிக்க நாமும் சொல்லுகின்றோம்.

இத்திருவாழிதான், கார்கொண்ட மேகம்போல் கறுத்துத் தோன்றுகிற பெருமானை வேறுபட்ட சிவந்ததான தன்னொளியால் காட்டிநிற்கிறதானதாலே அவ்வழகை யநுபவித்துப் பேசிநின்ற ஸ்ரீதேசிகனும், பரமபத ஸோபாநம் பராப்தியர்வத்தில், அஞ்சன கிரியையணைந்த சந்திராதித்யர்கள் போலே, பாஸ்பரபாகத்தையுடையரான திருக்கையிலாழ்வார்களை, என்றருளினர்

திருச்சக்கரத்தின் கோயில்—என்றது, அந்த ஆயுதத்திற்கு அபிமாநி தேவதையான திருவாழியாழ்வான் திருவுள்ளத்திற்கு

ஒத்த வாஸஸ்தானமாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. பெருமாள் கோயில் என்பதைக் காட்டிலும், ஆழியாழ்வான் கோயில் என்பதில் ஓர் ஆதாருள்ளபடியையும் காட்டுகிறது. தன்னடியார் வந்து தங்கின இடைகழியன்றோ திருமாமகளிரும் தாமும் சேர்ந்திருக்க இனிதாயிருந்தபடி. எந்தவிடம் வைகுண்ட நாதனின் கதையாகிற அம்ருத ரஸத்தை ஆஸ்வாதனம் செய்யும் அடியார்களந்தரங்கத்திற்குப் பிடிக்கவில்லையோ, அதெல்லாம் வேறு எவ்வித பெருமை படைத்திருந்ததாயினும் உபயோக மற்றதேயன்றோ? இவ்வர்த்தத்தில் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் ஸ்தானவிசேஷாதிகாரத்தின் இறுதி ச்லோகமான, ஸாகாசீதிநசாகசீதி என்கிறதையும் சிந்திக்க.

ஆழி:— என்றது, ஒளியின் பெருமையும் நிற்க, உருவத்தின் அழகுதான் என்னே! என்பதை உரைக்கிறது இப்படி வட்டமாய் வடிவம் வாய்ந்திருக்கிறபடியை, பருதிவட்டம்போலும் சுடரடலாழி என்றும், வட்டவாய்நேமிவலங்கையா என்றும், வகுளபூஷணனும் வாயாரப்புகழ்ந்து பேசினரில்லையோ?

பொறியாலே ஒற்றுண்டு நின்று:— என்றது, அவ்வழகிய வட்டமான அடையாளத்தினால் தாங்கள் அடையாளம் பண்ணிக்கொண்டு நிற்கிற பெருமையைப் பேசுகிறது.

குடிகுடியாட்செய்கின்றோம்:— என்றது? எங்கள் முன்னோர்கள் முதல் அடியோங்களளவாகவுள்ளவனைவர்களும் அவனுக்காட்செய்து நிற்குமாற்றை அறிவிக்கிறது.

இங்கு, குடிகுடியாக ஆழிப்பொறியாலே ஒற்றுண்டு நின்று என்றும், குடிகுடியாக ஆட்செய்கின்றோமென்றும் கொள்ளலாம். எங்கள் வம்சத்தில் தப்தசக்ராங்கநம் செய்துகொள்ளாதவர்களும், திருமாலுக்காட் செய்யாதவர்களும் காணக்கிடைப்பதரிதென்றபடி. இப்படி, தப்தசக்ராங்கநத்தைச் சொன்னபடியினாலேயே, பஞ்ச ஸம்ஸ்காரமெனப் பெயர்பெற்று, பகவத் கைங்கர்ய யோக்யதையை உண்டுபண்ணித் தரக்கூடிய, புண்ட்ரம், நாமம், மந்த்ரம், யாகம் என்கிற, மற்றும் ஸம்ஸ்காரங்களையெல்லாம் தாங்கள் செய்து கொண்டவர்கள் என்றும் சொன்னபடியாம்.

இந்தப்படி, சங்கசக்ராதிதாரணம் ஆவச்யகமென்றும், அதனால் கஷ்டங்கள் விலகுகின்றனவென்றும், அதனாலேற்படும் ஏற்

றங்களையும், அப்படிச் செய்துகொள்ளாமல் போனால் ஏற்படும் அஸாத்யமான துன்பங்களையும், நிரூபணம் செய்து ஸ்ரீ ஸச்சரித்திரரக்ஷையில், ஸுதர்சநபாஞ்சஜந்யதாரண விதியென்கிற முதலதிகாரத்தில், பூர்வபக்ஷ ஸித்தாந்த முறையில் பரக்கப்பேசி, ஸ்ரீ வைஷ்ணவர்களாக வாழக்கருது மனைவர்களும் அக்நி ஸம்பந்தம்பெற்ற இந்த திவ்யாயுததாரணத்தை அவச்யம் செய்துகொள்ள வேண்டுமென்றும், ஸ்ரீ தேசிகன் அருளிச்செய்திருக்கிறார். ஆகவே இது விஷயங்களை விரிவுடன் அறியவிரும்புமவர்கள், மற்றும் பெருமைகளுடன் அங்கேகண்டுகளிக்க ப்ராப்தம்.

ஆக, இத்தன்மையுடையவர்களாய் அவனுக்கு ஆட்செய்கின்றோமென்ன, அதுகேட்ட ஆழ்வார், ஆம்; சொல்வது தக்கதேதான் எந்த திவ்யாவதாரத்தில் என்ன சேஷ்டிதத்தில் ஈடுபட்டு ஏத்தி நிற்கிறீர்கள்; என்று வினவியதாக வைத்து விடையருளுகிறார்கள், பின்னிரண்டடிகளால்.

மாயப்பொருபடைவாணனை:— என்றது, ஆச்சர்யமாய் சண்டைசெய்யும் பாணாஸுரன் என்பதைச் சொல்லுகிறது. அன்றிக்கே, ஆச்சர்யமாய் சண்டைசெய்யும் சேனையையுடைய பாணாஸுரன் என்பதைச் சொல்லுகிறது. அதுவுமன்றிக்கே, வஞ்சனையாகச் சண்டைசெய்யும் அவன், என்றும், வஞ்சனையாகச் சண்டைசெய்யும் சேனையையுடைய அவன் என்றும் சொல்லலாம்.

ஆயிரந்தோளும் பொழிகுருதிபாய— என்றது, ஆயிரந் தோள்களாலும், ஆயிரம் மதகுகளால் கலங்கலெடுத்து விட்டாற் போல் ரக்தம் கொழித்து வெள்ளமிட்டோடினபடியைச் சொல்லுகிறது. இவனுடைய ரக்தம் வெளிப்புறப்பட்டோடியதென்று சொல்வதில், இவன் உயிர் கொண்டிருக்கக்காரணமாகவிருந்த, முண்டனீறன் மக்கள் வெப்புமோடியங்கி ஓடிட (முண்டித சிரஸையுடையனும் பஸ்மச் சந்தனனை ருத்திரனென்ன, அவன் பிள்ளைகளென்ன, ஜ்வரமென்ன, காளியென்ன, அக்னியென்ன, இவர்கள் முதுகு காட்டி சிதறியோட) என்கிற படியில் சொல்லப்பட்டபடியே இவனுக்கு ரக்ஷகர்களாய் நின்ற யாவர்களும் பறந்தோடின படியையும் சொல்லப்பட்டதென அறிக. இவனை கைகளையும்போக்கி கையாட்

களையும்போக்கி இரண்டு கையும் தலையுமாக நிறுத்திக் கதறவைத்தானென்று ஊாவம். இரண்டு கையுடனும் தலையுடனும் அவனை விட்டது எதற்காகவென்னில், தன்னுடன் அவனுக்கு நேர்ந்த ஒரு ஸம்பந்தத்தையிட்டு, தன் மருமகள் தகப்பனற்றவளாகாமைக்கும், இவனிறந்து விடுவதைவிட உயிருடனிருந்து, தான் ரக்ஷகர்களாகக் கொண்டிருந்தவர்களைப் பார்த்து, ஸர்வசக்தனாய், ஸர்வரக்ஷகனான திருமாலை விட்டு உங்களைப் பற்றின என் படியைப் பாருங்கள்; உங்களை ஆராதித்த கையெல்லாம் அறுந்துபோயொழிந்தனவே; மிகுதியிருக்குமிவையோ, அவனை வணங்க விட்டிட்டவை; என்று, அவர்களுக்குத் தன் படியைக் காட்டிக் கதறும் வ்யாஜத்தில், உலகிற்கெல்லாம் உண்மையை விளக்கி உதவிபுரியவென்றும் உணர்க.

வாணனின் ஆயிரந்தோள்களில், சிலதோள்களை விட்டிட்டானென்பதாலே, ஆயிரந்தோள்களையும் துணித்ததாக வைத்துச் சொல்லுகை பொருந்துமோவெனின், ஆயிரத்துக்குச் சிறிது குறைவாகவுள்ளதையும், அதிகமாகவுள்ளதையும், ஆயிரமென்று சொல்வது பலவிடங்களிலும் காணத்தக்கதுதான்.

இவ்வாயிரம் தோள்களையுந் துணிக்கச் செய்த சூழ்ச்சிதான், ஏதேனும் பெரிதோ என்னில், ஆழியைச் சுழற்றினானத்தனையென்கிறார்கள்.

சுழற்றிய:— என்றது, ஒரு விளையாட்டுக்கருவியை யெடுத்துச் சுழல விடுவதுபோலச் சுழல விட்டானெனச் சொல்லுகிறது. இங்கு, சுழற்றிய என்கிற இவ்வளவு மாத்திரமேயுள்ளதால் அதை ஒருகால் சுழற்றவே தோள்களனைத்தையும் அறுத்தொழித்தது என்றபடி.

ஆழிவல்லானுக்கு:—என்றது, அப்படிப்பட்ட திருவாழியை அடக்கியாளவல்ல ஸமர்த்தனானவனுக்கு என்பதைச் சொல்லுகிறது.

பல்லாண்டு கூறுதுமே:— என்றது, திருப்பல்லாண்டு பாடுவோம் நாங்கள் என்பதைச் சொல்லுகிறது. பாணாசுரன் தோள்களைத் துணித்தவக்காலத்தில், அவ்வெம்பெருமானுக்கு ஒரு

வரும் பல்லாண்டு பாடாத குறைதீர அவனுக்கும், அவனேந்தியரு ளின திவ்யாயுதத்திற்கும் திருப்பல்லாண்டு பாடுவோமென்றபடி. திருவாழியாழ்வானின் திவ்யாநுக்கிரஹத்தினால், திருமாலே நாங்கள் கண்டவர்களானதாலே, முதலில் அத்திருவாழி யாழ்வானுக்கும் பின்னர் அத்திருவாழியை ஆள்வானுக்கும் பல்லாண்டுபாடுகிறோ மென்றபடியாம்.

இப்பாட்டில், பலி சக்கிரவர்த்தியின் பிள்ளைகளுக்குள் பாணன் என்பவன் மூத்தவன். அவன் அரனை ஆராதித்து வரம்பெற்று சோணிதபுரமென்கிற பட்டணத்தில் அரசு புரிந்துவந்தான். அவ னுக்கு உஷை என்கிற புதல்வியொருவளுண்டானாள். அவள் பருவம் நிரம்பியிருக்கும் நாளில், த்வாரகையிலும், ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்குப் பௌத்திரனாய் அநிருத்தன் என்கிற அழகிற்சிறந்த வொருவனும் தக்க பருவமுடையவனாக விளங்கினான். ஒருநாளிரவில் உஷையானவள் அநிருத்தனை ஸ்வப்நத்தில் கூடியதாகக்கண்டு தன் தோழி சித்திரலேகை என்பவள் முகமாக அநிருத்தனைத் தன் அந்தப்புரத்தில் வரவழைத்து அவனுடன் நெடுநாளளவும் அளவில் லாத ஆனந்தாநுபவம் செய்துவந்தாள். இச்செய்தியை யறிந்த பாணன் அநிருத்தனைக் காவலிட்டு வைத்தான். இங்கு இப்படி யிருக்க, த்வாரகையில் அநிருத்தனைக் காணாது தேடித்திரிகிற அனை வரும் நாரதமுகமாக அநிருத்த வ்ருத்தாந்த மறிந்து, அனேகம் படைகள் புடைசூழ, ஸ்ரீ கிருஷ்ணனுடன் சோணிதபுரம் சேர அவ னுக்குத் தஞ்சமாய்நின்ற படைகள்யாவும் பறக்கவே, பாணனுடன் போர்புரிந்து, வென்று உஷையுடனும் அநிருத்தனுடனும் தன் திருப் பிடம் சேர்ந்தனன் கிருஷ்ணபகவான் என்கிற பாணாசுர வ்ருத்தாந் தம் அறியத்தக்கது.

குறிப்பு:— இப்பாட்டின் பின்னிரண்டடிகளில் பாணாசுரன் சரிதை வெளியிடப்பட்டது அறிந்தமை நிற்க, முதலிரண்டடிகளால், எம்பெருமானுக்கு ஒருவன், கைங்கர்யம் பண்ணத்தக்க யோக்கி யதை பெறவேண்டுமானால், ஸதாசார்யர்களிடம், சென்று, எம் பெருமானின் திவ்யாயுதங்களான திருவாழி திருச்சங்குகளை, விதிப் படி, அக்நியில் காய்ந்த கிரமத்தோடு தங்கள் பாஹு மூலத்திலிட் டுக்கொள்வதாகிற, திருவிலச்சினை பெறவேண்டும். அதைப்பெற்றே

கைங்கர்யம் செய்யவேண்டும்; இந்த ஒரு ஸம்ஸ்காரத்தைச் சொன்னது, பஞ்ச ஸம்ஸ்காரத்தில் மற்றவைகளையும் சொல்லியபடியாம். இவை முதலியன, ஸ்ரீவைஷ்ணவனாவதற்கு முக்கியமான விஷயம் என்பது அறியலாகிறது. (7)

நெய்யிடை நல்லதோர் சோறும்
 நியதமு மத்தாணிச் சேவகமும்*
கையடைக்காயும் கழுத்துக்குப் பூணொடு
 காதுக்குக் குண்டலமும்*
மெய்யிட நல்லதோர் சாந்தமும் தந்து
 என்னை வெள்ளுயிராக்கவல்ல*
பையுடை நாகப்பகைக் கொடியானுக்குப்
 பல்லாண்டு கூறுவனே. (8)

| | |
|---|---|
| நெய் இடை | நெய்யின் நடுவேயுள்ளதாய் |
| நல்லது | நல்லதாய் |
| ஓர் | ஒப்பற்றதுமான |
| சோறும் | ப்ரஸாதத்தையும் |
| நியதமும் | எப்போதும் |
| அத்தாணிச் சேவகமும் | பிரியாதே யிருந்துசெய்யக்கூடிய கைங்கர்யத்தையும் |
| கை | திருக்கையாலிட்ட |
| அடைக்காயும் | வெற்றிலைபாக்கையும் |
| கழுத்துக்கு பூணொடு | கழுத்திலணிந்துகொள்ளக்கூடிய பூஷணத்தையும் |
| காதுக்கு குண்டலமும் | காதில் இட்டுக்கொள்ளத்தக்க குண்டலத்தையும் |
| மெய் இட | உடம்பில் பூசிக்கொள்ள |
| நல்லது | நல்லதாய் |
| ஓர் | ஒப்பற்ற |
| சாந்தமும் | சந்தனத்தையும் |
| தந்து | கொடுத்தருளி |
| என்னை | தாஸபூதனானவென்னை |
| வெள் உயிராக்கவல்ல | சுத்தஸ்வபாவனாகச் செய்யவல்லனாய் |

| | |
|---|---|
| பை உடை | பரந்த படத்தையுடைய |
| நாகம் | ஸர்ப்பத்திற்கு |
| பகை | விரோதியான கருடனை |
| கொடியானுக்கு | கொடியாக உடையவனுக்கு |
| பல்லாண்டு கூறுவன் | திருப்பல்லாண்டு பாடா நிற்பன் |

நெய்யின் நடுவேயுள்ளதாய் ஒருவித தோஷமுமின்றிக்கே நல்லதாய் ஒப்பற்ற ப்ரஸாதமென்ன, எப்போதும் பிரியாதிருந்து ஆட்செய்யும் தன்மையென்ன, கையில் வெற்றிலைபாக்கென்ன, கழுத்திலணிந்துகொள்ளத்தக்க பூஷணங்களென்ன, காதிலிட்டுக்கொள்ள மகரகுண்டலமென்ன, உடம்பில் பூசிக்கொள்ள நல்ல சந்தனமென்ன இவை யெல்லாவற்றையுமெனக் கருள்புரிந்து, என்னை சுத்தஸ்வபாவனாகவும் செய்தருள ஸமர்த்தனாய், படத்தையுடைய பாம்பிற்குப் பகைவனான பக்ஷிராஜனைக் கொடியாகவுடையனான எம்பெருமானுக்குப் பல்லாண்டு கூறுவன்.

கீழ் இரண்டு பாட்டுக்களால் அநந்யப்ரயோஜன பரர்கள், கைவல்யார்த்திகள், இவ்விரு வகுப்பினர்களுடைய, பாசுரமாய்வைத்து அநுபவித்துத் தீர்ந்தபடியாலே, இப் பாட்டில், அண்டக்குலத்தில், என்கிற பாட்டிலழைக்கப்பட்ட ஐச்வர்யார்த்திகள், தங்கள் தன்மையை வெளியிட்டுக்கொண்டு தம்முடன்வந்து சேருவதானபடியை வெளியிடும் ப்ரகாரமாகக் கருத்து விளங்க அநுபவிக்கிறார்.

இவ் ஐச்வர்யார்த்திகள். எம்பெருமானை, அண்டக்குலத்தில் என்கிற பாசுரத்தில் சொன்னபடியாக ஸ்தோத்திரம்செய்து வேண்டுவனவேண்டி நிற்கச்செய்தேயும், பரமதயாளுவான அவன், ஐயோ, இவர்கள் இன்னும், எத்தனை நாள், நம்மையே அநுபவிக்கலாகிற ஆனந்தத்தை இழந்திருப்பர்கள் என இரங்கங்கொண்டு, இவர்கள் கேட்கும் பொருள்களைக் கொடுக்கும் வ்யாஜத்தாலே இவர்களை வளைத்துவைத்துக் குளிரக் கடாக்ஷித்து, வேண்டியவற்றையும் கொடுத்து, இனி, இவ்வாறு ஸாரமற்ற தாரகபோஷக போக்யங்களை வேண்டித் திரியாதே, உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணனெம்பெருமானென்றென்றே, காதலித்திருக்கும்படியான, ஸாரதம வஸ்துவில் ஆசையோடிருக்கக்

கூடிய சுத்தாத்ம ஸ்வபாவத்தையுமுடையவர்களாக்கி அடிமைகொண்டானுனபடியால், அவ்வெம்பெருமானின் இப்படியுள்ள திருக்கல்யாண குணத்திலீடுபட்டு, ஒருவனுடைய கல்யாணகுணத்தின் சீர்மைதான், என்னே, என்னே! என்று ஈடுபட்டுப் பேசுகிறுப்போல் இங்கு அநுபவம் காட்டப்படுகிறது.

நெய்யிடை நல்லதோர் சோறும்—என்றது, நடுவே ப்ரஸாதமும் சுற்றுப்பக்கங்களில்நெய்யும் அமைக்கப்பெற்றதாய் ஒருதோஷலேசமும் கலசாததானப்ரஸாதத்தைச் சொல்லுகிறது. இங்கு நெய்—எடை, என்றும் பாடபேதமுண்டு, அப்பொழுது நெய், ப்ரஸாதத்தின் அளவுக்குஸரியாக இருக்குமாற்றைச் சொல்லுகிறது. இந்த இரண்டுபாடத்தில் நெய்—இடை என்கிற முந்திய பாடமே சிறக்குமெனத் தோற்றுகிறது. ஏனெனில் எடை என்றுல், நிறையைச் சொல்லுகிறது. அதாவது—இவ்வளவு எடை நெய், என்றுல் அவ்வளவு எடை அத்துடன் ப்ரஸாதமுள்ளது, என்று காட்டுகிறது. இடை என்றுல் நடுவில் என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறது. அப்போது நெய்யின் நடுவிலுள்ள ப்ரஸாதம் என்று சொல்லப்பட்டதாகவாகிறது. இதனுல் சுற்றிலும் நெய் அதிகமாகச் சூழ்ந்து நடுவில் சிறிதே ப்ரஸாதமுள்ளதென ஏற்படுகிறது. இவ்விரண்டு படிகளில் உலகில் ஒருவனைக் கூப்பிட்டு உனக்கு நெய் அதிகமாகச் சேர்ந்த ப்ரஸாதம் வேண்டுமா, ப்ரஸாதத்தின் அளவுக்கு ஸரியாக நெய் சேர்க்கப்பட்ட ப்ரஸாதம் வேண்டுமா என்று கேட்கில், நெய் அதிகமுள்ளதையேயன்றே விரும்புவான். உலகநீதி நிற்க, திவ்ய ஸூக்தியின் உபபத்தியை நோக்குமிடத்தும், பால்சோறு மூட நெய்பெய்து என்கிற இவ்வாழ்வார் திருமகளாரான ஆண்டாளின் மெய்மைப்பெருவார்த்தை, நெய்யின் நடுவிலுள்ள என்கிற அர்த்தத்தைத் தரக்கூடிய பாடத்திற்கு ஒத்ததே; பெரியவாச்சான் பிள்ளை, இங்கு வ்யாக்யாநமருளுகையில் முதலில் நிறை என்கிற அர்த்தத்தைச் சொல்லிவிட்டு இரண்டாவதாக, இடை என்று நடுவாய், நெய்யினிடையிலே சில சோறுமுண்டென்னுதல். இத்தால் போஷகப்ரசுரமான தாரகத்ரவ்யத்தைத் தருமென்கை, என்று, நடுவே என்கிற அர்த்தமுள்ள பாடத்திலேயே தமக்கு நோக்கெனக் காட்டியருளியிருப்பதையும் காண்க.

நல்லதோர் சோறு—என்னுமிடத்து, சோற்றுக்கு நன்மையாவது என், என்னில், நன்மையென்பது முக்கியமாய் அறுசுவையோடு கூடியிருத்தலைச் சொல்வதில்லை. இனிமையுடனுதரமிலாதார் சோறும், என்று, ஸ்ரீ தேசிகன் ஆஹாரநியமத்தில் எடுத்துக் கழித்த சோறல்லாமல், இவ்வளவாவது, தங்களகத்துக்கு எழுந்தருளிற்றே, எனது பாக்கியமே பாக்கியம் என உவந்து, இன்று ஏதோ, இங்கு பெருமாள் அமுதுசெய்தருளினவற்றை ஸ்வாமி திருவுள்ளம்பற்றவேணும், என்று, உள்ளன்போடு இடும் சோற்றைச் சொல்லுகிறது. வெளியே சென்றுவந்த பிள்ளையின் வயிற்றைப் பார்த்து, தாய், அவனுக்கிடும் சோற்றைச் சொல்லுகிறது. அன்றி இட்டவன் இவனிக்கிட்டோமென்றிருந்தாலும், உண்டவன் இதற்கென்செய்வோமென்றிருந்தாலும் அது நல்ல சோறன்றே. தாய் பிள்ளைக்கிடும் சோறும், சேஷபூதன் சேஷிக்கிடும் சோறும் தவிர்த்து, அல்லாதாரிட்டுண்ணும் சோற்றுக்கெல்லாம் அவத்யத்தில் ஏதேனும் குறையுண்டோ? எவ்வித அஹங்காரத்தைக்கொண்டாலும் அவத்யமேயன்றோ? கண்ணன் பாண்டவதூதனாய் எழுந்தருளியிருக்கச்செய்தே, துர்யோதனன், தனமதங்கொண்டவனென்றும், பீஷ்மர், வித்யாமதங்கொண்டவரென்றும், த்ரோணர், குலமதங்கொண்டவரென்றும், ஆகவே இவர்களிடமெல்லாம், நல்லதன்றென்றுவிட்டிட்டு, விதுரனிடம் நன்மைகண்டு அங்கு சென்றானன்றோ? இவ்வாறு, ஸாராஸாரவிவேகஞ்செய்து அந்தமுண்ட பெருமை விதுராந்நாநிபுபுஜே சுசீநி குணவந்தி ச, (பரிசுத்தியுடைய தாயும் நற்குணமுடையதாயுமுள்ள விதுரனின் அந்நத்தை புசித்தான்) என்று கொண்டாடப்பட்டது. ஆகவே எல்லாப் படிகளாலும் நல்லதாய் விலக்ஷணரஸமான அந்நத்தை எங்களுக்குக் கொடுத்தான் என்கிறார்கள். எல்லாவற்றிற்கும் முக்கிய காரணம் ஆஹாரசுத்தியாதலால் அது தங்களுக்கு முதலில் நன்றாய் வாய்த்த பெருமையைப் போற்றுகிறபடி. நெய்யிடை நல்லதோர் சோறென்பதால், ஸ்நேஹத்தின் சேர்க்கை அதிகமாகவுள்ள ப்ரஸாதமென்றும் கொள்ளலாம். அதாவது, மிகவாதரம் தோற்ற இடுகை; என்றபடி.

நியதமும் அத்தாணிச் சேவகமும்:— என்றது, எப்போதும் விட்டுப் பிரியாமல் பண்ணுங் கைங்கர்யத்தைச் சொல்லுகிறது. அந் தரங்கத்திலும் வெளியேயுள்ள ஆஸ்தாநங்களிலும் எங்கும் விட்டுப் பிரியாதே யிருந்து கைங்கர்யம் பண்ணும்படியான பாக்கியம் அவ னருளால் கிடைக்கப்பெற்றதென்கிறபடி.

இப்பவும் ஸந்நிதிகளில் நெருங்கின கைங்கர்யங்கள் சிலவுண்டு. அவை இடை விடாதே எப்போதும் செய்யும்படி யிருக்கும்; அக்கை ங்கர்யம் செய்யுமவரை ஸ்தாநிகர் என வழங்கி நிற்பர்கள்.

கையடைக் காயும்:— என்றது, கையில் பிடிக்கத்தக்க வெற் றிலை பாக்கைச் சொல்லுகிறது. முதலிலிட்ட நெய்கலந்த நற்சோறு ஜீர்ணமாவதற்கு, மேலே அவனருளின தாம்பூலத்தைச் சொன்ன படி.

கழுத்துக்குப் பூணொடு:— என்றது, கழுத்திலணிந்து கொள் ளத் தகுந்த ஆபரணங்களைச் சொல்லுகிறது. தன் தாஸபூதனுக்கு கழுத்திலணிந்து கொள்ளத்தக்க ஆபரணங்களெல்லாவற்றையும் அருள் புரிந்தான் என்றபடி. அந்தரங்க தாஸனுக்கு அயோத்திமா நகரில் அனைவர்க்கும் முன்னே அன்னையானவள் அவன் முகம் நோக்கி ஆபரணமருளினாற்போலே, அவனும் தாமுமான சேர்த்தி யில் அவன் தான் தமக்கிட்டபடியை உரைத்தபடியாம். அங்கு கண் டஸர மொன்றுடன் நின்றது; இங்கு அவனருளினவற்றுக்கள வேயில்லை யென்று சொல்லப்படுகிறது மேல் உள்ள வாக்கியங்க ளால்.

காதுக்குக் குண்டலமும்:— என்றது, காதிலணிந்துகொள்ள நவரத்நகசிதமான குண்டலங்களையும் கொடுத்தருளினபடியைச் சொல்லுகிறது.

மெய்யிட நல்லதோர் சாந்தமும்:— என்றது, உடம்பில் பூசிக் கொள்ள நல்ல வாஸனை பொருந்திய ஒப்பற்ற சந்தனத்தைத் தந்த மையைச் சொல்லுகிறது. பிராட்டியும் தாமும் வெவ்வேறு அவ தாரகாலத்தில் அநுஸூயையிடமும் கம்ஸனுக்கு சந்தனம்கொண்டு கொடுக்கும் கூனியிடமும் தங்கள் சந்தத்திற்கு (மனதிற்கு) ஒத்த சந்தனத்தை வாங்கிப் பூசிக்கொண்டவர்களானதாலே அவனும் தாமுமான சேர்த்தியில் தங்கள் தாஸபூதர்களுக்கு வழங்க வாசி

பார்த்து நல்ல சந்தனத்தை யிடுவார்களன்றோ? அப்படி நல்லதான சந்தனத்தைத் தமக்குத் தந்தருளினான் என்றபடி.

தந்து—என்கிற பதத்தை, சோறும் தந்து என்றும், சேவகமும் தந்து என்றும் இவை முதலான இடங்களிலெல்லாம் சேர்த்துக் கொள்ளவும். இப்படியெல்லாம் தந்தருளி என்ன செய்தருளினான் என்னில், அதைமேலே சொல்லுகிறது என்னை வெள்ளுயிராக்க வல்ல என்று.

என்னை—என்பது, எல்லா ஆத்மாக்களும் தானுகவே பரமாத்மாவுக்கு தாஸபூதர்களானதால், அப்படி தாஸபூதர்களில் ஒருவனை என்னை, என்று சொல்லுகிறது.

இவ்வாழ்வார் தாம், மூன்று வகுப்பினர்களையும் கூப்பிடுங்கால் ஒவ்வொரு வகுப்பிலும் பலபேர்களுள்ளதாகவைத்து பஹுவசநமாகவே கூப்பிட்டிருக்கிறார்; அப்படியே கூப்பிட்டவர்களில் இரு வகுப்பினர்களும் முறையே பலபேர்களுடன் திருந்திவந்ததாகவே பதிலருளியுள்ளார்கள்; இம் மூன்றுவது வகுப்பினர்களும் அப்படியே பலபேர்களுடன் வந்துபேசவேண்டியது நியாயமாகவிருக்க, ஒருவரே முன்நின்று பேசுவதுபோல் என்னை—என்றும், பாட்டின் முடிவில் கூறுவன் என்றும், சொல்லியிருப்பதற்குக் காரணமென்னவென்னில், உலகில் தெய்வத்தை சிந்தித்திருத்தலையே ப்ரயோஜனமாகக்கொண்டு, மற்றொன்றையும் சிந்தியாத அநந்யர்கள் ரொம்பவும் குறைந்த எண்ணிக்கையையுடையவர்களாகவேயிருப்பர்கள்; அவர்களைக்காட்டிலும், கைவல்யார்த்திகள் கணக்கிற்குக் கொஞ்சம் அதிகப்பட்டவர்களாகத் தோற்றியிருப்பர்களேயாயினும், அவர்களும், ஒரு எண்ணிக்கைகொண்டு முடிக்கத் தக்கவர்களாகவேயிருப்பர்கள்; பொருள்வேண்டுமவர்களை பூர்த்தியாகக் கணக்கிட்டுப் பார்க்கமுடியாமல் அவர்கள் எண்ணிறந்தவர்களாகவேயிருப்பர்கள்; ஆகவே ஏதோ மிகவும் ஸ்வல்பமான கூட்டமுடையவர்கள் கூட்டமாய்ச்சேர்ந்து விஷயத்தைச் சொல்லலாம்; உலகே, பொருள்வேண்டுமவர்களாலேயே பெரும்பாலும் பரவியிருக்க அவர்களெல்லோரும் கூடிச்சொல்வது மிக்க அஸாத்யமான கார்யம், கேட்பார் செவிக்கும் ஸரிவரத் தெளிவைப் பிறப்பிக்கமாட்டாது; அதற்காக அவர்களில் நன்கு பேசவல்லவரொருவரையிட்டுப் பேசு

விக்குங் கிரமத்தில் உள்ளதாகையாலே, பொருள்வேண்டுமவர் கூட்டம் பெரிதாகவிருந்தாலும் அவர்களில் தலைவரானவொருவரே ஆழ்வாருக்கு பதிலளிப்பதான கிரமம்காட்டி இப்பாட்டின் அநுபவம் நடப்பதால், என்னை என்றும், கூறுவன் என்றும், ஏகவசநமான ப்ரயோகம் இங்கு காண்கிறதெனத் தெளிக.

வெள்ளுயிராக்கவல்ல—என்றது, பரிசுத்தாத்மஸ்வபாவத்தையுடையவனாகச் செய்ய ஸாமர்த்தியமுடைத்தானமையைச் சொல்லுகிறது. மோக்ஷஸாம்ராஜ்யம் முதலான எல்லாவற்றையும் கேட்பவர்க்குக் கொடுக்கவல்ல எம்பெருமானிடம் சென்றும், அஸாரமான பொருள்களைவேண்டிப் புவியில் தடுமாறுவதே தகுதியெனபுத்திபண்ணிப்போந்தவென்னை, தன்னை அநுபவித்தலையே எவ்விதபுருஷார்த்தமுமாக புத்திபண்ணியிருக்கிற புண்ணியாத்மாக்களிலொருவனாகவே செய்துவிட்டான் என்றபடி.

இப்படிச் செய்தவன்தான் யாரென்னில், பாம்பிற்குப் பகைவனைக் கொடிகட்டியிருக்குமவன் என்கிறார்மேல்.

பையுடைநாகப் பகைக்கொடியானுக்கு என்றது, பரந்த படத்தையுடைய திருவநந்தாழ்வானுக்குப் பகைவனை பக்ஷிராஜனைக் கொடியாகக்கொண்டவன் என்பதைச் சொல்லுகிறது. எம்பெருமான் ஒரு சேஷனுக்கு (தாஸபூதனுக்கு)க் கொடுத்துதவியதைத் தனக்குக் கொடுத்துதவினதாகக் கொண்டான்போலும் அவன் படுக்கையான ஆதிசேஷனும். ஆகவே சுருங்கிக்கிடந்த தன் படத்தை அவ்வுகப்பாலே பரந்ததாகச் செய்துகொண்டான் என்று சொல்லுகிறது. இங்கு, ஆதிசேஷனுக்கும், கருடனுக்கும் யாதொரு பகையின்றியேயிருந்தாலும், உலகில் பாம்பின் ஜாதிக்கும், கருடனுக்கும் பகையுள்ளது காண்கையாலே அதுகொண்டு பொதுவாகச் சொன்னபடியாம். இவ்விடத்து, பையுடைநாகம் என்பதை, நாகத்தை அணையாகக்கொண்டவன் என்கிறவரையில்கொண்டு, திருவநந்தாழ்வானைத் திருப்பள்ளி மெத்தையாகக்கொண்ட அவன் மேன்மைக்கும், என்றும், நாகப்பகைக்கொடியானுக்கு என்பதை, உள்ளபடியேகொண்டு கருத்மானைக் கொடிகட்டியிருக்கிற அவன் பெருமைக்கும், என்றும், இரண்டுவிதமான தன்மைக்கும் மங்களாசாஸனம் பண்ணுவதாக பூர்வர்கள் அருளிய பொருளும் கொள்ளலாம். மேலே தனித்து திருவநந்தாழ்வான் படுக்கைவாய்ப்புக்குப் பல்

லாண்டு பாடினாலும், திருவநந்தாழ்வான் திருவடி இவ்விருவருமான சேர்த்தியுடன், இவ்விருவரின் கைங்கர்யங்களையும் சேர்த்தநுஸந்திப்பதில் ஒரு சாதுர்யமும் தோற்றும். ஏனெனில் உலகில் அனைவருடைய கைங்கர்யமும், சேஷிவிஷயத்தில் சேஷன்பண்ணுங் கைங்கர்யமாய் விளங்கினாலும், திருவடி, திருவநந்தாழ்வான், இவ்விருவருடைய கைங்கர்யங்களே ஒற்றுமைப்பட்டும் அதிகமாகவும், சேஷனென்கிற திருநாமத்துக்கும் அர்த்தத்தைக் கொடுக்கக்கூடியதாகவுமிருக்குமானதாலே.

இவ்விருவருடைய கைங்கர்யத்தின் மேன்மையையும், ஆளவந்தார், ஸ்தோத்திரரத்னத்தில் சேரவருளிச்செய்யத் திருவுள்ளங்கொண்டு முதலில் திருவநந்தாழ்வானின் திவ்விய கைங்கர்யத்தைப் பேச ஆரம்பித்து, நிவாஸசய்யாஸந பாதுகாம்சுகோபதாநவர்ஷாதப வாரணாதிபி: | சரீரபேதைஸ்தவ சேஷதாங்கதை: யதோசிதம் சேஷ இதீரிதே ஜநை: || திருக்கோயிலென்ன, படுக்கையென்ன, சிங்காசனமென்ன, பாதுகையென்ன, பீதாம்பரமென்ன, தலையணையென்ன, மழை, வெய்யில் இவைகளைத் தடுக்குமதான குடையென்ன இவை முதலாக உனக்கு சேஷத்தன்மையை அடைந்திருக்கிற அநேக சரீரங்களாலே உசிதமான காரணங்களைக்கொண்டு எல்லா ஜனங்களாலும் சேஷனென்றே சொல்லப்பட்டவனான) என்றும், தாஸ: ஸகா வாஹநமாஸநம் த்வஜோ யஸ்தே விதாநம் வ்யஜநம் த்ரயீமய: | உபஸ்திதம் தேநபுரோகருத்மதா த்வதங்க்ரி ஸம்மர்த்தகிணாங்க சோபிநா || (வேதாத்மாவான எவன் உனக்கு தாஸபூதனாகவும், தோழனாகவும், வாஹநமாகவும், ஆஸநமாகவும், கொடியாகவும், மேற்கட்டியாகவும், விசிறியாகவும் ஆகின்றானோ, அப்படிப்பட்டவனும், தேவரீருடைய திருவடியை வைத்து நெருக்குவதாலுண்டான தழும்பாகிற அடையாளத்தினால் விளங்குமவனுமான பெரிய திருவடியாலே திருமுன்பே ஸேவிக்கப்பட்டவனுமான) என்று பெரிய திருவடியான கருடன் செய்தருளுகிற கைங்கர்யத்தையும் பேசிநின்றானன்றோ? அப்படிப் பேசும்படி இவர்கள் கைங்கர்யத்தின் ஒற்றுமைப்பட்டிருத்தலையுட்கொண்டு உவந்து இவர்களை ஒரு சேர்த்தியாக ஓரிடத்தில்கொண்டும் அநுபவிக்கவேண்டுமென்று ஆசார்யர்கள் திருவுள்ளம்போலும்.

கோடியானுக்கு:— என்பதால், வழிநடந்த இளைப்பின் மிகுதியால் பெருவிடாய்ப் பட்டு வருமவர்க்கு வழியில் தண்ணீர்ப்பந்தலும் வைத்து அத்தண்ணீர்ப் பந்தல் இருக்குமிடத்தை வெகுதூரத்தில் வருமவர்களும் காண்பதற்கு அடையாளமாக ஒரு கொடியும் கட்டிவைக்குமாப்போல், ஸம்ஸாரமாகிற மருகாந்தாரத்தில் பலபடியும் திரிந்து, தன்னை நாடி தாஹம் தணித்துக் கொள்ளக் கருதிவருகிற தாஸபூதர்களான வழிப்போக்கர்களுக்குத்தானிருக்கு மிடம் நன்ருகத் தெரிய விலக்ஷணமான ஒரு கொடியும் கட்டிவைத்திருக்கிறுய்த்து, என்று சொன்னபடியாம்.

மேலும், நாகத்திற்குப்பகையானவனைக் கொடியாகக் கட்டிவைத்திருப்பதால், ஸம்ஸார வ்யஸநமாகிற கொடிய பாம்பினுல் கடிபட்டு விஷமேறியிருக்கிறவர்களுக்கு அவ்விஷத்தைப் போக்கடித்து உயிர் கொடுத்துதவுமிடமென்று தெரிவிப்பது போல இருக்கிறதென்றும் கொள்ளலாம்.

இவ்வாறு பெருமையுள்ளவனுக்குப் பல்லாண்டு பாடுகிறேன் என்கிறது, மேலே.

பல்லாண்டு கூறுவனே— என்றது இப்பெருமை யெல்லாம் நித்யமாய் விளங்குமாறு மங்களா சாஸனம் பண்ணி நிற்கிறபடியைச்சொல்லுகிறது. இங்கு "(ஏதேனுமொன்றையபேக்ஷித்து வந்தவர்களையும் எனக்காக்கிக் கொள்ளவல்லேனென்று கொடிகட்டியிருக்கிற சக்தி நித்ய ஸ்ரீயாகச் செல்லவேணுமென்றும் திருப்பல்லாண்டு பாடுகிறேன் என்று கருத்து)" என்று, ஸ்ரீ கோபாலமஹாதேசிகன் என்கிற திருக்குடந்தை தேசிகன் அருளிச்செய்திருக்கிற வ்யாக்யான பங்க்திகளையும் ஸேவித்துக் களிக்கத்தக்கது.

குறிப்பு:— இப்பாட்டில், ஸர்வேச்வரனை எம்பெருமான், ஒருபடியுள்ள சேதநர்களைத் திருத்தி யடிமை கொள்ள, முதலில் அவர்கள் போகும் வழியிலேயே விட்டு அவர்கள் கேட்கும் பொருளெல்லாவற்றையும் கொடுத்துதவுவனே யாகிலும், ஒரு ஸமயம் பார்த்து அவர்கள் செய்யுமதில் ஏதோ ஒரு ஸுக்ருதலேசத்தை வ்யாஜமாகக் கொண்டு, அவர்களை உடனே மெய்யடியார்களாகவும் திருத்தி விடுவன் என்பதும், அவர்களைத் திருத்துவதில், முதலில் அவர்களுக்குப் பசிதணியச் சோறிடுங் கிரமத்தில் நல்ல ஆஹா

ரத்தைக் கொடுத்து, அதனால் உள்ளேயுள்ள அழுக்குகளை யகற்றி, அப்படி உள்ளே பரிசுத்தமானவுடன் அங்கிருந்து வருகிறவார்த்தை வரும் வழியான ஊத்தைவாய் வாஸனை பெறவும், உள்ளே முன் சென்ற ஆஹாரம் பக்வமாகி நிலைப்பதற்கும் அடைக்காய் கொடுத்தும், அப்படி அப்பொழுது வருகிற வார்த்தைகள் பரோப தேசத்தோடு பயணங்கட்டிப் போகாமே இவர்கள் ஹ்ருதயத்திலும் ஸ்வாநுஷ்டானபர்யந்தமாக வளரவேண்டித் தங்குவதற்கு, அங்கொரு பூண்போல் ஒரு ஆபரணத்தை யிடுவித்தும், அடிக்கடி நல் விஷயங்களை யொருவர்க் கொருவர் சொல்லிக்கொண்டு கேட்குமதான காதுகளுக்கும் இருள்புகுராமே, அங்கோர் ப்ரகாசமுடைய ஆபரணங்களையிடுவித்தும், முன்னிருந்த அழுக்குடம்பிற்கு, அதை யகற்ற உள்ளே நல்ல சோறிட்டாப்போலே, வெளியிலும் நல்ல சாந்தைக் கொடுத்து நல்ல பூச்சுப் பூசுவித்தும், அதன்மேல், இவன் முன்னிருந்தவனே அல்லன்; வேறுபட்டவன்; என்றே, எல்லாரும் சொல்லும்படி, இவனுடைய ஆத்ம ஸ்வரூபத்தை பரிசுத்தமாக்கிவைக்கும் சாதுர்யமிருக்கும்படியும், ஒரு நாய்ச்சியார், திருப்பாவை பாடி, கூடாரை வெல்லுஞ்சீர் என்கிற பாட்டில் ப்ரார்த்திக்கும் பரிமாற்றங்களெல்லாம், சேஷன் திறத்து சேஷி உவப்புடன் செய்து நிற்குமாறும் அறியத்தக்கது (8)

உடுத்துக் களைந்த நின் பீதகவாடை
உடுத்துக் கலத்ததுண்டு-
தொடுத்ததுழாய் மலர்சூடிக் களைந்தன
சூடுமித் தொண்டர்களோம்-
விடுத்ததிசைக் கருமம் திருத்தித்
திருவோணத் திருவிழவில்-
படுத்த பைந்நாகணைப் பள்ளிகொண்டானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே. (9)

| | |
|---|---|
| உடுத்து | திருவரையில் சாத்திக்கொண்டு |
| களைந்த | திருப்பரியட்டம் களையவேண்டும் போது கழித்ததான |
| நின் | தேவரீருடைய |
| பீதகவாடை | திவ்ய பீதாம்பரத்தை |

| | |
|---|---|
| உடுத்து | தரித்துக்கொண்டும் |
| கலத்தது | அமுதுசெய்த பாத்திரத்தில் மிகுந்திருப்பதை |
| உண்டு | ஸ்வீகரித்தும் |
| தொடுத்த | மாலையாகத் தொடுக்கப்பட்டதாய் |
| சூடிக்களைந்தன | சாத்திக்கொண்டு கழித்ததான |
| துழாய்மலர் | திருத்துழாய் மலர்களை |
| சூடும் | சூட்டிக்கொள்ளுகிறவர்களான |
| இத்தொண்டர்களோம் | இப்படிப்பட்ட அடியார்களான நாங்கள் |
| விடுத்த | நீ போகும்படி உத்தரவிட்ட |
| திசை | திக்கிலுள்ள |
| கருமம் | கைங்கர்யங்களனைத்தையும் |
| திருத்தி | ஸரியாகச் செய்துமுடித்து |
| திருவோணத் திருவிழவில் | திருவோணமென்கிற திருநாளில் |
| படுத்த | பாய்போல் கீழே பரப்பப்பட்டதாய் |
| பை | விரிந்த படத்தையுடைய |
| நாகணை | திருவநந்தாழ்வானாகிய படுக்கையில் |
| பள்ளிகொண்டானுக்கு | கண்வளர்ந்தருளுகிறவனுக்கு |
| பல்லாண்டு கூறுதும் | மங்களாசாஸனம் பண்ணுவோம் |

எங்கள் ஸ்வாமியே, தேவரீர் திருவரையில் சாத்திக்கொண்டு களைந்த திவ்ய பீதாம்பரத்தை தரித்துக்கொண்டும், தேவரீர் அமுது செய்த பாத்திரத்தில் மிகுதியாக வைத்தருளுகிற அந்நம் முதலியவற்றை புஜித்துக்கொண்டும், தேவரீர் சாத்திக் களைந்த துழாய்மாலையை அணிந்துகொண்டும், எங்கள் வாழ்நாளை ஸுகமாகப் போக்குகிற உன் மெய்யடியார்களான அடியோங்கள், தேவரீர் நியமித்த திக்குகள்தோறும் சென்று, அங்குள்ள கைங்கர்யங்களெல்லாவற்றையும் செவ்வனே செய்தும், திருவோணத் திருநாளில், கீழே படுக்கையாகப் பரப்பப்பட்டு தேவரீர் திருமேனி ஸ்பர்சத்தாலே விரிந்த படங்களையுடைய திருவநந்தாழ்வானாகிற படுக்கையில் கண்வளர்ந்தருளுகிற உன்றனக்கு, அக்கிடையழகு நித்யமாய்ச் செல்லவேண்டுமென்று மங்களாசாஸனம் பண்ணுவோம்.

கீழ், வாழாள் என்கிற பாட்டிலழைக்கப்பட்டு, எந்தைதந்தை என்கிற பாட்டில் தங்கள் ஏற்றத்தைச் சொல்லிக்கொண்டு தம்முடன் வந்துகூடின அநந்யப்ரயோஜன பரர்களுடன் தாமும் சேர்ந்து எல்லோருமாய் எம்பெருமானை நோக்கிப் பேசுவதாகக் கருத்து வைத்து இப்பாட்டு அநுபவிக்கப்படுகிறது.

உடுத்துக் களைந்த—என்றது, சாத்திக்கொண்டு கழித்தவற்றைச் சொல்லுகிறது. அதாவது எம்பெருமான் திருவரையில் சாத்தினதையே சொல்லுகிறது; ஏனெனில் ஸர்வஜ்ஞனை எம்பெருமான் தன் திருவரையில் சாத்திக்கொண்டதானால் அதன் பெருமை இன்னதென்று சொல்லவும் வேணுமோ? எம்பெருமான் திருமேனியின் பெருமை, தானான தன்மைக்கும் மேலே, திருவாய்ப்பாடியிலுள்ளாரனைவரும் தாங்கள்கொண்ட மஞ்சள் ஸரியாகப்பற்றுகிறதா, என்று பூசிப்பார்க்கத்தக்க இடமாகவும்கொண்டால் அதன் பெருமை பின்னும் எவ்வாறிருக்கும்; ஸ்வாமி திருமேனியில், மஞ்சளை, கோபிமார் பூசுகிறாரென்பதை, பற்றுமஞ்சள் பூசி என்று இவ்வாழ்வார் மேலே அருளிச்செய்யப் போகிற பாட்டில் காண்க. ஆகவே, அந்தப்படி திருவரையில் சாத்தின மஞ்சள் முதலானதெல்லாம் ஸம்பந்தித்து அதிமநோஹரமாகவன்றோ இருக்கும் திருவரையில் சாத்தின திருப்பரியட்டம். அநுபவரஸிகையான ஆண்டாளும், பெருமானரையிற்பீதக வண்ண வாடைகொண்டு என்னை வாட்டம் தணிய வீசீரே என்றன்றோ வேண்டி நிற்பது. அப்படியே யன்றோ அனைவரும் அரையிலுடுத்தியதை ஆசைப்படுவது. களைந்த வென்பதால், களைய வேண்டும் சிலகாலங்களிலே முன் உடுத்திருந்ததைக் களைந்து வைப்பதுண்டே, அதைச் சொன்னபடி.

நின் பீதகவாடை— என்றது, உன்னுடைய பீதாம்பரத்தை என்று சொல்லுகிறது. மஞ்சள் வண்ணப்பட்டாடை என்றபடி.

பெருமாள் உடுத்தியதெல்லாம் பீதாம்பரமாக விருக்குமோ வென்னில், அவன் திருமேனியில் மஞ்சளும் செங்கழுநீரின் வாசிகையும் நாறுசாந்தும், திருமஞ்சன காலத்திலே வந்து சேருமானாலும் முன் சொன்னபடியே, பற்றுமஞ்சளைப் பாவைமார் திருமேனியில் பூசுவாராகையினாலும், அவனுடை, பீதகவண்ணமாகக்

குறையில்லை. மேலும், ஸர்வேச்வரன் திவ்ய திருமேனி ஸம்பந்தம் பெற்ற எந்த ஆடையும், திருப் பீதாம்பரமாகக் கொண்டாடத் தட்டில்லை யன்றோ என்றபடி.

உடுத்து— என்றது, தரித்துக் கொண்டு என்பதைச் சொல்லு கிறது. இங்கு, அவன் சாத்திக்களைந்தவனைத்தும் நமக்கு மிகவும் உத்தேச்யமானதாலே, நாம் அதை அரையில் உடுத்திக் கொள்ளாமல், தலையால் தரித்துக்கொண்டு என்றே சொல்லுகை உசிதமெனத்தோற்றுகிறது. பெரியவாச்சான் பிள்ளை தன் வ்யாக்யானத்தில், '(களைந்த) ஆஸநபேதத்திலே கழித்தால் பொகடும் ஸ்தலம் தங்கள் தலையாம்படியிருக்கை. இதுவும் சேஷபூதனுக்கு ப்ரார்த்தநீயமிறே' என்றும், இந்தவிடத்தை யநுஸரித்துகந்தே பரகாலஸ்வாமி முதலியவர்களும் அபிப்ராயம் காட்டி அருளிப் போந்தார்கள்.

கலத்ததுண்டு— என்றது, அவன் அமுது செய்த பாத்திரத்தில் சேஷித்ததை உட்கொண்டு என்பதைச் சொல்லுகிறது. அவன் அமுதுசெய்து மிகுந்ததை உட்கொள்வதின் பெருமைதான், விஷ்ணோர் நைவேத்யகம் சுத்தம் முநிபிர் போஜ்யமிஷ்யதே (விஷ்ணுவிற்கு நிவேதனம் செய்த சுத்தமான அந்நமானது ரிஷிகளினால் ஸாப்பிடக் கூடியதென்று சொல்லப்படுகிறது) என்றும், முகுந்தாசன சேஷந்துயோ புங்க்தி திநேதிநே | ஸித்தேஸித்தே மஹாஸேந சாந்த்ராயண சதாதிகம் || (எம்பெருமானால் அமுது செய்யப்பட்ட மிகுதியை எவன் தினந்தோறும் ஸாப்பிடுகிறானோ, அவன், நூறுக்குமேற்பட்ட சாந்திராயண வ்ரதம் நிறைவேறினால் என்ன ப்ரயோஜனமோ அதை அடைவான்)என்றும், அக்நிஷ்டோமஸஹஸ்ரஸ்ய வாஜபேய சதஸ்யச | யத்புண்யம் தல்லபேத்தேவி விஷ்ணோர் நைவேத்ய பக்ஷணாத் || (ஆயிரம் அக்நிஷ்டோமம் செய்வதாலும், நூறு வாஜபேயம் செய்வதாலும் எந்த புண்ணியம் கிடைக்குமோ, ஹேதேவியே, அப்படிப்பட்ட புண்ணியத்தை விஷ்ணுவின் நைவேத்தியத்தை ஸாப்பிடுவதினால் அடைவான்) என்றும், புஞ்ஜதாமேத தேசஸ்ரீ: (ஸாப்பிடுகிறவர்களுக்கு தேஜஸ்ஸு உண்டாகிறது) என்றும், ததேவ த்வம்ருதோபமம் (அந்தப்ரஸாதமே அமுதத்தோடொக்கும்) என்றும், நத்யாஜ்யம் ஸ்யாத் கதாசந (ஒருபொழுதும் விடத்தகாததாக ஆகும்) என்றும், பகவத்புக்தமந்நாத்யமஜ்ஞாநாத்யோ

வமந்யதே | இஹநிச்ரீகதாம் ப்ராப்யஹாஸ்தே ஸபுரீஷபாக் || (எம் பெருமான் அமுது செய்தருளினவற்றை அறியாமையால் எவன் அவமதிக்கிருனே, அவன் இங்கு பொலிவெல்லாம் இழந்திருந்து, எதையோ ஸாப்பிடப் பெறுகிற ஜன்மத்தையடைகிருன்) என்றும், சொல்லப்பட்டது.

தொடுத்ததுழாய் மலர்— என்றது, எம்பெருமானுக் கென்று ஆதரவுடன் க்ரஹித்து, மாலையாகத் தொடுக்கப்பட்ட துழாய் மலரைச் சொல்லுகிறது; எம்பெருமானுக்கு திருத்துழாயின் எந்த அம்சமும், ப்ரீதிகரமாக விருந்தபோதிலும், அபத்தேப்ய: ப்ரஸூநேப்யோ பத்தா மாலாப்ரசஸ்யதே (தொடுக்கப்படாத மலர்களைக் காட்டிலும், தொடுக்கப்பட்டதான மாலை உயர்ந்தது) என்று சொல்லியிருப்பதாலே, அப்படிக் கட்டப்பட்ட துழாய் மாலையைச் சொல்லுகிறபடி.

சூடிக்களைந்தன— என்றது, எம்பெருமான் சாத்திக்கொண்டு களைந்தைச் சொல்லுகிறது. ஆண்டாள் சூடிக்கொடுத்ததை, தான் சூட்டிக் கொண்டு அதனால் பிறர்சூடிக் களைந்தவற்றின் வாசியறிந் திருப்பவனுகையாலே தன் அடியார்களுக்கு, தான்சாத்திக் களைந்ததில் ஆவல் மிக்கிருக்குமென வெண்ணி, முன்னம் தான் சூடிக்கொண்டு அடியார்களணியக் களைந்தருள்வனுயிற்று.

சூடும்:— என்றது, அதை சூட்டிக்கொள்ளுகிற, என்பதைச் சொல்லுகிறது. அவனணிந்து கழித்த புஷ்பத்தைச் சூடும் பெருமையும், விஷ்ணோர் தேஹபராம்ருஷ்டம் மால்யம் பாபஹரம் சுபம் । யோநரச்சிரஸாதத்தே ஸயாதி பரமாங்கதிம் || எம்பெருமான் திருமேனியில் ஸம்பந்தப்பட்டு அதனால் பாபஹரமாயும், மங்களகரமாயும் விளங்குகிற மாலையை எந்த மனிதன் தலையால் தரிப்பனே, அவன் உயர்ந்த பதவியையடைகிருன், என்றும், உபபுக்தஸ்ய ஸர்வஸ்ய கந்தபுஷ்பாதிகஸ்யச । தூஷணம் நப்ரயோக்தவ்யம் || (எம்பெருமானுல் அநுபவிக்கப்பட்ட சந்தனம் புஷ்பம் முதலான எல்லாவற்றையும் குறித்து தூஷணவார்த்தையை ப்ரயோகம் செய்யக்கூடாது) என்றும், நிர்மால்யபுத்யா தேவீபம் பாவநம் தூஷயந்தியே| தேயாந்தி நரகம் மூடா: தத்ப்ரபாவாபலாபிந: || (பரிசுத்தமாய் எம்பெருமான் ஸ்வீகரித்ததை, நிர்மால்யமென்கிற புத்தியினல்

எவர்கள் தூஷிக்கிறார்களோ, அப்படிப்பட்ட எம்பெருமானின் ப்ர பாவத்தை இல்லை செய்கிற மூடர்கள் நரகத்தை யடைகிறார்கள்) என்றும், பேசப்பட்டது.

இத்தொண்டர்களோம்:— என்றது, இப்படிப்பட்ட அடி யார்கள் என்பதைச் சொல்லுகிறது. நீ அமுது செய்த சேஷத் தை உண்டும், நீ உடுத்துக் களைந்ததை யுடுத்தும், நீ சாத்திக்கழித்த வற்றை சூடிக்கொண்டும் ஸந்தோஷமாய்க் காலம் கழிக்கிற நாங் கள்; என்றபடி.

இப்படியுள்ளவர்கள் பெருமைதான், த்வயோபயுக்தஸ்ரக்கந்த வாஸோ லங்கார சர்ச்சிதா:। உச்சிஷ்டபோஜிநோதாஸா: தவமா யாந்தரேமஹி ॥ (தேவரீரால் உபயோகிக்கப்பட்ட மாலையென்ன, சந்தனமென்ன, திருப்பரியட்டமென்ன, மற்றும் திவ்யாலங்காரங் களென்ன, இவைகளை தரித்துக்கொண்டவர்களாய் அமுதுசெய்த சேஷத்தை ஸாப்பிட்டுக்கொண்டிருக்கிற தாஸர்களான நாங்கள் தேவரீருடைய மாயையை தாண்டக்கடவோம்) என்று சொல்லப் பட்டது.

இந்த அநுஷ்டானமும், எங்கள் கூடஸ்தரான ஆழ்வாருக்கும், ஆசார்யராய், ச்ரிய: பதியான தேவரீர்களுக்கு முதலாவது சிஷ்ய ராய் விளங்குகிற விஷ்க்ஸேநராலும் நன்றாக அநுஷ்டித்துக்காட்டப் பட்டதில்லையோ? அவர் பெருமையைக் கொண்டாடுகிற பின்புள் ளாரும், த்வதீயபுக்தோஜ்ஜித சேஷபோஜிநா (உம்மால் அமுது செய்து விடப்பட்ட சேஷத்தை ஸாப்பிடுகிறவராலே) என்று, இவ் வாறு, தேவர் உபயோகப்படுத்தி விடுத்ததைக்கொண்டு தம் கார் யம் நடத்திப்போருகிறவர், என்கிற இப்பெருமையையேயன்றோ அவருக்கு முக்கிய அடையாளமாகக் காட்டிப்பேசிநின்றார்கள்.

பின்னும் பகவத் ப்ரஸாதத்தின் பெருமைகளையெல்லாம் விரிவு டன் காணவிரும்புமவர்கள். ஸ்ரீ ஆளவந்தாரருளிய ஆகமப்ராமாண் ணியத்தையும், ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகனருளிய, ஸச்சரித்திர ரக்ஷை பகவந்நிவேதிதோபயோகாதிகாரமென்கிற மூன்றாவது அதி காரத்தையும் முற்றிலும் ஸேவித்துத் தெளியப்ராப்தம்.

விடுத்ததிசைக்கருமந்திருத்தி:— என்றது, அவனால் அனுப்பப் பட்ட திக்கில் உள்ள கைங்கர்யங்களைச் செவ்வனே செய்துவரும்

தன்மைபடைத்திருக்குமதைச் சொல்லுகிறது. இங்கு, திருத்தி என்றுள்ளதால், நியமித்தகார்யத்தைக் குறையறச் செய்துமுடிக்கிறபடியை உணர்த்துகிறது; ஒரு யஜமானன், ஒருவனை குறிப்பிட்ட ஒரு கார்யத்தில் ஏவினால், அக்கார்யத்தையே குறையுடன் செய்து திரும்புவானாகில், அவனைத் தாழ்ந்தவன் என்றும், அன்றிக்கே, சொன்னது சொன்னபடியே செய்துவருவானாகில், அவனை மத்தியமன் என்றும், அதுவுமன்றிக்கே, சொன்ன கார்யத்தைக் குறைவுபடாமலும் செய்து அதற்குமேல் அக்கார்யத்திற்கு உதவியாகவுள்ள பல கார்யங்களையும் செய்து முடித்துக்கொண்டு வருவனாகில் அவனை உத்தமன் என்றும், சொல்லுகிறது உலக இயற்கை. இவ்வாறுள்ள உத்தமத் தன்மை ஸ்ரீராமதூதனிடம் காணலுற்றதெனக் கூறுவர். அவ்வண்ணம் நாங்கள் திருமாலுக்குப் பணிவிடை திருந்தச் செய்வோம், என விண்ணப்பம் செய்துகொள்ளுகிறபடி.

இங்கு, திசைக்கருமம் என்று சொல்வதில் உள்ளதாத்பர்யம் இன்னதென உணரவேண்டும். திசை என்றால், திக்கு; அதாவது தேசவிசேஷத்தைச் சொல்லுகிறது; ஒரு தேசவிசேஷத்தில் உள்ள கைங்கர்யத்தை நீ நியமித்தபடி செய்யவல்லோம், என்று சொல்வதானது, எல்லா தேசத்திலும், எல்லாக்காலத்திலும், எல்லா அவஸ்தைகளிலும், அந்த அந்த ஸமயத்திற்குத் தக்க எல்லாவிதமான கைங்கர்யங்களையும் செய்து நிற்போம் நாங்கள் என்கிறார்களாயிற்று.

இதன் சுவடுதான், ஸர்வதேச, ஸர்வகால, ஸர்வாவஸ்தோசித, ஸர்வவித கைங்கர்யங்களென, எங்கும் உத்கோஷிக்கப்படுகின்றன.

இப்படியுள்ள கைங்கர்யங்களை ஸ்ரீ ராமபிரான் காட்டுக்கெழுந்தருளும்போது, இளையபெருமாள் வேண்டிநின்றபடியினாலே, நாட்டைவிட்டு, வீட்டைவிட்டு, தாரத்தைவிட்டு, தாயைவிட்டு, தகப்பனைவிட்டு, தனங்களைவிட்டு, ஸுகங்களைவிட்டு மண்வெட்டியும் தோளுமாகக் காட்டிற்கேகினாலும், லக்ஷ்மணோலக்ஷ்மி ஸம்பந்ந: (இலக்குமணனவர், லக்ஷ்மியோடு கூடினவர்) என்றன்றோ, எங்கும் ஏத்தப்பட்டார்.

இப்படி, நீ ஏவின கார்யத்திலேயே இருக்கிற பாவனையாகப் பொழுதைப் போக்கிக்கொண்டிராதே, ஒருத்ஸவமென்றால் உடனே

வந்து நின்று திருப்பல்லாண்டு பாடத் தொடங்கிவிடுவோம் என்னப்படுகிறது மேல்.

எம்பெருமானுக்கு எவ்வளவுநாள் எவ்வளவு கைங்கர்யங்கள் செய்தபோதிலும், போதுமென்கிற எண்ணத்தைக் கொடுத்து நிறுத்தி வைக்காதானதாலும், செய்யும் கைங்கர்யங்களெல்லாம் பரம போக்கியமாகவே விளங்குமாதலாலும், செய்த கைங்கர்யங்களோடு ஒழிவடையாமல் மேலும் சில கைங்கர்யங்கள் செய்ய மேல்விழுந்து முன் வந்து நிற்கிறபடி.

பதினான்கு ஆண்டுகள், ஏகதேசமாக எல்லாக் கைங்கர்யங்களையும், காட்டில் இராமனுக்குச் செய்து போந்த இலக்குமணன், ராமன், பட்டாபிஷேகத்திற்குத் திருவயோத்திமாநகருக்குள்ளே எழுந்தருளும் காலத்திலும், பெருமாள் கைங்கர்யத்துக்கு நான் முன்னே நான் முன்னே என்று அனைவரும் திரண்டு நிற்கச்செய்தேயும், தனக்கு அவன் கைங்கர்யத்திலுள்ள அவாவின் மிகுதியால், விசிறி, வெண்சாமறம், இரண்டையும், ஏந்திக் கைங்கர்யம் செய்தருளினானன்றோ.

திருவோணத்திருவிழவில்— என்றது, ச்ரவண நக்ஷத்திரத்திருநாளில் என்பதைச் சொல்லுகிறது. திருவோணத்திருநாளென்று சொன்னது, எம்பெருமானுக்கு எந்த எந்த ஸமயத்தில், என்ன என்ன உத்ஸவமோ, அதற்கெல்லாம் தவறாமல் பல்லாண்டுபாட முன்நிற்போம் என்றபடி. இப்பாட்டின் அநுபவத்தில் சேர்ந்திருப்பவர் வேறு ப்ரயோஜநங்களை மதியாதே, எம்பெருமான் தன்னையநுபவித்தலையே ப்ரயோஜநமாகக் கொண்டு வாழுமவர்களானதாலே, எம்பெருமானை க்ஷணம்பிரியில் தாங்கமாட்டாத தங்கள் தன்மையிருக்கிறபடியை அறிவித்துப் பேசுகிறார்களெனத் தோற்றுகிறது.

பெருமாளுடைய உத்ஸவங்களை விடாது ஸேவித்துக் கொண்டிருக்கும் பகவதநுபவபரர்களுக்கு, ஏதேனுமொருபடி, வாஹநமண்டபத்திலிருந்து ஸமீபத்திலுள்ள, திருப்பள்ளியறைக்கு, ஒருநாலடி திருக்கைத்தலத்தில் எழுந்தருளுகிற திவ்யோத்ஸவம், ஸேவிக்கப்படாது போகுமாயின், அப்பொழுது, அவர்கள் இந்த ஒரு காலம் திருக்கைத்தலமிழந்த நாம் இங்கிருப்பதிற்காட்டில், நல்ல உபாயங்

கொண்டு, இந்த சரீரத்தை முடித்துப் பிழைப்பது நன்று, என, நினைத்து வருந்துவார்களாம். இப்படியே மஹான்கள், அருளிப் போந்த ஐதிஹ்யமும், உண்டெனக் கேட்டிருக்கை.

ஆகவே, திருவோணத் திருவிழவு முதலியதில் பல்லாண்டு பாடுவதிலும் ஆசையடங்காதிருக்குமாணதாலே, திருவீதி உத்ஸவம் கண்டருளி, திவ்யாஸ்தானத்தில் சேர்ந்தாலும், அங்கு கிடக்கும், கிடையழகுக்கும் தீங்குவாராதவண்ணம் திருப்பல்லாண்டு பாடுவோமென்கிறது, படுத்த இத்யாதியால்.

படுத்த பைந்நாகணைப் பள்ளிகொண்டானுக்குப் பல்லாண்டு கூறுதுமே— என்றது, கீழே பரப்பப்பட்டதாய், எம்பெருமானின், திருமேனி ஸ்பர்சத்தாலே விரிந்த படத்தையுடைய திருவனந்தாழ்வானுகிற மெல்லணையில் திருக்கண் வளர்ந்தருளுகிறவனுக்குப் பல்லாண்டு பாடுவோமென்பதைச் சொல்லுகிறது.

திருவோணம் முதலான உத்ஸவங்களில், திருவீதிப் புறப்பாடென்றால் அங்கு பாடுவது தகும்; கட்டுங்காவலுமான ஆஸ்தானத்தில், ஆங்காரவாரமது கேட்டு, அழலுமிழும் (ஸாமவேதகானத்தைக் கேட்டே, ஒரு ஸமயம் இங்கு, அசுரர்கள்தான் புகுந்து ஆரவாரம் செய்யவந்தார்களோவென பயப்படவேண்டாதவிடத்தில் பயத்தையெண்ணி தன்வாயிலிருந்து நெருப்பையுமிழ்ந்து நிற்கிற)என்கிறபடி மிகப்பரிவான, சேஷனின் சயனத்திலிருக்கச்செய்தேயும், நீங்கள், பரிந்து பாடவேண்டிய ஆவச்யகதையுண்டோ வென்னில், திருவீதிப் புறப்பாட்டில், நடையழகு முதலானதற்குத் தீங்கு வாராதே பல்லாண்டு பாடுவதற்குமேலே, ஆஸ்தானத்தில் சயநமாக ஸேவை ஸாதிக்கும் கிடையழகுக்கன்றோ, அவ்வழகு குன்றாதிருக்கப் பல்லாண்டு பாடுவது முக்கியமானது; அவன் கிடையழகில் ஈடுபட்டு, ஒரு ஸீதாப்பிராட்டி, ஸமயாபோதித: ஸ்ரீமாந் (உறங்கும்போதும் மிகவும் உயர்ந்த அழகுடன் விளங்கின அவர் என்னால் உணர்த்தப்பட்டாரே) என்றும்: எழுந்திருந்து பேசு எனக் குடந்தைக் கிடந்தமாலே வேண்டின திருமழிசைப்பிரான், அவன் படுக்கை வாய்ப்பைவிட்டு எழுந்திருப்பதைக்கண்டு, ஐயோ என் செய்தோம் எனத் திடுக்கிட்டு உடனே வாழிகேசனே, என்று அக்கிடையழகு நித்யமாய்ச் செல்லவேண்டுமென்றும், திருவரங்கத்தம்மானிடம்,

தொண்டாடிப் பொடிகளும், கிடந்ததோர் கிடக்கை கண்டும் எங்ஙனம் மறந்து வாழ்கேன் என்றும், பல்லாண்டு பாடிநின்றதும் காண்மின்கள் என்றபடி.

குறிப்பு:— இப்பாட்டில், எம்பெருமானின் மெய்யடியார்கள், என்னப்படுமவர்கள், அவனால் உபயோகப்படுத்தப் பட்டு, மிகுதியான அந்நம் முதலியதையே தாங்களும் உபயோகப்படுத்த வேண்டுமென்றும், இப்படி அவன் கொடுத்ததை யுட்கொண்டு திரியாதே, அவனுக்கு எந்த தேசத்திலும் எந்தக் காலத்திலும், எந்த ஸமயங்களிலும், அந்த அந்த இடம், காலம், ஸமயங்கள் இவைகளுக்கு ஒத்ததான எல்லாக் கைங்கர்யங்களையும் செய்துகொண்டு வாழவேண்டுமென்பதும் அறியலாகிறது.

இங்கு, திசை, என்பதால், தேசம், என்றும், திருவோணத் திருவிழவு, என்பதால் காலம் என்றும், படுத்த ........ கொண்டானுக்கு என்பதால் ஸமயம் என்றும், பல்லாண்டு கூறுதுமே, என்பதால், கைங்கர்யம் என்றும், காண்பிக்கப்பட்டதாகிறது.

விசேஷக்குறிப்பு:— இப்பாட்டில் விடுத்த திசைக்கருமம் திருத்தி, என்று சொல்லி, பின், படுத்த ........ கூறுதுமே, என்று சொல்லியிருப்பதால், எம்பெருமானின் கைங்கர்யங்களான ஆஜ்ஞை அநுஜ்ஞை, என்கிற இரண்டு கைங்கர்யங்களில் முந்துற, ஆஜ்ஞா கைங்கர்யத்தைச் செய்து, பின்பு அநுஜ்ஞா கைங்கர்யத்தைச் செய்யவேண்டுமென்கிற தத்வமும், ஆஜ்ஞா கைங்கர்யத்தையே முக்கியமாகக்கொண்டு அதோடு நின்றுவிடாதே, அநுஜ்ஞா கைங்கர்யமும் அவச்யம் செய்யவேண்டியதே என்கிற தத்வமும் வெளியிடப்பட்டிருக்கிற விநோதமும் காண்க. (9)

எந்நாளெம்பெருமானுன்றனக்
கடியோமென்றெழுத்துப்பட்ட
வந்நாளே. அடியோங்களடிக்குடில்
வீடு பெற்றுய்ந்ததுகாண்.
செந்நாள்தோற்றித் திருமதுரையுட்
சிலைகுனித்து. ஐந்தலைய
பைந்நாகத்தலைப்பாய்ந்தவனே
யுன்னைப்பல்லாண்டு கூறுதுமே. (10)

| | |
|---|---|
| எம்பெருமான் | எம்முடையஸ்வாமியே |
| உன்தனக்கு | தேவரீருக்கு |
| அடியோம் என்று | நாங்கள் தாஸபூதர்களென்று |
| எழுத்துப்பட்ட | சொல்லானது எங்கள் வாயில் ஸம்பந்தப்பட்ட (நாள்) |
| எந்நாள் | எந்த தினமோ |
| அந்நாளே | அந்த தினத்திலிருந்தே |
| அடியோங்கள் | தாஸபூதர்களான நாங்கள் |
| அடிக்குடில் | எங்கள் க்ருஹத்திலுள்ள புத்திர பௌத்திராதி ஸந்தானமனைத்தும் |
| வீடுபெற்று | மோக்ஷத்தைப்பெற்று |
| உய்ந்ததுகாண் | உஜ்ஜீவிக்கப்பெற்றோம். |
| செம்நாள் | அழகிய திருநக்ஷத்திரத்தில் |
| தோற்றி | ஆவிர்ப்பவித்து |
| திருமதுரையுள் | வடமதுரைமா நகரில் |
| சிலை குனித்து | வில்லை வளைத்து முறித்து |
| ஐந்தலைய | ஐந்து தலைகளையுடையதும் |
| பை | (கோபத்தால்) விரிந்த படத்தையுடையதுமான |
| நாகம் | காளியனென்கிற பாம்பின் |
| தலை | சிரஸ்ஸின்மேலே |
| பாய்ந்தவனே | குதித்தவனே |
| உன்னை | உன்னையுத்தேசித்து |
| பல்லாண்டு | பல்லாண்டு பல்லாண்டென்று |
| கூறுதும் | பாடுவோம். |

எம்முடைய ஸ்வாமியே, தேவரீருக்கு தாஸபூதர்களென்கிற சொல், என்றைக்கு எங்கள் வாக்கில் ஸம்பந்தப்பட்டதோ, அன்று முதலாகவே, தேவரீருக்கு தாஸபூதர்களான நாங்கள், எங்கள் வீட்டில் பிள்ளைகள் பேரன்மார்கள் முதலானவர்களுள்பட எல்லோரும், அஸாரமான, கைவல்ய புருஷார்த்தத்தில் ஆசையைவிட்டொழித்து மோக்ஷஸாம்ராஜ்யம் பெற்று உஜ்ஜீவிக்கலானோம்; இப்படிப் பெற்ற பெருமைக்குத் தக்கவாறு, நல்ல திருநக்ஷத்திரத்தில் மதுரை மாநகரந்தன்னிலவதரித்து, மறைந்து வளர்ந்து, மறுபடி மதுரைப்

பதிநாடி, உள்புகுந்து கஞ்சன் வைத்திருந்த வில்லை வளைத்து முறித்துப் போகட்டு அதன்பின், ஐந்து தலைகளையும் கோபத்தால் பரந்த படத்தையுமுடைய காளியனென்கிற பாம்பின் தலைமேலே குதித்தவனுமான உன்னை உத்தேசித்துப் பல்லாண்டு கூறுகிறோம் நாங்கள்.

கீழ்ப்பாட்டில் அநந்யப்ரயோஜநர் அணுகிவந்து சேர்ந்து, எம்பெருமான் திருவுள்ளம் பற்றாத எந்த வஸ்துவும் தங்களுக்குத் த்யாஜ்யமென்றும், அவனுண்டு அவனுடுத்தவைத்துமே பரிக்ரஹிக்கத் தக்கவையென்றும், அப்படியே தாங்கள் அநுஷ்டித்துப் போருகிறதாகவும் சொல்லி தங்கள் தன்மையிருக்கும்படியை எம்பெருமானிடம் விண்ணப்பிப்பதான ஹாவத்தைக்கொண்டபடியில் அவர்களுடன் தாமும் கூடி ஒரு திரளாய் விண்ணப்பம் செய்வதுபோலுள்ள அநுபவத்தைக் கொண்டார். அப்படியேபோல ஏடுநிலத்தில் அழைக்கப்பட்டு தீயிற்பொலிகின்ற என்கிற பாட்டில் தங்கள் தன்மையுணர்த்திவந்த கைவல்யார்த்திகள் தங்கள் தன்மையிருக்கும் படியை எம்பெருமானிடம் விண்ணப்பிப்பதான ஹாவத்தைக்கொண்டபடியில் அவர்களுடன் தாமும் கூடி ஒரு திரளாய் விண்ணப்பம் செய்வதுபோலுள்ள அநுபவத்தை இப்பாட்டில் அநுபவிக்கிறார்.

எந்நாள்—என்றது, எம்பெருமானுடைய ஸம்பந்தம் ஏற்பட்டதினத்தின் ஏற்றத்தைச் சொல்லுகிறது. பழுதே பல பகலும் போயினவென்று அஞ்சியழுதேன் (பகவதநுபவம்செய்யப் பாங்கானகாலமெல்லாம் வீணாகப் போயினவே, என பயப்பட்டுப் பதறியழுதேன்) என்றும், புலன்படிந்துண்ணும் போகமே பெருக்கிப் போக்கினேன் பொழுதினைவாளா (பஞ்சேந்திரியங்கள் பொருந்தியநுபவிக்கிற போகத்தையே மிகவும் பெருக்கிக்கொண்டு நல்ல காலத்தையெல்லாம் வீணாகக் கழித்துவிட்டேன்) என்றும் சொல்லுகிறபடியே பல நாள் சென்றபோதிலும், இப்பொழுதாவது திடீரென்று அவனுடையவருள் வாய்க்கப்பெற்றதே! இந்த நாளுக்கு ஒப்பான ஒரு நாளுமுண்டோ? என்றபடி. கிடைக்க அருமையான பாக்கியம் பெறப்பெற்றகாலத்தில், பெரியோர்கள் சொல்லிப்போருவதெல்லாம், இன்று ஸுதிநமாகவாச்சுது; ஸ்வாமியின் திருவருள்களுக்கு இலக்கானோமே, என்றெல்லாமன்றோ? அப்படியேயன்றோ, கைவல்யமென்கிற படுகுழியில் பதறிவிழப் பார்த்திருக்குமிவர்கள்

தங்களை பரமபதக்தேற்றிவைக்கும் பாரிப்புடன் இந்நாளில் எம்பெருமான் திருத்தி யடிமைகொண்டபடியும்,; ஆகவே இப்படி எம்பெருமான் விஷயீகரித்த திநத்தின் ஏற்றத்தை ஏற்றவும் இயலாது என்றும் காட்டியபடி. இதற்கு ஒக்ககாக, எம்பெருமான் விஷயீகாரத்தால் ஞானலாபம் ஏற்பட்டதிநமே பிறந்ததிநம் என்று கொண்டு, அதற்குமுன் எத்தனை பிறவி பிறந்திருந்தபோதிலும், அந்த திநங்களையெல்லாம், பிறந்ததிநமென்றும் பெருமையுடன் சொல்லவியலாதெனக் காட்டியருளுங்கிரமத்தில், திருமழிசைப் பிரான், திருச்சந்தவிருத்தத்தில், அன்று நான் பிறந்திலேன், என்றருளிச்செய்திருப்பதையும் காண்க.

எம்பெருமான் என்றது, என்னுடைய ஸ்வாமி என்பதைச் சொல்லுகிறது. முதலடியில் இப்படித் தங்களுக்கு நேர்ந்த நன்மையைப் பேசவேண்டியிருக்க, அப்படிப் பேசாமல், தங்களுக்கு இவ்வாறு நேர்ந்த நன்மைக்குக் காரணமானது நாள் என்று கொண்டு, அதை முன்னால் கொண்டாடி, அந்தநாள் செய்த நன்மையைப் பின்னால் இன்னபடியான நன்மை யென்று இப்பதத்தால் பேசியிருக்கிறபடி; எம்பெருமான் முன் பெல்லாம் எத்தனையோ நாள்களில் எதிர்ப்பட்டு, த்வம்—மே (நீ—எனக்குச் சொந்தமானவன்) என்று சொல்லச் செய்தே, அவன்வார்த்தையை மறுத்து அஹம்—மே (நான் எனக்கே ஸொந்தமுடையவன்) என ஒவ்வொருவரும் சொல்லித் திரிந்தோம்; இந்த நன்நாளிலோ அப்படியின்றி, தெளிவுபெற்று, நான் எனக்குரியேனல்லேன்; உன்றனக்கே உரியவன்; பிறரொருவர்க்குரியேனுமல்லேன்; ஆகவே, என்னுடைய பெருமான் என்று ஒவ்வொருவரும், சொல்லவும் வல்ல தன்மையும் பெற்றோம், என்றபடி.

உன்றனுக்கடியோமென்றெழுத்துப்பட்ட அந்நாளே— என்றது, பரமாத்மாவான எம்பெருமானுக்கு ஜீவாத்மாக்களனைவரும் தானகவே அடிமைப்பட்டவர்களாக விருக்கச் செய்தே அப்படிப் பட்ட வார்த்தையை நாங்களும் அங்கீகாரம் செய்தது தோற்ற எங்கள் வாக்கின் ஸம்பந்தத்ஸத அவ்வார்த்தை பெற்ற நன் நாளைச் சொல்லுகிறது. கீழ் நாள்களிலெல்லாம் தங்கள் வாயில் எத்தனை

யோ வேறு வார்த்தைகள் பட்டிருந்த இழவுதீர, இந்த நல்வார்த்தை யும் படப்பெற்றபடிதான் என்னே! என்றபடி.

இப்படி, இந்த வார்த்தை, மநோபாவம் வரையில் பொருந்தச் சொல்லாதே, வாயில்பட்ட இவ்வைபவத்துக்கே, தாங்கள் பெற்ற நன்மைகளின் படிகளை பாரீர் என்கிறார்கள் மேல்.

அடியோங்கள் அடிக்குடில் வீடுபெற்று உய்ந்ததுகாண்—என் றது, இவ்வார்த்தை எங்கள் வாயில் பட்டதற்கு அநுகுணமாக, நாங்கள்மட்டில் சிறப்பைப் பெற்றோமோ? அப்படியில்லையே; நாங் கள், எங்கள் பிள்ளைகள் பேரன்மார்கள், என்றிப்படியுள்ள எங்கள் குலத்துதித்தோர்கள் எல்லாருமன்றோ இக்கைவல்யமென்கிற படு குழியில் வீழ்ந்து பாழாய்ப் போகாமே பரமான வைகுந்தம் நண்ணு வதற்கீடான பரமபதத்தைப் பெற்றுப் பிழைத்தோம், என்ப தைச் சொல்லுகிறது.

இப்படி எம்பெருமானுக்கு அடிமையாகவாயினோம் என்று சொல்லுகிற உங்கள் செய்கைதான் என் என்னில், அது பின்னிர ண்டடிகளால் பேசப்படுகிறது.

சேங்நாள் தோற்றி—என்றது நல்ல நாளில் அவதாரம் செய்த மையை அறிவிக்கிறது. எம்பெருமான் தன்னுடைய அவதாரத்தி ற்கு முக்கிய ப்ரயோஜனம் ஸாதுக்களை ரக்ஷித்தலேயானதாலே, அந்த ரக்ஷணத்திற்கநுகுணமாகப் பலரைப் பலபடி திருத்தவும் வேண்டியிருக்குமானதாலே, அதற்கெல்லாம் ஒத்தவொரு நன்நா ளில், தான் அவதார ஸங்கல்பத்தைப்பண்ணி அப்படியே அவதாரம் செய்தானென்றபடி. நாள் நல்லதாக இராதபக்ஷத்தில் இவன் திருத்திப் பணிகொள்ள நினைக்கும் ஆச்ரிதர்கள் இவன் கையிலகப் படாதேபோய், பின்னும் பல யோநிகளிலும் பிறப்பில் நேர்பட அதற்கநுகுணமாகவே தானும் பின்னும் பல யோநிகளில் அவதரிக் கவே, அதுகண்ட தன் மெய்யடியார்கள் உயிரளிப்பானெந்நின்ற யோநியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா, (நித்யஸூரிகளுக்கும் தலைவனாகவிருந்துவைத்து இவ்விடமுள்ளவுயிர்களைக் காக்கும்பொரு ட்டு வாயால் சொல்லவும் வழங்காத பிறவிகள் பிறந்தனையே) என்று மேல்மேலும் ஏக்கங்கொள்வதற்கன்றோ காரணமாகும்; ஆகவே

அதற்கிடம்கொடுப்பது தகாது என்றுகொண்டு நன்னாளில் வந்தான் போலும். இங்கு பெருமானிடம் பரிவின் மிகுதியால், நாளைக் குறிப்பிட்டுக்காட்டிப் பேசாதே, பொதுவில் செந்நாள்என்றே சொல்லியிருக்கிற சீர்மை காண்மின். நக்ஷத்திரங்களில், ரோஹிணீ, சிறந்ததெனக்கொண்டு அதில் அவதரித்தான் என்பதை, செந்நாள் என்று சொல்லப்பட்டது; அப்படியே பிறந்தவன், கர்மத்திற்கு வசப்பட்டுப் பிறக்காதே தன்னுடைய ஸங்கல்பமடியாக அவதாரம்பண்ணினானென்பதைக் காட்ட 'தோற்றி' என்கிற பதம் இடப்பட்டிருத்தலையும் காண்க.

திருமதுரையுள் சிலைகுனித்து—என்றது, வட மதுரையில் வில்யாகமென்கிற வியாஜத்தில் தான் வரவழைக்கப்பட்டபோது அங்கு ஆயுதசாலையில் சென்று வில்லையெடுத்து வளைத்து முறித்தமையைச் சொல்லுகிறது. திருமதுரையுள், என்கிற பதத்தை, செந்நாள் தோற்றி, என்கிறவிடத்திலும் சேர்த்துக்கொண்டு அநுபவிப்பது அழகுடையதாகும். ஏனெனில், தான், ஒருவரை வ்யாஜமாக வைத்து அனைவர்க்கும் மோக்ஷோபாயத்தை உபதேசிக்கப்போவதற்கநுகுணமாக, முத்திதரும் நகரேழில் ஒன்றான வட மதுரையில் அவதரித்தானெனக்கொள்வது சிறக்குமல்லவா? பின்னும், அவதரிக்குமப்பொழுதே தன்னையுற்றவர்களின் தாள்விலங்கை சிதறவடித்துக்கொண்டேயன்றோ வந்தருளியதும்; இதைத்தான் 'தந்தை காலில் பெருவிலங்குதாள் அவிழ' (தகப்பனின் காலில் போடப்பட்டிருந்த பெரிய விலங்கின் பூட்டு, தானே விட்டுப்போம்படி) என்றும், தந்தைகாலில் விலங்கறவந்துதோன்றிய (தகப்பன் காலில் விலங்கு அறுந்துவிழும்படி எழுந்தருளி அவதரித்த) என்றும், கலியனும் அருளிப்போந்திருப்பது. இப்படியெல்லாம் உள்ளபெருமையைக்கண்டுவைத்துத்தான், சத்துருவின் ஊரில் சத்துருவின் வீட்டில், சத்துருக்களானவர்கள் தங்கள் கண்ணால் காணப்பாரிக்கில் அப்படியே காணத்தகுந்தவனாய் தேவகீ கர்ப்பத்திலிருந்து உண்டாகச் செய்தேயும், சந்திரனானவன்கிழக்குதிக்கில் உதிக்கிறான் என்று சொல்லுகிற வார்த்தையில், கிழக்குதிக்குக்கும் சந்திரனுக்கும் எவ்வளவு ஸம்பந்தமோ, அவ்வளவேதான், தேவகிக்கும் கண்ணனுக்கும் என்று அழகாகக் காட்டிக்கொடுத்து ரிஷியும், தேவகீ பூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம் மஹாத்மநா,என்று அழகுபடப்பேசிவைத்தார்.

ஐந்தலையை பைந்நாகத்தலைப் பாய்ந்தவனே— என்றது, ஐந்து தலைகளையுடையதும் படத்தோடும் கூடினதான காளியனென்கிற பாம்பின் தலையில் குதித்தமையைக் குறிப்பிடுகிறது. ஆதிசேஷனை பாம்பிற்கு எம்பெருமானின் திருமேனியால் தீண்டப்பெற்றோமே என்கிற களிப்பின் மிகுதியால் படங்கள் மிக விரிந்தமை கீழ்ப்பாட்டில் பகரப்பட்டது. இங்கு, யாதொரு பயமின்றித் தான் இம்மடுவில் வஸித்துவரச் செய்தே அதற்கு இடையூறாக இக்கண்ணன் வந்து குதித்துக் கூத்தடிக்கிறானே என்கிற கோபத்தினால் படங்கள் மிக விரிந்தமைபகரப்படுகிறது.

உன்னைப் பல்லாண்டு கூறுதுமே—என்றது, இப்படிப்பட்ட உன்னை உத்தேசித்து மங்களத்தை வேண்டி நிற்போம் நாங்கள் என்பதைச் சொல்லுகிறது. அதாவது, சத்துருக்களின் ஊரான வடமதுரையில், சத்துருவானவன் வீட்டில், சத்துருக்களின் படைகள் உருவினகத்தியுடன் உலாவிநிற்குமிடத்தில் வந்து அவதாரம் பண்ணியருள்வதே; அவதரிக்கும்பொழுது உன்னுடைய ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களில் சிறிதேனும் குறைவுபடாதே வந்தருள்வதே; வந்தருளி ஞானக்கண்ணிற்குப் புலப்படத்தக்க அவ்வுருவை, ஊனக்கண்ணிற்கும் இலக்காக்குவதே; அதிலும், வேண்டியவர்களுக்கின்றி, ஸகலமநுஜநயந விஷயதாம் கத: (எல்லா மனிதர்களின் கண்களாலும் காணும்படியான தன்மையை அடைந்தான்) என்கிறபடி, வேண்டியவர்கள், வேண்டாதவர்கள் என்கிற வேறுபாடின்றியே எல்லார் கண்கட்கும் காணும்படி வருவதே ; அந்த ஸமயத்தில் தேவகி, வஸுதேவர், தேவர்கள் முதலானோர் ஏதோ ஒருபடி துதித்துப்போயினரே ஒழிய, உனக்குப் போருமானபடி திருப்பல்லாண்டு பாடப் பாரித்திருக்கவில்லையே ; ஆகவே, நீ, ஆவிர்ப்பாவம் செய்த அப்பொழுதைக்கும், அதற்குமேல், அதே ஊரில், தநுர்யாகமென்கிற வியாஜத்தினால் எழுந்தருளின அக்காலத்தில் நகரஸ்திரீகள் ஒருபடி கதறி நின்றார்களேயொழிய, வேறொருத்தரும் பல்லாண்டு பாடாத குறைதீர, அக்காலத்தில், வில்லை வளைத்து முறித்துப் பொகட்ட அச் செயலுக்கும், அதற்கும் மேலே, காளியன் வாஸம் செய்யும் யமுனாநதியின் மடுவிற்கு, பலராமனை விட்டிட்டு, கோபகுமாரர்களுடன் சென்று, அக் காளியின் தலையில், கடம்பமரத்திலி

ருந்து பாய்ந்து குதித்தவப்பொழுது, கரையில் நின்றாரனைவரும் மயங்கி நைந்து சோர்ந்து கைமறித்து நின்றூரக்தனையொழிய, ஒருவ ராவது அங்குற்ற ஆபத்தில் பல்லாண்டு பாடாத பெரிய குறைதீர, அப்பொழுதைக்கும், பெரிய ஆர்வத்துடன் உன்னை யுத்தேசித்து உன்னுடைய வடிவழகு ஒருபடியும் வாட்டமின்றி வாழ, வாழ்த் திப் போருவோம் நாங்கள் என்றபடி.

இப் பாட்டில், ஸ்ரீபகவான், வடமதுரையில், அழகிய ரோஹி ணீ நக்ஷத்திரத்தில் கண்ணனாய், வஸுதேவர், தேவகி இவர்களுக் குப் புத்திரனாக வந்தவதரித்த சரிதையும், அங்கிருந்து திருவாய்ப் பாடியில்தான்வளர்ந்துவாராநிற்க, அங்கிருக்குமப்பொழுதே, பூதனை முதலிய பல கொடிய அசுரர்களையேவித் தம்மைக் கொல்ல நினைத்த வப்பொழுது அவர்களையெல்லாம் தாம் கொன்று குதூஹலித்திரு க்க, அதனையெல்லாமறிந்த கஞ்சன், வில்விழவு என்கிற வியாஜத் தால் கண்ணனை வரவழைத்து அங்கு ஏதேனுமொரு வியாஜத்தால் கொல்லநினைக்க, அப்பொழுது அக்ரூருடன் மதுரைப்பதிநாடி ஆயு தசாலையில் புகுந்து அங்கு வைத்திருந்த வில்லை ஆயாஸமின்றியெடு த்துவளைத்து முறித்துப் பொகட்டனன் என்கிறசரிதையும், பின் னும்,திருவாய்ப்பாடியில், ஆநிரை மேய்க்கப்போகுமொரு நாளில், பலராமனைத் துணைகொள்ளாமல் கோபகுமாரர்களும் தாமுமாக, ஓர் வியாஜம்வைத்து யமுநாநதியில் காளியன் தங்கியிருக்கிற மடுவிற் குச் சென்று, அருகிருந்த ஓர் கடம்பமரத்துச்சியிலிருந்து காளியி னுச்சியில் பாய்ந்து, நடனமாடி, அக் காளியன் கர்வத்தையடக்கி, மாங்கல்யபிக்ஷை கேட்ட அவனது பத்நிகளின் வேண்டுகோளுக் கிணங்கி அவனைக் கொல்லாது அங்கிருந்து வேலைக்கடலில் வஸிக் கும்படியாக விடையளித்து வெருட்டிவிட்டு, அந்த ஜலக்கரையில் வஸித்தாலே மாய்ந்துபோகும்படியான தன்மையுடைய அம்மடுவை அனைவருமணுகி நீருண்ணும்படி நிர்மலமாகச்செய்துகந்தனன் என் கிற சரிதையும் வெளியிடப்பட்டிருக்குமாறு காண்க.

குறிப்பு—இப்பாட்டின் பின்னிரண்டடிகளால் அவன் திவ்ய சரிதைகள் வெளியிடப்பட்டிருப்பதும் நிற்க, முன்னிரண்டடிக ளால், எம்பெருமானுக்கடிமைப்படாமல், எவ்வளவு வேறுவகை யாக, சீராய்ப்பிறந்து சிறப்பாக வளர்ந்து எத்தனைநாள் சென்றாலும்

அடுதெல்லாம் ஒரு நாளல்லவென்றும், அவனுக்கு அடியவர்கள் என்கிற அக்ஷரம் வாய்ப்பட்ட நாள் எதுவோ அதுவே, நன்னாள் என்றும், இப்படி ஒரு குலத்தில் ஒருவர் அவனுக்காட்பட்ட சீர்மை கொண்டே, அக்குலத்துதிப்போரனைவரையும் சீர்மை பெறச்செய்து விடுவானென்றும் சிறந்தவிஷயங்கள் அறியலாகிறன.

விசேஷக்குறிப்பு— ஆழ்வார்கள் கிருஷ்ணவதாரத்தில், அவதாரகாலந்தொடங்கி, அனைவரும் பல்லாண்டுபாடிப் போருவதற்கு பூர்வவியாக்கியானங்களில் பட்டர் அருளிச்செய்ததாக காண்கிற ஐதிஹ்யமொன்றும் அறியத்தக்கது. அதாவது,

"கிருஷ்ணவதாரமென்றால், ஆழ்வார்களெல்லாரும் ஒக்கப்பரிவராயிருப்பர்கள்; இதுக்கடி என்? என்று ஜீயர் பட்டரைக்கேட்க ராமாவதாரத்தில் பிள்ளைகள் தாங்கள் மிடுக்கராய், குணாதிகருமாய், பிதா சம்பாந்தகனாய், மந்த்ரிகள் வஸிஷ்டாதிகளுமாய், ஊரும் அயோத்யையுமாய், காலமும் நல்ல காலமுமாயிருக்கையாலே, அங்குத்தைக்கு ஒரு பயமில்லை, இங்கு, வந்து பிறந்தவிடம் சத்ருக்ருஹமாய், பிள்ளைகள் தாங்கள் தீம்பருமாய், தமப்பன் இடையனுமாய், கம்ஸன் இடம்பார்த்து நலியும் துஷ்ப்ரக்ருதிகளை வரக்காட்டும் க்ரூரனுமாய், ஊர் இடைச்சேரியுமாய், காலம் கலிகாலத்தோடு தோள் தீண்டியுமாயிருக்கையாலே, என் வருகிறதோ? என்று பரிகைக்கு ஆழ்வார்களல்லது இல்லைகாணும்; என்று அருளிச்செய்தார்". எனக்காண்கிற இவ்வைதிஹ்யத்தின் அழகை நோக்குமின். (10)

* * * * *

௧௧ அல்வழக்கொன்றுமில்லா
அணிகோட்டியர்கோன், அபிமானதுங்கன்
செல்வனைப்போலத்திருமாலே
நானுமுனக்குப்பழவடியேன்.
நல்வகையால் நமோ நாராயணாவென்று
நாமம்பலபரவி,
பல்வகையாலும் பவித்திரனே
உன்னைப் பல்லாண்டு கூறுவனே. (11)

| | |
|---|---|
| திருமாலே | ச்ரிய: பதியே |
| அல்வழக்கொன்றுமில்லா | தப்பான கிரமங்களொன்றுமில்லாதவனும் |

| | |
|---|---|
| அணிகோட்டியர்கோன் | அழகியதாய் விளங்குகிற திருக்கோட்டியூரிலுள்ளாருக்கு ஸ்வாமியானவனும் |
| அபிமாநதுங்கன் | ஸ்ரீ வைஷ்ணவ அபிமாநத்தால் உயர்ந்தவனும் |
| செல்வனைப்போல | செல்வநம்பி என்கிற திருநாமமும் பூண்ட மஹாநுபாவனைப்போல் |
| நானும் | நானும் |
| உனக்கு | எல்லோருக்கும் ஸ்வாமியான தேவரீருக்கு |
| பழவடியேன் | பழமையான தாஸபூதன் |
| நல்வகையால் | நல்லபிரகாரத்தால் |
| நமோ நாராயணா என்று | உன் திருவெட்டெழுத்தான திருநாமத்தைச் சொல்லியும் |
| நாமம் பலபரவி | மற்றும் தேவரீருடைய பல திருநாமங்களைச் சொல்லி ஏத்தியும் |
| பல்வகையாலும் | எல்லாப்படிகளாலும் |
| பவித்திரனே | பரிசுத்தியுள்ளவனே |
| உன்னை | தேவரீரை உத்தேசித்து |
| பல்லாண்டு கூறுவன் | திருப்பல்லாண்டு பாடாநிற்பன். |

ஸ்ரீ லக்ஷ்மீநாயகனே, யாதொரு தோஷலேசமுமிராதவனாய் அழகியதான திருக்கோட்டியூரிலுள்ளார்க்கு ஸ்வாமியாய், ஸ்ரீ வைஷ்ணவாபிமாநத்தால் சிறந்தவராய், இத்தனைக்கும் அறிகுறியாக விளங்குமதான, செல்வநம்பியென்கிற திருநாமத்துடன் கொண்டாடப்படுகிற மஹாநுபாவனைப்போல அடியேனும் தேவரீருக்குப் பழமையான தாஸபூதன்; நல்ல பிரகாரத்தால், நமோநாராயணா வென்கிற, தேவரீர் திருவஷ்டாக்ஷரத்தையும், அதுவேபோன்ற மற்றும் திருநாமங்களெல்லாவற்றையும் நன்றாகச் சொல்லியேத்தி, எல்லாப்படிகளாலும் பரிசுத்தனான உன்னைக் குறித்துப் பல்லாண்டு பாடுவன் யான்.

இங்கு, கூறுவன் என்கிற ஏக வசநப்ரயோகத்திற்குப் பொருத்தத்தை, முன், நெய்யிடை என்கிற பாசுரத்தில் கூறியிருக்கிறபடியிலேயே கொள்க.

கீழ் இரண்டு பாட்டுக்களில், அநந்யப்ரயோஜநபரர்கள், கைவல்யார்த்திகள், இவர்களிரண்டுபேர்களின் சேர்த்தியை அடைவே கொண்டு அநுபவித்துத் தீர்ந்தபின் அம்முறைப்படியில் கொள்ள வேண்டிய ஐச்வர்யார்த்திகளின் சேர்த்தியைக் கொண்டதாக வைத்து அநுபவிப்பதாக இப்பாட்டின் அநுபவம் கொள்ளப்படுகிறது. இவர்கள்தான், அண்டக்குலத்தில் ஆஹூதராய் நெய்யிடையில் நெருங்கிவந்து தங்கள் நீர்மைசொல்லி, அல்வழக்கு, என்றுமிப்பாட்டில் ஆழ்வார் தம்முடன் ஒருபடி சேர்ந்திருக்குமவர்கள்; ஆகவே, இவர்கள் தம்முடன் சேர்ந்து ஒருதிரளாய், ஆழ்வார், எம்பெருமானுக்கு விண்ணப்பம் செய்யுமதிலும், ஐச்வர்யார்த்திகள் சேர்த்தி கொண்டு அவர்கள் தங்கள் பாசுரமும் கலந்திருப்பது காணப்பேசக் கருதியபடிக்கிணங்கி நெய்யிடையில் கூறுவனே என்று, ஏகவசநமான ப்ரயோகம் செய்திருப்பதுபோலவே, இங்கும், அநுபவிக்கிறபடி.

அல்வழக்கொன்றுமில்லா—என்றது, கொள்ளத்தகாத கிரமங்களொன்றையும் கொண்டிராதபடியைக் குறிப்பிடுகிறது; அதாவது, தேஹத்தையே ஆத்மாவென்று நினைக்கையும், எம்பெருமானுக்குப் பாதந்த்ரனான ஜீவாத்மாவை, ஸ்வதந்த்ரனென்று நினைக்கையும், அதற்கும் மேலே, எம்பெருமானுண்டுமிழ்ந்தவெச்சில் தேவரில், சிலரை யஜமாநனாகவெண்ணி, அவர்க்குத் தம்மை அடிமையாளாக நினைக்கையும், இவைபோல்வன பல படுகுழிகளுண்டல்லவா? அவைகளில் அகப்படாதே தப்பியிருக்கும் பெருமையைப் பாராட்டியுரைத்தபடி.

அணிகோட்டியர்கோன்—என்றது, அழகியதான திருக்கோட்டியூரிலுள்ளாரனைவர்க்கும் ஸ்வாமியாய் விளங்குமவனென்கிறது. ‘அணி’ ஜகதலங்காரபூதையான, என்று வ்யாக்யானம் செய்தருளினார் ஸ்ரீதிருக்குடந்தை தேசிகனும்; ஏனெனில், இத் திருக்கோட்டியூரின் மேன்மை பேசுமிடத்து இவ்வாழ்வார்தாமும், கலியனும், பேசியிருக்கும் பெருமைகள் பேர்க்கவும் போராதானதால், அப்பெருமைகளையெல்லாம் உட்கொண்டு அவை புலப்பட இப் பதமிட்டாரென ஸ்வாமி திருவுள்ளம்போலும். திருக்கோட்டியூரின் பெருமை ‘நாவகாரியம்’ என்கிற இவ்வாழ்வார் அருளிச்செயலிலும்,(4-4)

'எங்கள் எம்பிறை—என்கிற கலியனருளிச் செயலிலும் (9—10—) போக்யதை விஞ்சயிருக்குமாறு பேசப்பட்டிருப்பவை காண்க.

அபிமாநதுங்கன்— என்றது, ஸ்ரீ வைஷ்ணவாபிமாநத்தால் சிறந்தவர், என்பதைச் சொல்லுகிறது. விஷ்ணுவான எம்பெருமானுக்கு நான் அடியனாகப் பெற்றேனே, என்னுடைய பாக்கியமே பாக்கியம், என்று இருக்கை: இப்பெருமையைச் சொல்லுமிடத்து, மனித தேஹம் கிடைப்பதே அருமை; அதிலும், திருமால் திருவடியை தொழப்பெறுதற்குறிய, ஸ்ரீ வைஷ்ணவ தேஹத்தைப் பெறுவது மிகவும் அருமை; என்றெல்லாம் பேசும் ப்ரமாணங்களை நினைக்க. மேலும், அபிமாநதுங்கன், வேதமார்கப்ரவர்த்தன, தர்சநப்ரவர்த்தநாத்யபிமாநத்தாலும், உபயவேதாந்த ப்ரவர்த்தநாபிமாநத்தாலும், மற்றுமித்தோடொத்தவபிமாநங்களாலும் நிர்வாஹகத்வக்ருதஸர்வோந்நத்யமுள்ள, என்கிற, பரகாலஸ்வாமி வ்யாக்யானத்தையும். அபிமாநதுங்கன், அஹம், நிருபாதிகபகவத்தாஸ பூத:, என்கிறபடியே கர்மோபாதிகமல்லாத ஸர்வோத்தமமான அஹங்காரத்தாலே பரிபூர்ணரான என்கிற, திருக்குடந்தை தேசிகன் வ்யாக்யான பங்க்திகளையும் இங்கு ஸேவித்துக்களிக்க.

செல்வனைப்போல என்றது, மேலே சொல்லிய பெருமைகட்கெல்லாம் புகலிடமாக விளங்குகிற, செல்வ நம்பியைப்போல், என்பதைச் சொல்லுகிறது. இவரைச்சொல்லுமிடத்து, வேறொரு விசேஷணமிடாதே, செல்வன் என்றே சொல்லியிருப்பதில் உள்ள சாதுர்யம் போற்றத்தக்கதேயாம்; ஏனெனில் இவரை, ப்ரஹ்ம ஞானஸம்பத்துடையவரென்றுமட்டில் சொல்வதா? எம்பெருமானைத் தவிர்த்தவனைத்திலும் விரக்திகொண்டவரானதாலே, அதற்கேற்ப, வைராக்ய ஸம்பத்துடையவரென்றுமட்டில் சொல்லுவதா? வேதவிஹிதமான வனைத்தையும் தானனுஷ்டித்தும், பிறரையும் அநுஷ்டிப்பித்துப் போருவதற்கிணங்க, அநுஷ்டான ஸம்பத்தையுடையவர் என்றுமட்டில் சொல்லுவதா? எம்பெருமானுக்கு, எல்லாதேசத்திலும் எல்லாக்காலத்திலும் எல்லா அவஸ்தைகளிலும் அப்பொழுதைக்கப்பொழுது செய்யத்தகுந்த எல்லா கைங்கர்யங்களையும் செய்துகொண்டிருக்குமவரானதாலே அதற்கேற்ப, பகவத் கைங்கர்ய

ஸம்பத்தையுடையவரென்றுமட்டில் சொல்லுவதா ? எங்ஙனே சொன்னால்தான், அவர் ஸம்பத்தின் பெருமை முடியச் சொன்னதாக பாவிக்கமுடியும், என்று கொண்டே, யாதொரு அடைமொழிகளையும் அணுகவிடாமல், செல்வன் என்றே சீர்மையுடன் உரைத்தனரென்னலாம்.

மேலே, அவ்வழக்கொன்றுமில்லா, அணிகோட்டியர்கோன், அபிமாநதுங்கன், என்றிப்படி அடைமொழிகளை யடுக்கிவந்தவருக்கு, செல்வன், என்ற திருநாமம் சிந்தையிலுதித்ததும், இதுவரை நாம் என்ன சொல்லிப்போந்தோம் என்றுகூட திருவுள்ளத்தில் ஒருபடி தோற்றியிருக்கலாமோவெனவும் தோற்றுகிறது.

அவ்வழக்கொன்றுமில்லா, என்பதை அணிகோட்டியர்க்கும், அடைமொழியாக்கி, மேலும் உள்ளபடியே கொள்ளலாம்.

திருமாலே—என்றது, லக்ஷ்மியிடம் ஆசைகொண்டிருக்குமாற்றை அறிவிக்கிறது ; இங்கு, முன்னதாக, செல்வன் என்பதைச் சொல்லி, பின்பு திருமாலே என்றுரைப்பதால், அவனடியார்கள் ஒருபக்கமும், பிராட்டி ஒருபக்கமும் இராநின்றால் அடியார்களிடம் அன்பின் மிகுதியால் முன்னால் அவர்களை நோக்கியே, பின்னால் பிராட்டியை நோக்குவன், என்கிற ஆச்ரித வாத்ஸல்யகுணம் கொண்டாடப்பட்டதாகவாகிறது. இப்படிப்பட்ட குணத்தைத்தான், ராமாவதாரத்தில், குஹப்பெருமானின் சேர்க்கை நேர்ந்தபொழுது, தன்னைவிட்டுப் பிரியாது கூடவே இலக்குமணனும், பிராட்டியும் வந்துகொண்டிருக்க, குஹனுடன் சேர்ந்தபிறகே, தன்னுடனே இருந்த சேர்த்தியும், சேர்த்தியுள்ளதாகக் கருதினான், என்றுரிஷியும் ; நம்மாழ்வாரின் அநுபவமும், 'நமக்கும் பூவின்மிசை நங்கைக்குமின்பனை,' என்றன்றோ ? இவ்விடத்து திருவாறுயிரப்படிதான் "இன்று தன் திருவடிகளை ஆச்ரயித்த நாமும், பெரிய பிராட்டியாருமானால், பெரிய பிராட்டியார் பக்கலில் காட்டிலும் நம் பக்கல் வ்யாமுக்தனாய்" என்றன்றோ ? ஆகவே, நமக்கு இன்பனான பிறகே, திருவிடம் மால்கொண்டிருக்கை க்ரமமானதால், திருமாலே, என்றுரைத்தால், நம்மிடம் வாத்ஸல்யம் இருந்தே தீரவேண்டுமென்று ஹாவம்.

நானும்— என்றது, மோக்ஷாந்தமான ஐச்வர்யத்தைத் தர வல்ல தேவரீரிடம் வந்தும், அல்பமாயும் அஸ்திரமாயுமுள்ள ஐச்வர்யத்தையே ஆதரித்து வாங்கிப்போக எண்ணங்கொண்ட நானும் என்பதைச் சொல்லுகிறது. "சேஷிபக்கலிலே ப்ரயோஜனாந்தரத்தை யபேக்ஷிக்கையாவது, பதிவ்ரதை, பர்த்தாவின் பக்கலிலே வ்யபிசாரத்தை அபேக்ஷித்தவோ பாதியிறே? என்று வெகு அழகாக அருளினர்; பெரியவாச்சான் பிள்ளை தானும்.

உனக்கு—என்றது, எல்லாருக்கும் அந்தராத்மாவாய், அவரவர்க்குத் தக்க ஹிதத்தையே செய்தருள ஸத்ய ஸங்கல்பனாகவிருக்கும் உன்றனக்கென்பதைச் சொல்லுகிறது.

பழவடியேன்—என்றது, பழமையான தாஸபூதன், என்பதைச் சொல்லுகிறது. நான் உன்பக்கல் ஐச்வர்யத்தை விரும்பி அடைந்தாலும், உன்னுடைய எல்லைகடந்த க்ருபையினால் அழிவற்ற உனதடிமையாகிற ஸாம்ராஜ்யத்தைத் தந்து, அடிநாள் தொடங்கி ஸ்வயம் போக்யமாக அடியேன் என்று சொல்லப்பெறாத இழவெல்லாம் தீர, இன்று அடியேன், என்று சொல்லும்படி திருத்தியருளி, என்றும் உனக்கே அடியனாக இருந்ததாகவே எண்ணும்படியும் முன்பிருந்த இருப்பு இல்லையென்னும்படியும் செய்தருளினையான படியினாலே, பழவடியேன் என்று சொல்லத்தட்டுண்டோ ? என்றபடி.

எண்ணிறந்தகாலமெல்லாம் ஏழையாகவிருந்த வொருவனுக்கு திருமாலின் திருவருளால் திடீரென்று, எல்லையிலாத ஐச்வர்யம் ஏற்படுமாயின், அதன்பிறகு, தான் முன்பு ஏழையாக விருந்தோமே என்கிற எண்ணம் உண்டாகாமல், பிறந்ததுமுதலே கர்ப்ப ஸ்ரீமானாகவே தானிருந்ததாகக் கருதுவது பெரும் பான்மையோரிடத்துளதாதலால் அப்படியே நெடுநாளாய், தான், எம்பெருமானைத் தவிர்த்த சில்வான ப்ரயோஜனங்களில் கால் தாழ்ந்து ஸத்தை அழிந்திருந்தும், இப்பால் எம்பெருமானின்னருளால், திடீரெனத் திருந்தினபடியில், பழயபடியை மறந்தொழிந்து பழவடியேன், எனப் பாங்குடன் பகரப்படுவதும் பான்மையுடையதேயன்றோ?

அன்றிக்கே, எம்பெருமான் இன்று முக்தராக வந்தவர்க்கும், நெடுநாளாகவே, தம்முடன் இருந்துவருமவர்க்கும் வாசிபாராட்டாத வொருவனென்றாலே, அவனபிப்ராயத்திற்கிணங்கிய முறையில் அருளிச்செய்யப்பட்டதென்னலாம்.

நல்வகையால் என்றது, நல்லப்ரகாரத்தால் என்பதைச் சொல்லுகிறது. இதற்கு முன்பெல்லாம் அல்பமான சில ப்ரயோஜனங்களையபேக்ஷித்து அதற்கு அநுகுணமான ப்ரகாரங்களால் வேண்டித் திரிந்தபடியெல்லாம் வெறுத்துப்போகட்டு, ஸ்வயம் போக்யமாயும் மேல் சொல்லப்படுகிற பதங்களின் பொருள்கள் உள்ளது உள்ள படியே தோற்றுமாறும் துதித்து நிற்கிற பெருமைபேசியபடி.

நமோநாராயணவென்று—என்றது, அவன் திருநாமமான திருவெட்டெழுத்தை திருந்தச்சொன்னபடியைத் தெரிவிக்கிறது.

நாமம் பல பரவி—என்றது, நமோநாராயணயேதிமந்த்ர: ஸர்வார்த்த ஸாதக: (நமோநாராயணாய என்கிற மந்திரமானது எல்லா ப்ரயோஜனங்களையும் ஸாதித்துத் தரக்கூடியது) என்றிருக்கச் செய்தேயும், மற்றும் அவனுடைய திருநாமங்களெல்லாவற்றையும் தங்கள் ப்ரீதிக்குப் போக்குவீடாகக்கொண்டு எப்பொழுதும் ஏத்தி நிற்கும் ஏற்றத்தை இனிது காட்டிநிற்கிறது.

பல்வகையாலும் பவித்திரனே—என்றது, எல்லாப்படிகளாலும் பரிசுத்தியுடையவனென்பதைச் சொல்லுகிறது. அதாவது, எம்பெருமானை சில்வான ப்ரயோஜனங்களுக்காகவே, தாங்கள் சரணமடைந்தாலும், அவன் தன்பேரிரக்கமடியாக, ப்ரயோஜனாந்தரத்தில் ஆசை, அபாரருசி முதலியதில் இவர்களுக்கு அருவருப்பையுண்டாக்கி, அதனால் இவர்களுக்கு, முன்பிருந்த அபரிசுத்தியெல்லாவற்றையும், அடியோடு போக்கடித்து மஹா பரிசுத்தர்களாகச் செய்து அப் பெருமையெல்லாம் தோற்ற எழுந்தருளியிருக்குமவன் என்றபடி.

உன்னைப் பல்லாண்டு கூறுவனே—என்றது, இப்படி, ஸர்வாதிகனாய், திருமந்திரத்தாலும், மற்றும் அதுவேபோல்வன திருநாமங்களாலும் ப்ரதிபாத்யனாகவிருந்துகொண்டு, ஆச்ரிதர்களின்

பாபங்களனைத்தையும் போக்கி மிகப் பரிசுத்தனாக விளங்குகிற தேவரீரை உத்தேசித்து, திருப்பல்லாண்டு பாடுவன் என்பதைச் சொல்லி முடிக்கிறது.

குறிப்பு—இப் பாட்டில், எம்பெருமானின் திருமந்திரமான திருவஷ்டாக்ஷரத்தைக்கொண்டு துதிப்பதே, திருமால் திருவுள்ளத்திற்கு மிகவும் பாங்கானதென்றும், அப்படியே, அவனடியார்கள் பெருமையை எத்தியுரைப்பது அவனிடம் நமக்கு ஏற்ற புருஷகாரமாக ஆகுமென்றும், பகவத்பக்தர்களின் பெருமை பேசுவதெல்லாம், நாஸ்துதியல்லவென்றும், அதற்கும்மேல், எம்பெருமான், இவர்கள் இப்படிச்சொன்ன வார்த்தைகளை, ஒரு வ்யாஜமாகக்கொண்டே, என் பெயரைச் சொன்னாய், என், திருவின், பெயரைச் சொன்னாய், என் அடியாரின் பெயரைச் சொன்னாய், ஊரைச் சொன்னாய், என்று, பெரிய ஸுக்ருதமாகக் கணக்கிட்டு, தன்னிடம் இவர்களைவிட்டுப் பிரியாதுகொண்டு, திருப்பல்லாண்டு பாடி நிற்கும்படி பேரருள் செய்வன், என்றும், இவை முதலியன அறியப்பட்டதாக வாகிறது. (11)

*　　*　　*　　*　　*

ஃபல்லாண்டென்று பவித்திரனைப்
　பரமேட்டியை* சார்ங்கமென்னும்
வில்லாண்டான்றன்னை வில்லிபுத்தூர்
　விட்டுசித்தன் விரும்பியசொல்.
நல்லாண்டென்று நவின்றுரைப்பார்
　நமோநாராயணாய வென்று*
பல்லாண்டும் பரமாத்மனைச்
　சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே. (12)

| | |
|---|---|
| பவித்திரனை | மிகவும் பரிசுத்தியையுடையனாய் |
| பரமேட்டியை | பரமபதத்தை நித்யவாஸ ஸ்தானமாகவுடையனாய் |
| சார்ங்கம் என்னும் வில் ஆண்டான் தன்னை | ஸ்ரீ சார்ங்கமென்கிற தநுஸ்ஸை தன் தோள்வலியால் அடக்கியாளுகிறவனுமான எம்பெருமானைக்குறித்து |

| | |
|---|---|
| பல்லாண்டென்று | (மிகப் பரிவுடன்) பல்லாண்டு பல்லாண்டு என்று ஆரம்பித்து |
| விரும்பியசொல் | ஆசையுடன் அருளிச்செய்த இப்பாட்டுக்களை |
| நல் ஆண்டு என்று | நல்லகாலம் நமக்கு வாய்த்ததென்று கொண்டு |
| நவின்று உரைப்பார் | எப்பொழுதும் அநுஸந்தானம் பண்ணுமவர்கள் |
| பரமாத்மனை | எல்லாருக்கும் உத்க்ருஷ்டனான ஸ்ரீமந் நாராயணனை |
| சூழ்ந்து இருந்து | சுற்றிலும் சூழ்ந்து இருந்துகொண்டு |
| நமோநாராயணாய என்று | எனக்குரியேனல்லேன் உன்றனக்கே உரியேன் என்றெல்லாம் பொருள்கொடுக்கிற, திருவஷ்டாக்ஷரத்தைச்சொல்லி |
| பல்லாண்டும் | எப்போதும் |
| பல்லாண்டு ஏத்துவர் | திருப்பல்லாண்டு பாடப்பெறுவர்கள். |

மிகவும் பரிசுத்தனாய், பரமபதத்தில் நித்யவாஸம் செய்யுமவனாய் ஸ்ரீ சார்ங்கமென்கிற வில்லை அடக்கியாளுமவனான எம்பெருமான் விஷயமாக, ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதாரம்பண்ணினவராய், எம்பெருமானை உள்ளத்தேகொண்டு விளங்குவதற்கிணங்க ஸ்ரீ விஷ்ணுசித்தரெனத் திருநாமம்பூண்டு விளங்கும் பெரியாழ்வார், மிகவும் பரிவுடன் பல்லாண்டு பல்லாண்டென்று ஆரம்பித்து அருளிச்செய்த இப் பாசுரங்களை, நமக்கு இப்படியும் ஒரு நல்லகாலம் வாய்க்கப் பெறுவதே! எனப் பெருமகிழ்ச்சியுடன் இடைவிடாதே ஏத்தி நிற்குமவர்கள், எல்லார்க்கும் ஆத்மபூதராய் 'பரமாத்மா' என்று சொல்லப்படுகிற, எம்பெருமானை, எல்லாப் பக்கத்திலும் சூழ்ந்திருந்து, திருவஷ்டாக்ஷரத்தைச் சொல்லிக்கொண்டு எப்போதும் திருப்பல்லாண்டு பாடிநிற்பர்கள்.

இப்படி, கீழ் பதினொரு பாட்டுக்களில், ஒன்று, இரண்டு பாட்டுக்கள் நேரில் தன்னநுபவமாகவும், மூன்றுவது முதலாக ஐந்தாவதுவரையில் மூன்று பாட்டுக்களால், அடைவே, அநந்யப்ரயோஜனபரர்கள், கைவல்யார்த்திகள், ஐச்வர்யார்த்திகள், என்கிற

மூன்று வருப்பினர்களைத் தம்முடன் சேர்ந்து பல்லாண்டு பாடுவதற்குத் தகுந்த யோக்கியதையுடன் திருந்திவந்து சேரும்படி கூப்பிட்டருள்வதாகவும், ஆறுவது முதல், எட்டாவது வரையில், மூன்று பாட்டுக்களால், முன் கூப்பிடப்பட்ட வரிசைக் கிரமமாக, அவரவர்கள், தங்கள் தங்களுடைய தன்மையை ஆழ்வார் தமக்கு உணர்த்திக்கொண்டு வந்துசேருவதாகவும், ஒன்பதாவது முதலாக, பதினோராவது வரையில், மூன்று பாட்டுக்களால், அந்த அந்த வரிசைக் கிரமத்திலேயே அந்த அந்த அதிகாரிகளுடன் தாமும் சேர்ந்து அந்த ப்ரகாரத்தை எம்பெருமானுக்கு எடுத்துணர்த்தி விண்ணப்பம் செய்வதாகவும், அப்படி விண்ணப்பம் செய்வதில் தாமே ப்ரதாநராகவிருக்க, சொல்லும் சொல்லெல்லாம், அவர்கள் தாங்களே, நேரில் எம்பெருமானுக்கு விண்ணப்பம் செய்வதுபோலவே தோற்றுமாறு தோத்திரங்களை அருளிச்செய்தும், கீழ்ப்பாட்டளவாக மிக அழகியதான ஒரு அநுபவ விசேஷத்தைக் கொண்டருளி, இப்பாட்டில், எம்பெருமானைப் பல்லாண்டு பாடப்பெறும் பாக்கியவான்களுக்கு, பலிப்பதான பல விசேஷம் இன்னபடியாக இருக்குமென்பதை இனிதாகவுரைத்து, கவி சமயத்திற்கேற்ப தன் திருநாமத்தை அருளிச்செய்யும் கிரமத்தில், இந்த ப்ரபந்தம், இன்ன மஹாநுபாவரின் அநுபவ பரீவாஹமாய்க்கொண்டு அவர் திருவாக்கின் ஸம்பந்தம் பெற்று, எம்பெருமானால் வெளிப்புறப்படும்படி திருவுள்ளமுவந்து அவதரிப்பிக்கப்பட்டது; ஆகவே, ஸ்ரீ வைஷ்ணவர்களான வனைவர்க்கும் மிகவும் உபாதேயமானது; இது, எப்பொழுதும், இங்குமங்கும் ஓதத்தகுந்தது; என்றிவை முதலாகவுள்ள ஒப்பற்ற பெருமையையும் புலப்பட அருளிச்செய்து, தன் ப்ரபந்தாரம்பமான திருப்பல்லாண்டு என்கிற இத்திருமொழியின் அநுபவத்தை ஒருபடி தலைக்கட்டியருளுகிறார் பல்லாண்டு என்றாரம்பிக்கிற இப்பன்னிரண்டாவது பாட்டினால்.

பல்லாண்டு— என்றது, பல்லாண்டு, பல்லாண்டு, என்று பாடியிருக்கிற, இத்திருப்பல்லாண்டு பன்னிரண்டு பாட்டுக்களையும் சொல்லுகிறது. இவ்வாழ்வாருக்கு வேறொரு சப்தமும் திருவாக்கிற் படாதே இத்திருப்பல்லாண்டே பரிபூர்ணமாக விருக்கிறபடிபாரீர்!

எம்பெருமான் திருநாமம் என்னவென்று ஆழ்வாரை நோக்கி ஒருவர் வினவினாலும், பல்லாண்டு என்றுதான் விடையருள்வர் போலிருக்கிறது. இவருக்கு எம்பெருமான் திறத்துள்ள பரிவின் மிகுதியை என்னவென்று சொல்லுவோம்; ஆரம்பம் "பல்லாண்டு பல்லாண்டு" என்று; இரண்டாம் பாட்டின் ஒவ்வொரு பாதத்தின் முடிவும், "பல்லாண்டு"; நடுவேயுள்ள பாட்டுக்கள் தோறும் பெரும்பாலும், "பல்லாண்டு"; இப்பாட்டின் ஆரம்பமும், முடிவும் "பல்லாண்டு" என்ன இவரநுபவத்தின் சீர்மைதான். இப்படியெல்லாம் "பல்லாண்டு" என்கிற பதங்களே இப்பன்னிரண்டு பாட்டுக்களிலும் பரவியிருப்பதால்தான், இதற்கு திருப்பல்லாண்டு என்று திருநாமமிடப்பட்டிருக்கிறதென முன்பே ஒருபடி மொழியப்பட்டது. பன்னிரண்டு அக்ஷரங்கள் கொண்ட மந்த்ர விசேஷத்தினால் உபாஸிக்கத்தக்க வொருவனை, பன்னிரண்டு பாட்டுக்களால் பல்லாண்டென்று பாடியருளுகின்றார்போலும்.

இப்படிப் பாடியதுதான் எப்படிப்பட்டவனை என்னில், அதை மேல் மூன்று வாக்கியங்களால் அழகாக அருளிச்செய்கின்றார்.

பவித்திரனை என்றது, மிகவும் பரிசுத்தனானவனைப் பாடி நின்றபடியைப் பேசுகிறது. தன்னையடைந்தாரின் தீவினைகளைத் தினையேனும் நிற்கவொண்ணாதே தூரத்தியடிக்குமவன் என்றபடி. அன்றியும், தாம் அவதரிக்கும் அவதாரங்கள்தோறும் அந்த அந்த அவதாரபாவனை பண்ணிப்போந்தாலும், அந்த அந்த அவதாரங்களுக்கு ஸமானமான சரீரத்தைக்கொண்ட மற்றவர்களின் ஹேய குணம் முதலானவைகள் யாதொன்றும் இவனிடம் காணமுடியாதிருக்கும் தன்மைபெற்றவன் என்றபடி. அப்படியே, தான் ஸர்வாந்தர்யாமியாய் விளங்கிநிற்கும் அந்நிலைமையிலும் அங்குள்ள தோஷங்கள் தட்டாதே தனித்துநிற்குமவன் என்றபடியுமாம்.

இவ்வண்ணம், இப்பாடல்களுக்கு ப்ரதிபாத்யனானவன், பவித்திரனாய் விளங்குமவன், என்று பேசப்படுவதால், பவித்திரனானவொருவனைப்பற்றிப் பாடிய பாடல்கள், அவனிலும் பவித்திரங்கள்; பாடல்களைக்கண்டு வெளியிட்டவர் அவைகளிலும் பவித்திரர்.

பாடல்களை ஓதியுணர்ந்தோர் அவரினும் பவித்திரர், என்றெல்லா முள்ள மேன்மை முந்துறமுன்னம் வெளிப்படுத்தப்பட்டதென்ன லாம்.

இங்ஙனம் அநுபவத்திற்கு வழிகாட்டி நிற்கும் நம்மாழ்வாரின் அருளிச்செயலான திருவாய்மொழி 7—10—11 தீர்த்தனுக்கற்ற பின், என்கிற பாட்டின் திருவாறுயிரப்படி வாக்கியமான "திருவா றன் விளையேப்ராப்யமென்றிருக்கைக்கு விரோதியானவென்னு டைய பாபத்தைப்போக்குகையாலே, பவித்ரம் அதில் நின்றரு ளினவெம்பெருமான்; அதிலும் பவித்ரம் அவனைப்ரதிபாதிக்கு திருவாய்மொழிகள்; இவைவல்லார் அவற்றிலும் பவித்ரபூதர் என்றிப்படி, படிகட்டிப்பேசியிருக்கும் திவ்யஸூக்தியை இங்கு நினைக்க.

மேற்கூறியவாறு தூய்மையுள்ளவன் நித்யவாஸம் செய்யு மிடத்தைச் சொல்லுகிறது மேல்; அன்றிக்கே, தூய்மையுடன் தோற்றி நிற்கக்காரணம் இன்ன திவ்யதேசத்தின் ஸம்பந்தமென்கி றது மேல்; என்னலுமாம்.

பரமேட்டியை:—என்றது, உயர்ந்தவொருஸ்தானத்தைப் பற்றி வீற்றிருக்கும் பெருமையைப்பேசுகிறது. இருளானவுலகங் கட்கெல்லாம் அப்பாலன்றே அவன் நித்யவாஸம் செய்தருளுகிற படி. இப்பெருமையை, தமஸஸ்துபாரே, என்றும், தமஸ: பரஸ் தாத் என்றும், விதமஸிபதே, என்றும், பலவிடங்களில் பகரப்பட் டிருப்பதும் காண்க. அங்குவஸிக்குமவன் இங்கு இருள் தருமா ஞாலத்தேதோன்றினும் அங்குள்ள ஸ்வரூப ஸ்வபாவங்கள் ஒன் றும் சோராமேயன்றே வந்து தோன்றுவதும்; இப்பெருமைதான் ஆதியஞ்சோதியுருவையங்குவைத்திங்குப்பிறந்த வேதமுதல்வன் (தன்னுடைய அழகியதான திவ்யரூபத்தை அங்கு போலவே இங் கும் அமைத்துக்கொண்டு அவதாரம் செய்தருளும் வேதமுதல்வன்) என நம்மாழ்வாராலும் அருளிச்செய்யப்பட்டது. ஆகவே அவன் பரமபவித்திரனாகவிருக்கக்குறையில்லையென வித்தாலும் கூறியருள் னபடி.

சார்ங்கமென்னும் வில்லாண்டான்றன்னை:— என்றது, ஸ்ரீசார்ங்கமென்கிற தநுஸ்ஸை அதனிஷ்டப்படி செல்லவொட்டாமல் அதைத்தனது திருக்கையால் தகைந்து கையில் பிடித்தாளுமவன் என்பதைச்சொல்லுகிறது. எம்பெருமான் திருக்கையில் பிடித்திருக்கும் நிலைமையிலேயே அது கிளர்ந்து, எதிரிகளை எனக்குக் காட்டு, காட்டு எனக்கதறி நிற்கச்செய்தேயும், அதை நோக்கி, ஓய், பதறுதே சற்றே ஆறியிருங்காணும்; இன்னமும் பார்ப்போம். மஹாபாதகியானாலும் ஒருவேளை நம்பாதத்தில் வந்துவிழுவனேல், அவன் நம்மால் ரக்ஷிக்கவேண்டியவனாக ஆகிவிடுவன் காணும்; அப்படி அவன் வந்துசேர்ந்த பிறகு, அவனுக்கு விரோதிகளை அறிந்து அங்கே உம்மை செல்லவிடுவோம் காணும் என்றெல்லாம்சொல்லி மிக அழகாக ஆளும் அருமையை அறிவித்தபடி.

பவித்ராணாம் பவித்ரம்ய:—(பரிசுத்தமான வற்றுக்கெல்லாம், மேற்பட்ட பரிசுத்தனாக விளங்குமவன் எவன்) என்றும், பாவநஸ் ஸர்வலோகாநாம் (ஸமஸ்தமான உலகங்கட்கும் பரமபரிசுத்தனாக விளங்குமவன்) என்றும், பேசுகிற ப்ரமாணங்களின்படியே தானான தன்மையிலேயே மிகப்பரிசுத்தனாய் விளங்கி நிற்குமொருவன், பவித்ரம் பரமம் புண்யம் தேசோயம் ஸர்வகாமதுக் (இந்ததேசமானது மிகவும் புனிதமானது, புண்யகரமானது, எல்லா இஷ்டங்களையும் தரவல்லது) என்றெல்லாம் பெருமையுடன் பேசத்தகுந்த ஒரு தேசவிசேஷத்தில் நித்யவாஸம் செய்து போருகிறான் என்றும் சொன்னதற்கும் மேலே, அவன் கையிற்பிடித்துப் பழகும் திவ்யாயுதமும் பாபராசிகளைப் பறந்தோடியொளிந்திடச் செய்யும் பெருமை படைத்திருப்பதாகவுமிருந்தால், இப்பெருமையெல்லாங்கொண்டவொருவனை பவித்திரன் எனப்பகர்வது இப்பாராருக்கு ஒரு பரமாக விருக்குமோ என்றபடி.

இந்தசார்ங்கமென்கிற திவ்யாயுதமானது பாபராசிகளுக்குப் பகையாக விளங்கி நிற்கிறதென்பது, இவ்வாழ்வாரலே, (5—4—4 கடல்கடைந்து, என்கிறபாட்டில், கொடுமைசெய்யுங் கூற்றமுமென் கோலாடி குறுகப்பெறா,............... சார்ங்கவிற் சேவகனே, என்பதால் ஒருபடி உரைக்கப்படுவதே.

இவ்வாறே, தேவம் சார்ங்கதரம் விஷ்ணும் யேப்ரபந்நா: பராயணம் | நதேஷாம் யமஸாலோக்யம் நசதே நரகௌகஸ: || (எவர்கள், எங்கும் நிறைந்து விளங்குமவனை, சார்ங்கத்தை தரிக்கிற எம்பெருமானை உயர்ந்த புருஷார்த்தம் என புத்திபண்ணி சரணாகதி பண்ணுகிறார்களோ, அவர்களுக்கு யமலோகத்தில் ஓரிடி வைப்பும், நரகத்தில் வீடுபெற்றுவசிக்கும் தன்மையும் ஏற்படுகிற தில்லை) என்கிற சுலோகமும் கூறுகின்றது. இதுபோல்வன ப்ரமாணங்கள் மற்றும் பலவுள.

இங்கு, சார்ங்கமென்ற ஒரு திவ்யாயுதத்தைச் சொன்னது, மற்றும் திவ்யாயுதங்களினுடையவும், திவ்யா பரணங்களினுடையவும், திவ்ய மஹிஷிகளுடையவும், திவ்ய பரிஜனங்களுடையவும், திவ்ய பரிச்சதங்களுடையவும், இவை முதலாகவுள்ள எல்லா வற்றின் சேர்த்தியையும் இனிதுரைத்த படியிலே நோக்கெனக் கொள்க.

இப்பொழுது, பவித்திரனை, பரமேட்டியை, சார்ங்கமென்னும் வில்லாண்டான் தன்னை, என, மூன்று பொறுக்குமணிகளான பதங்களின் சேர்த்தி காண்கின்றன. இவற்றில், பவித்திரனை, என்பதை, எடுத்துக்கொண்டால், பவித்திரனாக விருக்கு மொருவனுக்குத் தான் பரமேட்டியாக விருக்கப்பெறும் பாக்கியம் பெறக்கூடியதாக விருக்கும்; இவ்விருபாக்கியம் பெற்றவன்தான், சார்ங்கமென்னும் வில்லாண்டானாக விளங்கி நிற்கலாம். அப்படியே, பரமேட்டியை, என்பதை எடுத்துக்கொண்டால், பரமேட்டியான வொருவன் தான், பவித்திரன் எனப்பகரப்படுவன், பரமேட்டியாயும், பவித்திரனாகவும் பகரப்படுமவன்தான், சார்ங்கமென்னும் வில்லாண்டான், என்று வீறுபெற்று விளங்கிநிற்பன். இவைபோலவே, மூன்றுவதான சார்ங்கமென்னும், என்பதை எடுத்துப்பேசினாலும் அழகுபெற்று விளங்கும். என்றிப்படியெல்லாம் எந்தப்பதங்களையும் முன், எடுத்துக் கொண்டும் அழகாக அநுபவிக்கலாம். ஒருபதத்தை முன்பு எடுத்துக்கொள்ளும்போது மற்றவை அதற்கு அடைமொழியாகி அணுகி நிற்கும். இப்படிப் பதங்களின் சேர்க்கையிலும் ஓர் ஒற்றுமை தோற்றுமாறு ஆழ்வார் வெளியிட்டருளிய பாடல்களின் மேன்மையை யாரே அறியவல்லார்.

இப்பாடல்கள் எம்பெருமானையறிந்து பேசுமவைகளானதாலே உயிருள்ளவைகளாக விளங்கி, எம்பெருமானுக்கு அடியார்களான பாகவதோத்தமர்கள் அனைவரும், அவரவர்கள், மிகப்பெருமை படைத்திருப்பவர்களாக விளங்கச்செய்தேயும், ஒருவர் மற்றொருவரைப்பேணுங்கால் தங்கள் தன்மையைத்தாழ்த்தி நைச்சியாநுஸந்தானம் செய்துகொண்டு, மற்றவரைப்போற்றி பேசுகிறவாறுபோலவே எம்பெருமானைப் பேசிநிற்கிற பதங்களும் பாகவத ப்ரதிபத்தியைத் தாங்களும் வெளியிட்டனபோலும்.

இவ்வண்ணம், ஒருபடி அநுபவம் கொண்டாலும், சார்ங்கமென்னும் வில்லாண்டான்றன்னை, என்பதற்கே, மற்றவை அடைமொழியாகி அடங்கியிருத்தல் மிக அழகு பெறுமென்பதைக்காண்க.

ஆக, இப்பாடல்களுக்கு ப்ரதிபாத்யதேவதை இன்னதென்பதையும் அதன் பெருமையையும் இனிது பேசி, இப்பாடல்களைக் கண்டுரைத்தவர் அவதரித்த தேசத்தினுடையவும், அவர் தம்முடையவும், பாடல்களினுடையவும் பெருமைகளைப் பேசிநிற்கிறது. மேல் இரண்டாமடியின் மிகுதியும்.

வில்லிபுத்தூர்—என்றது, ஸ்ரீ வில்லிபுத்தூர் என்கிற திவ்ய நகரியைச் சொல்லுகிறது. இந்த திவ்யதேசம்தான், "விண்டோய்மதிள் வில்லிபுத்தூர், என்றும், செங்நெலோங்கி விளைகழனிப் புதுவை, என்றும் நாட்கமழ் பூம்பொழில் வில்லிபுத்தூர், என்றும், நீரணிந்த குவளைவாசம் நிகழ்நாறும் வில்லிபுத்தூர்,என்றும், மச்சணி மாடப்புதுவை, என்றும், பொன்திகழ்மாடம்பொலிந்து தோன்றும் புதுவை, என்றும், செற்றமிலாதவர் வாழ்தரு தென்புதுவை, என்றும், செஞ்சொல்மறையவர் சேர் புதுவை என்றும் செந்தமிழ் தென்புதுவை, என்றும், வெங்கலிநலியா வில்லிபுத்தூர், என்றும், பாராரும் புகழ்புதுவை, என்றும், அருளிச்செய்கிறபடியே, அழகிய மதிள்களாலும், நற்கழனிகளாலும், சிறந்த பொழில்களாலும்' கருநெய்தல் முதலியன நிறைந்துள்ள நீரோடைகளாலும், சூழப்பட்டும், இப்படி ஊரின் சுற்றுப்புறங்களாலல், உள்ளே, மச்சணி மாடங்களாலும். அவைகளும் பொன்னாலமைந்து

பொலிந்து தோன்று மவைகளாயும் அதற்கும் மேலே, அங்கு வாஸம் செய்யுமவர்கள் ஒருவர்க்கொருவர், அஸூயையற்றவர்களாய் வடமொழி தென்மொழி மறைகள், தன்னில் தானேவந்து சேரப் பெற்றவர்களாய் விளங்குகையாலே கொடியனான கலிபுருஷன் நலிவதற்கு முடியாமே கைவாங்கியிருக்குமதாய், ஆகவே இப்பெருமைகளையெல்லாம் கண்ட பாரோரனைவரும் பாரெங்கும் புகழ்ந்துநிற்கும் பெருமைபடைத்ததெனப் பேசும் தன்மைவாய்க்கப்பெற்றிருக்குமாயிற்று. இதன் மற்றும் சில மஹிமையின் அநுபவத்தின் சிறிது பிரகாரங்கள், மின்னார் தடமதிள் சூழ் என்கிற இப்பிரபந்தத்தனியனின் உரையில் முன்னமே மொழிந்துள்ளமை காண்க. அவற்றிலும், வேண்டுமளவு இங்கே கூட்டிக்கொண்டநுபவிக்க.

விட்டுசித்தன்:—என்றது, பெரியாழ்வாரைச் சொல்லுகிறது. இவர்தான் விஷ்ணுவை, தம்சித்தத்திலே உடையவர் என்றும், விஷ்ணுவின் சித்தத்திலே தாம் உளரென்றும் ப்ரஸித்தமன்றோ? இவ்வர்த்தம், உன்னைக்கொண்டென்னுள் வைத்தேன், என்னையு முன்னிலிட்டேன், என, இவர் தம்மாலேயே மேல் (5—4—5) வதான, பாட்டில் அருளிச் செய்யப்படுவதும் காண்க. இவ்விருவரில், இவர் அவன் மனதைவிட்டகல நினைத்தால்கூட, அவன் இவர்மனதை அரைக்கணமேனும் விட்டு நீங்காமே குடிகொண்டேயிருக்கிறானென்பது, (5—2—10) அரவத்த மளியினோடும், (5-3-2) வளைத்துவைத்தேனினிப் போகவொட்டேன், (5-4-9) ஷை 10—11-பனிக்கடலில், தடவரைவாய், வேயர்தங்கள், என்கிற பாட்டுக்களினால் பரக்கப்பேசப்படுகிறது.

எம்பெருமானின் சேர்க்கை, எல்லா ஆழ்வார்களின் சித்தங்களிலும் ஒருவண்ணம் உள்ளதேயாகிலும், அவன் இவ்வாழ்வார் சித்தத்தில் இருக்கும் இருப்பையிட்டே, இவர் திருநாமம் வழங்கப் பெறுவதாலும், அவ்விருப்பின் வைலக்ஷண்ணியத்தை இவ்வாழ்வார் தாமே பலபாசுரங்களால் பலபடி பேசியிருப்பதாலும், எம்பெருமானின், இவருள்ளத்திருப்பு அதிவிலக்ஷணமாகவுள்ளதென்பதை மறுக்கப்புகுவாரார். இவர், கருடாம்சரானதால், கருடனாகிற நிலைக்கண்ணாடியில் திருமால் தோன்றி நிற்பது பலபடிகளிலும்

பொருத்தமுடைத்தானதென்பதும், இவர் அவனுக்கு, மாமனாரான தாலும், இவ்விருப்பு ஒரு விருப்புடைய இருப்பே என்பதும், குரு முகமநதித்ய, என்கிற தனியன் உரையிலும், ஒருவாறு உரைக்கப் பட்டதேயாம்.

இதெல்லாவற்றுக்கும் மேலே, எம்பெருமான், தம்மனத்தே நித்யமாக வஸிப்பதனாலாய பயன், இன்னதென்பதும் இவ்வாழ் வார் தம்மாலேயே (4—7—11) போங்கோலிகங்கை, என்கிற பாட்டில், வெங்கலிநலியா வில்லிபுத்தூர்க்கோன்விட்டு சித்தன் (கொடியனான கலிபுருஷனால் நலியப்படாத ஸ்ரீவில்லிபுத்தூருக்குத் தலைவரான பெரியாழ்வார்) என்று பெருமையுடன் பேசப்பட்டது. இப்படி தன்னநுபவத்தை நன்கு வெளிப்படுத்திப் பேசுவதனாற் தான், கலௌக்ருத யுகம் தஸ்ய கலிஸ்தஸ்ய க்ருதேயுகே | யஸ்ய சேதஸி கோவிந்தோ ஹ்ருதயே யஸ்ய நாச்யுத : || (யாதொருவனு டைய மனதில் கோவிந்தன் குடிகொண்டிருக்கிறானோ, அவனுக்கு கலியுகத்திலும் க்ருதயுகமாகவேயிருக்கிறது. எவன் மனதில் அவன் அணுகியிருக்கவில்லையோ அவனுக்கு க்ருதயுகந்தன்னிலும் கலியுகமாகவேயிருக்கிறது.)என்கிறபடியுள்ள ப்ரமாணம் பொய்யாத மொழியாகவே பொலிந்து நின்றதென்னலாம். இப்பெருமை பெற் றவர் கடாக்ஷத்துக்கிலக்கானது கொண்டுதான் இவரவதரித்த திரு நகரியும், வெங்கலிநலியா வில்லிபுத்தூரென விளங்கி நின்றதும். யஸ்யாநுபவபர்யந்தாபுத்திஸ் தத்வேப்ரதிஷ்டிதா | தத்த்ருஷ்டி கோசராஸ் ஸர்வே முச்யந்தே ஸர்வகில்பிஷை: || (எவனுக்கு தத் வத்தில் புத்தியானது அநுபவம் வரையிலாக நிலைத்திருக்கிறதோ, அப்படிப்பட்டவன் கண்ணுக்கிலக்கானவெல்லாரும் எல்லாப் பாபங் களினுலும் விடப்படுகிறார்கள்) என்றுபேசியிருக்கிறபடி இவர் கடாக்ஷத்தினால், வில்லிபுத்தூரும், வில்லிபுத்தூரிலுள்ளாரும் விளங்கி நின்றால் இவர் தம்பெருமை சொல்லவேண்டாவே; ஆகவே எல் லாப் பெருமையும் தோற்ற விட்டு சித்தர் என்றபடி.

விரும்பியசொல்:—என்றது, ஆசைப்பட்டுப் பேசிய பாசுரம் என்பதைச் சொல்லுகிறது. இன்னதில் ஆசைப்பட்டு என்று குறித்துச் சொல்லாதபடியினாலே, அவன் அழகு, குணம் விபூதி அந்தரங்கவடிமை முதலான வனைத்திலும் ஆசைகொண்டு, என்

லாம்; விரும்பிய சொல் என்பதால் விரும்பி ஆநந்தமாக அநுபவித்து அவ்வநுபவம் மிக்குவழிந்து வெளிப்புறப்பட்ட சொற்கள் என்றபடி. ஒரு ரிஷியின் சோகவேகத்திஞல் ஒருகாலவிசேஷத்தில் வேதம் ஸ்ரீமத்ராமாயணமென்கிற வடிவெடுத்து வெளிப்புறப்பட்டுத் தன்னைவேண்டி ஆதரிக்குமவர்களை பரமாநுக்ரஹம் செய்துவருவது போலவே, ஆழ்வார்களிடமிருந்தும், அவ்வேதமே, தமிழ்ப்ரபந்த ரூபத்தைப் பரிக்ரஹித்துக்கொண்டு, அவ்வாழ்வார்களின் ஆநந்தாநுபவ பரீவாஹ ரூபமாக, தன்னையாதரித்தோதுமனைத்துலகையும் அநுக்ரஹிக்க வெளிவந்ததென்பதை இவ்வாழ்வாரின் அநுபவக்ரமமும் ஒருபடி காட்டி நிற்கிறது.

ரிஷி விரும்பாதேயிருக்க, மச்சந்தாதேவ, என்கிறபடி மற்றொருவர் சந்தத்திஞல் வெளிவந்த சொற்களான அவைகளையே அனைத்துலகும் விரும்பிப்போரா நிற்க, தாம் விரும்பி அவ்விருப்பமடியாக வெளிவந்த சொற்கள், அனைத்துலகும் மிகவாதரத்துடன் விரும்பிப் போருவதற்குத் தகுதியுள்ளதாகவன்றோவிருக்குமென்றபடி.

மேலும், ஒரு பூமிப்பிராட்டியின் அவயவைகதேசமான காதாகிய புற்றினிடமிருந்துண்டான வால்மீகி முனிவரது திருவாக்கிலிருந்து வெளிவந்தது ஸ்ரீமத்ராமாயணமாகிற வேதம்; இதுவோ, அப்பூமிப்பிராட்டியேயான சூடிக்கொடுத்த நாச்சியாரையும் பெற்றெடுத்து வளர்த்த தகப்பனை விட்டுசித்தர் திருவாக்கிலிருந்து தோன்றிய வேதம்; அது ஒரு தசாவதாரத்தில் ஒருவரைப்பற்றிப் பேசப்புறப்பட்டது; இது ஒரு அபிநவ தசாவதாரத்தில் ஒருவரைத் தான்பற்றி வெளிப்புறப்பட்டது; அது, ச்ரோதவ்யம் க்ஷத்ரியைர்த் விஜாத் (அரசர்களால் அந்தணர்களிடமிருந்து கேட்கத்தகுந்தது) என்கிறபடி, ஒன்று, இரண்டுவர்ணத்தாருக்குள்ளாகவே, முதலாவது வர்ணத்தவர் சொல்லி, இரண்டாவது வர்ணத்தவர் கேட்க வேணுமென விதிப்பதுபோல் பேசிப்போந்தது; இதுவோ, அப்படி ஒருவரம்பிடாதே, வரம்பிலடங்காத கருணையோடு, இன்னாரியாரென நியமமின்றி, இச்சையுள்ள எவரும் இதுகொண்டு ஏத்தி நிற்கலாம் என இனிதாக எடுத்துரைப்பதுபோல் நவின்றுரைப்பார், என்றே, பேசிநின்றது; அது, ஒருகால விசேஷத்தில் தோன்றி சிறிது காலத்துக்குள்ளாகவே மாயமாய், மறைந்து செல்லுகிற விபவாதாரத்

தையே முழுநோக்காகக்கொண்டது; இதுவோ, ஆச்ரிதர்களின் ஸம்ஸாரத்திற்குக்காரணமான, கிழங்கெடுத்தல்லது போவதில்லையெனப் பூர்ண ஸங்கற்பத்துடன் பின்னானார் வணங்கும் சோதியான அர்ச்சாவதாரத்தைப்பற்றியே மற்றெல்லாவற்றையும் பெரும்பாலும் ஒருவாறு பேசிநிற்கும் பெருமைகொண்டது; இப்படி, எந்தவேதத்தையெடுத்துக்கொண்டு மேன்மேல் பெருமையைப்பேசிக்கொண்டே சென்றாலும், ஒரு எல்லைகண்டு நிற்கவொண்ணாது ஆழ்வார் விரும்பியருளிய சொல்லின்திறம்; ஆனதால் மேலேமற்றும் அநுபவத்தின் கண் செல்ல முயல்வோம். ஆக, இச்சொற்கள், முன்னேமொழிந்த மூன்று பதங்களால் பெருமை பேசப்பட்டபெரியாழ்வார் வெளியிட்டருளினதாகவிருக்கிறதானதாலே இதன் பெருமை அறிவில் மிக்கோராலும் ஒரு அவதியிட்டு அநுபவிக்கவொண்ணாதபடி அவதிகடந்து நிற்குமாயிற்று.

இவ்வாறாக, இந்தப் பிரபந்தப்ரதிபாத்யனுடையவும், இந்தப் பிரபந்தத்தை வெளியிட்டு உபகாரம் செய்தவருடையவும் பெருமைகளை, முன்னிரண்டடிகளால் மூதலித்துணர்ந்தபின், இந்தப்பிரபந்தத்தை ப்ரீதியுடன் பாடுமவர்கட்குப் பலம் சொல்லித்தலைக்கட்டுகிற பின்னிரண்டடிகளின் பெருமைகளைப் பேசிப்புகழ்வோம் இனி.

நல்லாண்டென்று நவின்றுரைப்பார்,:—என்றது, இது நல்ல ஸம்வத்ஸரமென்று கொண்டு எப்பொழுதும் இடைவிடாது ஏத்தி நிற்குமவரைச் சொல்லுகிறது.

ஏனெனில், இப்பாடல்கட்குப் பொருளோ, பரமாத்மா; இப்பாடல்களை அருளியவரோ, பெரியாழ்வார்; இப்பாடல்கள் அவதரித்தபடியோ ஆநந்தத்தினால்; ஆகவே எல்லாப்படிகளாலும் இவை பரம போக்யங்களாகவுள்ளவை; இவை நமக்கு வாய்ப்பதென்றால் கிம்மயா சரிதம் பத்ரம் கிம்தப்தம் பரமம் தப: (என்னால் மங்களமான என்னகார்யம் செய்யப்பட்டதோ, உயர்ந்த தபஸ்ஸானது என்னசெய்யப்பட்டதோ,) என்கிறபடியே, ஒருபடியான நற்செய்கையின்றிக்கேயிருக்க, பெரும்பேறல்லவா? ஆனதால் இப்பெருமைவாய்க்கப்பெற்ற இக்காலத்திற்குத் தகுதியான மங்களமான ஆண்டுதானென்றுண்டோ இனி; என்றுகொண்டு, இந்நன்னாளை

நல்லாண்டென்று நல்கியுரைத்தபடி. எம்பெருமானைக்கண்டு அநுப விக்கும் நாளை, அத்யமேஸபலம் ஜந்ம ஸுப்ர பாதாச மேநிசா| யது ந்நித்ராப்ஜபத்ராக்ஷம் விஷ்ணோர் த்ரக்ஷ்யாம்யஹம் முகம் ll (நன்றாயலர்ந்த தாமரையிதழ்போன்ற திருக்கண்களையுடைய கண் ணபிரானின் திருமுகமண்டலத்தை நான் ஸேவிக்கப்போகிறேன் என்பது யாதொன்றுண்டோ, அதனால், என்னுடையபிறவியானது பேறுடையதாகவாயிற்று; இரவும் நல்ல விடிவாக விடிந்தது.) என் றன்றோ பரமபாகவதோத்தமர்கள் பேசிப் போருவது.

நவின்று—என்றால் இடைவிடாது என்கிறபடி நிற்க, பயின்று என்றும் கொள்ளவேணும்; நவிலுகை பயிலுகை; இவைதான் திருமந்த்ராதிகள் போல ஸர்வார்த்த ஸாதகமானதாலே, அவைகளை ஆசிரியரடிபணிந்து உபதேசம்பெற்று உணரவேண்டுவது போலவே இவைகளையும் ஸதாசாரியர் பக்கலில் சென்றுவணங்கி உபதேச பூர்வகமாக ஓதியுணரவேண்டுமென்னத் தட்டில்லை. அப்படியே, உரைப்பார், என்றதற்கும், அர்த்தாநுஸந்தாநேந ஸஹ ஸதைவம் வக்தா (அர்த்தாநு ஸந்தானத்துடன் எப்பொழுதும் சொல்லுகிற வனாய்) என்கிறபடியே ஸ்வாநுபவம் ஒருபடி நடப்பதற்குமேலே, நல்ல பாத்திரரான சிஷ்யர்களுக்கும் இவைகளை உபதேச பூர்வ கமாக ஓதுவிக்குமவர்களென்றும் சொன்னபடியாம். இங்கு, உரை ப்பார் என்பதில் இன்னாருக்குத்தானென்று ஒருவாறு குறிப்பிடப் படாமையாலே, கண்ணநின்றனக்கும் குறிப்பாகில் கற்கலாம்கவி யின் பொருள்தானே (இக்கவியின் பொருள்கள், ஸ்வதஸ்ஸர்வஜ்ஞ னை கண்ணனே! உன்றனக்கும் திருவுள்ளமாகில் கற்கலாம்.) என்கிறபடியே, அவன்றனக்கும் ஓதத்தகுந்ததாக உயர்வுபெற்றி ருக்குமென்பதையும் உணர்த்தியபடியாம்.

நமோநாராயணாய வென்று பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே—என்றது, எம்பெருமானை எக் காலத்திலும் எல்லாப்பக்கத்திலும் வ்யாபித்து இருந்துகொண்டு அவன் திருவெட்டெழுத்தைத் திருந்தச்சொல்லி திருப்பல்லாண்டு பாடி நிற்பர் என்பதைச் சொல்லுகிறது. அதாவது, இங்கிருந்த காலமெல்லாம் அவனுக்குப் பல்லாண்டுபாடிக்கொண்டே பொழுது

போக்கினால், இந்த ஹேயமான சரீரம் விடப்பெற்று, பரமபதத் தேறப்போய் திவ்யமான அநேக சரீரங்களைப் பரிக்ரஹித்துக்கொண்டு அவன் திருவுள்ளத்திற்குப் பாங்கான திருமந்திரத்தைச் சொல்லி, தன் இஷ்டமானபடி, நம: புரஸ்தாத த ப்ருஷ்டதஸ்தே (தேவரீருடைய முன் அழகுக்கு நமஸ்காரம், பின்னழகுக்கு நமஸ்காரம்) என்கிறபடியில் அவன் திவ்யாவயவங்களின் திவ்யாலங்காரங்களின், தனித்தனியே உள்ள திவ்ய சோபையிலும், ஸமுதாயமான திவ்யமங்கள விக்ரஹத்தின் திருவழகிலும், ஈடுபட்டுத் தொழுதுகந்து, அங்குள்ளபடிக்கு வேறொரு பேச்சிட்டுப் பேச முடியாதே அங்கும் பல்லாண்டு பல்லாண்டு, என்கிற வித்தையே காலமுள்ளதனையும் பாடிக்கொண்டு ஆநந்தாநுபவக்கடலில் ஆழ்ந்த ஸர்வாவயவங்களை உடையராய் ஸுகமாக வாழ்ந்து நிற்பர் என்றபடி.

இங்கே "முன்பேநில்லா முறுவலை யநுபவித்து அதிலே ஈடுபடும்; பின்பே நில்லா பின்பும் பிறகுவாளிபுமான வழகையநுபவித்து அதிலே ஈடுபடும்; இப்படி சுழியாறுபடா நிற்கச்செய்தே கால்வாங்கவொண்ணாத வடிவழகு, அதிசங்கையை விளைவித்து மங்களாசாஸனத்தில் மூட்டும்" என்கிறபடியுள்ள பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானத்தின் சுவை, நாம் நேரில் பரந்தாமனைக்கண்டநுபவிப்பதுபோல் காட்டிக்கொடுக்கிற அழகை அநுபவ ரஸிகர்கள் காண்பாரித்தனை.

இப்பாட்டில், காலம் நடையாடாத ஒரு தேசவிசேஷத்தில் காலத்தின்படி கொண்டு அநுபவத்தைக்காட்டியருளியது தாம் காலத்தின் பரிணாமங்கள் நடையாடுகிற தேசத்தில் இப்பால் அவதரித்திருக்கையாலும், இக்காலத்தின்படியைக்கண்டுகொண்டிருக்குமவர்களையே நோக்கி இவ்வண்ணமருளிச்செய்கையாலும் பொருத்தமுற்றதேயென உணர்க.

அங்குசென்றும் இத்திருப்பல்லாண்டு பாடுகைதான் பணி என்பதை, செந்தமிழ் தூப்புற் திருவேங்கடவனும், மண்ணுலகிற் என்கிற பாட்டில் பண்ணுலகிற் படியாத விசையாற்பாடும் பல்லாண்டே பல்லாண்டும் பாடுவோமே (இந்நாட்டில் காணும் பண்

ணின் ஸமூஹங்களில் அடங்காதே விலக்ஷணமான இசைகொண்டு பாடத்தக்க இத்திருப்பல்லாண்டையே இடைவிடாது எப்பொழுதும் பாடக்கடவோம்.) என்று பரமபத ஸோபாநம் என்கிற பிரபந்தத்தில் பரக்க அருளிச்செய்தார். ஸாரஸாரம் என்கிற ரஹஸ்யத்திலும், இப்பல்லாண்டுபாடுகை முக்கியமாய் செய்யவேண்டியதே என்பதை நன்றாகத் திருவுள்ளத்திற் கொண்டு, "முக்தனுக்கு அநிஷ்டப்ரஸங்கமும் ப்ராப்திப்ரஸங்கமுமின்றிக்கே, ஈச்வரனும் நித்ய நிரநிஷ்டனாய் அவாப்த ஸமஸ்த காமனாயிருக்க, சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டு, என்னவேண்டிற்றென், என்னில்? இது அநிஷ்ட நிவ்ருத்யாதிகளை ப்ரயோஜனமாகக் கொண்டாதல் அஜ்ஞாநத்தைக்காரணமாகக்கொண்டாதல்வருமதன்று; இவனுக்கு ச்ருதிகளிற்சொன்ன ஸாமகாநாதிகளைப்போலவே இதுவொரு ஸ்வச்சந்தப்ரவ்ருத்தி விசேஷம்,, என்று அருளிப்போந்தார்.

மேலும், தமிழ்பாஷையிலவதரித்த இத்திருப்பல்லாண்டையே திருநாட்டிலும் பாடுவதென்பது எங்ஙனே பொருந்தும்? அங்கு பேசத்தகுந்த பாஷையிலன்றோ அது அமைந்திருக்கவேண்டும்; இது அவ்வாறுள்ளதில்லையே? அங்கு பேசத்தக்க பாஷைகள்தான் எவை? என, எவரும் சோத்யம் செய்யாதவண்ணமும், அது கேட்டு மந்தமதிகள்கூட சிறிதும் கலங்காதவண்ணமும், இத்தமிழ் பாஷையிலவதரித்த திருப்பல்லாண்டுதான் திருநாட்டில் பாடப்பெறுவதும், என்கிற ஸித்தாந்தத்தைக்கொள்ளும் வண்ணமும், ஸாரஸங்க்ரஹம் என்கிற ரஹஸ்யத்தில் "நாராயண ரஸாயநத்தாலே ஜராமரணாதி கழிந்து, அநந்தமான ஆராவமுதக் கடலிலே அநுபவியாத அம்சமில்லாதபடி, அகஸ்த்ய பாஷையாலே அந்யோந்யம் போக்தவ்யரான இருவரும் நிற்கிற நிலையைக்கண்டு ஸூரிகளோடொக்க கைங்கர்ய ரதியாம்; என்று, பரமபத ஸோபாநத்திலும், ஸாரஸாரத்திலும் அருளிச்செய்த திருப்பல்லாண்டு என்கிற சப்தத்தை இன்ன பாஷையினலாயது, எனவிஸ்தரித்துப்பேசுவது போலவும் அருளிச்செய்திருக்கிற வாக்யங்களையும் ஸேவித்து இங்கு கூட்டிக்கொண்டு களிக்க.

குறிப்பு—இப்பாட்டில், சேதநர்களனைவருக்கும் இங்குமங்கும் செய்யவடுப்பது, திருவெட்டெழுத்தைச்சொல்லி திருமாலுக்குத்

திருப்பல்லாண்டு பாடுகைதான், என்றும், இத்திருப்பல்லாண்டு பாடுகையல்லது வேறு எவையும், பாடுகிறவனுக்கும் பாட்டுண்கிற அவனுக்கும் பரமபோக்யமாக இருக்கமாட்டாதென்றும், ஆகவேஇப்பிரபந்தத்தை ஓதியுணர்ந்துஇடைவிடாது அநுஸந்திப்பதே பாங்கான செயல் என்றும் இவை முதலியன அறியலாகின்றன.

விசேஷக் குறிப்பு:—இத்திருப்பல்லாண்டின் அநுபந்தமாக ஒரு அநுபவ விசேஷத்தை சிறிது ஆராயப்புகுவோம். அதாவது, திவ்யபிரபந்தங்கட்கே, திருக்குடந்தை ஸ்ரீ ஆராவமுதாழ்வானிடம் விசேஷ நோக்கமென்பது ஆழ்ந்து அநுபவிக்கும் அனைவர்க்கும் அழகாக புலப்படாமற்போகாதென்பது திண்ணம். அப்படி அனைவரும் அநுபவிக்கும் ப்ரகாரங்களை யடியொற்றி, இத்திருப்பல்லாண்டின் அநுபவத்தைக்கொண்டு, இது முதலெடுப்பில் பொருத்தமுற்று நிற்கிற நிலையை முந்துற மூதலித்துணர்வோம். இத்திருப்பல்லாண்டில் இன்ன திவ்யதேசத்தெம்பெருமானையென்று பலருமறியக் குறிப்பிட்டு ஒருவாறு பேசிப்போந்ததாகக்கொள்ள இடமில்லை. ஆழ்வாரின் திவ்ய சரிதையைக்கொண்டு, ஆழ்வார் பரதத்வ நிர்த்தாரணம் செய்து மதுரைமாநகர் மங்கலவீதியில் யானைமேல் ஏறியெழுந்தருளுமக்காலத்தில், திருமால் பெரிய திருவடி திருத்தோளிலே ஏறியருளி ஆகாயத்தில் ஸேவைஸாதித்ததாக ப்ரஸித்தியுளது. ஆகவே அப்பொழுது ஸேவை ஸாதித்தவன் பரந்தாமனான அவனேயென்றும் கூறுவர். ஸ்ரீகஜேந்த்ராழ்வான் கஷ்டப்பட்டுக் கதறியவொரு காலத்தில் அறைகுலையத் தலைகுலைய ஓடிவந்து அதன் கஷ்டங்கண்டு பிறகு தீர்த்துவைத்த குறைதீர, அதற்கு ஸஜாதீயமான ஒரு யானை மிகவாநந்தத்துடன் ஆழ்வாரையேறியருளப்பண்ணிக்கொண்டு வருகிறவைபவத்தைக் கண்ணாரக்கண்டுகளிக்க அப்பரந்தாமனான படியாகவே எழுந்தருளினானாகிலும், அவனை ஸேவிக்கப்பெற்ற ஆழ்வார் அவன் செய்தருளிய கிருஷ்ணனான விபவாவதாரத்தில் மல்லாண்ட திண்டோளான திவ்யாவயவத்தைக்கொண்ட திவ்யமங்கள விக்கிரஹத்தையுடையவனாகவே ப்ரதிபத்திபண்ணி, அவ்விபவாவதாரத்திலேயே முதன்முதலாக அநுபவத்தில் கால்தாழ்ந்தார். அப்படி, கிருஷ்ணனானபடியையநுபவித்து மேலே சில பாசுரங்களால் ராமனானபடியையும், நரசிங்கமானபடியையும், பேசியநுபவித்தாரேயா

கிலும், பெரும்பாலும் கண்ணனைபடியிலேயே விசேஷ நோக்கங் கொண்டு அவ்விபவாவதாரத்தையே அவதாரகாலந்தொடங்கி விசதமாக அநுபவிக்க ஆரம்பிக்கப்போகிற இவருக்கு, திருப்பல்லாண்டு பதினோராவது பாட்டில் திருக்கோட்டியூர் ப்ரஸ்தாவம் வரவே, அந்தத்திவ்யதேசத்தின் ப்ரஸக்தி காட்டி கண்ணனின் அவதாரத்தையும், அப்பொழுது நேர்ந்த வைபவங்களையும், அதன்மேல் பாலலீலைகளையும் பரக்கப்பேச ஆரம்பித்தார். அவ்வாறு பேசுவதில் பாதாதிகேசமதாகப் பாடியநுபவித்த பின்னர், தொட்டிலிட்டுத் தாலாட்டும் பருவத்தில் முதன் முதலில் குடந்தைக் கிடந்தானே தாலேலோ என்று அநுபவித்தார். அதன் பின்னர், கோல்கொண்டுவா என்று கூறுமிடத்தில் கொங்கும் குடந்தையும் கோட்டியூரும் பேரும் எங்கும் திரிந்து விளையாடுமேன் மகன், என்றார். இதற்கேற்ப, திருக்குடந்தை நகராளனை ஸ்ரீ ஆராவமுதாழ்வான் ஒரு கால விசேஷத்தில் வெகுநாள் திருக்கோட்டியூரிலெழுந்தருளியிருந்து எல்லாச் சிறப்புக்களும் கண்டருளியதாக முன்னோர்கள்மொழிந்தருளிய ப்ராமாணிக ஐதிஹ்யமொன்றையும், இவ்வர்ச்சாவதார வைபவ ரஹஸ்ய மறிந்த ரஸிகர்கள் இப்பொழுதும் சொல்லிப்போருவதுண்டு. அங்கு எழுந்தருளியிருந்ததற்கு அறிகுறியாக, வண்ணமாடங்கள் சூழ் திருக்கோட்டியூர், என்கிற திருமொழி, குடந்தைமாநகரில் நித்யாநுஸந்தானக்கிரமத்தில் வெகு நீண்டகாலம்முதல் இன்றளவும் ஸேவிக்கப்பட்டுவருகிறது. ஆக, திருக்கோட்டியூர் ஸம்பந்தத்தையிட்டு கிருஷ்ணவதாரத்தைப் பேசுமிடத்தும் அமுதனைச் சேர்த்துக் கொண்டே அநுபவங்கொண்டிருக்க வேண்டுமெனப் புலப்படுகிறது. அன்றியும், அப்பாட்டிலேயே தாம் அநுபவங்கொள்ளுகிற பெருமாளுக்கு, ஒரு அஸாதாரணமான அடையாளத்தையிட்டுப் பேசுகிறவர்போல அநுபவத்தைக்கொள்ளுமிடத்து எங்கும் திரிந்து விளையாடுமென்மகன் என்பதற்குமேலே, சங்கம் பிடிக்கும் தடக்கைக் குத்தக்க கோல்கொண்டுவாவேண்டுமென்றார். அத்திருமொழியிலேயே ஆலத்திலையான் என்கிற பாசுரத்தில், கோலப்பிரானுக்கோர் கோல் கொண்டுவா குடந்தைக்கிடந்தாற் கோர்கோல்கொண்டுவா, என்றருளினர். இங்ஙனம் அநுபவித்தபடிக்கிணங்கி, இன்று ஸேவித்தாலும் சங்கத்தைப்பிடித்து நிற்கிற பெருமையும், வைத்தகண்

வாங்கமுடியாதே கண்டுகொண்டே இருக்கக்கூடிய ஸௌந்தர்யமும் விளங்கிநிற்பது ஸ்ரீ ஆராவமுதாழ்வாரொருவனிடமே. இப்படியுள்ள பெருமையையெல்லாம் நன்கறிந்தே முதலெடுப்பிலேயே அத்திரு மேனியழகிலும், திவ்யாயுதங்களையேந்தி நிற்கிற நிலையிலும் ஈடுபட்டு அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டு என்றருளினார். ஆகாயத்தில் எழுந்தருளி ஸேவைதந்த ஸ்ரீ வைகுண்ட நாதனிடம் ப்ரவ்ருத்த மான ஓர் அநுபவ விசேஷத்தை ஆராவமுதாழ்வானிடம் கொள்வது எங்ஙனே பொருத்தமுடையதாகுமெனத் திகைக்கவேண்டாம். வைகுண்டநாதச் சார்ங்கேசோ ரங்கநாதோ மஹாப்ரபு: | ஏகஏவ த்ரிரூபோஸௌ லோகரக்ஷண ஹேதவே, என்கிற ப்ரமாண பலத்தால் சாலப் பொருத்தமுடையதே.

இப்படி ஆராவமுதமான திவ்யமங்கள விக்ரஹ விசிஷ்டனை படியிலே இத்திருப்பல்லாண்டு முதலாக நேர் நோக்குடன் ப்ரவ்ருத்தமானபடியினாலேதான், திவ்யப்ரபந்தத்திற்குலோபம் வாராதே ஒரு படி ஒரு காலத்தேப்ரகாசிப்பித்த படியும்.

இத் திருப்பல்லாண்டில் மற்றும் பாசுரங்கள்தோறும் பேசியிருக்கிறபடியும் கூடியவரையில் அமுதனிடத்து நன்கு பொருந்தக் கூடியதே.

பல், அடி,:—என்கிற இரண்டு பாசுரங்கட்குமேல், மூன்றுவது, வாழாள், என்கிற பாசுரத்தில் பேசப்படுகிற ராமாவதார வ்ருத்தாந்தமும், சார்ங்கமென்னும் வில்லாண்டான்றன்னை, என்கிற நிகமனப்பாசுரத்தின் இரண்டாவது பாதத்தில், வில்லேந்தி நிற்கிற படியை சுட்டிக்காட்டிப் பேசுவதாலே பொருத்தமுடையதேயாகும். மேல், (3—9—10)வது பாசுரமான, காரார் கடலையடைத்திட்டி லங்கைபுக்கு | ஓராதான் பொன் முடியொன்பதோடொன்றையும் | நேரா அவன் தம்பிக்கே நீளரசீந்த | ஆராவமுதனைப்பாடிப் பற அயோத்தியர் வேந்தனைப் பாடிப்பற | என்கிறபடியில், குடந்தையெம்பெருமானின் அஸாதாரணமான திருநாமத்தையிட்டு லங்காவ்ருத்தாந்தத்தைப் பேசுகிறார். இதன் ஒற்றுமையை இதிஹாஸத்தாலும் இனிதாக அறியலாம். ராவணவதத்திற்குப் பிறகு,

ப்ரஹ்மேசாநாதிகள் ஸ்ரீராமனையனுகி ஸ்தோத்திரம் செய்தவப்பொழுது, தன்னை அவர்கள் பரமபுருஷனாக வெளியிட்டுப்பேசினபடியைத்தகைந்து, ஆத்மாநம் மாநுஷம் மந்யே (என்னை மனிதனாக நினைக்கிறேன், என்றருளிய பெருமானை நோக்கி, தேவரீர், இன்னாரென வறியீரோ? ஸ்ரீமத் ரங்கவிமானத்தில் ஒன்றுசேர்ந்திருக்கிற ஸ்ரீசார்ங்கபாணியானவரன்றோ நீர்; அப்படியுள்ளவரன்றோ மற்றொருபடி ஸ்ரீராமநாமம் பூண்டு அவதார தசையிலும் உமக்கு அஸாதாரண ஸ்வரூப நிரூபகதர்மமான சார்ங்கமென்னும் வில்லைவிடாதே வந்து தயரத குமாரனாய் தோன்றியருளியதும். இதை நாங்களறியோமோ! என்று மநோபாவங்கொண்டு பேசுமிடத்து, சதுர்புஜ:| சார்ங்கதந்வா ஹ்ருஷீகேச: புருஷ: புருஷோத்தம: (நான்கு திருக்கைகளை யுடையவன், சார்ங்கமென்னும் வில்லையுடையவன், இந்திரியங்களையெல்லாம் அடக்கியாளுமவன், புருஷன், என்றும், புருஷோத்தமன் என்றும், சொல்லப்படுமவனும், தேவரீரே, என்றன்றோ பேசிவைத்தார்கள். ஸ்ரீவைதிக விமாநாதிஷ்டாதாவான ஆராவமுதன், ஸ்ரீரங்கவிமானத்தில் தானெழுந்தருளியிருக்கிற விமானத்துடன் ஒன்றாய்க்கலந்தெழுந்தருளியிருந்தானென்கிற வ்ருந்தாந்தத்தையும், அங்கிருந்து ஒருகாலவிசேஷத்தில் குடந்தைமாநகர் வந்தமர்ந்தானென்கிற வ்ருத்தாந்தத்தையும், ஸ்ரீ ஆராவமுதாழ்வான் வைபவத்தில் சிறிது விஸ்தாரமாக பேசியிருக்கிறபடியினாலே அங்கே காண்க.

இவ்வண்ணம் மூன்றும்பாட்டின் பொருத்தத்தை முதலித்துணர்ந்தபின்னர், நான்காம் பாட்டு நன்மைபெற்று நிற்பதை நன்கறிவோம்.

நான்காவது ஏடுநிலத்தில் என்கிறபாட்டில், நமோநாராயணாய வென்று பாடுமனமுடைப்பத்தருள்ளீர் என்று அருளிச்செய்வதில், அந்தப்பொருத்தமும் ஆராவமுதனிடத்து உளதே. கலியன், திருமொழி (1—1—2) ஆவியே என்கிறபாட்டில், குடந்தையேதொழுது! என்னைவினையுய்ய நான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும் நாமம் என்று, தான் அந்தநாமத்தைச்சொல்லித்தொழுது, மேல் ஏழ் (7)வதுபாட்டில் பிறரையும்நோக்கி, குடந்தையே

தொழுமின், நாராயணாவென்கிற நாமத்தைப்பாடி நீருய்மின்; அதுவே நற்பொருள்; என்றும், (6—10—1) குடந்தைமேவிக் கிடந்த நம்பிநாமம் சொல்லில் நமோநாராயணமே, என்றும் அரு ளிச்செய்து, நாராயண சப்தத்தால் சொல்லத்தகுந்தவன் ஸ்ரீ ஆரா வமுதனே என விளக்கிக்காட்டினர். ஆகவே அந்தநாமத்தைச் சொல்லிப்பாடப்பெறும் பெருமை இங்கு பொருத்தமுடைய தன்றோ.

ஐந்தாம் பாட்டு அழகுடன் அணுகிநிற்பதை ஆராய்வோம். இப்பாட்டில், தொண்டக்குலத்திலுள்ளீர் என விளித்து வந்தடி தொழுதாயிர நாமம் சொல்லி பண்டைக்குலத்தைத் தவிர்ந்து பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு என்மின் என்றருளிச்செய்வ திலும், அமுதனிடம் குறிப்புக்கொண்டு கூறியுள்ளதாகக்கொள்ள ஔசித்யமுண்டு. எவ்வாறெனில், பெ. திரு. (1—1—7) பாட்டில் கண்டவாதொண்டரைப் பாடுமவர்களைக் கூப்பிட்டார்; கூப்பிடப பட்டவர்கள் தொண்டரையே கண்டபடி பாடுமவர்களானதால் அப்படிப் பாடுமவர்களை, அத்தொண்டரிலும் கீழ்ப்பட்ட தொண் டர்கள் என்னத்தட்டில்லையே? அவர்களைப்பார்த்து, ஐயோ என இரக்கமுற்று, எம்பெருமானுக்குத் தொண்டக்குலத்தடியார்களாய் இருக்கத்தக்கவர்கள் உலகில் தொண்டர்க்குத் தொண்டாய் திரி வது தகாதெனத் திருவுள்ளங்கொண்டு, இவர்களையோ நீங்கள் உங்களுடைய அருமந்த கவிகளைப் பாழ்படுத்திக்கொண்டு பாடிப்போருவது; இச்செயலை விட்டொழித்து, நற்பொருள் காண்மின் பாடி நீருய்மின், என்றருளினர். அதுகேட்ட அவர்கள், ஸ்வா மிந், குடந்தையைத் தொழுகின்றோம்; நற்பொருள் காண்கின்றோம் அவனின் ஆயிரநாமத்தைச்சொல்லிப் பல்லாண்டுபாடினாலன்றோ எங்களுடைய குலம் பண்டைகுலத்தின் ஸம்பந்தத்தைவிட்டு நீங் கும்; அப்பொழுதன்றோ எம்பெருமானின் அடியார்களென ஆத ரிக்கத்தக்க தொண்டக்குலத்திலுளராய் ஆகுவோம்; அவன் தான் ஆயிரநாமமுடையவனோ, அதை அருளிச்செய்யவேணுமென்ன, அப்பெருமையை அருளிச்செய்கிறவர் போலன்றோ பெ.திரு.(1–5–4) ஊரான்குடந்தையுத்தமன், பேராயிரமுடையான், என அருளிச் செய்தார்போலும்.

ஆறுவதுபாட்டையாராய்வோம். அதில் ந்ருஸிம்ஹாவதார வ்ருத்தாந்தம் பேசப்படுகிறது. அதுவும் ஆராவமுதாழ்வானிடம் மிகப்ரஸித்தியுடையதே. இப்பெரியாழ்வார் ந்ருஸிம்ஹாவதாரத்தைத் தனியேசில விடத்தும், அர்ச்சையிற்சில எம்பெருமான்களிடம் சேர்த்தும் அநுபவிக்கிறார். அதாவது, திருக்குடந்தை, திருக்கோட்டியூர், திருவரங்கம் இம்மூன்று திவ்யதேசத்தெம்பெருமான்களிடம் இவ்விபவாவதாரத்தைச் சேர்த்தநுபவிக்கிறார். இவ்வாறு அநுபவிக்கிற இவர், (5—2—4) வது பாட்டில், தம் திருவுள்ளத்துக்கிசைந்தபடி, தம்மிடம் பேரன்புவைத்து தம்மைச் சூழ்ந்துந்ருஸிம்ஹமான உருவையும் காட்டிநிற்பதைக்கண்டு, வல்வினைநோய்காள் எனக்கூவி இது, சிங்கப்பிரானவனெம்மான் சேரும் திருக்கோயில் கண்டீர் பங்கப்படாதுய்யப் போமின், என்று, தம்மிடம் ந்ருஸிம்ஹன் செய்தருளிய கருணையையும், தமக்கும் இவ்வதாரத்திலுள்ள ஆதரத்தையும் அருளிப்போந்தார். அப்படி தம்விருப்பத்துக்கநுகுணமான ந்ருஸிம்ஹமான விபவாவதாரத்தைப் பேசுகையிலும், முதலில் திருக்குடந்தையிலேயே, (2—7—7) வதான குடங்களெடுத்தேறவிட்டு என்கிற பாசுரத்தில், இடந்திட்டிரணியன் நெஞ்சை யிருபிளவாக முன்கீண்டாய் | குடந்தைக்கிடந்த எங்கோவே | என்று அருளுகிறார். இங்கு பொதிந்துள்ள ரஸத்தின் திறமறிமின். இவ்வாழ்வார், ஸ்ரீ ஆராவமுதன் ஸௌந்தர்யத்தில்முதலிலே ஆழ்ந்தார்; ஆழ்ந்து அநுபவிக்கையில் ஸௌந்தர்யத்திற்கெல்லாம் கொள்கலமான கண்ணனைபடியே விசேஷமாக உருவு வெளிப்பாடாகவே எப்பொழுதும் தோன்றிநின்றது; அதோடு அழகியான்தானே அரியுருவன்தானே என்கிறபடி அழகுபடைத்த மற்றுமொரு அவதாரமான அழகிய சிங்கனின்படியும் தோன்றிநின்றது; ஆகவே இரண்டு அவதாரத்தின்படியையும் காட்டித்தன்னை அடிமைகொண்ட படியை (1—7) வதான மாணிக்கக் கிண்கிணி என்கிற சப்பாணிப்பருவத்தில், ஆயர்தம் கோகிலாவக்கோட்டாய் சப்பாணி குடந்தைக் கிடந்தானே சப்பாணி, என்றும், உளந்தொட்டிரணியன் ஒண்மார்பகலம் பிளந்திட்ட கைகளால் சப்பாணி பேய்முலையுண்டானே சப்பாணி என்றும், மற்றும்பல படிகளோடு ஸ்ரீ ஆராவமுதனிடத்தில் சப்பாணிப்பருவத்தை முழுநோக்காகக்

கொண்டநுபவித்து, அதன் இறுதிப்பாசுரத்தில், ஆட்கோள்ளத் தோன்றிய ஆயர்தம் கோவினை, என்றருளிப் போந்திருந்தாரேயாகிலும், அப்படி அவன் தம்மை ஆட்கொள்ளும்படியைத்தாமும் அங்கீகரித்தமை நன்கு தோற்ற பூச்சூடல், அநுபவ காலத்தில், குடக்கூத்தாடி அந்த ஆயாஸமெல்லாம் தீர அக்கோலத்துடனே குடந்தையில் வந்துகிடந்து என்னை அடிமைகொண்டு என்வாயினால் அவ்வடிமையை மூதலிப்பவன்போல், என்ஸ்வாமியே எனப்பரிவுடன் கூப்பிடும்படியும், அதுபோலவே, இரணியன் நெஞ்சையிருபிளவாக முன் கீண்டு, ஆச்ரித விரோதியை யழிக்கப்பெற்றோமென்கிற உகப்பினாலே அவ்வுகப்பு முகத்தில் தோற்றக் குடந்தையிலே வந்துகிடந்து ஆச்ரித ஸம்ரக்ஷணத்திற்கு வேண்டிய கல்யாண குணங்களைக்காட்டி, அடியேனை யடிமைகொண்டு, அவ்வடிமை தோற்ற மறுபடியும், என் ஸ்வாமியே, எனப்பரிவுடன் கூப்பிடும்படியும் செய்தருளினவனில்லையோ நீ! எனத்தோற்றும்படி இரண்டவதாரம் செய்தபெருமையையும் ஒரேபாசுரத்தில் சேர்த்தநுபவங்கொண்டு, இரண்டிடத்திலும், எங்கோவே எங்கோவே, என்று அருளிச்செய்கிற அழகு அநுபவ ரஸிகர்களை என்படுத்துமோ என்றன்றோ எண்ணத்தக்கதாக விருக்கிறது. மற்றும் இப்பாசுரத்தின் விரிவு, இதன் உரைவரையுமிடத்து விரிக்கப்படும். ஆக, ந்ருஸிம்ஹமஃ னபடியை இங்கே அநுபவித்து, குடந்தையன் கோவலன் குடியடியாராகவே ஆட்பட்டமை தோற்ற இவரே எங்கோவே என்று பேசுவதால், எந்தையென்கிற பாசுரம், ந்ருஸிம்ஹரூபமும் கொண்டவனை ஆராவமுதனிடம் ஏழ்படிகால் துடங்கிவந்து வழி வழியாட்செய்கின்றோம், என்று நேரில் பேசிப்போந்ததெனச் சொல்லத்தக்கதேயன்றோ?

இங்ஙனம், ஆறுவது பாட்டு, ஆராவமுதனிடம் அன்புடன் அணுகிநிற்பதை ஆராய்ந்தபின்னர், ஏழாம்பாட்டு எவ்வகை ஏற்றமுற்றிருக்கிறதென்பதை ஏத்திக் குனிப்போம்.

ஏழாம்பாட்டில், வாணனையாயிரந் தோள்துணித்தவனுடைய செயல் பேசப்படுகின்றது. இச்செயலையிட்டு அமுதனை ஆழ்வார்களோரிடத்தும் அநுபவியாவிடினும், மற்றும் க்ருஷ்ணாவதார சேஷ்டிதங்கள் பலவற்றையிட்டு இப்பெருமானை அநுபவித்திருப்

பதால் அப்படியுள்ள பெருமைபற்றி இப்பாட்டின் பொருளும் இப்பெருமானிடம் ஸங்கதமென்று கொள்ளலாம்; எந்தை, என்கிற பாட்டில், வந்து வழிவழியாட்செய்கின்றோம் என்னுப்போலவே அதை சிறிது வாக்கியங்களை வேறாகக்காட்டி குடிகுடியாட் செய்கின்றோம் என்று, கூறப்பட்டிருக்கிறது. ஆகவே, முன்பாட்டிலுரைத்தலண்ணமே, தாஸ்யேஸ்வேஸ்தாபயேத்ஸ்வாந் (தன்னடியார்களை தன்னுடைய தாஸ்யத்தில் நிலைப்பித்துக்கொள்ளுவன்) என்கிற பெருமை ஸ்ரீ ஆராவமுதனிடமே மிகப்பிரஸித்திபெற்றதானபடியினால் அக்காரணம்பற்றியும் இப்பாட்டில் அநுபவத்தை அமுதனிடம் பொருத்தமுள்ளதாகக் கொள்ளலாம்.

இனி எட்டாம்பாட்டில், எவ்வாறு இறைஞ்சப்படுகிறதென்பதை இனிதாக உணர்ந்திடுவோம்.

இவ்வெட்டாம்பாட்டில், நியதமுமத்தாணிச்சேவகமும் என்றருளப்படுகிறது. இப்படி கைங்கர்யத்தை வேண்டி, செய்ய வேண்டுமிடத்தே செய்துநிற்கிற மேன்மை முன்னிரண்டுபாட்டுக்களில், "வந்துவழிவழி யாட்செய்கின்றோமென்றும்" குடிகுடியாட் செய்கின்றோமென்றும் முறையே கூறப்பட்டது. அப்படிப்பட்ட கைங்கர்யம், எப்பொழுதுசெய்யக்கூடியது, எங்குசெய்யக்கூடியது என்பதையே, எப்பொழுதும், அந்தரங்கத்தில்கூட அவன் ஆஸ்தானத்தருகில் அணுகிநின்றடிமை செய்வது என்று இப்பாட்டில் விரித்துப்பேசுவதாலே அங்கெல்லாம் சொன்னபடியே, அவ்வடிமை அமுதனிடத்தே அமைந்திருக்குமென அறிக. மேலும் இப்படி அடிமைசெய்யப்படுகிறவன், எவனென்னவேண்டாம்; ஸாக்ஷாத் சேஷசாயி, கருடவாஹனன், என்றும் கூறுவதாலும், அவைகளில் முன்னால் அருளிய பையுடை நாகத்தான், என்பது இங்கே ப்ரத்யக்ஷாநுபவஸித்தமானதாலும், மேலுள்ளதையும் இங்கேயே அநுபவத்தில் கூட்டிக்கொள்ளத்தட்டில்லையே? இங்கு சொன்ன சேஷசாயித்வத்வத்தை மேற்பாட்டில் நன்றாக நிரூபித்துணர்வோம்.

ஒன்பதாவது பாட்டின் ஒற்றுமைப்பாடுதான் எவ்வாறுள்ளதெனில் அதை உணர்ந்து உகப்போம். இப்பாட்டில், "உடுத்துக் களைந்த நின்பீதகவாடையுடுத்து, என்றும், தொடுத்த துழாய்மலர்

சூடிக்களைந்தனசூடும் என்றும், படுத்தபைந்நாகணைப் பள்ளிகொ ண்டானுக்குப் பல்லாண்டு கூறுதும், என்றும், பதப்ரயோகங்கள் காண்கின்றன; அதாவது, அவன் அரையில் சாத்திக்களைந்த பட்டாடையைத் தாங்களுடுத்தியும், அவன் சூடிக்களைந்த துழாய் மலரைச்சென்னியில் சூடியும், ஆகவே அவனடியார்களென்கிற தன்மைபெற்று, நாகத்தணையில் பள்ளிகொண்ட பெருமானுக்கு மங்களாசாஸனம் பண்ணுகிறோம் எனப்பொருள்படுகிறது. இப்பாட்டிற்கு முழுநோக்கும் ஸ்ரீ ஆராவமுதனிடமே என்னலாம். ஏனெனில், எம்பெருமானிடம் கைங்கர்யங்களனைத்தையும் வேண்டிப் போந்த ஆண்டாளும், பீதகவண்ணவாடையும், நீலார்த்தண்ணந் துழாயும் கிடைக்குமிடம் குடந்தையெம்பெருமானிடமெனக் குறிக்கொண்டு, அவ்வாடையின் காற்றையும், அத்திருத்துழாய் சூடுதலையும் விரும்பிப்போந்தாளென்பது மின்னும், மண்ணும் நன்கறியும். இதன்விரிவு, "குடந்தையின் கோவலனிடத்து ஆழ்வார்கள் ஈடுபாடும், ஆண்டாளின் அடங்காக்காதலும், என்கிற விண்ணப்பத்தில் விஸ்தாரமாகப்பேசப்பட்டிருப்பதும் காண்க. இப்படி, பீதக வண்ணவாடையும், துழாய்மலரும் சூடி, படுத்த பைந்நாகணைப் பள்ளிக்கொண்டவன், என்றால் இவ்வெம்பெருமானைக் குறிக்கொள்ளாது விட்டிட்டு வேறு எவ்விடத்தே அவ்வாசகம் சென்று சேரும். ஆதிசேஷனில் அறிதுயிலமர்ந்த பெருமான்களின் பெருமைபேசுமிடத்து, இன்று ஸேவித்தாலும், சற்று எழுந்திருக்கும் அவஸரம்போல் மிகஅழகாக ஸேவைஸாதிப்பது திருக்குடந்தையிலன்றோ ? இக்கிடையழகிலாழ்ந்த காரிமாறன் சடகோபன், ஏரார்கோலந்திகழக்கிடந்தாய் என்றன்றோ அருளிப்போந்ததும். பக்திஸாரர்தானும், படுத்தபைந்நாகணைப் பள்ளிகொண்ட பெருமான்களைப் பகருமிடத்து, நான்முகன் திருவந்தாதி, (36) வதில், நாகத்தணைக்குடந்தையென்று, முதன்முதலில் இவ்வெம்பெருமான்தன்னையன்றோ எத்திப்பேசியதும். இப்படியெல்லாம் இப்பாட்டில் பணித்திருக்குமவைகள் வெகுஅழகாக அமுதனிடம் அமைந்திருக்குமாறுதான் என்னே !

இவ்வண்ணம் ஒன்பதாம்பாட்டின் ஒற்றுமையை உணர்ந்து உவந்தபின், பத்தாவது பாட்டின் பொருத்தமுடைமையைப் பக்தியுடன் பரிசீலனம்பண்ணுவோம்.

பத்தாம்பாட்டில், திருமதுரையில் அவதரித்தும், அங்கே சிலேகுனித்தும், பின்னும், காளியன்பொய்கையிற் சென்று அக் காளியன் பணவரங்கில் பாய்ந்து பன்னடம் பயின்றதுமான பெருமைபேசப்படுகிறது. இச்சரிதையையிட்டு அமுதனே எவரும் ஏத்தாவிடினும், கண்ணனுனபடி அமுதனிடம் ப்ரஸக்தியுள்ளதானதாலும் முன்பாட்டுக்களில் பேசப்பட்ட அடிமையையே ஏத்திப்புகழ்ந்து இப்பாட்டின் பொருளேயும் அமுதனிடம் பொருத்தமுற்றதாகக் கொள்ளக்குறையில்லே.

இப்படி, பத்துப்பாட்டுக்களும் இங்கே, பற்றுள்ளதென்பதைப் பரிசீலனம் செய்தபின், பதினேராவது பாட்டும் பாங்குடனே நெருங்கி நிற்கும்படியை நேசமுடன் பேசிடுவோம்.

பதினேராவது பாட்டில், செல்வநம்பியைப்போல் "நானுமுனக்குப் பழவடியேன், என்றும், "நமோநாராயணுவென்று நாமம் பலபரவி,, என்றும், பல்வகையாலும் பவித்திரனே,, என்றும், பதங்கள் காண்கின்றன. செல்வநம்பியைப்போல், என்று பேசுவதில், தமக்கு அபிமத திவ்யதேசமான, திருக்கோட்டியூரில், அமுதனும் எழுந்தருளியிருந்தாலுகையினுலே, அங்கு ப்ரியாதிதியாக கோட்டியூர் நாதனருகில் இவ்வமுதன் எழுந்தருளியிருந்த இருப்பில் மிகவிருப்புற்று அடிமைபூண்டிருந்தனன், என்றும், நமோ நாராயணுவென்று நாமம்பல பரவி, என்பதில் முன்சொன்னபடியே, ஆராவமுதனேயே, அந்தநாமத்தையும், அதுபோல்வனமற்றும் திருநாமங்களேயிட்டும் ஏத்துகை ஏற்கும் என்றும், பல்வகையாலும் பவித்திரனே என்பதில், அதுவும் மேற்பாட்டில் குறிப்பிடப்போகிறபடியில் அமுதனேயே பேசிற்ருகும் என்னும், கொள்ளத்தக்கது.

ஆக, பதினெரு பாட்டுக்களால் அமுதனிடம் பாங்கான அநுபவத்தைப் பேசித்தெளிந்தபின், பன்னிரண்டாவது பாட்டையும் பரமாநந்தமாக அநுபவித்து அகமகிழ்ந்திடுவோம்.

பன்னிரண்டாவது பாட்டில், "பவித்திரனே, பரமேட்டியை சார்ங்கமென்னும் வில்லாண்டான் றன்னே, என மூன்றுபதங்கள்

மூன்றுறக்காண்கின்றன. இம்மூன்றுபதங்களும் அழுகாகத்தங்கள ர்த்தத்தை அமுதனிடமே கொள்ளுமாறு குலாவிநிற்கின்றன. பவித் திரன் என்பது, இப்பெருமான், ஆச்ரிதர்களின் பாபத்தைப்போக்கி நிற்குமவன் என்பதை யுரைக்கிறது. இப்பெருமைதான், ப்ரஹ் மஹத்யாதயோகோரா: மஹாபாதகஸஞ்சயா: | கும்பகோணேசயா நஸ்யவிஷ்ணோர் நச்யந்திதர்சநாத் (பயங்கரமான ப்ரஹ்மஹத்தியை முதலான பெரும்பாபத்தின் கூட்டங்களும் குடந்தையில் கிடக் கிற திருமாலின் கடாக்ஷத்தினுல் நாசமடைகின்றன.) என்றிவை முதலான பலப்ரமாணங்களால் ப்ரஸித்தியுள்ளதேயாகும்.

பரமேட்டியை, என்பது, ஸ்ரீவைகுண்டத்திலிருக்குமவனைச் சொல்லிற்றுகிலும், 1, 2, பாட்டின் அநுபவத்தில் காட்டியபடி அமு தனிடம் அமைந்திடுவதும் காண்மின்.

சார்ங்கமென்னும் வில்லாண்டன்றன்னே, என்பது, அமுதனை யகன்று எங்குதான் போய்புகும்.

இம்மூன்று பதங்களின் பொருத்தம் அறிந்ததற்குமேல் பின் னும் சிலபதங்களிலும் ஸ்வாரஸ்யம் காணலாகிறபடி பாரீர்.

ஓர் வில்லியை விரும்பிப்பாட வில்லியின்புத்தூரில் விட்டு சித்தர் அவதரித்தாரென அழுகாகக்கொள்ளலாம். அப்படியே தேவம் சார்ங்கதரம் என்கிற ச்லோகத்தின்படியில், ஓர் வில்லியை வில்லிபுத்தூர்விட்டுசித்தன் விரும்பியசொல்லைக்கொண்டு விரும்பியே த்தினுல், விண்ணுலகில் விண்ணவர்தம் குழாங்களுடன் வேதம்பாடி பண்ணுலகிற்படியாத விசையாற்பாடும் பல்லாண்டையே, பல்லாண் டும்பாடி விளங்கிநிற்பர், எனவும் மிக அழுகாகக்கொள்ளலாம்.

இத்திருப்பல்லாண்டில், பலபேர்களின் அநுபவம்போல் பேச ப்பட்டிருந்தாலும் விட்டுசித்தன் விரும்பிய சொல் என்கிற இறு திப்பாட்டின்படி, பெரியாழ்வார் தம்மதான அநுபவமாகவேவைத்து பேசப்பட்டது.

அமுதனிடம் இவ்வநுபவங்கொண்டதானது, குடந்தையன் கோவலன் குடியடியார் திரளிலுளராய், திருக்குடந்தை, இளைய

வில்லியடிகளெனப் போற்றப்படுமவராய், ஆழ்வார்களின் அருளிச்செயல்களில் அஸாதாரணமான அநுபவரஸிகர்களாய் விளங்கின முன்னோர்கள், விட்டுசித்தர் மங்களங்கள் பாட வந்த பெருமாள் என்று அநுஸந்தானம் செய்துவந்தபடியைப் பின்பற்றி, எம்மடிகள்தாமும் அநுஸந்தித்துக்கொண்டுவந்து, அடியேன்பாலருள் புரிந்தருளிச்செய்தமையை சென்னிமேற்கொண்டே, "திவ்யப்ரபந்த திவ்யார்த்தாநுபவ அம்ருதவர்ஷிணீ" என்கிற திருப்பல்லாண்டின் இவ்வுரையில், ஆராவமுதமான வெம்பெருமானின் சேர்க்கையையும் நம்மாசிரியரருளியபடி, அடியேனுள்ளத்துறைந்திருக்கின்றதை வெளியிடவேணுமென்கிறபேரவாவினால் என அறிக.

இங்குபோல், எந்தமூர்த்தியில், எப்படி அநுபவிக்கலாமோ, அங்கெல்லாம் தக்கபடி அநுபவம் கொள்வது சாலச்சிறக்கும்.

அப்படி எந்த மூர்த்தியில் அநுபவத்தைக் கொண்டாலும், தனித்திவம் சேர்ந்து தமருடனே, பாவளரும் தமிழ்ப் பல்லாண்டிசையுடன் பாடப்பெறுவதும் திண்ணம்.

இவ்வநுபவக்ரமமும் க்ரந்த விஸ்தரபயத்தினால் ஒருவாறு சுருங்க வெழுதப்பட்டதாதலால் கூர்மதியுடையார் குறிக்கொண்டு குணங்கொள்வாரித்தனை (12)

அடிவரவு. பல் அடி வாழ் ஏடு அண்டம் எந்தை தீ நெய் உடுத்து எந்நாள் அல்வழக்கு பல்லாண்டு வண்ணம்.

மூன்றும்பாட்டு முதலாக ஈற்றடியில் முடிவுபெறுகிற க்ரமம். ஆதிகூறுதும், அநந்தரம் கூறுமின், அண்டம் என்மின், எந்தை பாடுதும், (தீ, உடுத்து எந்நாள்கூறுதும்) நெய்யும் அல்லும் கூறுவனே.

முதற்பத்து, முதல்திருமொழி, திருப்பல்லாண்டு உரை முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானார் தேசிகன் திருவடிகளே சரணம்.





ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் தேசிகன் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து— இரண்டாந்திருமொழி.

### வண்ணமாடங்கள்.

வண்ணமாடங்கள் சூழ் திருக்கோட்டியூர்
கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்
எண்ணெய் சுண்ணமெதிரெதிர் தூவிட
கண்ணன் முற்றம் கலந்தளறாயிற்றே. (1)

| | |
|---|---|
| வண்ணம் | அழகியதான |
| மாடங்கள் | வீடுகளினால் |
| சூழ் | சூழப்பட்டதான |
| திருக்கோட்டியூர் | திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருக்குமவனும் |
| கேசவன் | கேசவனென்ற திருநாமமுடையவனும் |
| நம்பி | கல்யாண குணங்களெல்லாவற்றினாலும் நிறைந்தவனுமான எம்பெருமான் |
| கண்ணன் | ஸ்ரீ கிருஷ்ணனாக |
| இன் இல் | இனிய வீடான ஸ்ரீ நந்தகோபர் திருமாளிகையில் |
| பிறந்து | அவதாரம் செய்தருளின அப்போது |

(திருவாய்ப்பாடியிலுள்ளவர்கள் தங்கள் ஸந்தோஷத்திற்குப் போக்குவீடாக)

| | |
|---|---|
| எண்ணெய் | எண்ணெயையும் |
| சுண்ணம் | மஞ்சள் பொடியையும் |
| எதிர் எதிர் | ஒருவருக்கொருவர் எதிருக்கெதிராக |
| தூவிட | தூவ |

(அப்படி எண்ணெயையும் மஞ்சள்பொடியையும் தூவுவதனால்)

| | |
|---|---|
| கண் | இடமுடைத்தானதும் |
| நல் | அதிவிலக்ஷணமுமான |

| | |
|---|---|
| முற்றம் | (ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையின்) திருமுற்றமானது |
| கலந்து | (எண்ணெய் மஞ்சள்பொடி இவைகள்) ஒன்றாய் சேர்ந்து |
| அளறு | சேறாக |
| ஆயிற்று | ஆகிவிட்டது. |

அழகிய மாடங்களால் சூழப்பட்ட திருக்கோட்டியூரில் ஸர்வாதிகனாய் எழுந்தருளியிருக்கிற வெம்பெருமான் கண்ணனை கோலங்கொண்டு திருவாய்ப்பாடியில் ஸ்ரீநந்தகோப குமாரனாக அவதாரம் செய்தவக்காலத்தில், கிருஷ்ணாவதார வ்ருத்தாந்தம் கேட்கலுற்ற ஆய்ப்பாடியிலுள்ளோரனைவரும் நந்தகோபர் திருமாளிகையின் திருமுற்றத்தில் ஒன்றுசேர்ந்து ஆநந்தத்தினால் எள் நெய்யையும் மஞ்சள்பொடியையும் ஒருவருக்கொருவர் எதிரெதிர் தூவிக்கொண்டு கூத்தாட எண்ணெய் மஞ்சள்பொடி இவைகள் ஒன்றுசேர்ந்தும் இவர்கள் அவைகளை மிதித்துப் போருவதாலும் மிக விசாலமான முற்றம் முற்றும் சேறாகவாகியது.

கீழ்த்திருமொழியில், ஆழ்வார் பரந்தாமனை திருமாலை ஸேவிக்கப்பெற்று அவனுடைய திவ்யாவயவ திவ்யஸௌந்தர்யத்திலே கால்தாழ்ந்து, செய்வதின்னதெனத் தெரியாதே திகைத்து, பரிவின் மிகுதியால் 'பல்லாண்டு பல்லாண்டு' எனப்பலபடியும் பாடிநின்று அதோடும் நில்லாதே தம்மைப்போல அனைவரும் அப்பரந்தாமனைப் பல்லாண்டுபாடிப் பராங்கதி கண்டுகொள்ளவேண்டுமெனக்கரைபுரண்ட கருணையுடன், உலகிலுள்ளோரை உத்தேசித்து, திருமாலுக்குத் திருப்பல்லாண்டு பாடுகையே சிறந்ததெனவும், அதனாலடையத் தகுந்த பயனின் பெருமையும் பேச்சிலடங்காத வண்ணமுள்ளதென்பதையும், பரக்கப்பேசிப் பலரையும் பாங்காகப் பரமனடிபணிந்துய்யும் வண்ணமும் திருத்தியருளி ஒருபடி தம் அநுபவத்தைக்கொண்டார். அப்படியநுபவிக்கையில் கிருஷ்ணாவதாரமே மிகுதியாக அநுபவவிஷயமாய் வளர்ந்துவந்தது. (அர்ச்ய: ஸர்வ ஸஹிஷ்ணு: அர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதி: ஆராதிக்கத்தகுந்தவன் எல்லாவற்றையும் பொருத்துக்கொள்ளுமவன் ஆராதகர்களுக்கு அதீனமான தன்னுடைய ஸமஸ்தமான ஆத்மஸ்திதியையு

முடையவன்) என்று பேசப்படுகிற அர்ச்சாவதாரத்தில், ஆழ்வார்களுக்கு, ஐயோ, ஒருவராலும் தடுக்கமுடியாத ஸ்வாதந்த்ரியத்தை யுடையானொருவன், ஆராதகர்களின் அபிமதத்திற்கு ஒத்தபடியாக, அவர்கள் வேண்டும்போது நித்திரைதெளிந்தெழுந்தும் திருமஞ்சனமாட்டும்போதுநீராடியும், ஆடையுடுத்தும்போதுஉடுத்தியும், தளிகை நீட்டும்போது தான் அமுது செய்தும்' நித்திரைபண்ணக் கடவை,என்றால், அறிதுயிலமர்ந்தும் இப்படி பராதீனவ்ருத்தியுடன் பரிமாறுவதே! என, மிகவும் ஈடுபட்டிருக்கும் தன்மைபோலே, கிருஷ்ணனை விபவாவதாரத்திலும் மிகவும் ஈடுபாடுள்ளதேயாகிலும், அவ்விபவாவதாரம் தன்னையும் உகந்தருளின நிலங்களிலேயுள்ள அர்ச்சையில் சேர்த்தநுபவிக்கையிலேயே விசேஷநோக்கமென்பதும் ப்ரஸித்தியுள்ளதே. இப்படி எல்லா ஆழ்வார்களுக்கும், கிருஷ்ணவதாரமென்றால் பரிவுதோன்றப் பேசுவது பொதுவாகவிருந்தாலும், அதிலும், ஸ்ரீஷ்ம ஜ—ஷாமஹே க்ருஷ்ண த்ருஷ்ண தத்வமிவோதிதம், (கண்ணனிடமுள்ள காதலே ஒருவடிவெடுத்து வந்துதித்த சடகோபமுநியை ப்ரீதியுடன் ஸேவிப்போம்) என்கிறபடி பேசப்படுகிற நம்மாழ்வார் கிருஷ்ணவதாரத்தில் பலபடி ஈடுபட்டுப் பாசுரமிட்டாலும், ஆண்டாள் தானும், கண்ணனிடம் அடங்காக்காதலுடன், கண்ணனேனென்னும் கருந்தெய்வம் காட்சிப் பழகிக் கிடப்பேனை, என்று கதறி நின்றாலும், கிருஷ்ணவதாரத்தையும், ராமாவதாரத்தையும் ஒருபடியே ஏத்திநின்ற குலசேகரப்பெருமாளுக்கு, ராமாவதாரத்தில் விசேஷமான ஈடுபாடு என்று சொல்லுமாப்போலே, இவ்வாழ்வாருக்கு கிருஷ்ணவதாரத்தின் அநுபவமே தஞ்சமென்று சொல்வது விஞ்சியவார்த்தையல்ல. இவர் தாம், கிருஷ்ணவதாரத்தில் அவதாரகாலந் தொடங்கி பாலலீலைகளனைத்தையும், அதன்மேலுள்ள அவ்வவசேஷ்டிதங்களையும், எவ்வண்ணம் அநுபவித்தால் சுவையுடைத்தானதாகவிருக்குமோ, அதற்கேற்ற தன்மைகளையெல்லாம் தாம் ஏறிட்டுக்கொண்டு அநுபவிக்கும் அழகு ஒரு வார்த்தையிட்டுச் சொல்லவொண்ணாததாக விருக்குமானதாலே, கிருஷ்ணவதாரத்தில், மிகப்பரிவுதோன்றப் பேசுமொருவர், என்றே போற்றத்தக்கவராயிருப்பர். இப்படி கிருஷ்ணவதார அநுபவரஸிகரானவிவர், அவதாரகால வைபவத்தை அழகாகப்

பேசுகிறார் இவ்விரண்டாந்திருமொழியில். கீழ்த்திருமொழியில் திருக்கோட்டியூர், பேசப்பட்டபடிக் கிணங்கி அந்நினைவுபின்னாட்டுவதாலும், திருக்கோட்டியூர் நாதனிடம், குருந்த மொசித்தான் என்று, இவர்தாமும், கன்று கொண்டு விளங்கனி யெறிந்தானிரைக் கழிவென்று, மாமழைநின்று காத்துகந்தான், என்றும், பூங்குருந்தாசித்தானை காய்ந்தரிமாச் செகுத்து, என்றும், கலியனும் கிருஷ்ணாவதாரத்தைப் பொருந்தப்பேசும்படி அவ்வவதாரத்தின்படி கோட்டியூரிலும், காணலாயிருப்பதாலும், முதலிலே, கோட்டியூர் பேயானைக் குறிப்பாகக்கொண்டு வண்ணமாடங்கள் சூழ்திருக்கோட்டியூர், என்று எத்திக்குணிக்கின்றார்.

வண்ணமாடங்கள்— என்றது, அழகிய திருமாளிகைகளால் நிரம்பப்பெற்றதென்பதைச் சொல்லுகிறது. இதுதான், நிழலெழுந்திண்ணை சூழ்திருக்கோட்டியூர் (அழகியதாயும் நல்லதாயுமுள்ள ரத்நங்களாலும் மரகதப்பச்சையாலும் இழைக்கப்பெற்றதாய் அதனால் நிழலாடும் திண்ணைகளால் நிறைந்த திருக்கோட்டியூர்) என்று, மேல் (4—4—3)ல், இவர் தம்மாலேயே பேசப்படப்போவதையே உட்கொண்டு இங்கே ஒருபடி உரைத்தபடியாம்.

திருக்கோட்டியூர்— என்றது, கோஷ்டீபுரம் எனவழங்கப்படும் திருநகரியைச் சொல்லுகிறது. இந்த ஸ்தலத்தை, இரணியன் கொடுமை தாங்கமாட்டாத தேவர்கள் அவனைக் கொல்லுமுபாயத்தைச் சிந்திக்கக் கூட்டங்கூடின இடமாதல்பற்றி, அவர்கள் கோஷ்டியாக இருந்தமையைக் குறிக்கொண்டு, கோஷ்டீபுரம், என்றும், கோட்டியூர் என்றும், வடமொழி தென்மொழிகளில் வழங்கலாயிற்றென்பர் மூதறிவாளர். இந்த ஐதிஹ்யத்தை மெய்ப்பித்துப் பேசுவதுபோல், இவ்வாழ்வார் இத்தலத்தெம்பெருமானைப் பின்னும் மங்களாசாஸனம் செய்கிற (4—4)ல், 6–9பாட்டுக்களில், திருக்கோட்டியூர் நாதனை நரசிங்கனை, என்றும், திருக்கோட்டியூர் நம்பனை நரசிங்கனை, என்றும், அருளிச்செய்யுமாற்றையும் காண்க.

கண்ணன்— என்றது, ஸௌலப்யத்திற்குக் கொள்கலமான கிருஷ்ணன் என்பதைச் சொல்லுகிறது. கிருஷ்ணன் என்றால், தன்னுடைய ஸௌந்தர்ய ஸௌலப்யாதி கல்யாணகுணங்களால்

அனைத்துலகையும் தன்வசமாக இழுத்து தனக்கே அடிமையாக ஆக்கிக்கொள்ளுமவன் என்றும் பாவம். கிருஷ்ணன் என்கிற, வடமொழிச்சொல்லை கண்ணன், என்று தென்மொழியில் மொழிந்துள்ளார்கள்.

கேசவன்— என்பது, பிரமனையும், ஈசந்தன்னையும் படைத்து, காத்தல் முதலியன கார்யங்களெல்லாம் செய்துநிற்கும் திருமாலைப் பேசிநிற்கிறது. அன்றியும், அழகிய மயிர்முடியையுடையானொருவன், என்றும் சொன்னபடியாம். அதுவுமன்றியும், கேசிஸம்ஹாரம் செய்து தன்ஸத்தை காத்து, நம்மையாளுமவன், என்றும், சப்தத்தின் சிறிது ஒற்றுமையான பாகங்கொண்டு ஒருபடி நினைப்பூட்டப்பட்டபடியாம். மற்றும் கேசவ சப்தத்தின் பெருமை தனித்துப்பேசுமிடத்தே பேசுவோம்.

நம்பி— என்றது, பரிபூர்ணன் என்பதைச் சொல்லுகிறது. இன்னபடியால், என்று ஒரு அடைமொழி இடப்பெறாமையாலே, எல்லாப்படியாலும் பரிபூர்ணன் என்றபடியாம்.

பிறந்தினில்— அவதரித்தபடி அநுபவிக்கத்தக்கதாய் விளங்கின ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையைச் சொல்லுகிறது. மதுராமாநகரத்தில் கஞ்சன் அரண்மனையில் பிறந்திருந்தும், அங்கு, அது சிறைக்கூடத்திலேயாகையாலும் அங்குள்ளோர் கஞ்சன் கருத்துக்கிணங்கினபடியில், கொடியவராய் நிற்கையாலும், அங்கு அவதரித்ததாகச் சொல்லவும், கூசி, இனியதான நந்தன்வீட்டில் வந்து பிறந்தருளினானென்கிற ஆழ்வாரின், பரிவின் மிகுதியை என்சொல்லவல்லோம் நாம்.

எண்ணெய் .... .... .... கலந்தளறாயிற்று என்றது, கண்ணன் அவதாரத்தைக் கேட்கவுற்று அவனை வந்தடி தொழுது, அவனைக் கண்ட களிப்பின் மிகுதியால் ஊரிலுள்ளோரனைவரும் நந்தகோபன் திருமாளிகையின் திருமுற்றத்தே வந்துசேர்ந்து தங்கள் களிப்பிற்கு போக்குவீடாக எண்ணெய், மஞ்சள்ப்பொடி இவைகளை ஒருவர்மேலொருவர் தூவிக்கொண்டும் ஆநந்ததாண்டவமாடுகையாலே அம்முற்றம் முற்றும் ஒரே சேறாகவாகியது, என்பதைச் சொல்லுகிறது. கண்ணன் முற்றம் என்றால் மிகவிசாலமான முற்றமென்

ருதல், அன்றிக்கே, வீட்டிற்குத்தலைவனாகக் கண்ணன் அவதரித்து விட்டபடியால், அவன் திருமாளிகைத் திருமுற்றம், என்றுதல் கொள்க.

இங்கு, கோட்டியூர், கண்ணன், கேசவன், நம்பி, பிறந்தினில், என்று ஆழ்வார் அநுபவிக்கிற அழகை ஆராய்மின். கோட்டியூர் என்பதால், மிகவும் ஸௌலப்யத்தைக் கொண்ட அர்ச்சாவதாரத்தைப்பேசி, கண்ணன் என்பதால், அதற்குமேலுள்ள, விபவாவதாரத்தைப்பேசி, கேசவன், என்பதால், ஸர்வஜகத்காரணவஸ்து என்பதைப்பேசி, நம்பி என்பதால், இப்படியெல்லாம் தாம் செய்யும் அவதாராதி செயல்களுக்குக் காரணம், தன்னிடம் சில குறைகண்டு அதைமாற்றி, தன்னை பூர்ணனாகச் செய்துகொள்ளக் கருதியோ? என்று எண்ண இடமிராமல், தானான தன்மையிலேயே அவாப்த ஸமஸ்தகாமன், ஆகவே பரிபூர்ணன், என்பதையும் பேசி, இப்பெருமைகளெல்லாங்கொண்ட வொருவன் தாழ்ந்துவந்து பிறந்தருள்வதே; இது என்! எனத்திருவுள்ளம் போலும்; அன்றிக்கே அவதரிக்க அவதரிக்கப் புகர்படைத்தவனாகிறான், என்பதற்கேற்ப, வஸுதேவகுமாரனாய் வந்து தோன்றியபிறகுதான், திருக்கோட்டியூரில் வாஸம் செய்யும் பரமஸௌலபன் எனப்பட்டான்; கேசவசப்த ப்ரதிபாத்யனுமானான்; கல்யாணகுணங்களெல்லாவற்றாலும் நிரம்பப்பெற்று பரிபூர்ணனானான்; என்றெல்லாம் பாங்காகக் கொள்ளலாம் போலும்.

இப்பாட்டிற் பேசப்பட்ட எண்ணெய் முதலானது தூவுகிற செய்கையை ஸ்ரீ பாகவதம், (10—5—12) வது ச்லோகமான, தா ஆசிஷ: ப்ரயுஞ்ஜாநா: சிரம் பாஹீதி பா(லை)லகே | ஹரித்ராசூர்ணதைலாத்பிஸ்ஸிஞ்சந்த்யோ ஜநமுஜ் ஜகு: || என்பதாலும் அறியலாம். (1)

ஓடுவார் விழுவாருகந் தாலிப்பார்*
நாடுவார் நம்பிரா னெங்குற்றானென்பார்*
பாடுவார்களும் பல்பறை கொட்டநின்று*
ஆடுவார்களு மாயிற்றாய்ப் பாடியே* (2

| | |
|---|---|
| ஆய்ப்பாடி | திருவாய்ப்பாடியானது |
| ஓடுவார் | (நந்தகோபற்கு மகன் பிறந்தானெனக் கேட்டு மகிழ்வுற்று) ஓடுபவர்களும் |
| விழுவார் | (மகிழ்ச்சியினால் முன்னடி தோற்றாதே சேற்றில் வழுக்கி) விழுபவர்களும் |
| உகந்து | மிகவும் மகிழ்ச்சிகொண்டு |
| ஆலிப்பார் | (அம்மகிழ்ச்சிக்குப் போக்குவீடாக) பெரிய ஆரவாரம் செய்பவர்களும் |
| நாடுவார் | (பிள்ளை கண்ணுக்கெதிரே தோற்றியிருக்கும் பொழுதே) தேடுபவர்களும் |
| நம்பிரான் | நமக்கு உபகாரகனானவன் |
| எங்குற்றான் | எங்கு எழுந்தருளி இருக்கிறான் |
| என்பார் | என்று சொல்பவர்களும் |
| பாடுவார்களும் | பாடுபவர்களும் |
| பல்பறைகொட்ட | பலவகைப்பட்ட வாத்யங்கள் முழங்க |
| நின்று | அதற்கு ஒத்தபடியாக நின்றுகொண்டு |
| ஆடுவார்களும் | ஆடுபவர்களுமாக |
| ஆயிற்று | ஆய்விட்டது. |

ஸ்ரீ நந்தகோபருக்கு குமாரனாகக் கண்ணன் அவதரித்த அக்காலத்தில் அரசனுக்கு புத்திரப்பேறு கிடைத்ததைக்கேட்களுற்று, அம்மகிழ்ச்சியினால் ஓடுபவர்கள் பலரும், ஸந்தோஷத்தினால் முன்னடியும் தோற்றாதே திகைத்து சேற்றில் வழுக்கி விழுபவர்கள் பலரும், பெரிய உகப்புடன் உத்கோஷிப்பவர்கள் பலரும், பிள்ளை கண்ணுக்கெதிரே காணும்படியிருக்கையிலேயே தேடுபவர்கள் பலரும், நமக்கு உபகாரகன் எங்கு இருக்கிறான் என்பவர்கள் பலரும், பாடுவார்கள் பலரும், பல்பறைகளையடிப்பவர்கள் பலரும், அதனுக்கேற்ற கூத்தை ஆடிநிற்பவர்கள் பலரும், இப்படி ஐந்துலக்ஷம் குடிகள் நிறைந்த திருவாய்ப்பாடியென்கிற ஊரடங்கலும் ஆயிற்று.

முதற்பாட்டில் கண்ணன் முற்றம் கலந்தளறாயிற்றென்றார். இப்பாட்டில், ஊரடங்க ஒரே கோலாஹலமாய் விளங்கியிருந்தமையை விளம்பிகின்றார்.

இப்பாட்டில் பேசப்பட்ட செய்கைகளையெல்லாம் அறிவித்துப் பேசுகிறப்போலே, அதிலொரு செய்கையான, வாத்யம் முழங்கப்பெற்றமையை, ஸ்ரீ பாகவதம் (10—5—13) அவாத்யந்த விசித்ராணி வாதித்ராணி மஹோத்ஸவே | க்ருஷ்ணே ஸர்வேச்வரே நந்தே நந்தஸ்ய வ்ரஜமாகதே | என்கிற சுலோகத்தாலும் அறியலாம். (2)

பேணிச் சீருடைப் பிள்ளை பிறந்தினில்*
காணத் தாம் புகுவார் புக்குப் போதுவார்*
ஆணொப் பாரிவன் நேரில்லை காண்*
திருவோணத்தானுலகாளுமென்பார்களே* (3)

| | |
|---|---|
| சீர் உடை | நல்ல கல்யாணகுணங்களையுடைய |
| பிள்ளை | குமாரனான கண்ணன் |
| பேணி | (கஞ்சன் கண்ணிற்படாதே தன்னைக்) காப்பாற்றிக்கொண்டுவந்து |
| பிறந்தினில் | அவதரித்தவப்பொழுது |
| தாம் | திருவாய்ப்பாடி ஆயர்கள் தாங்கள் |
| காண | கண்ணனைக் காண்பதற்கு |
| புகுவார் | உள்ளே செல்பவர்களும் |
| புக்கு | உள்ளே சென்று கண்களால் கண்டு |
| போதுவார் | வெளியேபுறப்பட்டு வருபவர்களும் |
| ஆண் ஒப்பார் | ஆண் தன்மை ஒத்திருப்பவர்களில் |
| இவன்நேர் | இவனுக்கு ஒத்திருப்பார் |
| இல்லை | எவருமில்லை |
| | (இப்படி இவன் தனக்கு ஒத்தாரொருவருமின்றி விளங்குகையாலே) |
| திரு ஓணத்தான் | ச்ரவணநக்ஷத்திரத்திற்கு அதிபதியான விஷ்ணுவினுடைய |
| உலகு | உலகான உபயவிபூதியையும் |
| ஆளும் | காக்கும் இயல்பினன் |
| என்பார்கள் | என்று சொல்பவர்களுமானார்கள். |

எண்ணிறந்த கல்யாண குணங்களையுடைய கண்ணன், தன்னை, கஞ்சன் முதலான வஞ்சகரொவரும் காணாதபடி காப்பாற்றிக் கொண்டு வந்து திருவவதாரம் செய்தவப்பொழுது நந்தகோபர் திருமாளிகையில் வந்து கண்ணனைக் காண்கைக்கு, திருவாய்ப்பாடியிலுள்ளவர்களில் பலர், உள்ளே செல்பவர்களும், பலர் கண்டு களித்து வெளியே வருபவர்களும், அவர்களில் ஸாமுத்ரிக சாஸ்திர மறிந்தவர்கள், ஆண்பிள்ளைகளாய்ப் பிறந்தவர்களில் இவனுக்கு ஸமானமானவர் ஒருவருமில்லாதபடி, மிகவும் விலக்ஷணனாக விருப்பதற்கொத்த லக்ஷணங்கள் இவனிடம் காணப்படுவதினால், இவன் புவனி, விண்ணுலகு, என்கிற உபயவிபூதியான திருமாலின் உலகமனைத்தையும் ஆளுவான் என்று சொல்லிக்கொண்டும் இருந்தனர்.

கீழ்ப்பாட்டில், திருவாய்ப்பாடி யென்கிற ஊரடங்கலும், ஓடுவார்களும், நாடுவார்களும், பாடுவார்களும், ஆடுவார்களும், இப்படி ஒரே மஹோத்ஸவமாய் விளங்கியது என்றருளினார்; இப்பாட்டில், முன்னுரைத்தபடிகளில், ஓடுவார், நாடுவார், என்பவைகளை சிறிது விரித்துப் பேசுகிறார். எம்பெருமானை ஸேவிக்கப்போய் வந்த பலர் பேசிய பேச்சைப்பேசி மகிழ்கிறார்; அப்படிப்பேசப்புறப்பட்டும் அவன் அவதரித்த வண்ணம் முன்தோன்ற அதை முந்துற வுரைக்கிறார் பேணியென்றாரம்பித்து.

பேணிச்சீருடைப்பிள்ளை—என்றது, அவதரித்தவப்பொழுதே தாய் தகப்பனின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு தான் ஈச்வரனென்பதைப் பிரகாசியாத வண்ணம் காப்பாற்றிக்கொண்டு நடந்த பெருமையைச் சொல்லுகிறது. தயாதகுமாரனாய்த்தோன்றியவப்பொழுது சிறிது காலம் சென்று மாதாபிதாக்களின் வாக்கியபரிபாலனம் பண்ணிப் போந்தமையைக் காட்டி நின்றான்; இவ்வவதாரத்தில், யத்யதாசரதிச்ரேஷ்ட: தத்ததேவேதரோஜந: (உயர்ந்தவொருவன் எந்த எந்த காரியத்தைச் செய்வானோ, மற்ற ஜனமும் அந்த அந்த காரியங்களையே செய்யும்) என்று கீதையில் சொல்லப்போகிறானொருவனானதாலே அச்செய்கையை முதலிலே காட்டியபடி. வேதத்தலையில் முன் நிற்கும் ஆணையும், தாய்க்குப்படிந்துநட, தமப்பனுக்குப்படிந்துநட, என்பது தானே. அப்படி, தான் நடத்திக்

காட்டாத பக்ஷத்தில், தன்னைப் பார்த்துப்பலரும் நல்வழியில் திருந்தாததோடு, வேதாந்தக்ருத்வேதவிதேவசாஹம் (வேதாந்தங்களைச் செய்கிறவனும், வேதங்களையறிந்தவனும் நானே) என்கிற சொல்லும் பொய்யான வார்த்தையாகுமன்றோ? ஆகவேதான், பொய்ம்மொழியொன்றில்லாத மெய்ம்மையாளனென்பதையும் நிலை நாட்டிக்கொண்டான். அதிலும் ஒப்பற்ற தன்னுடைய ஸௌலப்ய குணத்தையன்றோ முதன் முதலில் நிறம்பெறச் செய்வதும். சீருடைப் பிள்ளை, பேணிப்பிறந்த பெருமை தான் என்னே!

பிறந்தினில்:—என்றது, அவதரித்தவப்பொழுதைச் சொல்லுகிறது. இப்பாதத்தை முற்றும் சேர்த்து நோக்குவோம். பேணி என்றால், ஆதரித்து, என்றும் அர்த்தம் கொள்ளத்தக்கதாதலால், ஸமஸ்த கல்யாணகுண பரிபூர்ணனான பகவான் தன்னுகப்பதோற்ற ஸௌலப்ய குணத்தையே முன்னிட்டு வந்து அவதரித்தானாயிற்று. நம்மாழ்வாரும், இந்த ஸௌலப்ய குணத்தில் மிகவும் கால் தாழ்ந்து மிகவும் உத்தமனானவொருவன், மிகவும் தாழ்ந்துவந்து பிறந்தருள்வதே, இப்படி நீ செய்தருளின செய்கை என்னுடைய மர்மஸ்தானமான ஹ்ருதயத்தின் நடுவே சென்று என்னுடைய பிராணனையுருக்கி யுண்கின்றதே; என்செய்வேன்; என, பிறந்தவாற்றிலன்றோ, மோஹித்துக் கிடந்ததுவும். அப்படி அவதரித்த அப்பொழுது, என்றபடி.

காணத்தாம் புகுவார் புக்குப்போதுவார்:—என்றது, பிறந்த குழந்தையைப்பார்க்க உள்ளே செல்லுமவர்களையும், சென்று பார்த்துத் திரும்பிவந்துகொண்டிருக்குமவர்களையும் சொல்லுகிறது. பிறந்தினில் என்பது, திருவாய்ப்பாடியில் நந்தகோபர் திருமாளிகையில் கண்ணன் எழுந்தருளின பிறகே அனைவர்க்கும் யோகமாயையினாலேற்பட்டிருந்த மயக்கம் தீர்ந்து அறிவுவந்தபடியினாலே, அப்படி அறிவுவந்து கண்டவாறே கண்ணன் அசோதையருகில் கிடக்கையாலே, அதறிந்த நந்தகோபர் அவதார மஹோத்ஸவம் கொண்டாட அது கேட்ட ஊராரனைவரும் தாங்கள் திரள் திரளாக அரசனுக்கு அருமையாகப் புதல்வன் பிறந்தானென மகிழ்வுற்று, அந்த நந்தகோபர் திருமாளிகையையே அவன் பிறந்த இன் இல்லாக இனித

றந்து, அப்படிப் பிறந்த இன் இல்லில் பிறந்தவப்பொழுது உள்ளே சென்று காண்பாரும், கண்டுகளித்துத் திரும்புவாருமாய் இருந்தமையைப்பேசியபடி. ஸமஸ்த கல்யாணகுண பரிபூர்ணனானவன், இருட்டறையில் விளக்குப்போலே, இருள்தருமாஞாலத்தே தம் பெருமையெல்லாம் காணலாகும்படி திருவாய்ப்பாடிக்கு மங்கள தீபமாய் வந்து தோன்றினானாகில், பின்னிட்ட சடையானும் பிரமனுமிந்திரனும், துன்னிட்டுப் புகலரிய வைகுந்த நீள்வாசல், என்கிறாப்போல் அனைவரும் திரள்திரளாய் ஸேவிக்கச்சென்று வருகிறார்களென்பது தகுதியுடையதன்றோ?

அப்படிச்சென்று சேவித்துத் திரும்புவார் பலர் பாசுரம் மேலே பேசப்படுகிறது ஆணொப்பார் என்று.

ஆணொப்பாரிவன் நேரில்லைகாண்:—என்றது, உலகில் புருஷர்களாய் பிறந்தவர்களைக்காணப்புக்கால், இவர்கள், புருஷர்களுக்கு ஏற்பட்ட சில அடையாளங்கள் கொண்டிருக்கிறார்கள் என்றுமட்டில் சொல்லலாமொழிய, இவனுக்கு நிகராவாரொருவருளரென்று பேச ப்ரஸக்தியுண்டோ? ஆனதால் இவனுக் கொப்பாவார் ஒருவருமில்லையென்பதைச் சொல்லுகிறது. இவனின் மேன்மை எங்கே, அவர்களின் கீழ்மை எங்கே, என்றபடி. இப்படி தனக்குவமையில்லாதானொருவன் எனத்தேர்ந்தபடியினாலே, தனக்கு மேம்பட்டவர்கள் எவருமில்லாதான் எனவும் விளம்பப்பட்டதென்னலாம். ஆக, அவனுக்கு ஸமமானவனும், அதிகமானவனும் காணப்படவில்லையென்று வடமொழி மறைத்தலை பேசியதை, இத் தென்மொழி வேதம் தெற்றெனக்காட்டி நிற்கிற பெருமை காண்மின்.

ஒத்தார் மிக்காரை யிலையாய மாமாயனென ஒருபடி உணருகையாலே, அவன் செய்யக்கூடிய திறம்பேசி மகிழ்கிறபடி மேல்.

திருவோணத்தானுலகாளுமேன்பார்கள், என்றது, திருவோண நக்ஷத்திரத்திற்குத் தெய்வமாகிய திருமாலின்திருவுலகனைத்தையும் திருவிளையாட்டாக ஆளுமவன் என்று சொல்பவர்களுமானார்கள் என்பதைச் சொல்லுகிறது. இதில், திருவோணத்தான்,

என்றும், உலகாளுமென்பார்கள், என்றும் பிரித்துப் பேசலாம். அதாவது இவன் ஒப்புயர் வொருவருமின்றி விளங்குகையாலே இவன், பரதேவதையான திருமாலேயாவன்; திருமாலானதால் உபயவிபூதியையும் ஆளுவன் என்றபடி. ஆளுகையைச்சொன்னது, ஸ்ருஷ்டி முதலானவனைத்தையும் சொன்னபடியேயாகுமென உணர்க.

எம்பெருமானைக்காண உள்ளே செல்பவர்களும், கண்டு வருபவர்களும், அப்படி வருமவர்களில், லக்ஷணமறிந்தோர், திருவோணத்தானுலகாளுமென்பார்களுமென்று பேசப்பட்டிருந்தாலும், ஒருவனுடைய ரூபமே அவனுடைய மஹிமை இன்னபடியுள்ளதெனச் சொல்லிக்கொடுக்கிறது, என்கிற மறைமொழிக் கிணங்கி, பண்டிதர்கள், பாமரர்கள் என்கிற வாசியின்றி அனைவருமே அவன் விலக்ஷணனை வொருவனென உணர்ந்து போந்தார்களென்னலாம்.

சீருடைப்பிள்ளை, என, தாய்தமப்பனுக்குக்கட்டுப்பட்டு நடக்கிற ஒரு நல்ல குணத்தைச்சொன்னாலும், அது எல்லா நல்ல குணங்களையுமுடைத்தானமையையும் சொல்லப் போருமானதே.

ஆக இப்பாட்டில், திருமாலொருவனே பரதேவதை; உபய விபூதி நாயகனுமவனே; தனக்கு ஸமாநமானவரும் மேல்ப்பட்டாருமில்லாதவன்; தன்னுடைய மிகவாதரம் வாய்ந்த ஸங்கல்ப்பமடியாக பல பல சோதிவடிவான திவ்யமங்கள விக்கிரஹங்களுடன் பிறக்குமவன்; ஸமஸ்த கல்யாணகுண பரிபூர்ணன்; பிறந்தினில் சீருடைப் பிள்ளை; அதாவது பிறக்கப் பிறக்கப் புகரோங்கி நிற்குமவன்; எந்நின்றயோனியுமாய்ப் பிறந்தாலும், இமையோர் தலைவனென்று எப்படியாவது எவராலும் தெரிந்துகொள்ளக்கூடியவனாகவிருப்பன். என்றிவை முதலாகப் பலபடி தெளியாத மறையாய நால்வேதத்துள்ளே பேசியிருக்குமவற்றையெல்லாம் நாம் தெரிந்து கொள்ளும்படி தெளிவாகப் பேசியிருக்கிற வாசி காண்மின். (3)

உறியை முற்றத் துருட்டி நின்றாடுவார்*
நறுநெய் பால் தயிர் நன்றாகத் தூவுவார்*
செறிமென் கூந்தலவிழத்திளைத்து* எங்கும்
அறிவழிந்தன ராய்ப்பாடியாயரே* (4)

| | |
|---|---|
| ஆய்ப்பாடி | திருவாய்ப்பாடியிலுள்ள |
| ஆயர் | இடையர்கள் |
| (சிலர்) | |
| உறியை | (வெண்ணெய் நெய் தயிர் பால் வைத்திருந்த உறிகளை (ஆனந்தத்தால் அறுத்துக்கொண்டுவந்து) |
| முற்றத்து | முற்றத்திலே |
| உருட்டி நின்று | உருட்டிவிட்டு |
| ஆடுவார் | கூத்தாடுபவராயும் |
| (சிலர்) | |
| நறு | பரிமளம்மிக்கிருந்துள்ள |
| நெய் | நெய்யையும் |
| பால் | பாலையும் |
| தயிர் | தயிரையும் |
| நன்றாக | மிகவும் நன்றாக |
| தூவுவார் | (அவரவர் வேண்டுமளவுக்கும் மேல்பட்டு) தானம் செய்பவராயும் |
| (சிலர்) | |
| செறி | நெருங்கியதும் |
| மென் | மெல்லியதுமான |
| கூந்தல் | மயிர்முடியானது |
| அவிழ | அவிழ்ந்துபோம்படியாக |
| திளைத்து | நடனமாடுபவராயும் |
| (இவ்வண்ணமாக) | |
| எங்கும் | எல்லாவிடத்திலும் |
| அறிவு | தங்களுடைய புத்தியை |
| அழிந்தனர் | அழியப்பெற்றார்கள். |

கண்ணன் அவதாரம் பண்ணின அக்காலத்தில், திருவாய்ப்பாடியிலுள்ளோரில், சில இடையர்கள் கிருஷ்ணாவதாரத்தைக் கேட்டு, கண்டு களித்து அவ்வானந்தத்தால், தங்களுக்கு ஜீவநாதாரமாகச்சேமித்து வைத்திருக்கும் வெண்ணெய் நெய் தயிர் பால் முதலியவை வைத்திருந்த உறிகளை அப்படியே அறுத்து வந்து முற்றத்

கிளருட்டி நின்றாடுவாராயினர். சில இடையர்கள் நல்ல வாஸனையோடு கூடின நெய், பால், தயிர் முதலானவைகளை, கண்ணன் க்ஷேமமாக வாழவேணுமெனக் கருதி, அவைகளைக் கை நீட்டி வாங்குமவர்கள் வேண்டுமளவுக்கும் மேல் தானம் செய்பவராயினர்; பின்னும் சில, இடையர்கள் தங்களுடைய அழகிய மயிர் முடி அவிழ்ந்து போம்படி ஆடுபவராயினர்: இப்படியெல்லாம் திருவாய்ப்பாடி எல்லாவிடத்திலுமுள்ளவர்கள், இன்னது செய்யத்தக்கது; இன்னது தகாதது; என விவேசனம் செய்யமாட்டாதபடி அறிவழிந்திருந்தார்கள்.

ரொம்பவும் தரித்திரனுக்கு பெரிய நிதி கிடைத்தாப்போல் இடைக்கை வலக்கை வாசியறியாத இடையர் நடுவே கண்ணன் வந்து அவதாரம் செய்தால் படும்பாடு இவ்வாறுடைய தன்றோ? ஆக இப்பாட்டில், இரண்டாம் பாட்டில் பேசப்பட்ட ஆடுவார்கள் என்பதில் வரிதுள்ளோர் ஆடின ஆட்டத்தைச் சிறிது விசதமாகப்பேசியருளினார். (4)

கொண்ட தாளுறி கோலக்கொடுமழு*
தண்டினர் பறியோலைச்சயனத்தர்*
விண்ட முல்லை யரும் பன்ன பல்லினர்*
அண்டர் மிண்டிப் புகுந்து நெய்யாடினார்* (5)

| | |
|---|---|
| தாள்கொண்ட | நீண்டதாய் நெருங்கின கால்களைக் கொண்ட |
| உறி | உறியையும் |
| கோலம் | அழகியதாயும் |
| கொடு | கூர்மையானதுமான |
| மழு | மழுவென்கிற ஆயுதத்தையும் |
| தண்டினர் | தடியையுமுடையவர்களாய் |
| பறி | பறிக்கப்பட்ட |
| ஓலை | ஓலையினாலாகிய |
| சயனத்தர் | படுக்கையையுடையவர்களாய் |
| விண்ட | அலர்ந்த |

| | |
|---|---|
| முல்லை | முல்லைப்புஷ்பத்தின் |
| அரும்பு | மொட்டை |
| அன்ன | ஒத்த |
| பல்லினர் | பற்களையுடையவர்களுமான |
| அண்டர் | இடையர்கள் |
| மிண்டி | (ஒருவருக்கொருவர்) நெருங்கி |
| புகுந்து | கண்ணன் வீட்டில்) ப்ரவேசித்து |
| நெய்யாடினார் | நெய்யாடலாடினார்கள். |

ராத்திரி ஆய்ப்பாடியிலிராமல் வெளியே சென்று மந்தையின் காவலின் பொருட்டுத் தங்கியிருந்த பல இடையர்கள், கண்ணன் அவதரித்த இச்செய்தியைக் கேட்டு அந்த க்ஷணத்திலே தானே, தாங்கள் மந்தைக்காவலுக்குப் போகும்பொழுது கொண்டு சென்றிருந்தனவும், நீண்டதாய் கால் நெருக்கத்தையுடைய உறிகளையும், அழகியதாயும் கூர்மையுடைத்தாயுமிருக்கிற மழுஎன்கிற ஆயுதத்தையும், மாடு மேய்க்கும் கோலையும், படுக்கும் ஓலைப்பாயையும், அப்படியே எடுத்துக்கொண்டு ஓடிவந்து, நந்தகோபர் திருமாளிகையில் கூட்டத்துடன் கூட்டமாய் நெருங்கிப் புகுந்து பேரானந்தத்தினால் முல்லையரும்புபோன்ற தங்கள் பற்களெல்லாம் வெளித்தோன்றும்படி செய்து கொண்டு நெய்யாடலாடினார்கள்.

நெய்யாடல், என்பது, முதற்பாட்டில் எண்ணெய் சுண்ணம் எதிரெதிர்தூவிட என்றருளியிருப்பதற்கொப்ப, கண்ணன் பிறந்த மகிழ்ச்சியினால் எண்ணெயை ஒருவர்க்கொருவர் தேய்த்துக் கொண்டு ஆடும் ஒரு ஆட்டவிசேஷமென அறிக.

விண்டிமுல்லை, என்கிற பாடத்தைக் கொள்ளும்போது, மலையில் மலர்ந்தமுல்லை, எனப் பொருள்கொண்டு அதுபோன்ற பல்லினர் என அநுபவம் கொள்க.

அண்டர், என்றால் தேவர்கள் என்றும் இடையர்கள் என்றும் பொருள். இங்கு பேசப்படும் இடத்தை யநுஸரித்து இடையர்கள் எனச் சொல்லப்பட்டது.

அண்டர் என்பதில், இடையர் கூத்தாடினர் என்பதுமிரு எம்பெருமான் திருவவதாரகாலத்தில் தேவலோகத்திலுள்ள தே கந்தர்வாப்ஸரஸ்திரீகள் முதலியவர்கள் ஆநந்தத்தால் ஆடினார்க என்பதையும் ஒருபடி திருவுள்ளத்தில் கொண்டு அருளிச்செய் ரென்னலாம்.

முன்பாட்டில், ஊரிலிருந்தோர் ஆடின படியைச் சிறந்து விச மாகப் பேசி, இப்பாட்டில், அக்காலத்தில் வெளியேசென்றிருந்த கள் அக்கோலத்துடனே வந்து ஆடின ஆட்டத்தைச் சிறந்து விச மாகப்பேசியருளினார். (

கையுங் காலும் நிமிர்த்து* கடாரநீர்
பைய வாட்டிப் பசுஞ்சிறு மஞ்சளால்*
ஐய நாவழித்தாளுக் கங்காந்திட*
வையமேழுங் கண்டாள் பிள்ளைவாயுளே* (

| | |
|---|---|
| கையும் | (திருமஞ்சனம் செய்விக்கும் பொழுது திருக்கைகளையும் |
| காலும் | திருவடிகளையும் |
| நிமிர்த்து | நேராக நிமிரும்படிபண்ணி |
| கடாரம் | (திருமஞ்சனத்தீர்த்தம் சேர்த்துக் காய ச்சத்தக்க) கடாரம் என்கிற பெரிய பாத்திரத்திலுள்ள |
| நீர் | (காய்ச்சின) தீர்த்தத்தைக்கொண்டு |
| பைய | (திருமேனிக்கு சிரமம் தட்டாதே) மெல்ல |
| ஆட்டி | திருமஞ்சனம் பண்ணிவித்து |
| பசு | பசுமையுள்ளதும் |
| சிறு | சிறியதுமான |
| மஞ்சளால் | மஞ்சளைக்கொண்டு |
| ஐய | மெல்லியதான |
| நா | திருநாக்கை |
| வழித்தாளுக்கு | வழித்தவளான யசோதைப்பிராட்டிக்கு |
| அங்காந்திட | வாயைத்திறக்க |

| | |
|---|---|
| பிள்ளை | (தன் பிள்ளையான)கண்ணபிரானுடைய |
| வாயுள் | திருவாயில் |
| வையம் ஏழும் | ஏழுலகங்களையும் |
| கண்டாள் | ப்ரத்யக்ஷமாகப் பார்த்தனள். |

யசோதைப்பிராட்டியானவள் ஒருநாள் கண்ணபிரானை நீராட்டும்பொழுது அவனுடைய திருக்கைகளையும் திருவடிகளையும் நேர நிமிர்த்து, பெரிய கடாரத்தில் பூரித்துக் காய்ச்சின நீரைக்கொண்டு விசேஷமாக பசுமஞ்சள் மற்றும் வாஸநாதிரவியங்கள் எல்லாவற்றையும் தடவி, குழந்தைப் பருவமாக விளங்கும் திருமேனி சிறிதும் நோகாமே மெள்ள ஸ்நானம் செய்வித்து, அரைத்த மஞ்சள்பொடியைக்கொண்டு திருநாக்கை வழிக்க யத்தனப்பட, அப்போது தன் பிள்ளையான கண்ணன் வாயைத்திறக்க அவ்வாயில் ஏழுலகங்களையும் உள்ளது உள்ளபடியே கண்டனள்.

கடாரம்:—என்றதை வடமொழியில் கடாஹம், என்பார்கள். அதாவது, வெந்நீர்த்தவலை, கொப்பரை, சருவம், கங்காளம் என்றெல்லாம் வழங்கிவருகிற வெந்நீர்வைக்கிற பெரிய பாத்திரம்.

"பையவாட்டிப் பசுஞ் சிறுமஞ்சளால்,

ஐய நாவழித்தாளுக்கு" என்பதில் "பசுஞ் சிறு மஞ்சளால்" என்பது, நடுவேயுள்ளதாதலால், பசுமஞ்சளால் பையவாட்டி என்றும் பசுமஞ்சளால்; நாவழித்தாளுக்குஎன்றும் கூட்டிக்கொண்டநுபவிக்க.

பசுமஞ்சளால், அதிலும் அரைத்த மஞ்சளால் நாக்கு வழிப்பதுண்டோவெனில், மேல் திருமொழி, "நோக்கி யசோதைநுணுக்கிய மஞ்சளால் நாக்கு வழித்து நீராட்டும்" என்கிற ஸூக்தியை நோக்குக.

ஒரு பக்தனை யுத்தேசித்து திவ்யமான கண்ணையும் தந்து தன் விச்வரூப தர்சனத்தையும் தந்தருளின ஒரு பரமோதாரன், தன்னையடிக்கவும் கட்டவும் பிடிக்கவும் சீராட்டவும் பாலூட்டவும் பாக்

கியம் பண்ணிவைத்த யசோதைப்பிராட்டிக்கு, தன் படியடங்கலும் காட்டுவது தகுதியுடையதுதானே. பாலப்பிராயத்தே பார்த்தர்க் கருள் செய்தால், அதிலும், சிறிதும் பருவம் நிரம்பாத பாலப்பருவத்தே தாய்க்கு அருள் செய்யவேண்டாவோ? அப்படி அன்னைக்கு அருள் செய்து தன்னைக்காட்டிய பெருமை இப்பாட்டில் அநுபவித்தருளப்பட்டது. (6)

வாயுள் வையகங்கண்ட மடநல்லார்*
ஆயர் புத்திரனல்லனருந்தெய்வம்*
பாயசீருடைப் பண்புடைப் பாலகன்*
மாயனென்று மகிழ்ந்தனர் மாதரே* (7)

| | |
|---|---|
| வாயுள் | (கண்ணபிரானுடைய) வாயினுள்ளே |
| வையகம் | உலகமனைத்தையும் |
| கண்ட | நேராகப்பார்த்த |
| மடம் | மடப்பத்தையும் |
| நல்லார் | நல்லகுணங்களையுமுடைய |
| மாதர் | பெண்டிர்கள் |
| ஆயர்புத்திரனல்லன் | (உலகமனைத்தையும் வயிற்றில் வைத்துக் கொண்டிருக்கிற இவன்) இடையர்களுக்கு ஸமானமான பிள்ளையல்லன் |
| அருந்தெய்வம் | எளிதில் பெறுவதற்கருமையான தெய்வம் |
| பாய | மிகவும் பரம்பின |
| சீர் உடை | கீர்த்தியையுடையவனுமாய் |
| பண்பு உடை | நல்ல கல்யாணகுணங்களையுடையவனுமாய் |
| பாலகன் | சிறுபிள்ளைவடிவத்துடனும் தோற்றுகிற இவன் |
| மாயன் | ஆச்சர்யமான செய்கையை யுடையவன் |
| என்று | என்பதாக ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு |
| மகிழ்ந்தனர் | ஸந்தோஷித்தார்கள். |

கீழ்ப்பாட்டில், தாயான யசோதை, கண்ணபிரான் திருவாயில் அனைத்துலகங்களையுங்கண்ட பெருமை பேசப்பட்டது. இப் பாட்டில், மற்றைமாதர்களும் அவ்வண்ணமே கண்டுகளித்த பெரு மை பேசப்படுகிறது.

யசோதையானவள் தான் கண்ட பெருமை தாங்கமாட்டாதே தன் பக்கத்திலிருந்த பலமாதர்களையும் அருகிலழைத்து தான் கண் டவதிசயத்தைப் பார்க்கும்படி சொல்ல, அவர்களும் அருகில்வர, தன் தாயைச் சேர்ந்தவர்களாய் தன் தாயால் கூப்பிடப்பட்ட அவர்களுக்கும், தன் தாய்க்குப் போலவே தன் பெருமையைப் பார்க்கத்தக்க திவ்வியமான ஞானக்கண்ணை அருள்புரிய, அவர்க ளும் அவ்வைபவத்தைக் கண்ணாரக்கண்டு, தன்வயிற்றில் அனைத் துலகுமுடைய இவ்வரவிந்த லோசனன், ஒருக்காலும் இடையர் கள் பிள்ளையே யல்லன்; "மிக்க பெருந்தெய்வம்" என்கிற படி, எவர்க்கும் எளிதிலறியத்தகாத தன்மையுடைய தெய்வமே; உலகமெங்கும் பரம்பின புகழையும் திருக்கல்யாண குணங்களையு முடையவனாய் பாலகனாய்த்தோற்றுகிற இவன், ஆச்சர்யமான பலபல சக்திவாய்ந்தவன் எனச் சொல்லி மகிழ்ந்தார்கள்.

மடம்:—என்று, ஸ்திரீகளுக்குள்ள பவ்யதையென்கிற ஒரு குணத்தைச் சொன்னபடியினாலேயே, மற்றும் ஸ்திரீகளுக்குள்ள, நாண், அச்சம், பயிர்ப்பு, முதலியதான குணங்களோடு கூடியிருந் ததையும் சொல்லப்பட்டதென அறிக.

இப்பாட்டின் அநுபவத்தால், நல்ல வஸ்துவைக் கண்டால் ஒருவனாக அநுபவிக்கக்கூடாதென்கிறதும், அப்படிப்பட்ட வஸ்து வைப் பலர்கூடி அநுபவிக்காமல் ஏகதேசமாகவே ஒருவர் அநுபவிக்க முடியாதென்கிறதும், எம்பெருமானுக்கு நல்லாரொருவர் தான் அநுபவித்த அநுபவத்தை, தன்னைச்சேர்ந்தவர்களுக்குக் காட்ட எண்ணினால், பக்த பராதீனனான பகவானும் அவர்க்கிசைந்து அவர் விருப்பப்படியே நடப்பர் என்கிறதும், நல்லாரிடம் நல்கி நின்றால் இதுபோன்ற நன்மை நிச்சயமாகப் பெறலாகும் என்கிறதும், இப் பரமபுருஷனைக் கண்டவர்களுக்குப் பலம், கண்டநுபவிக்கும் எல்லை யிலாத போராநந்தமே என்கிறதும் அறியலாகிறது

"மாயனென்று மகிழ்ந்தனர் மாதர்" என்பதில், ஒரு சுவை யுண்டு. அவன் மாயனாக இருப்பது கண்டவுடன், "உன்னை மொக்கலையில் கொண்டு தமில் மருவியுன்னொடு தங்கள் கருத்தாயின செய்துவரும்" என்று, மேலே இவ்வாழ்வார் அநுபவித்தருளப் போவதற்கிணங்கி, தங்கள் அநுபவத்தையெல்லாம் கைகூட்டிவைக் கத்தக்க ஆச்சர்ய சக்தியைக் காண்கையாலே மகிழ்ந்தார்கள் என் றருளியபடி.

மேலும், எம்பெருமானை, பூபாரம் தீர்க்கவேண்டி பிரார்த்தித்த அந்ததேவர்களை நோக்கி, பகவான், தான் கண்ணனாய் அவதரிக்கப் போவதற்கநுகுணமாக, யது குலத்தில் பெண்களாய் அவதரிக்கும் படி நியமித்திருந்தானாகையாலே, அப்படியே அவதரித்த இப்பெண் டிர்கள், கண்ணன் அவதரித்தவுடன் இப்பெருமையைக்கண்டு, தங் களை பிறந்ததுவே முதலாக அநுபவிப்பிக்கும் பெருமையாளனெ னக்கொண்டு மகிழ்ந்தார்கள், எனவும் அறியத்தக்கது. (7)

பத்து நாளுங்கடந்த விரண்டாநாள்*
எத்திசையும் சயமரங் கோடித்து*
மத்த மாமலை தாங்கிய மைந்தனை*
உத்தானம் செய்து கந்தன ராயரே* (8)

| | |
|---|---|
| பத்துநாளும் கடந்த | பத்துநாளும்கழிந்த |
| இரண்டு ஆம் நாள் | இரண்டாவது நாளில் |
| எத்திசையும் | எல்லாதிக்குகளிலும் |
| சயம்மரம் | ஜயத்தைக்காட்டக்கூடிய தோரணத் தைக்கட்டுவதற்குத் தகுதியுடையதான ஸ்தம்பங்களை |
| கோடித்து | நாட்டி அலங்காரம் செய்து |
| மத்தம் மா | மதம்பிடிக்கும் ஸ்வபாவமுள்ள மிருக மான யானைகள் விசேஷமாக வஸிக் கின்ற |
| மலை | (கோவர்த்தனமென்கிற) மலையை |
| தாங்கிய | (மழையிலிருந்து காப்பாற்றுங்குடை யாக) தரித்துநின்ற |

| | |
|---|---|
| மைந்தனை | குழந்தைப்பருவத்துடனே தோற்றுகின்ற கண்ணனை |
| ஆயர் | கோபாலர்கள் |
| உத்தானம் செய்து | (தங்கள் கைகளிலே) எடுத்துக்கொண்டு |
| உகந்தனர் | மகிழ்ந்தார்கள். |

கண்ணன் அவதாரம்பண்ணி பன்னிரண்டாவது நாளான திருநாமம் சாற்ற (பெயரிட) வேண்டிய திருநாளில் திருவாய்ப்பாடியின் எல்லா திக்குகளிலும் ஜயத்திற்கு அறிகுறியான தோரணங்களைக் கட்டக்கூடிய பெரிய ஸ்தம்பங்களை நாட்டி கொடி முதலானவைகளைக்கட்டி விசேஷ அலங்காரங்கள் செய்து நந்தகோபன் குமாரனை சிசுவிற்கு ஸ்ரீ கிருஷ்ணன் என நாமகரணம் செய்து, மதம்பிடிக்கும் தன்மைவாய்ந்த யானைகளை விசேஷமாகக் கொண்டிருக்கிற கோவர்த்தன பர்வதத்தைக் குடையாக தரித்துக்கொண்டு நின்றவனை அக்குழந்தையை அவரவர்கள் தங்கள் அபிநிவேசத்திற்குப் பாங்கானபடி கைகளில் எடுத்துக்கொண்டு ஸந்தோஷித்தார்கள்.

மைந்தன்:—என்பது இளமைப்பருவமுடையவனையும், மிடுக்கையுடையவனையும், அழகையுடையவனையும், சொல்லுமாதலால் அம்மூன்று படிகளில், இளமை, திருமேனி வடிவிலும், அழகு அவ்வடிவிலும் திருநாமத்திலும், மிடுக்கு, மலையைத்தூக்கி தரிக்கும் சக்திவாய்ந்தவன் எனப்போற்றுவதிலும், காணலாம் படி, மைந்தனை என்று ஒரேபதமிட்ட ஆழ்வாரின் அநுபவப்ரகாரத்தை என் சொல்லுவோம்.

அதிலும் ஒருசுவை அறியலாம். அதாவது, எவ்வகையான அர்த்தங்கொண்ட ஸர்வ வாசகங்களாலும் அவனே சொல்லத்தக்கவனுவன் என்பதையும் சிறிதுகாட்டிப்பேசியபடி என்னலாம்.

கண்ணபிரானின் நாமகரண மஹோத்ஸவத்திற்கு, நந்தகோபாலன் புரமெங்கும் தோரணம் நாட்டினுன் என்றும், அன்றி, ஊராரடங்கலும் தங்கள் ஸந்தோஷத்திற்கு அறிகுறியாக புரமெங்கும் ஆங்காங்கு தோரணஸ்தம்பங்கள் நாட்டினர்களென்றும் கொள்ளலாம்.

இதனால் இன்னநாளில் புத்திரனுக்கு நாமகரணம் செய் வேண்டுமென்கிற விதிப்படி ஆய்ப்பாடிக்கு அரசனான நந்தகோ னும் நடந்துகொண்டானென்பது காட்டப்பட்டது.

மேலும், எவர்கள், எங்கு எக்கார்யங்களைச் செய்தபோதிலு எங்கு எவ்வித ஆபத்துக்கள் வந்தபோதிலும், சொல்லத்தக்க தி நாமமாதலால், அப்படியுள்ள ஜயத்தைத்தரக்கூடிய, கிருஷ்ணன் என்கிற திருநாமத்தை இடும்பொழுதே எத்திசையும் சயமா கோடித்தமை கூறப்பட்டது.

இங்கு, ஆயர்கள் கிருஷ்ணனை சிசுவை எடுத்துக்கொண்ட தாகப் பேசியிருக்கிற தினமோ, பன்னிரண்டாவது நாளில் என்ற அந்த சிசுவிற்குக் கொடுபட்டிருக்கிற அடைமொழியோ, சிறி காலம் சென்று செய்த செயலைக்குறிப்பிட்டு; இது எவ்வா பொருத்தமுடையதாக வாகும் என்னில், அவ்வைபவத்தை பின்னிட்டநாளில் பேசியநுபவித்திருப்பதாலே ஒக்கும் என்றும் பகவதநுபவம் செய்யும் ஆழ்வார்களுக்கு இவைபோல்வன சில விஷயங்களின் அநுபவங்களில் ஒரு வரிசைக்கிரமம் கொள்ள முடியாதெனவும் உணர்க

இப்படியே இவ்வண்ணம் சிலபடியாக அநுபவத்தைப் பேச கிற பாசுரங்களிலும் பொருள் கொள்க.

ஆக இப்பாட்டில், ஆயர்கள், அரசனான நந்தகோபன் குமாரனை எடுத்துக்கொண்டு மகிழ்ந்தமையைப் பேசியருளினார்.

குறிப்பு:-கண்ணன் சிறு பிள்ளையாகவிருக்கும்பொழுது, திருவாய் ப்பாடியில் இந்திரனைப்பூஜை செய்யவேண்டிய திருநாள் நேர்ந்ததும் அதற்காக ஊரிலுள்ளோர் விசேஷமாக எல்லாதிரவியங்களையும் சேக ரித்து வேண்டுமவைகளைச்செய்துவைத்து இந்திரனுக்குப்பூஜை செய் ய யத்தினப்பட, அதுகண்ட கண்ணன் இது என்ன விபரீதமாக விருக்கிறதே! நம்பசுக்களுக்கு வேண்டுமளவு புல் முதலியதைத் தந்து காப்பாற்றுகிற கோவர்த்தன மலையிருக்க, அதற்கொன்றும் சேய்யாமல் இப்படிச்செய்வது தக்கதோ? அம்மலைக்கன்றோ

அனைத்துபசாரங்களும் செய்யவேண்டும் எனச்சொல்லி அவர்களை இந்திரபூஜையைவிட்டு மலைக்குப்பூஜை செய்யும்படியாகத் திருத்தி அப்படியே செய்துவித்தவுடனே, தன்பூஜை நிறுத்தப்பட்டதால் மிக்ககோபங்கொண்ட இந்திரன் பெரியமேகங்களையேவி அல்லும் பகலும் விடாதே ஏழுநாள்வரை ப்ரமாதமான மழை பெய்யும்படி செய்ய, அதனால் துன்பப்பட்டு சரணமடைந்த கோக்களுடையவும் கோபாலர்களுடையவும் ரக்ஷணத்தின் பொருட்டும், இவ்வண்ணம் ஒரு பெரிய கார்யத்தைச் செய்துவிட்டதாகக் கருதின இந்திரனுடைய அஹங்காரத்தை அடக்கும் பொருட்டும் கோவர்த்தன பர்வதத்தையெடுத்துத் தலைகீழாக ஏழுநாளும் ஒரு வாட்டமின்றித் தாங்கியருளின சரிதை இப்பாட்டில் வெளியிடப்பட்டமை அறியலாகிறது.

விசேஷக்குறிப்பு:—இந்த சரிதையால் தன்னை நம்பி தன் சொல்படி நடப்பவர்களை எம்பெருமான் எவ்வித ஆபத்துக்கள் வந்தாலும் காத்தருள்வன், என்பதும், தன்னடியார்கள் ஏதாவது ஒரு காரணத்தால் சிறிது பிழை செய்தார்களேயாகில், அதற்குத்தக்க சாந்தியை வெகு சமத்காரமாகச்செய்து அவர்களுக்குத் தானுகவே அநுதாபம் பிறந்து நல்வழிசேரும்படி திருத்திப் பணிகொள்வன் என்பதும் வெளியாகின்றன. (8)

கிடக்கில் தொட்டில் கிழிய வுதைத்திடும்*
எடுத்துக் கோள்ளில் மருங்கை யிறுத்திடும்*
ஒடுக்கிப் புல்கிலு தரத்தே பாய்ந்திடும்*
மிடுக்கிலாமையால் நான்மெலிந்தேன் நங்காய்*

| | |
|---|---|
| நங்காய் | பரிபூர்ணைகளான பெண்களே |
| | (என்னுடைய இப்பிள்ளை) |
| கிடக்கில் | (தொட்டிலில் கண்வளரவிட்டு அதில்) கிடந்தானுகில் |
| தொட்டில் | அத்தொட்டிலானது |
| கிழிய | உடைந்து துகளாய்ப் போம்படி |
| உதைத்திடும் | உதையாநிற்கும் |
| எடுத்துக்கொள்ளில் | (இடுப்பில்) எடுத்துக்கொண்டால் |

| | |
|---|---|
| மருங்கை | அவ்விடுப்பை |
| இறுத்திடும் | முறியாநிற்கும் |
| ஒடுக்கி | இப்பிள்ளையின் கை கால்களை என் மார்புடன் ஒடுங்கும்படி செய்து |
| புல்கில் | அணைத்துக்கொண்டால் |
| உதரத்தே | வயிற்றிலே |
| பாய்ந்திடும் | பாயாநிற்கும் |
| மிடுக்கு | (இச்செயல்களைத் தாங்கக்கூடிய) வலிமையானது |
| இலாமையால் | (இப்பிள்ளைக்கு) இல்லையானதால் |
| நான் | (இக்குழந்தையைப் பெற்றதாயாகிய நான் |
| மெலிந்தேன் | (மிகவும்) இளையா நின்றேன். |

எல்லாப்படிகளினாலும் மிகவும் பரிபூர்ணைகளான பெண்களே என்னுடைய இப்பிள்ளையைத் தொட்டிலில் விட்டேனாகில் அப்படி தொட்டிலில் கிடக்கச்செய்தே அத்தொட்டில் தகள்தகளாய் போம்படி காலாலுதைக்கின்றது; இடுப்பில் வைத்துக்கொள்வோமென்று இடுப்பில் எடுத்துவைத்துக்கொண்டால் அங்கும் படாதபாடுபடுத்தி அவ்விடுப்பை முறித்துவிடுகின்றது; அதற்குமேல் இப்பிள்ளையின் கைகால்களை அசைக்கவொண்ணாதபடி எல்லாவற்றையும் ஒடுக்கி மார்புடன் அணைத்துக்கொண்டால் வயிற்றிலே பாய்ந்து வேதனை செய்கின்றது; இப்படிக்குத்தகுதியான வலிமை இப்பிள்ளைக்கு இல்லையானதால் நான் எப்பொழுதும் இதனை நினைத்து நினைத்து ஏங்கி ரொம்பவும் இளைத்துவிட்டேன்.

கீழ்ப்பாட்டளவும், எம்பெருமான் கண்ணனாகத்திருவவதரித்த பெருமையைக்கொண்டாடியும், அவனை நீராட்டி அப்பொழுது அவன் பெருமையைத் தாயும் மற்றவர்களும் கண்டுகளித்தும், திருவோணத்தானென்றதற்கிணங்க நாமகரணம் செய்வித்தும், ஆயர்களெல்லாரும் கண்ணனை அக்குழந்தையை எடுத்துக்கொண்டுகந்தமையும் பேசப்பட்டன; இப்பாட்டில், இப்பெரியாழ்வார், தம்மை யசோதையாகவே பாவித்து, தன்பிள்ளையின் சில படிகளை, தாய் அநுபவித்துப் பேசுவதுபோலவே தாமும் பேசியநுபவிக்கிறார்.

இவ்வாறு தம்மை யசோதை பாவனையிலமைத்துக்கொண்டு அநுபவித்தமை, இப்பாட்டில், "நான் மெலிந்தேன்" என்றும், மேல்ப்பாட்டில் இப்படியெல்லாம் இவைகளை, அருளிச்செய்தது சொல்லுமிடத்து, விட்டு சித்தன் என அருளிச் செய்கையாலும் விளங்கும்,

முதலாவது வர்ணத்தில் முக்கியமானவராய் விளங்கும் இவர் மூன்றாவது வர்ணத்தவராக அதிலும் ஒரு அபலையின்படியில், தம்மை பாவித்துக்கொள்ளலாமோவெனின், ப்ராஹ்மணர்கள். யாகங்களில் தனக்குள்ள பெயரை விட்டிட்டு, அங்கு தாம் செய்யப் போவதான கார்யங்களுக்கொத்த சில பெயர்களைப் பூண்டுகொள்வது இகழ்வாகவாகாததோடு அதொரு புகழுள்ள பெயராகவாய்த் ததெனவே கருதுவதுபோல, எம்பெருமானைத் தாம் நேரில் காண்பதுபோலவநுபவம் கொண்டநுபவிப்பதற்குப் பாங்காக எம்பெருமானின் ஸம்பந்தம் பெற்ற எந்த வர்ணத்தின் பாவனையை வர்ணாச்ரமதர்மத்தை விதிக்கிற சாஸ்திரத்திற்கு விரோதமில்லாத அநுபவ விஷயத்தில் தாம் ஏற்றுக்கொண்டாலும், அது, தமக்கு மிக்க புகழையே அளிக்குமென்கிற திருவுள்ளத்தால், தம்மைப் பல விடங்களில் மூன்றாவது வர்ணத்தவராகப் பாவித்தும் பாசுரமிடுகிறார் போலும்.

ஆக, யசோதை தன் அருகில் இருக்கிற பெண்மணிகளையெல்லாம் கூப்பிட்டு, தன் புத்திரன் செய்யும் புதுமைகளைச் சொல்லி, தான் அதனால் உள்ளம் குழைந்து இளைத்தமையைச் சொல்லுகிற பாசுரமாக இதனை அநுபவித்தருளினார்

பலபெண்மணிகளைக் கூப்பிடும் சொல், நங்கைமீர், என்றாவது, நங்கைமீர்காள் என்கிற கிரமங்களிலாவது இருக்கவேண்டியிருக்க, இங்கு, நங்காய், எனப்ரயோகமிட்டது, ஜாத்யேகவசநமென்கிற படியைக்கொண்டு என அறிக.

இந்த யசோதை தன் பிள்ளையின் ஒவ்வொரு செயல்களையும் கண்டு இளைக்கிறாள்.

"மிடுக்கிலாமையால்" என்பதை ஒவ்வொரு இடத்திலும் சேர்த்துக்கொண்டநுபவித்தல் அழகுடையதாகவாகும்.

அதாவது, தொட்டிலில் விட்டால் அத்தொட்டிலைக் காலாலு தைக்கின்றதே, மிக மிருதுவான பாதங்களாச்சுதே, அதற்குத் தகுந்த வலிமை இப்பிள்ளையின் கால்களுக்கில்லையே, ஐயோ, என் செய்வேன், இளங்கன்று பயமறியாது என்கிறபடியில் இப்படிச் செய்கின்றதே, கால்களுக்கு என்ன தீங்கு நேரிடுமோ, என்றும், அப்படியே, இடுப்பில் வைத்துக்கொண்டால், இடுப்பை முறித்து விடுகிறதே, அதற்குத்தகுந்த வலிமை இப்பிள்ளைக்கு இல்லையே, என்றும், மார்புடன் அணைத்தால் வயிற்றில் பாய்கின்றதே, அதற்கேற்ற வலிமை இப்பிள்ளைக்கு இல்லையே என்றும், இவ்வாறெல்லாம் ஒவ்வொரு செயல்களிலும் தாயான யசோதை நினைந்தேங்கியிளைத்தாள் எனக்கொள்க.

இப்படி, பரிவுடையாரெவரும் கலங்கும்படி, எம்பெருமானுடைய திருமேனியின் ஸௌகுமார்யம் விளங்கியிருக்குமேயாகிலும் இங்கு, "கையுங்காலும்" "வாயுள்வையகம்" என்கிற பாட்டுக்களில் பேசியபடி, இவன் ஸர்வேச்வரன் ஸர்வசக்தியுக்தன் என்றறிந்ததற்கிணங்க "மிடுக்கிலாமையால்" என்பதற்கு, இப்பிள்ளை மனிதப்பிறவி பிறந்தவர்களால் செய்யமுடியாத செயல்களைச் செய்கிறான் அது என்னால் பொறுக்கமுடியவில்லை என்றே, ஒருகருத்துத் தோன்ற உரைக்கலாமாயினும், கண்ணன் அனைவர்க்கும் அப்பருவங்களில், சற்று ஈச்வரனென்பதைக்காட்டச்செய்தேயும் உடனே மாயையினால், உலகிலுள்ள சிசு போன்ற சிசுவாகவே நினைக்கத் தகுந்தபடி செய்து, தன்னை, பிள்ளையென்றும், தம்பியென்றும் தோழனென்றும் கூப்பிடப்பண்ணுமொருவனாகையினாலே அதன்படியில், கண்ணனைத், தன் பிள்ளையெனப் பாவித்திருக்கிற யசோதை, குழந்தைப்பருவத்தில் இச்செயல்கள் செய்கிறது என்று சொன்னால் த்ருஷ்டிதோஷம் வருமே என்றஞ்சி, ஐயோ, குழந்தைக்கு இதற்கெல்லாம், சக்திபோராதே என் செய்வேன் என உரைத்தாளென்னலாம். அன்றி, கண்டகாக்ஷிப்படி அவன் பெருமையை அப்படி உடனேயே மறக்காதவளாக இருந்தபோதிலும் நாம், வெளிப்படையாகக் குழந்தை பலசாலி என்பது தோற்றும்படி, பேசவேண்டாம், பொய்சொல்லவும் வேண்டாம், இரண்டு படியும் தோற்றப் பேசுவோம், என்றெண்ணி சாதுர்யமாகப் பேசிப் போந்தாளென்னலுமாம்.

இப்படி ஆழ்வார், அசோதையநுபவத்தை அநுபவிக்கிற அழகுதான் என்னே!

குறிப்பு, இப்பாட்டில், இவ்வாழ்வார், எம்பெருமானிடம், பரிவுடைய ஆழ்வார் கட்கெல்லாம் முதல்வராய் மிகப்பரிவுடன் திருப்பல்லாண்டுபாடி, தானான தன்மையில் அநுபவித்து, மிகவும் இவர் எம்பெருமானிடத்துப் பரிவுடையார் எனப் போற்றப்பட்டுப் "பெரியாழ்வார்" என்று பெருமையான திருநாமம் பூண்டிருக்கச் செய்தேயும், தான் தானான தன்மையில் அநுபவித்ததும் தன்னுடைய பரிவின் மிகுதிக்குப் போராமையாலே, பரிவுக்கு முதல் இருப்பிடமான தாயான யசோதையின் தன்மையை தான் ஏறிட்டுக்கொண்டு அநுபவிக்கும் விநோதம் அறியலாகிறது. (9)

செங்நெலார் வயல் சூழ் திருக்கோட்டியூர்*
மன்னு நாரணன் நம்பி பிறந்தமை*
மின்னு நூல் விட்டு சித்தன் விரித்த* இப்
பன்னு பாடல் வல்லார்க்கில்லை பாவமே* (10)

| | |
|---|---|
| செம் நெல் | சிவந்த நெல்லினால் |
| ஆர் | பரிபூர்ணமான |
| வயல் | கழனிகளால் |
| சூழ் | சூழப்பட்டிருக்கிற |
| திருக்கோட்டியூர் | திருக்கோட்டியூர் என்கிற திவ்யதேசத்தில் |
| மன்னு | நித்தியவாஸம் செய்யுமவனாய் |
| நாரணன் | நாராயணன் என்கிற சப்தத்தால் சொல்லப்படுமவனும் |
| நம்பி | திருக்கல்யாண குணங்களெல்லாவற்றினாலும் பரிபூர்ணனுமான எம்பெருமான் |
| பிறந்தமை | கண்ணனாகத் திருவவதாரம் பண்ணின பெருமையை |
| மின்னு | விளங்காநிற்கிற |
| நூல் | யஜ்ஞோபவீதத்தை (பூணூலை) தரித்துக் கொண்டிருக்கிற |
| விட்டுசித்தன் | பெரியாழ்வார் |

விரித்த — விஸ்தாரமாக அருளிச்செய்த
பன்னு — { அறிஞர்களால் அருமையாக ஏத்தக் கடவதான
இ பாடல் — இப்படிப்பட்ட பாசுரங்களை
வல்லார்க்கு — { ஆசிரியரிடம் நன்றாக ஓதி அறிந்தவர் கட்கு
பாவம் — { எம்பெருமானை யநுபவிப்பதற்குத்தடங் கலான பாபமானது
இல்லை — (சிறிதும்) இல்லை

சிவந்த நெற்களால் பரிபூர்ணமாயுள்ள கழனிகளினால் நாற்புற மும் சூழப்பட்டிருக்கிற திருக்கோட்டியூர் என்கிற திவ்ய தேசத் தில் எப்பொழுதும் பொருந்தி வஸிக்குமவனும் நாராயண சப்தத் தால் சொல்லத் தகுந்தவனும், கல்யாண குணங்களைத்தானும் குறைவற்றவனான எம்பெருமான், திருவாய்ப்பாடியில் கண்ணனாக வவதாரம் செய்தருளினவப்பொழுதுள்ள பெருமையை, விளங்கு முப்புரி நூலான பெரியாழ்வார் விஸ்தாரமாக வருளிச்செய்ததும், பகவதநுபவரஸிகர்கள் எப்பொழுதும் விடாது பெருமையுடன் ஏத் தத்தக்கதுமான இப்படிப்பட்ட போக்கியதை விஞ்சின பாசுரங்களை நல்ல ஆசிரியரிடம் முறையுடன் வணங்கி இவைகளின் பொருள் தெள்ளிதாய் மனதில் படும்படி ஓதி உணர்ந்தவர்கட்கு பகவதநுப வம் பண்ணுவதற்கிடையூறாகவுள்ள வெல்லாப்பாபங்களுமில்லை.

இப்பாட்டளவும் பேசப்பட்ட அநுபவத்தை அறிந்தேத்துமவர்கட்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுவதாக அமைந்திருக்கிறது இப்பாட்டு.

ஸ்ரீ வைகுண்டத்திலும், திருப்பாற் கடலிலும் எழுந்தருளியி ருக்கும் எம்பெருமான் உள்ளபடியே கண்ணனான கோலத்துடன் ஆய்ப்பாடியில் வந்து அவதரித்தான் என அநுபவங்கொள்வதுகூட இங்கு இவ்வாழ்வாருக்கு அவ்வளவு மனோஹரமாக விருக்கமாட் டாதுபோலே தோன்றுகிறது. ஏனெனில், எம்பெருமான், தான் ஸௌலப்ய ஸௌசீல்யாதி குணங்களை நன்றாக ப்ரகாசப்படுத்த வெ ண்ணினால் பரமபதம் முதலியவைகளைவிட்டு இந்த லீலாவிபூதியில் எழுந் தருளியேயாகவேண்டுமல்லது வேறு வழியில்லையே; ஆகவே அங்கி

ருந்து வந்து பிறந்தருள்வது ஒரு வியப்பில்லையே; இங்கு திருக் கோட்டியூரில், தன்னுடைய ஸர்வஸாலப்யத்வாதிகுணங்கள் நிறம் பெற்று ஒன்றிலும் ஒரு குறைவில்லாதவனாய் பரிபூர்ணனாக விளங்கச்செய்தே, அவன் வந்து பின்னும் தன் குணங்கள் நிறம் பெற நந்தகோபன் இல்லில் இனிதவதரித்தான் என அநுபவங் கொண்டால் அவ்வநுபவத்தின் சீர்மை சொல்லவொண்ணாததேயன் றோ? என்று கொண்டு கோட்டியூரான் கண்ணபிரானாக அவதரித் தருளி இச்செயல்கள் செய்தருள்வதே என ஏத்திக்குனிக்கிறார் போலும்.

இத் திருமொழி, முதற்பாட்டில் வண்ணமாடங்கள் சூழ்,என்று மாடமாளிகைகளின் ஸம்ருத்தியைப் பேசி முடிவிற்பாட்டில்வயிறார வுண்ணவேண்டுமளவுக்கும் மேலே செந்நெல்லின் ஸம்ருத்தியுள்ள தைப் பேசுகிறார். சேந்நெலார்.............திருக்கோட்டியூர் என்று. இந்த ஸம்ருத்தியைச் சொன்னது மற்றும் எல்லா ஸம்ருத்தியை யும் சொன்னபடியாம்.

இவ்வண்ணம் திவ்யதேசத்தின் பெருமைபேசி, அங்குவஸிக் கும்வன் பெருமைபேசுகிறது. மன்னு நாரணன் நம்பி, என்று. தேசத்தின் போக்யதைகண்டு அதை விடமாட்டாதே வஸிக்கு மவன். அவன் தான் யாரென்னில், நாரங்களுக்கெல்லாம் இருப் பிடமானவனென்றும், நாரங்களை தனக்கு இருப்பிடமாகவுடையவ னென்றும் பொருள்படவிருக்கிற நாராயணசப்தவாச்யன்; இப் படிப்பட்டவன் ஒரு குறையுற்றிருக்குமவனன்றே? பரிபூர்ணன்; அதாவது இன்னதால் பரிபூர்ணன் என்று வரம்பிட்டுப் பேசப் படாமையாலே எல்லப்படியாலும் பரிபூர்ணன் என்று முன்னுரைத் தபடியே இங்கும் கொள்க.

இப்படிப்பட்டவன் பிறந்தான் என்றால், இதனில் மிக்கோர திசயமுண்டோ! அதனால்தான் இவ்வாழ்வார் முதலிலேயும் நம்பி பிறந்தினில் என்றும், முடிவிலும் நம்பி பிறந்தமை என்றும் வாய்வெருவி நிற்கிறார். பிறந்தபடியையும், பிறந்தவப்பொழுது முதல் நடந்த சில செயல்களையும் இத்திருமொழியில் அநுபவித்துப் பேசி யிருக்கிறபடி.

இவ்வநுபவந்தன்னை ஆதரித்தோதுமவர்கட்கு பலம் சொல்லுகிறது மேல். இதனை ஆதரித்தோதுவது எங்ஙனே பொருந்தும்; இதனைக்கண்டுரைத்தவர் யாரோ? அவர் வார்த்தை நம்பத்தக்கதோ? அப்படியாரேனும் கொண்டாடுவார் உண்டோ? என்னில், அவைகளை வெளியிட்டுப் பேசுவதுபோலுள்ளவை, மின்னு நூல்............ இப்பன்னுபாடல் என்னுமளவாக.

அதாவது, இதனைச்சொன்னவர் பூணூல் தரித்தவர்; குருமுகமநதீத்ய என்கிறபடி எம்பெருமான் திருவருளால் மயர்வறமதிநலமருளப்பெற்று எல்லாக்கலைகளும் இவரிட்டவழக்காய் வந்து சேர்ந்து விளங்கி நிற்குமவர்; பூணூல் தரித்தபடியில் பொதுவாகப் பின்னும் பலருக்குமுள்ள ப்ராஹ்மண்ணியத்திற்கும் மேலே, ஸ்ரீவைஷ்ணவர்; விஷ்ணுவை அரைக்கணமேனும் தம்மனத்தைவிட்டு அகலவிடாதவர்; விஷ்ணுவின் மனதிலே விளங்கிநிற்குமவர்; இப்பெருமைகள் வாய்ந்தவர் உலகிலுள்ளோர் சிறுமை கண்டிரங்கி எளிதில் தெரிந்துகொள்ளுமாறு விரிவுடனுரைத்தது இது வென்கிறார்.

வேதத்தைக்காட்டிலும் உயர்ந்த சாஸ்திரமும், கேசவனைக் காட்டிலும், உயர்ந்த தெய்வமும் வேறில்லையென உயரக் கைதூக்கி மூன்றுதடவை ஸத்யம் எனக் கதறியிருப்பதுபோல், கண்ணன், கேசவன் நம்பி, பிறந்த பெருமையையும் அதனைவிரித்த பாடல்களின் பெருமையையும், பூணூலைப்பிடித்துக்கொண்டு சொல்லுகிறேன்; இப்பெருமைகள் சொல்லமுடியாததே; எனச் சொல்லாமல், பொதுவாக மின்னுநூல் விட்டுசித்தன் விரித்த, இப்பன்னுபாடல், என அருளுகிற அழகை யறிமின்.

இப்பன்னுபாடல், அறிஞர் அழகாக ஆராய்ந்து கொண்டாடுகிற பாடல், என்பதால், இதுகொண்டு பகவதநுபவம் செய்யமாட்டாதார் புகழ்வோ, இகழ்வோ ஈங்கு செய்வதொன்றுமில்லையென அருளுகிறார்போலும்.

இது கற்பதனாலாகுபயன்தான் என், என்னில், வல்லார்க்கில்லை பாவமே, என்கிறார். எம்பெருமானை உள்ளபடியே கண்டநுபவிப்பதற்கு இடையூறான பாவமெல்லாம் மாய்ந்தொழியும்;

ஆகவே பகவதநுபவம் பண்ணுவதற்குப் பாங்கான செயல், இப் பாடல்களை அறிந்தேத்தி நிற்குமதுவே; ஆதலின் அனைவரும் இப் பாடல்களை ஆதரித்தோதுங்கள் என்றபடி.

இதனால், ஆழ்வார், எம்பெருமானுடைய அவதாரத்தையும், அவ்வவதாரத்தில் செய்தருளின செயல்களையும் திவ்யமாக எவன் அறிகிறானோ அவன் இப்பொழுதுள்ள ஹேயமான இந்த சரீரத்தை விட்டு மறுபிறவியின்றி என்னையே யடைகிறான் என்று கீதாசார்யன் அருளியபடியில் அவ்வவதார ரஹஸ்யத்தை அறிந்து அழகாக அநுபவிப்பதே அனைவர்க்கும் உஜ்ஜீவநஹேது வென்பதைக் கருத்தில்கொண்டு, தாம் ஸ்வயம் புருஷார்த்தமாக அவ்வநுபவத்தைச் செய்து தாம் அநுபவித்தபடியை அனைவர்க்கும் காட்டிக்கொடுப்பதுபோல் இத்திருமொழியைத் தலைக்கட்டி யருளினாராயிற்று.

குறிப்பு:— இப்பாட்டில் செங்கெலார்................................ மன்னுநாரணன் நம்பி, என்றருளுவதில், ஸர்வசக்தனான வெம்பெருமான், எங்கு எழுந்தருளியிருந்தும் ஆச்ரிதரை ஆளவல்லனே யாகிலும், உலகில் புனங்காக்கின்ற சிலர் அப்புனத்தின் நடுவேவந்து குடில்கட்டி வஸித்துக்கொண்டு அப்புனத்தை ரக்ஷிக்குமாப்போலே தானும் உகந்தருளின நிலங்களில் கோயிலமைத்துக்கொண்டு அர்ச்சாரூபத்துடன் நித்யவாஸம் செய்தருளுகிறான் என்பதும், சில அவதாரங்களில் சில குணங்களுடனே அவதாரம் செய்வதுபோலல்லாமல், எல்லா குணங்களாலும் பரிபூர்ணனாய்க்கொண்டு திவ்யார்ச்சாவதாரம் செய்தருளுகிறான், என்பதும், ஒருவாறு வெளியிடப்பட்டமை அறியலாகிறது.

வண்ணம் ஓடு பேணி உறி கொண்ட கை வாயுள் பத்து கிடக்கில் செங்கெல் சீத.

ஆழ்வாரெம்பெருமானார் தேசிகன் திருவடிகளே சரணம்

முதற்பத்து இரண்டாந் திருமொழி உரை

முற்றிற்று.



ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் தேசிகன் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து—மூன்றும் திருமொழி.

### சீதக்கடல்

சீதக் கட லுள்ளமுதன்ன தேவகி
கோதைக் குழ லாளசோதைக்குப் போத்தந்த
பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும்
பாதக்கமலங்கள் காணீரே பவளவாயீர் வந்து காணீரே (1)

| | |
|---|---|
| சீதம் | குளிர்ந்ததான |
| கடல் | திருப்பாற்கடலின் |
| உள் அமுது | உள்ளமுதாக உண்டான இலக்ஷ்மி தேவியோடு |
| அன்ன | ஒத்திருக்குமவளான |
| தேவகி | தேவகிப்பிராட்டியானவள் |
| கோதை குழலாள் | மாலையால் அலங்கரிக்கப்பெற்ற மயிர் முடியையுடைய |
| அசோதைக்கு | யசோதைப்பிராட்டிக்கு |
| போத்தந்த | போகவிடப்பட்ட |
| பேதை | அறியாமையையுடைய |
| குழவி | குழந்தையான கண்ணபிரான் |
| பிடித்து | (தனது கைகளால்) பிடித்து |
| சுவைத்து | ருசிபார்த்து |
| உண்ணும் | (வாயில் வைத்து) அமுது செய்யா நிற்கின்ற |
| பாதம் கமலங்கள் | தாமரைப் பூப்போன்ற திருவடிகளை |
| காணீர் | பாருங்கள் |
| பவளம் | பவளம்போல் சிவந்த |
| வாயீர் | வாயையுடையவர்களே |
| வந்து காணீர் | வந்து பாருங்கள் |

குளிர்ந்த திருப்பாற்கடலின் உள்ளமுதாகவவதரித்த ஸ்ரீ மஹாலக்ஷ்மியோடொத்தவளான ஸ்ரீ தேவகிப்பிராட்டியானவள் அழகிய மாலைகளாலலங்கரிக்கப்பட்ட மயிர் முடியையுடையவளான ஸ்ரீ யசோதைப்பிராட்டிக்குப் போகவிட்ட அற்பாமை விஞ்சிய குழந்தை வடிவுகொண்ட கண்ணபிரான், தனது தாமரைக்கைகளாற் பிடித்து தனது திருவாயில் வைத்துக்கொண்டு ருசிபார்த்து அமுது செய்கிற திருவடிகளைப் பாருங்கள்; பவளம்போல் சிவந்த வாயையுடையவர்களே நீங்கள் வந்து பாருங்கள்.

கீழ்த்திருமொழியில், கண்ணபிரானின் திருவவதாரப்ரஸ்தாவம் கொண்டு அநுபவம் நடந்தது. அப்படி, அவதார ரஹஸ்யமறிந்த பின்னர், அப்பெருமானை அழகாக வநுபவிக்க வாசையும் வளருமே; அதற்குமேலும், அவதார ரஹஸ்யமறிந்தவனுக்கு ஒரு பெருமை பேசப்பட்டிருப்பது போல, எம்பெருமானின் திருவடித் தாமரைக்காதாரமாக நிற்கிற பாதபீடம் புதலாக, திருமுடியளவாக ஸேவிக்குமவனுக்கும் பாதகங்களெல்லாம் பறந்தோடி யிறந்திடுமென்கிற வொப்பற்ற பெருமையொன்று பேசப்பட்டிருப்பதும் புலப்படுமே; அதனையுமுட்கொண்டு, முன் திருமொழியிற் மொழிந்தவண்ணம், யசோதையின் தன்மையை ஆழ்வார் ஏறட்டுக்கொண்டு, அவ்யசோதை, தன்னைச்சேர்ந்தவர்களைக் கூப்பிட்டு, கண்ணபிரானின் பாதாதிகேசமளவாகவுள்ள வழகைக் காட்டியருளியபடியைத் தாமும் அநுபவித்து மகிழ்ந்து தாம் அநுபவித்தபடியே இத்திருமொழியில் சீதக்கடல், என்று தொடங்கி, சுருப்பார்குழலியென முடித்தருளுகிற இருபத்தொரு பாசுரங்களினால் அவள் தம் வார்த்தையாகவே அவ்வநுபவத்தை வெளியிடுகிறார்.

முதன் முதலில், அனைவர்க்கும் சரண(ரக்ஷக)மான ச (வ)ரணங்(திருவடி)களைக் காட்டியருளுகிறாள். ஆச்ரிதர்கட்கெல்லாம் முதலிலே இழியுந்துறையாகவுள்ளது அத்திருவடிகள் தானே. முலைப்பாலுண்கிற குழந்தைகூட தான் பாலமுதுண்ணக் கருதி, தாய் தள்ளினாலும் விடாது பற்றுவது அவள் தாளேயே யன்றோ! ஆகவே அறிந்தவர், அறிவிலிகள், அனைவரும் ஆதரவுடன் பற்றக் கூடியவிடம் பாதங்களேயானதால் அவைகளைக் காட்டுகிறபடி சீதக்கடல் என்கிற இப்பாசுரத்தினால், பேசப்படுகிறது.

சீதக்கடல் உள்ளமுதன்ன தேவகி, என்றது மிகவும் குளிர்ந்தது திருப்பாற்கடல்; அதில் தேவர்கட்கு சாவாமைக்கு மருந்தாக ஓர் அமுதம் உண்டாகியது; தேவதேவன் கொண்டு மகிழ ஓர் அமுதம் உண்டாகியது; உண்டாகிய அமுதத்தில் தேவர்கள் கொண்டு உண்ணவமுதம் புறம்பேயிருந்து வெளிவந்தவமுதம்; தேவதேவன் கொண்டு உண்ணவமுதம் உள்ளேயிருந்து வெளிவந்தவமுதம்; அதாவது ஸ்ரீ மஹாலக்ஷ்மி; அவளையொத்த தயை பிறருக்கு அநுக்கிரஹம் செய்யும் எண்ணம், முதலியன நிரம்பப் பெற்றவள் வஸுதேவனின் மனைவியான தேவகிப்பிராட்டி என்பதைச் சொல்லுகிறது.

இங்கு, தானான தன்மையில், திருப்பாற்கடல் குளிர்ந்ததாய் விளங்குமேயாயினும், பாம்பணைமேற் பள்ளிகொண்டருளும்சீதனையும் உடையதானதால், அந்தப் பெருமையைச் சொல்ல, அவன் பெயரையிட்டே பிரஸ்தாபிக்கத் தொடங்கினமையுங் காண்க.

உள்ளமுது, புறவமுது என்கிற படிகளை விண்ணவரமுதுண வமுதில்வரும் பெண்ணமுதுண்ட வெம்பெருமானே, என்றருளுமிடத்தில் ஒருபடி, கலியனும் வெளியிட்டருளினார்.

அப்படிப்பட்ட உள்ளமுது, பிராட்டி என்கிற வர்த்தத்தை வெளிக்காட்டுவதுபோல் இத்திருமொழியிலேயே மேல், பருவம் நிரம்பாமே, என்கிறபாட்டில் திருவின்வடிவொக்கும் தேவகி எனப் பேசப்படுவதையுங் குறிக்கொள்க.

கோதைக் குழலாள சோதைக்குப் போத்தந்த—என்றது, நல்ல புஷ்பங்களாலலங்கரிக்கப் பெற்ற மயிர் முடியையுடைய யசோதை பக்கலில்போகும்படி விட்டமையைச் சொல்லுகிறது. அதாவது கண்ணன் அவதாரம்செய்ததும் கஞ்சனிடமஞ்சிய தேவகி பிள்ளையைத் திருவாய்ப்பாடியில் யசோதையிடம் வளரவிட்டருளிய வரலாற்றை விளம்பியபடி. கண்ணன் வரவிட்ட பிள்ளையென்பது மேலே ஒரு அநுபவ ப்ரகரணத்தில் தத்துக்கொண்டாள் கொலோ, எனவும் பேசி, சிறந்து ஸூசிப்பிக்கப் படுகிறது.

பேதைக்குழவி— என்றது, அறியாமை விஞ்சிய குழந்தை வடிவுடன் கண்ணன் காக்ஷிதருகிற வழகை அருளிச்செய்தபடி.

பிடித்துச் சுவைத்துண்ணும் பாதக்கமலங்கள் என்றது, தன் திருக்கைகளால் பிடித்து வாயில்வைத்துக்கொண்டு, உருசிபார்த் துண்கிற திருவடித் தாமரைகளைச் சொல்லுகிறது. எம்பெருமான் திருவடித் தாமரைகளில் தேன் நிறைந்திருக்கிறதென எழுதாமறை முதலியதுகளில் முறையிடப்பட்டிருக்கிற படியை முதலித்துணர, முகாரவிந்தத்தில், பதாரவிந்தங்களை, கராரவிந்தங்களால் பொருந்த வைத்தான்போலும். அன்றியும், ஆச்ரிதர் தங்கட்கு ரக்ஷகமா னவை, அத்திருவடித் தாமரைகளேயென அறுதியிட்டிருக்கிற படியை மெய்யாக்கக்கருதி, தனதுதரத்தேவிளங்கும் சேதநாசேத நாத்மகங்களானவனைத்துலகங்கட்கும் அமுதமூட்டி வளர்க்கயத்தி னப்படுகிறவன்போல், தன் திருவடிகளை திருவாயில் வைத்துண் டான்போலும். இப்படி, உலகிலுள்ள சிறு குழந்தைகள் செய்யும் செயலை இக்குழந்தை அநுகாரம் செய்வதில் உள்ள சாதுர்யமிருக் கிறபடி.

காணீர் என்றது, பாருங்கள் எனச்சொல்லுகிறது. சேவியுங் கள் என்றபடி. அவன் திருவடியை அறிந்தவர்களான அவனந்த ரங்கர்கள் காட்ட, மற்றையோர் அணுகித் தொழாநிற்பர், என்ற படிக்கிணங்க, அவனுக்கந்தரங்கா நுகூலையாய், அவனைத் தன் இஷ்டப்படி நடத்தவல்ல யசோதை யன்றோ காட்டுகிறதும்.

அவள் தான், தன் ஆச்ரிதர்களிடம் ஆதராதிசயத்தால், பின் னும், காணீர் என்று இரண்டாவது முறையுமுரைக்கிறாள் மேலில்.

பவளவாயீர் வந்து காணீர்:— என்றது, பவளம்போல் சிவந்த வாயையுடைய நீங்கள் வந்து காணுங்கள் என்பதைச் சொல்லுகிறது.

செம்பவள வாயான், என்னப்படுகிற அவன் வாயில் வைத் துக்கொண்டிருக்கிற திருவடிகளை, பவளவாயையுடைய நீங்கள் காண்கையன்றோ தகுதியுடையது என்றபடி.

நாம் பவளம்போல் வாய்படைத்திருக்க மற்றையோரைக்காண் பதெதற்காக வென இறுமாந்திராதே, இத்திருப்பவளவாயில் வைத் திருக்குமித்திருவடிகளை வந்து காணீர் என்னலுமாம்.

அவன் பாதக்கமலங்களைத் திருவாயில் வைத்துக்கொண்டு கிடக்கிறான், ஆகவே அவன் இப்பொழுது உங்களை நாடிவர ப்ராப்தியில்லை, நீங்கள் நாலடி நடந்துவந்து பாருங்கள் என்னலுமாம்.

முன் அவதாரத்தில், என்னப்பனே, நடந்துவந்து என்னைக் காணவந்தனையே, உன் விச்வாஸத்தை என்சொல்வேன், என ஒரு வேடனைப் பாராட்டினவன்கிடீர் ; ஆகவே இவ்வழகை இழக்காதே சடக்கென ஸேவிக்க இச்சையுடன் இடைச்சிகளான நீங்கள் எதிர் நோக்கிவந்தால் அப்படி வருவதையும் ஒரேற்றமாய்க்கொள்ளுவன். வந்து காணீர். என்னலுமாம்.

இப்பாதங்களைக்கண்டால், நம் பாதகங்களெல்லாந்தீரும் ; பவளவாயையுடைய பாவைமார்களே வந்து பாருங்கள் என்னலு மாம்.

குறிப்பு:— இப்பாட்டில், துருவாசமாமுனியின் சாபத்தால் கடலுளொளித்த, தேவர்களின் ஐச்வர்யங்களைத் திருமாலைச் சரண மடைந்து தேவர்கள் தாங்கள்பெற்ற வரலாறு, கண்ணன், கஞ்சன் வீட்டிலவதரிக்க, கஞ்சனுக் கஞ்சிய தேவகி, தன் பிள்ளையான கண்ணனை, கஞ்சன் கண் காணாது, திருவாய்ப்பாடியில் வளரவிட்ட வரலாறு, இவை சிறந்து அறியலாகின்றன. (1)

முத்தும் மணியும் வயிரமும் நன் பொன்னும்*
தத்திப் பதித்துத் தலைப் பெய்தாற் போல்—எங்கும்
பத்து விரலும் மணிவண்ணன் பாதங்கள்*
ஒத்திட் டிருந்தவா காணீரே யொண்ணுதலீர் வந்து காணீரே* (2)

| | |
|---|---|
| முத்தும் | முத்தையும் |
| மணியும் | ரத்தினத்தையும் |
| வயிரமும் | வயிரத்தையும் |

| | |
|---|---|
| நல் பொன்னும் | நல்லதான ஸ்வர்ணத்தையும் |
| தத்தி | மாறி மாறி |
| பதித்து | பதியவைத்த |
| தலைப்பெய்தால்போல் | சேர்த்தாற்போல் |
| மணி வண்ணன் | நீல ரத்தினம் போன்ற திருமேனி நிறத்தையுடைய கண்ணபிரானுடைய |
| பாதங்கள் | திருவடிகளிலுள்ள |
| பத்து விரலும் | பத்து விரல்களும் |
| எங்கும் | எல்லா விடத்திலும் |
| ஒத்திட்டிருந்த ஆ | ஒரேபடியாக லக்ஷணங்கள் சேர்ந்தமைந்திருக்கிற படியை |
| காணீர் | பாருங்கள் |
| ஒள் நுதலீர் | ஒளி பொருந்தி அழகிய நெற்றியையுடைய பெண்மணிகளே |
| வந்து காணீர் | கண்ணனருகில் வந்து பாருங்கள். |

நல்ல முத்து ரத்தினம் வயிரம் பொன் இவைகளை மாற்றிமாற்றிப் பதித்துச் சேர்த்தாற்போல், நீலரத்தினம் போன்ற திருமேனியையுடைய கண்ணபிரானின் திருவடிகளிலுள்ள பத்து விரலும் எல்லாவிடத்திலும் ஒற்றுமைப்பட்டுத் தோன்கிறபடியைப் பாருங்கள்; அழகிய நெற்றியையுடையீர் வந்து பாருங்கள்.

கீழ்ப்பாட்டில், திருவடிகளின் திருவடிவழகைப் பேசியநுபவிக்கவே, அத்திருவடிகளிலுள்ள பத்து விரல்களும், திருவுகிர் (நகங்)களில் செம்பஞ்சு முதலியதால் அலங்கரிக்கப்பட்ட அழகுடன் பளபள வென்று முன்தோன்ற அவைகளின் சேர்த்தியழகைத் தாம் கண்டு மற்றையோரையும் கூப்பிட்டுக்காட்டி யநுபவிக்கிற படியான அநுபவம் இப்பாட்டில் பேசப்படுகிறது.

எம்பெருமான் நீலமணிபோன்ற திருமேனி நிறத்தால் விளங்கிக் கொண்டிருக்கிறான். அவனுடைய திருவடித் திருவிரல்களில் அனேக வர்ணங்களின் அலங்காரங்களை நகங்களில் செய்திருக்கிறாள், அவைகளில் ஒன்றுக்கொன்று வெவ்வேறு படியாகத்

தோற்றும்படி வர்ணவித்தியாஸ மமைத்து அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே காணுமவர்களுக்கு அத்திருவிரல்கள் நவரத்தினம் ஸுவர்ணம் இவைகளைகொண்டு அலங்கரிக்கப் பட்டவைபோல் தோன்றுகிறன; அவைகள் எல்லாம் லக்ஷணத்தில் ஒரே ஒற்றுமையுடனும் தோன்றுகிறன; இப்படி ஒற்றுமையாகத் தோற்றுகிற திரு விரல்களின் திருவழகைத் தாம் கண்டதும் இவ்வழகை தன்னைச்சேர்ந்தவர்களும் இழக்கில் என் செய்வதெனச் சிந்தித்து அவர்களைப் பாருங்கள் என்கிறாள். நீங்கள் அழகிய நெற்றிபடைத்த பயன் பெறுங்கள் என்கிறாள். அழகிய நெற்றியையுடைய நீங்களன்றோ வந்து காணவேணு மென்கிறாளாகவுமாம். (2)

பணைத்தோ ளிளவாய்ச்சி பால் பாய்ந்த கொங்கை*
அணைத்தார வுண்டு கிடந்தவிப் பிள்ளை*
இணைக்காலில் வெள்ளித்தளை நின்றிலங்கும்*
கணைக்காலிருந்தவாகாணீரே காரிகையீர்வந்து காணீரே (3)

| | |
|---|---|
| பணை | (பசுமையாகவும், பருத்ததாயுமுள்ள) மூங்கில்போன்ற |
| தோள் | தோள்களையும் |
| இள | இளமையான பருவத்தையு முடையவளான |
| ஆய்ச்சி | இடைச்சியான யசோதையினுடைய |
| பால் பாய்ந்த | பால் சொரிகிற |
| கொங்கை | முலையை |
| அணைத்து | (திருக்கைகளால்) அணைத்துக்கொண்டு |
| ஆர | தன் வயிறு நிரம்புமளவாக |
| உண்டு | (பாலமுதை) அமுதுசெய்து |
| கிடந்த | சயனித்துக்கொண்டிருக்கிற |
| இ பிள்ளை | இந்தக் குழந்தையான கண்ணனுடைய |
| இணை | ஒன்றுக் கொன்று சேர்த்தி யழகையுடைய |
| காலில் | திருவடிகளில் |
| வெள்ளி தளை | வெள்ளியால் செய்யப்பட்ட தண்டைச் சிலம்பானது |

| | |
|---|---|
| நின்று | நிலையாக விருந்து |
| இலங்கும் | விளங்குகிற |
| கணைக்கால் | திருக்கணைக்காலானது |
| இருந்த ஆ | இருக்கும் மேன்மையை |
| காணீர் | பாருங்கள் |
| காரிகையீர் | அழகுடையவர்களே |
| வந்து காணீர் | வந்து பாருங்கள் |

பசுமையாய் பருத்ததான மூங்கில்போன்ற தோள்களையும் இளம் பருவத்தையுமுடைய இடைச்சியான யசோதைபிராட்டியின் பால்பாய்ந்துகொண்டிருக்கிற முலையைத் திருக்கைகளால் அணைத்துக்கொண்டு தன் வயிறு நிரம்பப்பெறுமளவும் பரிபூர்ணமாகப் பாலமுதையுட்கொண்டு அப்படியுண்ட ஸந்தோஷம் வெளிப்பட உல்லாஸமாகப் படுத்துக்கொண்டிருக்கிற இக் கண்ணபிரானுடைய ஒன்றுக்கொன்று சேர்ந்து தோற்றுகிற திருவடிகளில் எப்பொழுதும் நிலையாகவிருந்து விளங்கிக்கொண்டிருக்கிற தண்டைச்சிலம்புகள் சாற்றப்பட்டிருக்கிற திருக்கணைக் கால்களிருக்கிற வழகைப் பாருங்கள்; அழகு படைத்தவர்களே வந்துபாருங்கள்.

கீழ்ப்பாட்டில், திருவுகிர்களினழகநுபவித்தானதும், அவைகட்கு மேலுள்ள திருக்கணைக் கால்களின் காக்ஷி இப்பாட்டில் அநுபவித்துப் பேசப்படுகிறது.

பணைத்தோளிளவாய்ச்சி—என்றது, மூங்கிற்போல் பசுமையாய் பருத்ததாயுள்ள தோள்களையும், இளமைப் பருவத்தையுங் கொண்ட யசோதையைச் சொல்லுகிறது.

யசோதையானவள் தன் கைகளால் கண்ணபிரானை எடுத்து வளர்க்கையாலே அவள் தன்னுடைய திருத்தோள்களும் பணைத்தோள்களாகப் பிரகாசிக்கிறபடி. ஓரவயவத்தின் பெருமையையெடுத்துப் பேசினது, மற்றெல்லாவற்றினுடைய பெருமைகளையெல்லாம் பேசினதாக வாகுமெனவுணர்க. அப்படியிருந்தும் மேல் இளவாய்ச்சி எனப் படுவதால் ஒருபடி எல்லாப் பெருமையும் பேசப்பட்டதேயாம், என்றும் கொள்ளலாம்.

யசோதை முன்சொன்ன திருப்பாத கேசத்தை யென்று, மேலே கலைக்கட்டப்போகிறபடி ஈதெல்லாம் யசோதை தன் பாசுரமாக விருக்க, இவற்றில், முதற்பாட்டில், கோதைக் குழலாள சோதைக்கு, என்றும், இப்பாட்டில் பணைத் தோளிளவாய்ச்சி என்றும், தன்னைத்தானே துதித்துக் கொள்வதுபோலப் பேசுகை தக்கதோவென்னில், பகவத் ஸம்பந்தம் பெற்றபிறகு எல்லாம், பஹுமானத்துடன் சொல்லத்தக்கபடி பெருமையடைந்து விடுகிறது என்கிற மநோபாவத்தாலும், பின்னும், யசோதை சொன்னதாக வைத்துப் பேசும்பொழுதும் ஆழ்வார் தம்முடையவநுபவமும் நடுவே கலந்துசெல்கின்றதாதலாலும், இவ்வாறு பேசுகை தக்கதேயென வுணர்க. இப்படியே மேலே வருமிடங்களிலும் கண்டு கொள்வது.

பால்பாய்ந்த கொங்கை—என்றது, யசோதைக்கு கண்ணனிடமுள்ள வன்பின் மிகுதியால் எப்பொழுது பார்த்தாலும் அவள் தன் கொங்கையில் பால்மாறாதே பேருற்றாகவிருந்து வெளிப்புறப் பட்டோடுகிற பெருமையைப் பேசியபடி. கலியனும் யசோதை பாவனை கொண்டு பேசுமோரிடத்தும், உருகியேன் கொங்கையின் தீம்பாலோட்டந்து பாய்ந்திடுகின்ற என்றும், உள்ளமுருகி யேன் கொங்கை யோட்டந்து பாய்ந்திடுகின்ற, என்றும் அருளிச் செய்திருக்குமாற்றை இங்கு நினைக்க.

அனைத்தாரவுண்டு கிடந்தவிப்பிள்ளை— என்றது, அம்முலையையனைத்து பரிபூர்ணமாகப் பாலையுண்டு அப்படியுண்ட களிப்பின் மிகுதியால் உல்லாஸமாகப் படுத்துக்கிடக்கிற கண்ணனைச் சொல்லுகிறது இவ்விடத்து, "பணைத்தோளிவாய்ச்சி" யென யசோதையைக் கொண்டாடி, அவளின் பால் பாய்ந்த கொங்கையை "அனைத்தாரவுண்டு", "இப்பிள்ளை" கிடக்கிறதென்பதால், ஆய்ச்சி தன் இளம்பருவத்துக்குத் தக்கபடி, ஓர் செவிலித்தாயிடம் பிள்ளையை யொப்புவித்து, தன் நாயகனுக் குடம்பு கொடுத்துக் கொண்டிருப்பதையும் விட்டிட்டு, இப் பிள்ளையினிடமுள்ள பேரன்பினால் இப்பிள்ளையை விட்டுப் போகாதே கிடக்கிறாளெனவும் காட்டியபடி.

ஒருவர் கையிலும் பிடிபடாதே ஐங்காலாய் ஓடோடியும் சென்று கொண்டிருக்கிறோம்; அப்படிப்பட்ட நமக்கு முன்னோடிவந்து நம்மை வென்று மறுபடி ஸம்ஸார மார்க்கத்தில் செல்லவொட்டாதே தடுக்க கணைக்கால்களில் பலமில்லாமற்போனால் உபயோகமில்லையே; அதற்காகவே எம்பெருமான், அப்பெருமைகொண்ட கணைக்கால்களைக் கொண்டிருக்கிறான், என்றும், இப்படி பலங்கொண்டபடி சொன்னதால் அழகுள்ளவனன்றோவெனில், மன்மதனின் காஹளமென்கிற வாத்ய விசேஷமென்ன, ப்ரதிக்ரஹ பாத்திரமென்ன, பாணங்கள் வைக்கும் தூணீரமென்ன, இவைகள் செய்யுமுன் அடையாளங்களாக விளங்குமவை இவை என்னலாம், என்றிப்படியெல்லாம் பொருள்பட, அருளிச் செய்திருக்கிற போக்யதையை நன்றாக நெஞ்சிற்கொண்டு இங்கு இருப்பதாக கொள்வது சாலவும் நன்று.

காரிகையீர் வந்து காணீர்:—என்றது, அழகுடையவர்களே, வந்து பாருங்கள் என்பதைச் சொல்லுகிறது. அழகுடையவர்களுக்குத்தான் அழகின் வாசியறியலாயிருக்குமாதலால் வந்து பாருங்கள் என்றபடி. மேலும் பாடக மெல்லடியார், என்கிறபடி அன்ன பெருமை தாம் பெற்றிருக்க, பாடகமணிந்த பிறர் பாதங்களைப் பார்ப்பதெதற்காகவென்று இருமாந்திருக்காதே, "பாடகமெல்லடியார்" வணங்கத்தக்க பெருமை கொண்ட பாடகம் பூண்டிருக்குமவனை யென்பதறிந்து, பாடகமணிந்த அழகுடைய பாவையார்களான நீங்கள் வந்து பாருங்கள் என்கிறாராகவுமாம். (3)

உழந்தாள் நறு நெய்யோரோ தடாவுண்ண*
இழந்தா ளெரிவுற் றீர்த்தெழில் மத்தின்*
பழந்தாம்பா லோச்சப் பயத்தால் தவழ்ந்தான்*
முழந்தாளிருந்தவா காணீரே முகிழ்முலையீர் வந்துகாணீரே*(4)

உழந்தாள் — ரொம்பவும் கஷ்டப்பட்டுச் சேர்த்தவளுடைய

நறுநெய் — வாஸனை மிகுந்த நெய்யை

ஓரோதடா — ஒவ்வொரு பானையாக

| | |
|---|---|
| உண்ண | (அதில் சிறிதளவும் மிகுதியில்லாதபடி) அமுது செய்தபொழுது |
| இழந்தான் | (தன் குழந்தைப் பருவத்துக்குத் தகுதியில்லாதபடி அமுது செய்த படியால் (அக்கண்ணனையே) இழந்தவளாக நினைத்து |
| எரிவினால் | வயிற்றெரிச்சலினால் |
| ஈர்த்து | (அக் கண்ணன் கையைப் பிடித்து) இழுத்து |
| எழில் மத்தின் | அழகிய மத்தினுடைய |
| பழந்தாம்பால் | (வெகு நாள் சுற்றிக்கடைந்ததான தால்) மிகவும் பழமையான தாம்புக் கயிற்றினால் |
| ஓச்ச | (அடிக்கிற பாவனையாக) ஓங்க |
| பயத்தால் | (அத்தாம்பின் அடி தன்மேல் விழுமே யென்கிற) பயத்தினால் |
| தவழ்ந்தான் | (அத்தாம்பு படாதே விரைவாகத்) தவழ்ந்து செல்கிற கண்ணனுடைய |
| முழந்தாள் | முழங்கால்கள் |
| இருந்த ஆ | இருக்கிறபடியை |
| காணீர் | பாருங்கள் |
| முகிழ்முலையீர் | முகிழ்போன்ற முலையையுடையவர்களே |
| வந்துகாணீர் | வந்துபாருங்கள். |

ரொம்பவும் சிரமப்பட்டுச் சேகரித்து வைத்தவளின் பரிமளம் மிக்க நெய்யை ஒவ்வொரு குடமாக, சிறிதும் மிகுதியில்லாதபடி அமுது செய்தபொழுது, அப்பதார்த்தம் போயினவே என்பதிலும் மனம் செல்லாதே, ஐயோ இவன் பருவத்துக்கிடல்லாதபடி பானை பானையாக வெண்ணெயை விழுங்கி நிற்கிறானே, இவனுக்கு இவை ஜீர்ணம் செய்துகொள்ள சக்தி எங்ஙனே இருக்கக்கூடும், ஆகையால் இவனை இனி நாம் இழக்கப்பெற்றே போவோம், என்று கொண்டு அவ்வயிற்றெரிச்சலினால் பிள்ளையைப் பிடித்திழுத்து அழகிய மத்தின் பழந்தாம்பினால் அடிக்கப்போகிற பாவனையாக ஓங்க, அந்த அடி தன்மேல் விழுந்தால் செய்வதென், என்கிற அச்சத்தினால் அந்த

அடிபடாதே தப்பிப்போக வெண்ணி வேகமாகத் தவழ்ந்து' என்கிற கண்ணனுடைய முழந்தாளின் அழகைப் பாருங்கள்; முகிழ்த்த முலையையுடையவர்களே நீங்கள் வந்து பாருங்கள்.

கீழ்ப்பாட்டில், திருக்கணைக்கால்களின் பெருமைபற்றிப் பேசவே அதன்மேல் திருமுழந்தாள்களின் திவ்ய ஸௌந்தர்யம் தோற்று நிற்க அவ்வழகின் தோற்றம் அநுபவித்து அருகிலுள்ளோரைக் கூப்பிட்டுக் காட்டுமதான அநுபவம் இப்பாட்டில் பேசப்படுகிறது.

உழந்தாள்—என்றது, ப்ரயாஸப்பட்டவள் என்பதைச் சொல்லுகிறது. மாடுகறப்பது முதல் நெய்யாக வாக்கிச்சேர்த்துவைக்கிற வரையில் படவேண்டிய சிரமம் மிகப் பெரியதன்றோ? அப்படிப் பாடுபட்டுக் கறந்து, பால்காய்ச்சி பதத்துடன் தோய்த்து அதைக்க்கடைந்து வெண்ணெய்திரட்டி பின்னும் அடுப்பிலிட்டு நெய்யாக வுருக்கி பாதுகாப்புடன் வைத்திருந்தவாற்றையெல்லாம் நினைத்துப் பேசியபடி.

இங்கு, 'ஆய்ப்பாடிச், சீரார்கலையல்குற் சீரடிச் செந்துவர்வாய் வாரார் வனமுலையாள் மத்தாரப் பற்றிக்கொண்டு, ஏரார் இடை நோவ எத்தனையோர் போதுமாய்ச், சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை, வேரார் நுதல்மடவாள் வேறோர் கலத்திட்டு, நாரா ருறியேற்றி நன்கமைய வைத்ததனை, என்றெல்லாம் அசோதை பட்டபாட்டை விஸ்தாரமாக கலியன், சிறிய திருமடலில் அநுபவித்துக் கொண்டு அருளிச்செய்தபடியெல்லாம், உழந்தாள், என்ற ஒரே பதத்திலிருக்கத், தோற்றும்படி அருளிச்செய்திருக்கிறபடி.

நறுநெய்:— என்றது, வாஸனைமிக்க நெய் என்கிறது. அப்பொழுதுகாய்ச்சினபடிக் கேற்ப நறுமணம் கமழ்கிறபடி.

ஒரோ தடாவுள்ள:— என்றது, பானை பானையாகச் சிறிதும் சேஷமில்லாமல் அமுது செய்து போந்தமையை அறிவிக்கிறது. இதை விரித்துப்பேசுவதுபோல், 'உறிமேலைத்தடா நிறைந்த வெண்ணிமலையிருந்தாலொத்த வெண்ணெயை வாரிவிழுங்கிவிட்டு, என்

வேறு தாம்பைக் கொண்டுவந்து கட்டவேண்டுமானால் சென்று தாம்புகொண்டு வரலாமத்தனை யொழிய தாம்பால் கட்டப்படவேண்டுமவனைக் காண்பது அரிதாகவன்றோ ஆகிவிடும். அதற்காக அங்கிருந்த தாம்பினையே கொண்டு ஓங்கினாள் போலும். மேலும், உழுந்தாள் பழந்தாம்பால் பாலதனைப் புடைக்கப்பார்ப்பதிலும் அழகிய பொருளொன்றும் புலப்படத்தக்கதாயிருக்கிறது. இந்த நெய் உண்டாக்க நானும் நைந்தேன், இத்தாம்பும் நைந்தது, நீயும் இதனை உண்டதால் நைந்திடப்போகிறாய், எனநினைத்து நைந்து நையப்புடைக்க யத்னித்தாள் என்னலாம்.

பயத்தால் தவழ்ந்தான்:— என்றது, தாம்பின் அடி தன்மேல் விழில் செய்வதென், என்று, அஞ்சி, அவ்வடிக்குத் தப்பநினைவு கொண்டு ஓடி தவழ்ந்தமையைச் சொல்லுகிறது.

முழந்தாளிருந்தவாகாணீர்:— என்றது, அப்படித் தவழ்வதற்குத் தக்க ஸாதனமாகவிருக்கும் திருமுழந்தாளின் திவ்ய ஸௌந்தர்ய மிருக்கிறபடியை பாருங்கள் என்பதைச் சொல்லுகிறது. நெய்யெல்லாம் வாரியுண்டானே யெனத்திரிவெருளியனாய்த்தானிருக்கச் செய்தேயன்றோ தவழ்ந்த முழந்தாளின் ஸௌந்தர்யம் தன்னை இவ்வாறு ஈடுபடச்செய்தது. ஆகவே இவ்வழகை எவரும் இழக்காதே கொள்ளுங்கள் என்றபடி.

மிகவும் கோபங்கொண்டிருந்த என்னை கோபம் இருந்தவிடம் தெரியாதே செய்து அழகில் ஈடுபடச்செய்ததென்றால், ஸ்வயம் போக்யமாய் அநுபவிக்க ஆதரமுடையவர்களுக்கு அவ்வழகு என் செய்யாது என்று மபிப்ராயம்.

முகிழ்முலையீர் வந்துகாணீர்:— என்றது, முகிழ்த்தமுலையை யுடைய மாதர்களே நீங்கள் வந்து பாருங்கள் என்பதைச் சொல்லுகிறது. உங்களிடம் வந்து உங்களைத் தழுவவேண்டியதற்கு முதன் முதலாக ஓடி தவழாநிற்கிறான். நீங்களும் அவனை அணைத்து தழுவத்தக்க பருவத்தினராய் அதற்கு அடையாளமாக முகிழ்த்த முலையையுடையவர்களாய் தோற்றுகிறீர்கள் ஆகவே நீங்கள்

ன்றே அம்முழந்தாளழகிழவாதே நோக்கிக் களிக்கவேணுமென்கிறா ளென்றபடி.

குறிப்பு:— 'இப்பாட்டில்' எழில் மத்தின் பழந்தாம்பால், என்னுமிதில், ஒளிபொருந்தியமத்து, என, 'எழில்' என்னும் பதத்தை 'மத்து' என்கிற பதத்திற்கு அடைமொழியாக்குவதுபோல், 'தாம்பால்' என்கிறதற்கும் அடைமொழியாகக்கொண்டு ஒளிபொருந்திய தாம்பு என உரைத்து அநுபவிக்கலாம். எம்பெருமான் திருமேனியின் சம்பந்தம் பெற்றதாகையால் தாம்பும் தோற்றமளிக்கும் மேன்மை கொண்டதன்றோ இது. இத்தழும்புடையவனன்றோ தாமோதரன் எனச்சொல்லி, அவன் தனிமுதல்வன் என நம்மாழ்வார் திருவாய்மொழி (2–8–12) பாசுரத்தில், அருளிப்போந்தபடி. இப்படி, 'எழில்' என்னுமதை இங்குபோல் தோற்றச்செய்யாமல், தாம்பிற்கே அடைமொழியாக வருவிக்கச்செய்த, எழில்கொள்தாம்பு என்கிற, குலசேகரப் பெருமாளின் பெருமாள் திருமொழி (7–8) பாசுரத்தின் அநுபவத்தையும் இங்கு காட்டுதல் இதற்குரியதாக வாகும். (4)

பிறங்கிய பேய்ச்சி முலைசுவைத் துண்டிட்டு
உறங்குவான் போலே கிடந்தவிப் பிள்ளை
மறங்கொளிரணியன் மார்வைமுன் கீண்டான்
குறங்குகளை வந்து காணீரே குவிமுலையீர் வந்து காணீரே. (5)

பிறங்கிய — கொடுமையாக வளர்ந்த
பேய்ச்சி — பேய்வடிவான பூதனையுடைய
முலை — (விஷந்தடவப்பட்ட) முலையை
சுவைத்து — (ரக்தத்தை உறிஞ்சுவதுபோல்) உறிஞ்சிப்பார்த்து
உண்டிட்டு — (பலபடி) அமுதுசெய்து
உறங்குவான்போலே — (ஒன்றுமறியாதே) தூங்குகிறவன் போல்
கிடந்த — சயனித்திருக்கிறவனையும்
மறங்கொள் — கோபத்தைக் கொண்டிருந்தவனை

| | |
|---|---|
| இரணியன் | ஹிரண்யகசிபுவினுடைய |
| மார்வை | மார்பின் பிரதேசத்தை |
| முன் | ப்ரஹ்லாதனைப் பாடுபடுத்திய காலத்தில் |
| கீண்டான் | நரசிங்கமாகத் தோற்றிய தன்னுடைய கை நகங்களினால் (கிழித்தவனுமான) பிளந்திட்டவனுமான |
| இப்பிள்ளை | இந்தக் கண்ணபிரானுடைய |
| குறங்குகளை | தொடைகளை |
| வந்து காணீர் | வந்துபாருங்கள் |
| குவிமுலையீர் | குவிந்த முலையையுடையவர்களே |
| வந்து காணீர் | வந்துபாருங்கள். |

கொடுமையான தோற்றத்துடன் திருவாய்ப்பாடியில் வந்தவளான பூதனையின் முலையை நல்லவஸ்துவை ருசிபார்த்தது போல் ருசிபார்த்து அவள் பிராணனும் வெளிப்படும்படி உறிஞ்சி ஒன்றுமறியாதவன்போல் படுத்திருக்குமவனும், மிகக் கோபங் கொண்ட இரணியன் ப்ரஹ்லாதனைப் பலபடி துன்புறுத்தியகாலத்தில் நரசிங்கவுருவுடன் தோன்றி நகங்களால் அவன் மார்பைப் பிளந்திட்டவனுமான எம்பெருமானின் துடைகளை வந்து பாருங்கள்; குவிந்த முலையையுடையவர்களே வந்து பாருங்கள்.

கீழ்ப்பாட்டில், திருமுழந்தாள்களின் அழகு பேசப்படவே திருத்துடைகள் அவைகளின் பின் தோற்ற அத்திருத்துடைகளின் அழகை இப்பாட்டில் பேசப்படுகிறது.

பிறங்கிய பேய்ச்சி, என்றது, கொடுமையால் விளங்கின பூதனையைச் சொல்லுகிறது. அவள் எத்தனைதான் பெற்றெடுத்ததாய் போல் பாவனைகாட்டிக் கொண்டுவந்தாலும், தன் பேய்ப்பிறவியில் இயல்பாக ஏற்பட்ட கொடுமை அவளால் மறைக்கமுடியாமல் வெளித்தோன்றி நின்றபடி.

முலைசுவைத்துண்டிட்டு — என்றது, அவள் முலையை பரமபோக்யமான வஸ்துவைப்போல் பாராட்டி ருசிபார்த்துண்டமையைச்

சொல்லுகிறது. கண்ணனைக் கொல்லவந்த அவள் தன் ஸ்வபாவத்தாலே அருவறுக்கத் தக்கவளாக விருப்பதற்கு மேலே அவன் தன் வாயில் மடுக்க தன்னுடைய முலை முழுவதும் விஷத்தையும் பூசி வந்தாளாயிற்று; அப்படி ஆநும் பேனுத நஞ்சு பூசின முலையை: ஸ்தந்யம் தத்விஷ ஸம்மிச்ரம் ரஸ்யமாஸீத் ஜகத்குரோ: (உலகிற்கெல்லா மறிவு புகட்டக்கூடிய வொருவனுக்கு விஷத்தினால் நன்றாய்க்கலந்திருக்கப்பெற்ற அந்த முலைப்பால் இனிமையாக விருந்தது) என்ற, பின்புள்ளாரெல்லாம் பரிவுகாட்டிப் பேசும்படி, உண்டுகளித்திருந்தமையை உரைத்தபடி.

உறங்குவான் போலே கிடந்தவிப்பிள்ளை—என்றது, ஒன்றுமறியாதே மெய்த்தூக்கம் தூங்குவானொருவன் போல் படுத்துக்கிடக்கிற கண்ணனைச் சொல்லுகிறது.

மறங்கொளிரணியன் மார்வைமுன் கீண்டான்—என்றது, கோபத்தைக்கொண்ட இரணியகசிபுவின் மார்பை, ப்ரஹ்லாதனைப் படுத்தியகாலத்தில் நகத்தினால் பிளந்த நரசிங்கனைச் சொல்லுகிறது. இங்கு யசோதைதன் வார்த்தையின் நடுவே இப்படிப் பேசப்பட்டிருப்பது, நரசிங்கனும் கண்ணனும் அவதாரம் செய்யுமவன் ஒருவனேயென உணர்ந்திருக்கும் ஆழ்வார், தாம் யசோதையநுபவத்தை யநுகரித்துப் பேசுகையாலே எனத்தெளிக.

குறங்குகளை வந்துகாணீர்—என்றது, திருத்துடைகளை வந்து காணுங்கோள் என்பதைச் சொல்லுகிறது.

குவிமுலையீர் வந்துகாணீர்—என்றது, குவிந்த முலையையுடையவர்களே நீங்கள் வந்து பாருங்கள் என்பதைச் சொல்லுகிறது. எம்பெருமானுடைய திருத்துடைகளை அவனுக்கு திவ்யமஹிஷிகளாயிருக்குமவர்களுக்குத் தலையணையாகக் கூறுவது இயல்பானதால், நீங்களும் அவனை யநுபவிக்க இட்டுப்பிறந்துவைத்து அதற்குத்தக்க பருவத்தினர்களாயும் தோற்றுகிறீர்களானபடியினாலே அவன் திருத்துடைகளை நீங்கள் வந்து காணுங்கள் என்கிறாள் என்றபடி.

"குறங்குகளை வந்து காணீர், என்றும், "குவி முலையீர் வந்து காணீர், என்றும், வந்து, என்பதை இருமுறை உரைத்தமை, அவர்களுக்கு இவை போன்றவைகளைக் காண்பதிலுள்ள உவப்பை உணர்ந்துரைத்ததென்னலாம்.

மேலும். இப்பொழுது உங்களைக் கூப்பிட்டுக் காட்டப்படுகிற திருத்துடைகள், கன்றுகள் மேய்க்கப்போகவிருக்கிற கண்ணன் திருத்துடைகள் தானேயென ஒருபடி கருதவேண்டாம்; கண்ணனை கோலத்துடன் காணப்படுமிவன் ஸாமான்யனல்லன்; முன்னொருநாள் நரசிங்கமதாகி அவுணனை முடித்த வீரப்பாடுடையவன்; அன்று அவனைத் தன் மடியிடை வைத்தபடி தீர இன்று உங்கள் தலையைத் தன்னுடையவத்திருத்துடைகளிலே வைத்துக்கொண்டுகக்க நினைத்திருப்பானொருவன்; ஆகவே அப்பெருமையைப் பாழ்படுத்திக்கொள்ளாதே வந்து அத்திருத்துடைகளைப் பாருங்கள் என்கிறாள் என்னலுமாம்.

குறிப்பு:—இப்பாட்டில், கண்ணன் திருவாய்ப்பாடியிலொளித்து வளர்ந்துவருவதைக் கேட்கலுற்ற கஞ்சன் வஞ்சனைசெய் பூதனையைக்கூவி கண்ணனை கொல்லும்படி சொல்லி வரவிட, அப்பூதனையை, முலையுண்கிற பாவனையில் கண்ணன் முடித்திட்ட சரிதையும், ஹிரண்யகசிபுவென்கிற வசுரன், பகவத்பக்தனை தன் புதல்வன் ப்ராஹ்லாதனை மிகவும் கோபத்துடன் பலபடி பாடுபடுத்தியவப்பொழுது, எம்பெருமான் நரசிங்கனாய்த் தோன்றி நகத்தினால் அவன் மார்பைப் பிளந்து அவனை மாய்த்திட்ட சரிதையும், நரசிங்கனும், கண்ணனும், பின்னும் பலபடியும், அவதாரம் செய்தாலும், எல்லாம் திருமாலொருவனின் திருவவதாரத்திருமேனியின் வேறுபாடுகளே, என்கிறபடியும் அறியலாகிறன. (5)

மத்தக் களிற்று வசுதேவர் தம்முடை*
சித்தம் பிரியாத தேவகி தன் வயிற்றில்*
அத்தத்தின் பத்தாநாள் தோன்றிய வச்சுதன்*
முத்த மிருந்த வாகாணீரே முகிழ்நகையீர் வந்துகாணீரே. (6)

| | |
|---|---|
| மத்தம் | மதம்பிடித்ததான |
| களிறு | யானைகளையுடைய |
| வசுதேவர் தம்முடை | வசுதேவருடைய |
| சித்தம் | மனதை |
| பிரியாத | விட்டுப்பிரியாதவளான |
| தேவகிதன் | தேவகிப்பிராட்டியினுடைய |
| வயிற்றில் | திருவுதரத்தில் |
| அத்தத்தின் பத்து ஆம் நாள் | ஹஸ்த நக்ஷத்திரத்திற்கு பத்தாவதான திருநன்நாளில் |
| தோன்றிய | அவதாரம் பண்ணின |
| அச்சுதன் | நழுவுதலில்லாதவனும், தன்னையடைந்தாரை நழுவவிடாதவனுமான கண்ணபிரானுடைய |
| முத்தம் | முத்தமானது |
| இருந்த ஆ | இருக்கிறபடியை |
| காணீர் | பாருங்கள் |
| முகிழ் நகையீர் | புன்சிரிப்பை யுடையவர்களே |
| வந்து காணீர் | வந்து பாருங்கள். |

பல மதயானைகளை வைத்துக்கொண்டு ஆளும்படியான நிறைந்த செல்வத்தைக்கொண்ட வசுதேவரின் மனதிற்கிசைந்த மனையாளான தேவகியின் திருவயிற்றில் ஹஸ்த நக்ஷத்திரத்தின் பத்தாவது நாளில் வந்துதோன்றிய அச்சுதனின் முத்தத்தின் அழகைப்பாருங்கள் ; புன்சிரிப்பை யுடையவர்களே நீங்கள் வந்து பாருங்கள்.

கீழ்ப்பாட்டில் திருத்துடைகளின் திருவடிவழகு அநுபவித்தானதும், இப்பாட்டில், திருக்கடியின் ப்ரதேசத்தில், முத்தம் எனப்படும் திவ்யாவயவத்தின் அழகுபேசி அநுபவிக்கப்படுகிறது.

**மத்தக்களிற்று வசுதேவர் தம்முடை**—என்றது, பல மதயானைகளைக் கட்டிக்கொண்டுவாழ்ந்த வசுதேவருடைய, என்று சொல்லுகிறது. உலகிலும் மேலான ஐச்வர்யம் படைத்த வொருவரைச் சொல்லும்போது க (௧) ஜாந்தைச்வர்ய முள்ளவரெ

னச் சொல்வதியல்வானதாலே, பெரும்பொருள் படைத்தவர் வசுதேவர் என்று சொன்னபடி. இவ்வாழ்வாருக்கு, கண்ணன், ஸர்வ ஸுலபனாய் வஸுதேவ குமாரனாக வவதரித்தானென்று சொல்லி யநுபவிக்கு மிவ்விடத்தும், தயரத சக்கிரவர்த்தியைப் பிதாவாக வெண்ணியவதரித்த முன்னவதாரத்தைக் காட்டிலும், இவ்வவதாரத்தில் ஐச்வர்யத்தில் குறைவுற்ற வேரிடத்தில் அவதரிக்கவில்லை யெனச் சொல்வதில் உள்ள ஓர் ஆதரமிருக்கிறபடி காண்மின். இவ்வநுபவத்தையும் சிறிது விரித்துரைப்பது போலுள்ள இவர் திருமகளாரின் அநுபவத்தையும் இங்குகூட்டியநுபவிப்பதும் அழகுடையதாகும். அதாவது, கண்ணன், செல்வமுள்ள வசுதேவ குமாரனானாலும் வளர்ந்தவிடம் நந்தகோபன் திருமாளிகையில் அவன் குமாரனாகவன்றோ? ஆகவே, வசுதேவர் எப்படியிருந்தாலென், என எவரும் எண்ணாதபடி, திருப்பாவை அநுபவத்தில் (18) உந்து மத களிற்றன்................நந்தகோபாலன், என அருளிச்செய்தனளன்றோ? ஆக, பிறந்தவிடமும் வளர்ந்தவிடமும் கஜாந்தைச்வர்யத்தில் ஒரு குறையுடையதல்லவென்று உரைத்தனளென்க.

வசுதேவருக்கு இவ்வடைமொழி கொடுப்பதில் சிறிது சுவையுமுளதென்னலாம். பல மதயானைகளைக் கட்டிவளர்த்தவனுக்கல்லது, எம்பெருமானாகிற ஒப்பற்றவொரு மதயானையை வளர்ப்பதரிதெனவும், பல மதயானைகளிருக்குமிடத்தே அவைகளின் நடுவே அவைகளை யாள ஒப்பற்ற மதயானையொன்று வந்து பிறந்ததெனவும் கொள்வது நன்றன்றோ?

கண்ணனை, யானையென்று சொன்னவிடம் இத் திருமொழியில் 8-வது பாட்டில் தந்தக்களிறு, என்பதாலும், பல யானைகள் சூழவந்தானென்னுமிடம், வாரணமாயிரம் சூழவலம்செய்து, (நாச்சியார் திருமொழி (6–1) என்கிற பாட்டினாலும் அறியலாம்.

சித்தம்பிரியாத தேவகி தன் வயிற்றில் என்றது, வசுதேவரின் மனதைவிட்டுப் பிரியாது அவர் மனம் போனபடி நடந்துகொள்ளும் தேவகிப் பிராட்டியின் திருவுதரத்தைச் சொல்லுகிறது. எவ்வளவோ அடைமொழிகளிட்டுக் கூறவேண்டியவிவளுக்கு இவ்வடை

மொழியிட்டுக் கூறினது, மற்றும் பெருமைகளெல்லாம், தன் கணவன் மனதிற்கிசைந்து நடக்கும் உத்தம குணத்திற்கு உள்ளடங்கினவைகளேயானதாமெனக் கொள்க. முதலெடுப்பில் சக்கிரவர்த்தித் திருமகனையும், ஸீதாபிராட்டியையும், புகழுவந்த ரிஷியும், அவள் மனதில் இவரும், இவர் மனதில் அவளும் எப்பொழுதும் குடிகொண்டிருந்தார்களென இப்படியுள்ள ஒற்றுமைப் பாட்டையன்றோ கூறியுள்ளார்; மேலும், இக்குறைப்பதில், தேவகி, வஸுதேவரின் மனத்தைவிட்டுப் பிரியாதிருந்தபடியால் எம்பெருமான் முதலில் வஸுதேவர் மனத்திற்தோன்றி உடனே அப்படியே அங்கிருக்கும் தேவகியின் மனத்திலும் உறைந்தாரென்பது வெளியிடப்பட்டதென்னலாம்.

அத்தத்தின் பத்தாநாள், என்றது ஹஸ்த நக்ஷத்திரத்திற்குப் பத்தாவது திரு நக்ஷத்திரத்தைச் சொல்லுகிறது. பத்தாநாள் என்பதால், கீழ், பத்தாவதான ரோஹிணியையும் மேல் பத்தாவதான திருவோணத்தையும் சொல்லும். திருவோணமென்பது பொதுவாக திருமாலின் திருநக்ஷத்திரமென்பதும் ரோஹிணீ கண்ணனின் திரு நக்ஷத்திரமென்பதும் அவன் நல்லடியார்களுக்குத் தெரியும். ஆஸுரப்ரக்ருதிகள் எம்பெருமான் திருநக்ஷத்திரமின்னதென வறிந்து தீங்கிழையாமலிருக்க அனைவருமறியுமாறு உள்ளபடி உரைக்கக் கூசி மறைத்துரைத்தபடி. திருப்பல்லாண்டின் அநுபவத்தில் நரசிங்கனை அவதாரத்திலேயே, அவதார நக்ஷத்திரத்தை மறைத்துத் திருவோணமெனப் பேசிப் போந்தவிவர் கண்ணன் திருநக்ஷத்திரத்தை இங்ஙனம் மறைத்துரைக்குமது பெரிதல்லவெனவுணர்க.

தோன்றியவச்சுதன், என்றது, கர்மத்திற்கு வசப்பட்டுப் பிறக்காதே தன் நினைவின்படியே, எல்லாக்குணங்களுடனும், தன்னையடைந்தாரைத் தாழவிடாதே வாழ்விக்க வந்தருளின கண்ணபிரானைச் சொல்லுகிறது.

வஸுதேவர்மனதில் முன்னால் ஆவிர்ப்பவித்து பின்னால் தேவகி மனதிலும் ஆவிர்ப்பவித்தான்; அவன் அச்யுதாம்சனேயாவன்;

அப்படிப்பட்ட எம்பெருமானை தேஜஸ்ஸுடன் விளங்கும் தேவகி யும் மனதிலேயே தரித்தாளென்றும் உலகிலுள்ளவர்கள் வேறு தா (யா)து ஸம்பந்தம் பெறுவதும் அது காரணமாய்க் கொண்டு பிறக்குமதுபோல் கண்ணன் அவதரிக்கவில்லையென்பதும், இப்பாட் டின் அநுபவத்தைப் பெரும்பாலும் காட்டிக்கொடுக்குமதுபோல் அமைந்திருக்கப் பெற்ற ஸ்ரீ பாகவதம் (10–2–17) ஆவிவேசாம்ச பாகே (ஹாமெ) ந மந ஆநகதுந்துபே: என்கிற சுலோகத்தாலும் ஷை (19) ததோஜகந்மங்களமச்யுதாம்சம் ஸமாஹிதம் சூரஸுதே நதேவீ | ததா (ஒயா)ர ஸர்வாத்மக மாத்மபூதம் காஷ்டா யதாநந்த கரம் மநஸ்த:; என்கிற சுலோகத்தாலும் ஒருபடி அநுபவங் கொள்ளலாம்.

முத்தமிருந்தவாகாணீர், என்றது ஆண்மைக்கு அடையாள மாய் கடிப்ரதேசத்தில் தோற்றும் அவயவவிசேஷத்தைப் பாருங்கள் என்பதைச் சொல்லுகிறது.

முகிழ்நகையீர் வந்துகாணீர்:– என்றது, முல்லையரும்பு போன்ற புன்முறுவலை யுடையவர்களே நீங்கள் வந்து பாருங்கள் என்பதைச் சொல்லுகிறது. நீங்கள் வந்துகண்டால் அகமகிழ்ந்திடு வீர்கள்; வந்துகாண்மின்கள் என்றபடி. (6)

இருங்கை மதகளி றீர்க்கின்றவனை.
பருங்கிப் பறித்துக்கொண்டோடும் பரமன்றன்.
நெருங்கு பவளமும் நேர்நாணும் முத்தும்.
மருங்கு மிருந்தவா காணீரே வாணுதலீர் வந்துகாணீரே. (7)

| | |
|---|---|
| இருங்கை | மிக நீண்டு தொங்குகிற துதிக்கையை யுடைய |
| மதம் களிறு | மதயானையான குவலயாபீடத்தை |
| ஈர்க்கின்றவனை | தன்வசமாக்கி நடத்துகின்ற பாகனை |
| பறித்துக்கொண்டு | அந்த யானையின் தந்தங்களைப் பிடுங்கி யெடுத்துக்கொண்டு |
| பருங்கி | கொன்று |

(அதன்பின்னர்)

| | |
|---|---|
| ஓடு | (நடுவே மல்லரையும் கொன்று) கஞ்சனிடத்தே யோடின |
| பாமன்தன் | எல்லாருக்கும் உயர்ந்தவரான கண்ணபிரானுடைய |
| நெருங்கு | நெருங்கக் கோர்த்ததாய், அரையில் நெருங்கக் கட்டப்பட்ட |
| பவளமும் | பவழவடமும் |
| நேர்நாணும் | அழகிய அரைநாணும் |
| முத்தும் | முத்துவடமும் (இவைகளுடன் சேர்ந்த) |
| மருங்கும் | இடையும் |
| இருந்த ஆ | இருக்கிறபடியை |
| காணீர் | பாருங்கள் |
| வாள் நுதலீர் | ஒளி பொருந்திய நெற்றியையுடையவர்களே |
| வந்து காணீர் | வந்துபாருங்கள் |

மிகவும் பெரியதாய் நீண்டு தொங்குகிற துதிக்கையையும் மிக்க மதத்தையும் கொண்ட குவலயாபீடமென்ற யானையையும் அதனை நடத்தாநின்ற பாகனையும் அவ்யானையின் கொம்பினையே எளிதில் பிடுங்கிக்கொன்றுபொகட்டு நடுவே மல்லரையும் மாய்த்து கம்ஸனிருந்த விடத்தே ஓடோடியும் செல்லுமவனான ஸர்வோத் க்ருஷ்டனுடைய இடுப்பினழகையும், அவ்விடுப்பில் கட்டப்பட்டதான நெருங்கக்கோத்த பவழவடமும், அரைநாணும் முத்துவடமும் இருக்கிறபடியையும், பாருங்கள்; ஒளி பொருந்திய நெற்றியையுடையவர்களே வந்து பாருங்கள்.

கீழ்ப்பாட்டில், திருக்கடி ப்ரதேசத்தினழகு பேசப்பட்டதும் இப்பாட்டில் திருவாபரணச் சேர்த்தியுடன் திருவரையினழகு பேசப்படுகிறது.

இருங்கை மதகளிறீர்க்கின்றவனை—என்றது, நீண்ட துதிக்கையையும் மதத்தையுமுடைய குவலயா பீடமென்ற யானையை தன்வசமாக்கி நடத்திவைக்கிற பாகனைச் சொல்லுகிறது. இவ்யானையைக் காட்டிலும் யானை உயிர்துறந்தாலும் நடத்திவைக்குமவன்

மிக்க ஸாமர்த்தியங்கொண்டவனெனக் கருதி, ஆனையைக் கொன்ற வனென்ன மூக்குறச்சொல்லாதே பாகனைப்பற்றி பேசியபடி. இப்பா கனின் பெருமையை நம்மாழ்வாரும் ஊர்கோள்திண் பாகனுயிர் செகுத்து, என்றருளினர்.

பருங்கிப்பறித்துக்கொண்டோடும் பரமன்றன்—என்றது, அவ் யானையின் தந்தங்களை அநாயாஸமாகப் பிடுங்கி அதனாலே யானையை யும் பாகனையும் கொன்று, கம்ஸனிருந்தவிடத்தே ஓடோடியும் செல் லும் கண்ணனைச் சொல்லுகிறது. ஓடும் பரமனென்றதால், ஓட் டத்திலும் மிக்காரொருவருமில்லாதவனென்று சொன்னபடி.

இங்கு, பருங்கி, பறித்துக்கொண்டு என, முன்பின்னாகப் பாசு ரத்தில் பத ப்ரயோகம் காணப்பட்டாலும், "வார்கடாவருவியானை மாமலையின் மருப்பிணைக்குவடிறுத்துருட்டி, ஊர்கொள்திண் பாக னுயிர் செகுத்தரங்கின் மல்லரைக்கொன்று, சூழ்பாண்மேல் போர் கடாவரசர் புறக்கிடமாட மீமிசைக்கஞ்சனைத் தகர்த்த" என்கிற திருவாய்மொழி (8–4–1) வதான நம்மாழ்வார் ஸூக்தியையும், அதற்கங்கமாயமைந்த, "பருங்கையானையின் கொம்பினைப்பறித்து தன் பாகனைச் சாடிப்புக்கு, ஒருங்க மல்லரைக்கொன்று பின் கஞ் சனையுதைத்தவன்" என்கிற, திருமொழி (4–2–4)வதான, கலியன் ஸூக்தியையும், ஸ்ரீ பாகவதத்தின் அநுபவத்தையும் ஒற்றுமை கொண்டநுபவிக்குப் வண்ணமாகவே இவ்வாழ்வாரும் கருத்துக் கொண்டிருப்பவரென்பது பொருத்தமுள்ளதானதால், அதன்படி பதவுரை முதலாக அந்வயக் கிரமம் காட்டி அநுபவித்துப் போந்த தெனக் கொள்க.

நெருங்கு பவளமும்—என்றது, ஒன்றுக்கொன்று இடை விடாதே கோர்க்கப்பட்ட பவழவடத்தைச் சொல்லுகிறது.

நேர் நாணும்—என்றது அழகான அரைநாணைச் சொல்லு கிறது.

முத்தும்—என்றது,பவழவடம் முதலியதைக்காட்டிலும் வேறு நிறமாக விளங்கும் முத்து வடத்தைச் சொல்லுகிறது.

மருங்கு மிருந்த வா காணீர்—என்றது, இத்திவ்யாபரணச் சேர்த்தி யொருபுறமிருக்க, அவ்விடையின் ஸ்வபாவமான அழகே சொல்ல நிலமல்ல வானதாலே, அவ்விடையினழகையும் தனியே ஸேவியுங்கள் ; ஆபரணத்தின் சேர்த்திகொண்டும் ஸேவியுங்கள் எனச் சொல்லுகிறது.

வாணுதலீர் வந்துகாணீர்—என்றது, ஒளிபொருந்திய நெற்றியையுடையவர்களே நீங்கள் வந்து பாருங்களெனச் சொல்லுகிறது பவழமும் முத்துமணிந்த அவன் இடுப்பின் அழகை பவழம்போல் செய்யவாயும், முத்தென்ன வெண் முறுவலும் முகத்திலமைந்து. விளங்குகிற நீங்கள் வந்து காணவேணு மென்றபடி.

இப்படி இப்பாட்டில் பொருள் கொள்வதோடு முன்னிரண்டடிகளுக்கு, கண்ணனுடன் சேர்ந்த தோழன்மார்கள் யானை விளையாட்டுநடத்த, அதில் கண்ணன் சில தீமைகள் விளையாட்டாகச் செய்து ஓடுவாரெனவும் பொருளுரைப்போர் முன்னோர் ; அப்படிக் கொள்வது, மேல் பாட்டின் படிக்கு மிகப்பொருத்தமுற்றதானதால் அதன்படியும் அநுபவம் கொள்வது தகும்.

குறிப்பு, இப்பாட்டில், கண்ணனைக்கொல்ல, கஞ்சன் பல சூழ்ச்சிசெய்ததும் பாழாய் போகவே, கடைசியாய், வில்யாகமென்கிற வியாஜத்தில் மதுராபுரிக்குக் கண்ணனை வரவழைத்து, குவலயாபீடமென்ற யானையை முன்னே நிறுத்தி வழியைத் தகைந்து கொல்லும்படி செய்து பின்னும் மல்லர் முதலிய பல வீரர்களையும் நடுவே வைத்து தான் உயர ஒரு மஞ்சத்தே வீற்றிருக்க, கண்ணன் சேற்றிலிருந்து கொடியை எளிதில் பிடுங்குவதுபோல், குவலயாபீடத்தின் தந்தங்களைப் பிடுங்கி அதனையே கொண்டு, யானை, பாகன் முதலியோரை முடித்துக் கஞ்சனைக்கொல்ல அவனிருக்கு மிடத்தே ஓடோடியும் சென்ற சரிதை அறியத்தக்கது. (7)

வந்த மதலைக் குழாத்தை வலிசெய்து*
தந்தக்களிறு போல் தானேவிளையாடும்*
நந்தன் மதலைக்கு நன்று மழகிய*
உந்தியிருந்தவா காணீரே ஒளியிழையீர் வந்து காணீரே. (8)

| | |
|---|---|
| வந்த | (தன்னுடன்) விளையாடவந்த |
| மதலை குழாத்தை | இளம்பிள்ளைகளின் கூட்டத்தில் |
| வலிசெய்து | தன் ஸாமர்த்தியத்தைக் காட்டிக் கொண்டு |
| தந்தம் களிறுபோல் | தந்தம் முளைத்த இளவானைக் கன்று போல் |
| தானே விளையாடும் | தானொருவனே தலைவனாய் நின்று விளையாடுகின்ற |
| நந்தன் மதலைக்கு | நந்தகோபன் பிள்ளையான இவனுக்கு |
| நன்றும் அழகிய | மிகவும் அழகியதான |
| உந்தி இருந்த ஆ | நாபி இருக்கிறபடியை |
| காணீர் | பாருங்கள் |
| ஒளி இழையீர் | பிரகாசத்துடன் விளங்கும் ஆபரணங்களணிந்தவர்களே |
| வந்துகாணீர் | வந்துபாருங்கள். |

தன்னுடன் ஒரு சேர்த்தியாய் விளையாடவந்த சிறுப்பிள்ளைகளின் கூட்டத்தில் தன் பலத்தைக் காட்டி அவர்களை யடக்கி தந்தம் முளைத்த இளவானைக்கன்றேபோல் தானே தலைவனாய் நின்று விளையாடுகின்ற நந்தகோப குமாரனை இவனுக்கு மிக வழகியதாய் விளங்குகிற நாபி இருக்கிறபடியைப் பாருங்கள். மிக்க வொளிவீசுமாபரணங்களணிந்த பெண்களே நீங்கள் வந்து பாருங்கள்.

கீழ்ப்பாட்டில், திருவரையினழகு பேசி இப்பாட்டில் திருநாபியினழகு பேசப்படுகிறது.

வந்த மதலைக்குழாத்தை வலிசெய்து, என்றது, தன்னுடன் விளையாடவந்த சிறுப்பிள்ளைகளின் கூட்டத்தில் தன் ஸாமர்த்தியத்தைக் காட்டிச் செய்த செயலைச் சொல்லுகிறது,

தந்தக்களிறுபோல் தானே விளையாடும்— என்றது, தன்னுடன் விளையாடவந்தவர்களும் தானும் ஒத்த பருவத்தினர்களாக விளங்கியிருக்கச் செய்தே அவர்களை தான் தன்வலிமையால் ஆட்படுத்தி தானே தலைவனாக நின்று விளையாடும் விநோதத்தை வெளி

யிடுகிறது. அப்படி விளையாடுமதைக்கண்டால் அப்பொழுது கொம்பு முளைத்த யானையின் கன்றொன்று விளையாடுகிறாப்போல் தோற்றுகையாலே தந்தக்களிறு என அடைமொழியிடப்பட்டதென அறிக.

நந்தன்மதலைக்கு — என்றது, தான் பிள்ளைகளின் நடுவே யானைக்குட்டிபோல் அடங்காமல் விளையாடும் தன்மைகொண்டிருந்தாலும், தன் தகப்பனான நந்தகோபனிடம் சிறு குழந்தையாக அடங்கியிருக்குமாற்றை அறிவிக்கிறது.

நன்றுமழகிய—என்றது, அழகிற்கு இருப்பிடமான அவயவம் தோற்றுவதற்குமுன் அவ்வவயவந்தன்னையடைந்து முன் நிற்கிற ஒப்பற்ற வொருவழகைப் பேசி நிற்கிறது.

உந்தியிருந்த வாகாணீர்—என்றது, திருநாபீ கமலத்தின் திவ்ய சோபையைப் பாருங்களென்கிறது.

ஒளியிழையீர் வந்துகாணீர்—என்றது, ஒளிமிக்க ஆபரணம் பூண்டு அதனால் விளங்குகிற பெண்மணிகளே நீங்கள் வந்து காண்மின்களெனச் சொல்லுகிறது. நீங்களெல்லாம் ஒளிமிக்கவாபரணம் பூண்டு உலாவும்படி உங்களை யெல்லாம் படைத்தற்கு முதற்காரணமாய் நின்ற திருநாபியை திருந்தக் காணுங்கள் என்றபடி* (8)

அதிருங் கடல்நிற வண்ணனை* ஆய்ச்சி
மதுர முலையூட்டி வஞ்சித்து வைத்து*
பதறப்படாமே பழந்தாம்பாலார்த்த*
உதரமிருந்தவா காணீரே ஒளிவளையீர் வந்து காணீரே* (9)

| | |
|---|---|
| அதிரும் | சப்திக்கின்ற |
| கடல் | ஸமுத்திரத்தின் |
| நிறம் | வர்ணம் போன்ற |
| வண்ணனை | வர்ணத்தையுடைய கண்ணனை. |
| ஆய்ச்சி | இடைச்சியான யசோதை |

| | |
|---|---|
| மதுரம் முலையூட்டி | இனிப்பான முலைப்பாலை உண்ணும்படி செய்து |
| வஞ்சித்து வைத்து | (தான் இவனைக் கட்டுவதற்காகச் செய்யும் யத்தினமொன்று மிவனறிந்து கொள்ளமுடியாதே) ஏமாற்றிவைத்து |
| பதறப்படாமே | தன் நினைவு தவறுதபடி |
| பழந்தாம்பால் | பழமையான தாம்பினுல் |
| ஆர்த்த | கட்டின |
| உதரம் | திருவயிறானது |
| இருந்த ஆ | இருக்கிறபடியை |
| காணீர் | பாருங்கள் |
| ஒளிவளையீர் | ஒளிபொருந்திய வளைகளை யுடையவர்களே |
| வந்துகாணீர் | வந்துபாருங்கள். |

பேரொலியுடன் முழங்குகிற கடல்போல் ச்ரமஹரமான கறுத்த திருமேனி நிறமுடைய கண்ணபிரானை யசோதைப் பிராட்டி சுவையுடைத்தான முலைப்பாலையூட்டி தான் அவனைக் கட்டப்போகும் எண்ணங்கொண்டிருக்குமத்தை அவனறியாதே செய்து தன் நினைவு தப்பாதே பழகியதாம்பினுல் கட்டின அவன் திருவயிறு இருக்கிறபடியைப் பாருங்கள்; ஒளிபொருந்திய வளையையுடையவர்களே நீங்கள் வந்துபாருங்கள்.

கீழ்ப்பாட்டில் திருவுந்தியின் அழகு அநுபவித்துப் பேசப்பட்டதும், இப்பாட்டில் அதன் மேலாகவுள்ள திருவுதரத்தினழகு அநுபவித்துப் பேசப்படுகிறது.

அதிருங்கடல் நிறவண்ணனை—என்றது, சப்திக்கிற சமுத்திர நிறம்போன்ற வர்ணத்தையுடைய கண்ணபிரானைச் சொல்லுகிறது. அதிருங்கடல் என்றுமத்தால் கண்ணனின் அடங்காத் தன்மை அறிவிக்கப்பட்டதாகிறது. கம்பீரமான தோற்றத்தையுமுடையவனென்றபடி. உத்தம புருஷலக்ஷணத்தையிட்டுப் பேசுமிடங்களில், ஸமுத்திர இவகாம்பீர்யே, என்றும், காம்பீர்யாத்

ஸாகரோபம:' என்று மன்றே பேசியிருக்கிறபடிகளும். அதிர்ந்து வராத புருஷன் உபயோகமற்றவனென்று உலகில் ஸாமாந்ய வார்த்தையும் நடமாடுகிறபடி. ஆகவே திருமேனி நிறத்தாலும், ஸ்வபாவத்தாலும் கடலுக்கு ஒப்பானவனென்று உரைத்தபடியாம்.

ஆய்ச்சி மதுரமுலையூட்டி வஞ்சித்துவைத்து — என்றது, யசோதைப் பிராட்டி பிள்ளைக்கு பால் உருசியுடனிருக்கவேணுமென்று தானும் நல்ல சுவையுள்ளவைகளையே புஜிக்கையாலே மிக்க மாதுர்யத்துடன் கூடின முலைப்பாலை பிள்ளைக்குத் தாரகமாக ஊட்டி அவன் செய்த தீம்பிற்குத் தக்கபடி அவனைத் தான் கட்டநினைத்திருக்குமதை அவனறியாமல் செய்து போந்தமையைச் சொல்லுகிறது.

பதறப்படாமே—என்றது, ஒரு கார்யம் செய்வதாகப் புகுந்து அதை மறந்துவிடுவதுண்டே, அப்படியன்றி தான் அவனை கட்ட வேண்டும் நினைவொன்றும் தப்பாதபடி யிருந்தமையைக் காட்டின படி.

பழந்தாம்பாலார்த்த— என்றது, கன்று பசு முதலியன கட்டிப் பழகி மூலையிலெறியப்பட்டுக்கிடந்தபடியால் மிகவும் பழமை வாய்ந்த தாம்பினால் கட்டினமையைப் பேசுகிறது. இங்கு கட்டினது ஊரார்வந்து கண்ணன் தீமைசெய்தான் எனக்கதறிய வக்காலத்து எனக்கொள்க.

உதரமிருந்தவா காணீர்—என்றது, பழந்தாம்பால் கட்டினபடி காணலாயிருக்கும் திருவுதரமிருக்கிறபடியைப் பாருங்களென்கிறது.

ஒளிவளையீர்வந்துகாணீர் — என்றது, ஒளிமிக்க வளையையணிந்திருக்குமவர்களே நீங்கள் வந்து காண்மின்கள் என்கிறது. ஒளிவளையை யணிந்தவர்களைக் கூப்பிட்டு பழந்தாம்பாலார்த்த உதரமிருக்கிறபடியைக்காண்மின்கள் என்பதால், பதிவ்ரதையின் தன்

மையைக் காட்டிக்கொடுப்பது வளைமுதலிய ஆபரணங்களணிவ தென்று பேசப்படுவதற்கிணங்க, ஸர்வஜகத்பதியான அவனிடம் உங்களுக்குள்ள தன்மையைக்காட்ட நீங்கள் வளையை யணிந்து கொண்டிருப்பதால், உங்களெல்லோரையும் ப்ரளயகாலத்தில் ப்ரளயம் கொள்ளாமே வைத்து ரக்ஷித்தவிடமான தாம்பின் அடையாளமாகும் பூண்கட்டிவிளங்குகிற திருவயிற்றை நீங்களன்றோகாணத் தகுதியுடையீர் ; ஆகவே வந்து காண்மின்கள் என்றுரைத்த படி. (9)

பெருமா வுரலிற் பிணிப்புண்டிருந்து* அங்
கிருமா மருதமிறுத்த விப்பிள்ளை*
குருமா மணிப்பூண் குலாவித் திகழும்*
திருமார் விருந்தவா காணீரே சேயிழையீர் வந்துகாணீரே.
(10)

| | |
|---|---|
| பெருமா | மிகவும் பெரியதான |
| உரலில் | உரலுடன் |
| பிணிப்புண்டு இருந்து | கட்டப்பட்டவனாய் இருந்துகொண்டு |
| அங்கு | அந்தநிலைமையில் தானே |
| இரு | இரட்டையாயும் |
| மா | பெரியதாயுமுள்ள |
| மருதம் | மருதமரங்களை |
| முறித்த | முறிந்துவிழும்படி பண்ணின |
| இ பிள்ளை | இந்தக் குழந்தையான கண்ணனுடைய |
| குரு | சிறந்ததாயும் |
| மா | பெரியதாயுமுள்ள |
| மணி | இரத்தினங்களினலமைந்த |
| பூண் | கௌஸ்துபமாகிற ஆபரணமானது |
| குலாவி | அசைந்தாடி |
| திகழும் | விளங்காநிற்கிற |
| திருமார்வு | அழகிய மார்பானது |
| இருந்த ஆ | இருக்கிறபடியை |
| காணீர் | பாருங்கள் |

சே இழையீர் { அழகிய ஆபரணங்களைப் பூண்டிருக்கு மவர்களே

வந்துகாணீர் வந்துபாருங்கள்.

பெரியவுரலிற் கட்டப்பட்டவனாகவிருக்கும்போதே தவழ்ந்து சென்று மிகப்பெரிய இரண்டு மருதமரங்களை முறிந்துவிழப்பண்ணின இக்குழந்தையின், நல்ல பெரிய ரத்தினங்களினாலமைந்த கௌஸ்துப மென்கிற திருவாபரணம் திகழ்கின்ற திருமார்பி னழகிருக்கிற படியைப்பாருங்கள்; அழகிய ஆபரணங்களை யணிந்திருக்கு மவர்களே நீங்கள்வந்து பாருங்கள்.

கீழ்ப்பாட்டில், திருவுதரத்தினழகு திருந்தக்கண்டு பேசப் பட்டதும், இப்பாட்டில், திருமார்பினழகு பேசப்படுகிறது. அன்றியும், அவனுடைய கயிறுகட்டின வயிற்றைப்பார்த்த வுங்களுக்கு இனி வயிற்றில் தொழுவென்கிற பெரியதொரு கட்டு விடப்பட்டதேயானதால் அதன்பிறகு கௌஸ்துப மணிபோல் விளங்கும் ஜீவர்களான நீங்கள் நித்யவாஸம் செய்யப்போகு மிடமான திருமாலின் திருமார்வைக் காணுங்கோ ளெனக்காட்டிப் பேசப்படுகிற தென்னலாம்.

பெருமாவுரலிற் பிணிப்புண்டிருந்து—என்றது, இருக்கு மிடத்தைவிட்டுப் பெயர்க்க முடியாதே கிடந்தவிடத்தே கிடக்குமதான பெரியவொரு உரலில் நன்றாகக் கட்டப்பட்டிருந்தமையைச் சொல்லுகிறது.

அங்கிருமாமருத முறித்தவிப்பிள்ளை—என்றது, அப்படிக் கட்டப்பட்டிருந்தபோழுதே அவ்வுரலையும் இரட்டையானவர் ஜுனமாத்தின் நடுவே இழுத்துச்சென்று அம்மரங்களையும் அடியோடு முறித்துத்தள்ளின கண்ணனைச் சொல்லுகிறது. "பிணிப்புண் டிருந்து" "மருதமுறித்த" என்னப்படுவதால், பெரிய இரண்டு மாத்தை முறித்துத்தள்ள, முன்னை ஒப்பற்ற உரலாகும் ஒரு மாத்தில் கட்டுண்டு குருகுல வாஸமாகப் பழகினானே வென்னலாம்.

குருமா மணிப்பூண் குலாவித்திகழும்—என்றது, ச்லாக்ய மான ஸ்ரீ கௌஸ்துபரத்னம் அசைந்தாடி விளங்கிநிற்குமாற்றைச் சொல்லுகிறது. அன்றியும், ஸ்ரீ கௌஸ்துபம், மற்றும்பல திருவாபரணங்கள் எல்லாம் விளங்குமாற்றையும் விளம்பிற்றென்னலாம். கௌஸ்துபமொன்றைச் சொல்வதிலேயே விசேஷ நோக்கெனக் கொள்க. ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகனும், திருமாலின் திருமார்பை தோத்திரம் பண்ணும்போது, மணிவர ருசா ரஞ்ஜிதம் (ஸ்ரீ கௌஸ்துப ரத்தினத்தின் காந்தியினால் சிவப்பாகச்செய்யப்பட்ட) என்றே அநுபவித்தருளினமையும் காண்க.

திருமார் விருந்தவா காணீர்—என்றது, திருமார்பின் அழகிருக்கிற படியைப் பாருங்கள் என்கிறது. இத்திருமொழியில் கீழிற்பாட்டுக்களிலும், மேலே பாட்டுக்களிலும், ஒவ்வொரு திவ்யாவயவங்களை யநுபவித்துப் பேசும்போதும் திரு என்கிற அடைமொழி யிடப்படாமையால் இங்கு திரு என்பதற்கு பிராட்டியென்கிற பொருளையேகொண்டு அவளுக்குத் திருக்கோயிலாய் அவளிட்ட வழக்கான இடமென்றுரைத்தல் தகும். தாயிருக்குமிடத்தே குழந்தைகள் குதூஹலித்து விளையாடுவதென்பதியல்பானதால் கௌஸ்துப ஸ்தானீயர்களான ஜீவர்களாகிற குழந்தைகள் குலாவி நிற்கின்றன வென்பதும் சாலப்பொருந்து மாறறிமின்.

சேயிழையீர் வந்துகாணீர்—என்றது, அழகிய ஆபரணங்களை பூண்டு கொண்டிருக்கிற நீங்கள் வந்துபாருங்க ளென்கிறது. இவர்களுக்கு பூஷணங்களாகப் போற்றுதற்குரியவை, எம்பெருமானை யுள்ளபடி யறிகைக்குக் காரணமான, ஸத்வித்யாதிகள், சமதமாதி ஸம்பத்துக்கள், இவைகளே யானதாலே, அப்படிப்பட்ட ஆத்மகுணமாகும் ஆபரணங்களைப் பூண்டுக்கொண்டிருக்கிற நீங்கள் வந்து பாருங்கள்; கௌஸ்துப ஸ்தானீயர்களான ஜீவர்களின்படியும், திருவின்படியும், திருமார்பனின்படியும் மற்றுமெல்லாம் உங்களுக்கன்றோ உணரவெளிது; திருமறுமார்பனைச் சிந்தையில் நீங்களன்றோ திகழவைக்குமவர்கள் ஆகவே நீங்கள் வந்துபாருங்கள் என்றபடி.

குறிப்பு, இப்பாட்டில், குபேரனின் குமாரர்களான நளகூபரன் மணிக்கிரீவன், இவர்கள், தேவமாதர்களுடன் ஆடையின்றி கங்கையில் தாமரை நிறைந்தவோரிடத்தில் ஜலக்கிரீடை பண்ண, அங்கு நாரதமுனிவர் வரவே, முனிவரைக்கண்ட மங்கையர்கள் ஆடையணிந்து அகன்று நிற்க, இவ்விருவரும் மதத்தாலொன்று மறியாதே மரம்போலேயிருக்க, இவர்களைத் திருத்த எண்ணங்கொண்ட முனிவர், இவ்விருவரும் இரட்டை மருதமரமாகி, இடைப்பிள்ளையாக வவதரிக்கப்போகு மெம்பெருமானின்னருளா லிருப்பிடமெய்துவரென்றியம்பிமறைய, முனிவராணைகோணாது அவ்விருருமப்படியே மரங்களாக வமைந்திட, எம்பெருமானும் கண்ணனாயவதரித்து தாயினுலூரலுடன் கட்டுண்ட வொருநாளில் அவ்வுரலுடன் மரங்களினிடையேயேகி அம்மரங்களைமுறித்து, குபேரனின் குமாரர்களான விருவரையும் குளிரக்கடாக்ஷித்து அவர்களால் துதிக்கப்பட்டு அவர்களை முன்போலவே இருப்பிடம்சென்று விளங்கியிருக்குமாறு வாழ்வித்தருளினன் என்கிற வரலாறு வெளியிடப்பட்டமை அறியலாகிறது. (10)

நாள்களோர் நாலைந்து திங்களளவிலே*
தாளைநிமிர்த்துச் சகடத்தைச் சாடிப்போய்*
வாள்கொள் வளையெயிற்று ருயிர்வவ்வினான்*
தோள்களிருந் தவாகாணீரே சுரிகுழலீர் வந்துகாணீரே* (11)

| | |
|---|---|
| நாள்கள் | (கண்ணன் அவதரித்த பின்பு கழிந்த) நாள்கள் |
| ஓர் நாலைந்து திங்களளவிலே | ஒரு நாலைந்து மாதத்திற்குள்ளாகவே |
| தாளை நிமிர்த்து | திருவடியை உயரத்தூக்கி |
| சகடத்தை | சகடத்தில் ஆவேசித்துக் கொல்லவந்த அசுரனை |
| சாடி போய் | உதைத்து அழித்துவிட்டு |
| வாள்கொள் | ஒளியைக் கொண்டதாயும் |
| வளை | வளைந்ததாயுமுள்ள |
| எயிறு | பற்களையுடைய பூதனையின் |

| | |
|---|---|
| ஆர் உயிர் | முடித்தற்கு அரிதான உயிரை |
| வவ் வினான் | போக்கடித்த கண்ணனுடைய |
| தோள்கள் | திருத்தோள்கள் |
| இருந்த ஆ | இருக்கிற படியை |
| காணீர் | பாருங்கள் |
| சுரிகுழலீர் | சுருண்ட மயிர் முடியை யுடையவர்களே |
| வந்துகாணீர் | வந்து பாருங்கள். |

அவதரித்து ஓர் நாலைந்து மாதத்திற்குள்ளாகவே திருவடியை தூக்கி சகடத்தை யுதைத்து அங்கிருந்த வசுரனைமாய்த்து ஒளி வீசுகிற வளைந்த பற்களைக்கொண்ட பூதனையின் போக்கவரிதான வுயிரைப்போக்கின கண்ணனின் திருத்தோள்க ளினழகிருக்கிற படியைப் பாருங்கள்; சுருண்ட மயிர் முடியையுடைய பெண்டிர் களே நீங்கள் வந்துபாருங்கள்.

கீழ்ப்பாட்டில், திருமார்பினழகு பேசப்படவே அதன்மே லுள்ளதான திருத்தோள்களினழகு இப்பாட்டில் பேசப்படுகிறது.

நாள்களோர் நாலைந்து திங்களளவிலே—என்றது, பிறந்து ஒரு நான்கு மாதத்திற்குள் என்றும் அல்லது ஐந்து மாதத்திற்குள் என்றும், நான்கும்—ஐந்தும் ஒன்பது மாதத்திற்குள் என்றும், நாலைந்து—இருபது மாதத்திற்குள் என்றும் பலபடி பொருள்படக் கூடியதாக விருக்கும். இவ்வாழ்வார் எம்பெருமானிடத்து மிகப் பரிவுடையவராதலாலும், அதிலும் உள்ளபடியைக் கூடியமட்டில் மறைக்காமலும் பேசவேணுமென்கிற பாவமுடையவராதலாலும், சிறிது நாளுக்குள்ளாகவே சகடத்தைச் சீறியுதைத்தானென்று வெளிப்படையாகச் சொன்னால் த்ருஷ்டிதோஷம் வருமேயென் றஞ்சி, பலபடி பொருள்படப்பேசி யிருக்கிறாரென அறிக. கலியன் இச்செய்கையை எழுதிங்களில், என்றார். அவருக்கும் இவருக்கும் வாசிகாண்மின்.

தாளைநிமிர்த்துச் சகடத்தைச் சாடிப்போய்—என்றது, திரு வடியை உயரத்தூக்கும் வியாஜத்தில், தான்கிடக்கும் தொட்டிலுக்கு

மேலுள்ள வண்டியில்வந்து ஆவேசித்திருந்து தன்னைக் கொல்ல முயன்ற அசுரனை மாய்த்தபடியைச் சொல்லுகிறது.

வாள்கோள் வளையெயிற்று ருயிர்வவ்வினான்—என்றது, ஒளியையும் வளைவையுமுடைத்தான பற்களைக்கொண்ட பூதனையின் போக்குதற்கரிய வுயிரைப் போக்கினமையைப் பேசுகிறது. பூதனையை மாய்த்தது முன்னும், சகடத்தைச் சாடியது பின்னும் நடந்ததாக விருந்தாலும், பலபடி யநுபவங்கொண்டு அதற்கேற்ப மங்களாசாஸனத்தில் மண்டியிருக்கு மாழ்வார்களுக்கு இதுபோன்ற அநுபவங்களில் ஒரு கிரமநியமம் எங்கும் கைக்கொள்ளமுடியாதபடியிருக்குமென உணர்க.

தோள்களிருந்தவா காணீர்—என்றது, திருத்தோள்களினழகு இருக்கிற படியைப் பாருங்களென்கிறது.

சுரிகுழலீர்வந்துகாணீர்—என்றது, சுருண்ட கூந்தலையுடையவர்களே நீங்கள் வந்து பாருங்கள் என்கிறது. அவனும், "கமழ் பூங்குழல்கள் தடந்தோள்மேல் மிளிரநின்று விருந்தாவனத்தே விளையாடுவானொருவனாகையாலே, அவனின்தோளழகுகண்டநுபவிக்க, அவனைப்போல் சுருண்டிருண்ட குழலையுடைய நீங்களன்றோ தகுதியுடையவர்கள்; ஆகவே நீங்கள் வந்து காண்மின்கள் என்றபடி.

குறிப்பு. இப்பாட்டில், யசோதைப் பிராட்டி, தன் புத்திரனை கண்ணனை ஒருநாள் ஒரு வண்டியின்கீழ் தொட்டிலிட்டு அதில் கண் வளரச்செய்து, யமுனையாற்றிற்கு நீராடச்சென்றிருந்தபோது, கஞ்சனால் ஏவப்பட்டு கண்ணனைக் கொல்லவந்து ஸமயம்பார்த்துக் கொண்டிருந்த அசுரனொருவன், கண்ணனுக்கு தொட்டிலிடப்பட்டிருந்த வண்டியில் ஆவேசித்து கண்ணனைக் கொல்ல முயல, அதறிந்த கண்ணன், முலைப்பாலுண்ண குழந்தைகள் காலையுதைத்துக் கொண்டழுகிறபாவனையில், தான் தன் காலைமேலே தூக்கியுதைத்து சகடமாய் நின்ற வசுரனை முடித்தருளினன் என்கிற வரலாறு முன்னிரண்டடிகளிலும், பேய்ச்சியை மாய்த்தது பின்னிரண்டடிகளிலும் வெளிடப்பட்டபடி அறியலாகிறது. (11)

மைத்தடங் கண்ணி யசோதை வளர்க்கின்ற*
செய்த்தலை நீலநிறத்துச் சிறுப்பிள்ளை*
நெய்த்தலை நேமியுஞ்சங்கும் நிலாவிய*
கைத்தலங்கள் வந்து காணீரே கனங்குழையீர் வந்து காணீ
[ரே. (12)

| | |
|---|---|
| மை | மையினலலங்கரிக்கப்பெற்றதாய் |
| தட | பெரியதான |
| கண்ணி | கண்ணையுடைய |
| யசோதை | யசோதைப்பிராட்டி |
| வளர்க்கின்ற | (தானே நேரில்) வளர்த்துவருகிற |
| தலைசெய் | உயர்ந்த கழனியில் (உண்டான) |
| நீலம் நிறத்து | கருநெய்தல் பூவையொத்த நிறத்தையுடைய |
| சிறுபிள்ளை | சிறிய குழந்தையான கண்ணபிரானுடைய |
| தலை நெய் | நுனியில் கூர்மையையும் நெய்யையுங் கொண்ட |
| நேமியும் | சக்கரமும் |
| சங்கும் | சங்கமும் |
| நிலாவிய | பொருந்தியிராநின்ற |
| கைத்தலங்கள் | திருக்கைகளின் உள் ப்ரதேசங்களினழகை |
| வந்துகாணீர் | வந்துபாருங்கள் |
| கனம் | பெருத்தவைகளான |
| குழையீர் | காதிலிடுமாபரணமணிந்தவர்களே |
| வந்துகாணீர் | வந்துபாருங்கள் |

மையிடப்பெற்றுப் பெரிதான கண்களையுடைய யசோதைப் பிராட்டி தான் நேரில் வளர்த்துவருகிற சிறந்த கழனியிலுண்டான கருநெய்தற் பூவின் நிறத்தையுடைய சிறு குழந்தையான கண்ண பிரானுடைய, நுனியில் கூர்மையையும் நெய்யையுங்கொண்ட திரு வாழியும் திருச்சங்கமும் பொருந்தி வர்த்திக்கிற திருக்கைகளின்

உள்ப்ரதேசத்தினழகை வந்துபாருங்கள்; பெருத்தவைகளான காதிணுபாணமணிந்தவர்களே நீங்கள் வந்து பாருங்கள்.

கீழ்ப்பாட்டில், திருத்தோள்களினழகு பேசியநுபவித்தான தும் அத்தோள்களின் பக்கங்களில் தோற்றுகிற ஆழியும் சங்குமு டைய கைத்தலங்களினழகு இப்பாட்டில் பேசியநு பவிக்கப்படு கிறது.

மைத்தடங் கண்ணி யசோதை வளர்க்கின்ற— என்றது, மைதீட்டியலங்கரிக்கப் பெற்றதாய் பெரியகண்களையுடைய யசோ தைப் பிராட்டி, குழந்தையைப் பிறர்கையில் காட்டிக்கொடுக்காதே பரிவின் மிகுதியால் தானே நேரில் பார்த்து வளர்த்துவருகிறபடி யைச் சொல்லுகிறது. "மைத்தடங்கண்ணி" என்பதால், பிள்ளை யை வளர்க்கவேண்டி கண்கொட்டாது பார்ப்பதற்கு ஸாதனமாக அக்கண்களில் யாதொரு தோஷலேசமும் தட்டாதேயிருக்க மை தீட்டியிருக்கிறுளென்க. அஞ்சனவண்ணனை ஆயர்கோலக்கொ ழுந்தினை அரைக்கணமேனும் இமைகொட்டாது பார்த்துக்கொண் டேயிருக்கிறுளாகையாலே அங்குள்ள நிறம் முழுவதும் இவள் கண் ணில் தோற்றி எப்பொழுது பார்த்தாலும் மைத்தடங்கண்ணியாகத் தோற்றியிருக்கிறுளென்றும் கொள்ளலாம். தடமென்பது, உத்தம ஸ்திரீகளின் லக்ஷணப்படியமைந்திருக்குமதற்குமேலே அவனை ஸேவிப்பதாலேற்பட்ட பூரிப்பும் கண்களில் காட்டுகிறபடி யென்ன லாம்.

செய்த்தலை நீலநிறத்துச் சிறுப்பிள்ளை— என்றது, உயர்ந்த கழனியிலுண்டான கருநெய்தற் பூவையொத்த நிறமுடைய கண்ண பிரானைச் சொல்லுகிறது. ஸ்வபாவமான திருமேனியின் கறுத்தநிறத் துக்குமேலே கருந்தடங்கண்ணியொருவள் கண்கொட்டாது காணும் படி கிடந்தால் திருமேனி நிறம் மிகக் கருப்போடியிருக்குமது கேட் கவேண்டாவே. ஒரு ஆழ்வார், பூவையுங் காயாவும் நீலமும் பூக் கின்ற, காவிமலர் என்றும் காண்தோறும், பாவியேன் மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும், அவ்வவையெல்லாம் பிரானுருவேயென்று, என்கிறபடியே, அவன் திருமேனி நிறத்துக்கொத்த பூக்களைக்

காணும்போதே தன்னுடைய மெல்லாவியெல்லாம் மெய்மிகவே பூரிக்குமென்றருளினால், அந்நிறத்தையும் நிறமுடையவனையும் சேர்த்தநுபவிக்கும் ஓர் ஆய்ச்சி, "செய்த்தலை நீலநிறத்துச் சிறுப்பிள்ளை" என்று ஏத்தி நிற்பதும், அதுகண்டு தன் கண்கள் பூரிப்ப நிற்பதும் தகுதியுடையதுதானே.

நெய்த்தலை நேமியும்— என்றது, கூர்மையாயும் நெய்தடவியுமுள்ள திருவாழியைச் சொல்லும். சில ஆயுதமென்றால் நெய்தடவியிருக்கும் என்பதற்கு மேலே, அதைப் பிடிக்குமவன், தன் கையினால் நெய்யையும் வெண்ணெயையுமளைந்து, கண்டாரனைவரும் "கள்வனுறங்குகின்றான் வந்து காண்மின்கள் கையெல்லாம் நெய்" என்று சொல்லும்படி காக்ஷிதருவானொருவனுமாகையாலே, நேமி, நெய்த்தலையுள்ளதாக விருக்கக் குறையில்லையென்னும் கொள்க.

சங்கும்,—என்றது, இருக்குமிடத்தை விட்டகன்றுபோய் ஏவின காரியம் முடித்துவரும் திருவாழி போலன்றிக்கே, இருந்தவிடத்தே நின்று முழங்கி எதிரிகளை முடிக்கவல்ல ஸ்ரீ பாஞ்சஜன்யமென்கிற திருச்சங்கைச் சொல்லுகிறது.

நிலாவிய— என்றது, சிறிதுகாலமிருந்து சிறிதுகாலமிராதே போகுமவை போலின்றி, "எப்போதுங் கைகழலாநேமியான்" என்கிறபடி, நித்யமாய் விளங்கிக்கொண்டிருக்கையாலே அதுகொண்டுரைத்தபடி. இவைதான் தேவகிதன் வார்த்தையினால் அவதாரகாலத்திலேயே மறைக்கப்பட்டிருந்தாலும், யசோதை யறியவும் சில போது காட்டிக்கொடுத்திருப்பனே. அன்றியும், இப்படியநுபவிக்குமவர் ஆழ்வாரன்றோ? ஆனதாலும், இத்திவ்யாயுதங்களைக் குறிக்கொண்டு பேசக்கூடுமெனத் தெளிக.

கைத்தலங்கள் வந்துகாணீர்— என்றது, இவ்விரு ஆழ்வார்களும் அகலாதே அமர்ந்திருக்கிற அங்கைத் தலத்தினழகை வந்து ஸேவியுங்கள் என்கிறது. இவ்வாழ்வார்கள் உறைந்திருக்குமழகை நம்தேசிகன், "அஞ்ஜனகிரியையணைந்த சந்திராதித்யர்கள் போலே

பரஸ்பரபாகத்தையுடைய திருக்கையிலாழ்வார்கள் என பரமபத ஸோபானத்தில் அநுபவித்திருக்குமது இங்கு நினைக்கத்தக்கது.

கனங்குழையீர வந்துகாணீர்— என்றது, காதில் பொன்னாலமைந்த பெரிய ஆபரணமணிந்தவர்களே நீங்கள் வந்து ஸேவியுங்களென்கிறது. இருளன்னமாமேனியான அவன் திருக்கைத்தலத்துள்ள திருவாழி திருச்சங்குகளைக்காண்பதற்கு, அவனைப் பார்க்கும்போதே அங்கு ஒளிவீசுவதற்குத் தகுதியான ஒருகருவிபோல நீங்களும் நல்ல காதணிகள் அணிந்திருப்பதாலே நீங்கள் வந்து கண்டால் ஸுலபமாகக் காணலாயிருக்கும்; ஆகவே வந்து காண்மின்கள் என்றபடி. (12)

வண்டமர் பூங்குழலாய்ச்சிமகனாகக்*
கொண்டுவளர்க்கின்ற கோவலர் குட்டற்கு*
அண்டமும் நாடுமடங்க விழுங்கிய*
கண்டமிருந்தவா காணீரே காரிகையீர் வந்துகாணீரே. (13)

| | |
|---|---|
| வண்டு | வண்டுகளானது |
| அமர் | படிந்திருக்கிற |
| பூ | புஷ்பங்களாலணியப்பெற்ற |
| குழல் | மயிர்முடியையுடையவளான |
| ஆய்ச்சி | யசோதைப்பிராட்டி |
| மகன் ஆககொண்டு | தன் பிள்ளையெனப் பாவித்துக்கொண்டு |
| வளர்க்கின்ற | வளர்க்கப்பெறுகிற |
| கோவலர் குட்டற்கு | ஸ்ரீ நந்தகோபர் குமாரனை கண்ணபிரானுக்கு |
| அண்டமும் | அண்டங்களையும் |
| நாடும் | அவ்வண்டங்கட்குள்ளே சேதநா சேதநங்கள் நிறைந்திருக்கப்பெற்ற நாடுகளையும் |
| அடங்க | முழுவதும் தன்னுள்ளே அடங்கும்படியாக |
| விழுங்கிய | அமுதுசெய்த |
| கண்டம் | கழுத்தானது |

| | |
|---|---|
| இருந்த ஆ | இருக்கிறபடியை |
| காணீர் | பாருங்கள் |
| காரிகையீர் | அழகுடைய பெண்களே |
| வந்து காணீர் | வந்துபாருங்கள். |

வண்டுகள் படிந்த புஷ்பங்களணிந்த மயிர்முடியையுடைய யசோதை தன் பிள்ளையென வபிமாநித்து வளர்க்கிற நந்தகோபன் குமாரனை கண்ணனுடைய, அண்டங்களெல்லாவற்றையும் அவை தனக்குள்ளே சேதநா சேதநங்கள் நிறைந்த நாடுகள் முழுவதையும் தன்னுள்ளே யடங்கியிருக்கும்படி அமுதுசெய்த திருக்கழுத்தினழ கிருக்கிறபடியைப் பாருங்கள்; அழகுடையபெண்களே நீங்கள் வந்துபாருங்கள்.

கீழ்ப்பாட்டில், திருவாழி திருச்சங்குகள் பொருந்தி நிற்கிற திருக்கைத்தலங்களினழகு பேசப்பட்டதும் திருக்கழுத்தினழகு மனதை யிழுக்க அங்கே மனம்சென்று அவ்வழகநுபவிக்கிறபடி இப்பாட்டில் பேசப்படுகிறது.

வண்டமர் பூங்குழலாய்ச்சி— என்றது, நந்தகோப மஹிஷி யானதாலே நித்யத்ருப்தையானவவளுக்கு என்ன குறைவு; ஆகவே அவள் தன் குழலை நன்றாய் வாரிமுடித்து நல்ல புஷ்பங்களையெல்லாம் சூட்டிக்கொண்டிருக்கிறாள்; புஷ்பங்களிருக்குமிடத்தே வண்டுகளும் வந்தமர்ந்திருப்பது இயல்பானதால் அவ்வண்ணம் தோற்றுகிற யசோதையைச் சொல்லுகிறது. கண்ணன், தாயான தன்னிடம் அறுவறுப்புக்கொள்ளாதே வந்தணுக தன்னை வாஸனையுள்ள புஷ்பங் களினலங்காரம் செய்துகொண்டிருக்கிறாளென்க. தலையான தலையை நன்றாக வைத்துக்கொண்டிருக்குமது சொன்னது, மற் றெல்லா அங்கங்களையும் வைத்துக்கொள்ளவேண்டியபடியில் வைத் துக்கொண்டிருக்கிறாளென்றுசொன்னபடியாம்.

மகனைக்கொண்டு வளர்க்கின்ற—என்றது, தன் மகனைகவே பாவித்து வளர்த்துவருவதை சொல்லுகிறது. ஆழ்வார் தம் அநுபவமும் நடுவே நடுவே கலந்து வருகையாலே இவ்வண்ணம் விளம்பப்பட்டிருக்கிறதென வுணர்க.

கோவலர் குட்டற்கு—என்றது, நந்தகோபன் குமரனாக வழங்கிவருகிற கண்ணபிரானைச் சொல்லுகிறது.

அண்டமும் நாடுமெடங்கவிழுங்கிய கண்டமிருந்தவாகாணீர்—என்றது, அண்டங்களையும் அவற்றுக்குள்ளே சேதநாசேதநங்கள் நிறைந்திருக்கிற நாடுகளையும் தன் வயிற்றுக்குள்ளே ஒன்றோடொன்று நெருங்காதே, புறம்பொன்றும் மிகுதியாகவும் காணப்பெறாதே அடங்கியிருக்கும்படி விழுங்கிய கண்ணனின் திருக்கழுத்தினழகிருக்கிறபடியைப் பாருங்களென்கிறது. இவ்வதிசயத்தை, "அண்டரண்டபகிரண்டத்தொருமாநிலமெழுமால்வரை முற்றுமுண்டகண்டங் கண்டீர்" என (அமலனாதிபிரான் (6) பாணநாதனும், "அம்பரமும் பெருநிலனும் திசைகளெட்டுமலைகடலுங்குலவரையுமுண்டகண்டன்" என, பெ. திரு. (6—6—1) மங்கையர்கோனும். மகிழ்ந்துரைத்தார்கள். மற்றுள்ளார் அநுபவங்களையும் வேண்டுமளவு இங்கு குறிக்கொள்க.

காரிகையீர் வந்து காணீர்—என்றது, அழகுடைய பெண்களே நீங்கள் வந்து பாருங்கள் என்கிறது. அழகுவாய்ந்த உங்களுக்கல்லது மற்றையோர்க்கு இவ்வதிசயம் காணமுடியாதென்றபடி.

குறிப்பு—இப்பாட்டில், "வண்டமர் பூங்குழலாய்ச்சி, என்னுமிடத்திற்குவ்யாக்யானம் செய்தருளினவர்கள், பிள்ளை தன்னைக்கண்டு பயப்படாமைக்காக அவ்வவகாலங்களில் புஷ்பங்களை தன் குழலில் சூடி தன் குழலின் பரிமளமே அவனை யருகிலழைத்தணைக்கத்தக்க ஸாதநமாகவு மாகுமெனப் புலப்படும்படி வ்யாக்யானமிட்டார்கள். இதனால், நமக்குப் புலப்படக்கூடியதென்னவெனில், எப்பெருமான் தான் ஒருவனிடம் வந்தனாக, அவன் தன்னிடமுள்ள துர்வாஸநாதிகளை யகற்றி நல்வாஸனையூட்டிக்கொண்டு விளங்கவேண்டுமென்றும் அப்படியுள்ளவனுக்கே அவனை எல்லாப்படியாலும் கொண்டாளலாமெனவும், அப்படியின்றி தான் மனம் போனபடி இருந்துவந்தால் எம்பெருமான் தானுமகலநிற்பன் எனவும் அறியக்கூடியதாயிருக்கிறதென்னலாம்.

(13

எங்தொண்டை வாய்ச்சிங்கம் வாவென்றெடுத்துக்கொண்டு*
அங்தொண்டை வாயமுதாதரித்து. ஆய்ச்சியர்
தங்தொண்டை வாயால் தருக்கிப்பருகும்* இச்
செங்தொண்டை வாய்வந்து காணீரே சேயிழையீர் வந்து
[காணீரே. (14)

| | |
|---|---|
| ஆய்ச்சியர் | இடைப்பெண்கள் |
| எம் தொண்டை வாய் சிங்கம் | கோவைப்பழம்போன்ற வாயையுடைய எங்களுடைய சிங்கக்குட்டியே |
| வா என்று | நீ எங்களருகில் ஓடிவா என்று கூப்பிட்டு |
| எடுத்துக்கொண்டு | (தங்கள் இடுப்பில்) எடுத்து வைத்துக்கொண்டு |
| அம் தொண்டை வாய் | அழகிய கோவைப்பழம் போன்ற வாயினின்றும் பெருகுகிற |
| அமுது | அமிர்தத்தை |
| ஆதரித்து | ஆசைப்பட்டு |
| தம் தொண்டை வாயால் | தங்களுடைய கோவைப்பழம் போன்ற வாயினால் |
| தருக்கி | நெருக்கி |
| பருகும் | பானம் பண்ணுகிற |
| இ செம் | இந்தச் சிவப்பான |
| தொண்டை வாய் | கோவைக்கனிபோன்ற வாயை |
| வந்து காணீர் | வந்து பாருங்கள். |
| சேயிழையீர் | சிறந்த ஆபரணமணிந்தவர்களே |
| வந்து காணீர் | வந்து பாருங்கள். |

இடைப் பெண்களெல்லாம் திரண்டு வந்து, கோவைக்கனி போன்ற வாயையுடைய என் சிங்கக்குட்டியே, நீ எங்களருகில் ஓடிவாவென்று கூப்பிட்டு தங்கள் இடுப்பில் எடுத்து வைத்துக் கொண்டு, அழகிய கோவைக்கனிபோன்ற வாயினின்றும் பெருகுகிற அமுதை யாசைப்பட்டு, தங்களுடைய கோவைக்கனிபோன்ற வாயினால் நெருக்கிப் பானம் பண்ணுகிற இந்த சிவப்பான கோவைக்கனிபோன்ற கண்ணபிரானின்வாயை (திருவதரத்தை)

வந்துபாருங்கள்; சிறந்த ஆபரணமணிந்தவர்களே வந்து பாருங்கள்.

கீழ்ப்பாட்டில் திருக்கண்டத்தினழகு கண்டுபேசி யனுபவித்தானதும் இப்பாட்டில் திருவதரத்தினழகு ஆதரவுடன் பேசி யநுபவிக்கப்படுகிறது,

என் தோண்டைவாய்ச் சிங்கம்—என்றது, கோவைப்பழம் போன்ற சிவந்த வாயையுடையவனாய் மிகவழகுடன் தோற்றி நிற்கச்செய்தே, சிங்கக்குட்டிபோல், பிறர் தன்னிடம் அணுக அஞ்சி நிற்கும்படியான மிடுக்குடன் விளங்கிநிற்குமாற்றை யறிவிக்கிறது. இவ்வாழ்வார் திருமகளாரான கோதையும் ஆய்ப்பாலர் பெண்டுகளை மார்கழி நீராட வழைக்கிற வநுபவத்தில், நம் நோன்பை நோக்கிக் காப்பான் கண்ணனென்று சொல்லவேண்டியவிடத்து, அவன் ஸர்வரக்ஷகத்வன் என்பது, சொல்லும் சொல்லிலேயே முந்துறப் புலப்படும்படி, அசோதை யிளஞ்சிங்கம் என்றன்றோ அழகாக அருளிச்செய்து போருவதும். அதன் மேலும் அவனை நேராக நோக்கிப் பேசியதாய்க் கொள்ளுமநுபவத்திலும், நீ கண்ணனைபடியே வந்தால் எங்கள் கார்யம் தலைக்கட்டுமோ கட்டாதோ; ஆகவே நீ சீரியசிங்கமறிவுற்று வருவது போல் வந்தருளி எங்கள் காரியமாராய்ந்தருளல் வேண்டுமென்று விளம்பி நின்றதும்; ருக்மிணிப் பிராட்டியான ஓர் அவதாரத்திலும் கண்ணனைக் காதலித்து, தனக்குக் கண்ணைலம் கோடித்து நிற்குமதை அவனுக்கறிவித்து கடுகவந்து கன்னியான தன் கையைப் பற்றவேணுமென்று வேதியன் வாயிலாக விண்ணப்பம் விடுத்தவிடத்தும், ஸ்வயம்வர மண்டபத்தே சிங்கம்போல் வந்தருள வேண்டுமென்றதும்; ஆகவே அவன் பெருமைபோ டொத்த பிராட்டிமார்களே தங்கள் ரக்ஷணத்திற்குச் சிங்கமாக வரவேண்டுமென்றால், அறிவொன்றுமில்லாத வர்யர்குலத்து மங்கையர் தங்களைக் கைப்பற்றி யநுபவிக்க, சிங்கமாய் வரவேண்டுமென்று கருத்துக்கொண்டு, இங்ஙனம் உரைத்தனரெனவுணர்க.

வாவென்றெடுத்துக்கொண்டு— என்றது, ஒரு கோவைக்கனி வாய் கொண்ட சிங்கத்தை கூசாதே கூவிக்குலாவி இடுப்பில் எடுத்து வைத்துக்கொண்டுகக்குமதை யுரைக்கிறது. நரங்கலந்த சிங்கமொன்றே, தன்னிடம் நண்ணுத வாளவுணனிடத்து ஒரு படியும், தன்னை நண்ணி நல்கியிருக்குமவர்களிடம் ஒருபடியும் ஒரேகாலத்தில் விளங்கியிருந்ததென்றால், அசோதை யிளஞ்சிங்கமான கண்ணபிரான் தன்னை ஆதரிக்குமவர்களிடமணுகாதே நிற்பரோ?

அம்தொண்டைவாயமுதாதரித்து, என்றது, தானுன திருமேனியே அமுதமாய் அவ்வமுதின் வாயும் அமுதமாயிருக்குமதற்கு மேலே என்னிளங்கோங்கையமுதமூட்டிவளர்த்தியான், என்கிற படியே அவ்வாயில் கொண்டுண்ண ஊட்டுமதும் அமுதானபடியினாலே அங்கு அமுதைத்தவிர வேறொன்றும் புலப்பட வழியில்லையே? கோதைதானும் பாஞ்சசன்னியத்தைப் பலகேழ்வி கேட்குமவஸரமாக வநுபவங்கொண்ட விடத்தில், மதுசூதன் வாயமுதம், என்றும், உலகளந்தான் வாயமுதம், என்றும், மாதவன் தன் வாயமுதம் என்றும் இப்படியேயன்றோ வாய்வெருவி நின்றதும். ஆகவே அநுபவ ரஸிகைகளெல்லாம் ஆசைகொண்டு பேசும்படியுள்ள கோலக்கனி வாயமுதை ஆதரித்துப்போந்தபடி.

ஆய்ச்சியர் தம்தொண்டைவாயால் தருக்கிப் பருகும்— என்றது, நித்யஸூரிகளுக்கு போக்யமானவொரு வஸ்து இடக்கை வலக்கை வாசியறியமாட்டாத இடைச்சிகளுக்கு இட்ட வழக்காய் இனிதிருக்குமதை ஏத்தியுரைக்கிறது. அவன் தன் தொண்டை வாயை அநுபவிக்க ஆய்ச்சியர்களும் தங்கள்தொண்டை வாய்களைத் தூண்டியபடி. அவனை அநுபவிக்குமவர்கள் அவனோடு ஸாம்யம் பெற்று அநுபவிக்குமாப் போலே அவனுடைய ஓரவயவத்தை அநுபவிக்கும் ஆய்ச்சியரின் ஓரவயவமும் அவனவயவத்தின் ஸாம்யம் பெற்றநுபவித்ததென்க. தன்தொண்டை வாயால் தருக்கிப்பருகும் என்று பேசும் பேச்சின் இனிமை காண்மின்; ஒரு கோவைப்பழம் ஒரு கோவைப் பழத்தை நெருக்குகிறதென்கிறது, விவாஹமும் விவாதமும் ஒற்றுமைப்

பட்ட இருவர்கட்கே ஏற்படுமாயின் அது அழகுடைத்தானது என்னும் நீதி இவ்விளையாட்டிலும் விநோதமாய் விளம்பப்பட்டதென்னலாம்; அன்றியும் தருக்கி என்பதற்கு செருக்கி என்ற பொருள்கொண்டு, இப்பெரும் பாக்கியம் நாம் பெற்றோமெனப் பெரிதுமுள்ளம் பூரித்து நல்ல அஹங்காரத்திலுண்டான அவ்வுகப்பு முகத்தில் தோற்றப்பருகினபடியுமாம். இப்படி இப்பாட்டில் கோலக்கனிவாயின் அநுபவப் பெருமையே குறிக்கொண்டு பேசப்பட்டாலும், இவன்தான் "முற்றா விளையா விளையாட்டொடு காதல் வெள்ளம் விளைவிக்கும் அம்மானாகையாலே, இவனை ஆய்ச்சியர்கள் தங்களிடுப்பில் எடுத்துக்கொண்டு தங்களில்லமேகி எல்லா அநுபவத்தையும் கொண்டனர் என்பதும் ஒருபடி உணர்த்தப்பட்டதென்னலாம். இந்த அநுபவவிசேஷத்தைப்பற்றிமேனில் 1—6—8 வது பாசுரத்தில், "உன்னையு மொக்கலையில் கொண்டு தமில் மருவியுன்னொடு தங்கள் கருத்தாயின செய்துவரும் கன்னியர்" என்று இவ்வாழ்வார் தம்மாலே வெளிப்படையாகப் பேசப்படுவதையும் காண்க.

இச்செந்தொண்டை வாய்:— என்றது, ஆயர்மங்கைகள் நெருக்கி இவன் திவ்யாதரத்தை (உதட்டை)ப் பானம் பண்ணச் செய்தேயும் அதன் நிறம் குன்றாமலிருக்கும் மேன்மையை மெச்சிப் பேசுகிறது. "கொள்ளக் குறைவிலன்" என்னுமது எவ்விஷயத்திலும் ஒற்றுமைப்பட்டிருக்கிறபடி.

வந்து காணீர்:— என்றது இவ்வழகினருமை காண ஒரு நாலடி நடமின், நடந்துவந்தால் செவ்வனே காணலாமென்றபடி.

சேயிழையீர் வந்து காணீர்:— என்றது, நீங்களோ உங்களை எவ்வளவோ ஆபரணங்களால் அழகு செய்துகொண்டிருக்கிறீர்கள்; இத்திருவாயோ இருந்தபடியிலேயே மிகவும் அழகுடன் விளங்கி நிற்கிறது; இதனை வந்து ஸேவியுங்கள்; வந்து காண்கையைத் தவராதீர்கள் என்றுகொண்டு, வந்து காணீர் வந்துகாணீர், என, ஆதரந்தோற்ற இரட்டித்துரைத்தபடி. இவ

னின் கோவைக்கனிவாய் காண இவ்வளவு கோலம் செய்து கொண்டிருக்கிற நீங்களே தகுதியுடையீர்; ஆகவே, வந்துகாணீர் என்னவுமாம். அன்றியும், "பேய் முலை யுண்டு சகடம் பாய்ந்து மருதிடை போய் முதல் சாய்த்து, புள்வாய் பிளந்து களிறட்ட, தூமுறுவல் தொண்டைவாய்ப் பிரானை யெந்நாள் கொலோ, யாமுறுகின்றது தோழீ" (திருவாய்மொழி 5—3—8) என்று ஓர் அநுபவரஸிகர் துடிக்கும் விஷயமன்றோ உங்கள் கண் வட்டத்தில் வந்துகிடக்கிறது. ஆகவே இவ்வநுபவத்தை இழவாதே வந்துகொள்ளுங்கோள் என்று கூறினபடியுமாம். இவ்வொரு திருவாய்மொழிப் பாசுரத்தில் கூறியுள்ள சரிதைகள், பெரும்பாலும் இத்திருமொழியில் கீழில் பல பாசுரங்களில் பேசப்பட்டிருக்கிறபடியையும் உற்றுநோக்கி உணர்ந்துகந்திடுமின். (14)

நோக்கியசோதை நுணுக்கிய மஞ்சளால்*
நாக்கு வழித்து நீராட்டுமிந்நம்பிக்கு*
வாக்கும் நயநமும் வாயும் முறுவலும்*
மூக்கு மிருந்தவா காணீரே மொய்குழலீர் வந்து காணீரே(15)

| | |
|---|---|
| அசோதை | யசோதைப்பிராட்டியானவள் |
| நோக்கி | இவன் திருமேனியின் ஸௌகுமார்யத்திற்கு இது தகுந்ததோ என ஆராய்ந்து |
| நுணுக்கிய | நன்றாக அரைத்த |
| மஞ்சளால் | மஞ்சள் விழுது காப்பினால் |
| நாக்கு வழித்து | நாக்கை நன்றாக வழித்து (அதன்பின்) |
| நீராட்டும் | மஞ்சன மாட்டுவிக்கிற |
| இ நம்பிக்கு | பரிபூர்ணனான இந்தக்கண்ணபிரானுக்கு |
| வாக்கும் | (தாய் தந்தையரைக்கூவும்) திருவாக்கும் |
| நயநமும் | திருக்கண்களும் |

| | |
|---|---|
| வாயும் | திவ்யாதரத்தின் அசைவும் |
| முறுவலும் | (அதிலுண்டாகும்) மந்தஹாஸமும் |
| மூக்கும் | திருமூக்கும் |
| இருந்த ஆ | (இவைகளின் அழகு)இருக்கிறபடியை |
| காணீர் | பாருங்கள் |
| மொய்குழலீர் | நெருங்கிய குழலையுடைய பெண்களே |
| வந்துகாணீர் | வந்து பாருங்கள் |

யசோதைப்பிராட்டி, இவன் திருமேனியின் மென்மைக்குத்தக்கபடி சிந்தனை செய்து நன்றாக வரைத்த மஞ்சள் விழுது காப்பால் நாக்கை வழித்து அதற்குப் பிறகு திருமஜ்ஜனம் செய்விக்கிற பரிபூர்ணனான இக்கண்ணபிரானுக்கு, தாய் தந்தையரை அம்மாவென்றும், அப்பாவென்றும் கூப்பிடுகிற திருவாக்கும், திருக்கண்களும், திவ்யாதரத்தினசைவும், அங்குண்டாகும் மந்தஹாஸமும், திருமூக்கும் இருக்கிற வழகைப்பாருங்கள்; நெருங்கிய குழலையுடைய பெண்டிர்களே நீங்கள் வந்து பாருங்கள்.

கீழ்ப்பாட்டில் திருவதரத்தினழகைப் பேசி யநுபவிக்கவே, அது திருமுகமண்டலத்தில் மற்றும் திவ்யாவயங்களுடன் ஒருசேர்த்தியாய் ஸமுதாயமான சோபையை யநுபவிக்கவேணுமென்கிற வாசையைத் தூண்ட, அப்படி ஸமுதாயமான சோபையில் கால்தாழ்ந்த வண்ணம் இப்பாட்டில் பேசப்படுகிறது.

நோக்கியசோதை நுணுக்கிய மஞ்சளால்— என்றது, தன் குழந்தையின் ஸௌகுமார்யத்தையறியுமவள் தாயான படியினாலே, அவள் தானே நேரில், இவனின் மென்மையையும் நோக்கி, மஞ்சளின் தன்மையையும் நோக்கி, அதன்மேல் இவன் திருமேனிக்கீடாக அரைத்தும் நோக்கின மஞ்சள் விழுது காப்பைச் சொல்லுகிறது.

நாக்கு வழித்து நீராட்டுமிந்நம்பிக்கு:— என்றது, தாயான யசோதை, தன் நாக்கை அரைத்த மஞ்சளால் வழித்து நீராட்ட வேண்டியதற்கு வேண்டுமவைகளெல்லாங்கொண்டு நீராட்டும்படி, தன்னை அவள் தனக்கு ஸர்வஸ்வாதீனமாக ஆக்கி, அப்படி

அவளுக்கு அடங்கி நிற்குமதில் பரிபூர்ணனாக விளங்கி நிற்கிறான் என்பதைச் சொல்லுகிறது.

**வாக்கும்:**— என்றது, அம்மாவென்றும், அப்பாவென்றும் ஆர்வத்துடன் உகந்தழைக்கும் திருவாக்கைச் சொல்லுகிறது.

**நயநமும்:**— என்றது, தம்மையுகந்து நோக்குவார் தம்மைத் தாமும் உகந்து நோக்கும் திருக்கண்களைச் சொல்லுகிறது.

**வாயும்:**— என்றது, உகந்து நோக்கவே அதடியாக சிறிது துடிக்கிற திவ்யாதர பல்லவத்தைச் சொல்லுகிறது.

**முறுவலும்:**— என்றது, வந்துநோக்கி நிற்கிறவர்களைத் தாம் நோக்கி அதன் மேல் செய்யும் புன் முறுவலைச் சொல்லுகிறது.

**மூக்கும்:**— என்றது, ஒரு செயலுமிராதே யிருக்கிற தன் நிலையிலேயே தன் அழகுக்கு ஒரு உபமாநமிட்டுச் சொல்ல வொண்ணாதே மிகவழகுடன் விளங்கும் திருமூக்கு என்பதைச் சொல்லுகிறது.

**இருந்தவா காணீர்:**— என்றது, இப்படி அழகுள்ளவனைத்தும் ஒரு சேர்த்தியாகச் சேர்ந்து விளங்கி நிற்கிற பெருமையைக் காணுங்கோள் என்கிறது.

**மோய் குழலீர் வந்து காணீர்:**— என்றது, நெருங்கிய கூந்தலையுடைய பெண்டிர்களே நீங்கள் வந்து பாருங்கள் என்று சொல்லுகிறது. அவனுடைய பல திவ்யாவயவங்கள் சேர்ந்து ஒற்றுமைப்பட்டிருக்குமாற்றை, குழலொன்றிலே கொண்டிருக்கும் நீங்கள் வந்து காண்மின்கள் என்றபடி, அன்றி, குழலிலாவது ஒன்றோடொன்று நெருங்கி ஒரு சேர்த்தியானபடி காணாவாயிருக்கிற நீங்கள்; வந்து காணீர் என்னவுமாம். (15)

விண்கோளமரர்கள் வேதனை தீர* முன்
மண்கோள் வசுதேவர் தம் மகனாய் வந்து*
திண்கோளசுரரைத் தேயவளர்கின்றான்*
கண்களிருந்தவா காணீரே கனவளையீர் வந்துகாணீரே* (16)

| | |
|---|---|
| விண்கொள் | சுவர்க்கம் முதலான வுலகங்களைத் தங்களிருப்பிடமாகக் கொண்டு வாழுகின்ற |
| அமரர்கள் | இந்திரன் முதலான தேவர்களின் |
| வேதனை | பெருந்துன்பமானது |
| தீர | தீர்ந்துபோம்படி |
| முன் | முன்னே |
| மண்கொள் | நிலவுலகை யிருப்பிடமாகக்கொண் டிருக்கிற |
| வசுதேவர் தம் | வசுதேவர் தமக்கு |
| மகன் ஆய் | குமாரனாக ஆகி |
| வந்து | வந்தவதரித்து |
| திண்கொள் | வலிமையைக் கொண்டிருக்கிற |
| அசுரரை | அஸுரரானவர்கள் |
| தேய | மாய்ந்துபோம்படி |
| வளர்கின்றான் | வளரா நிற்கின்ற கண்ணபிரானுடைய |
| கண்கள் | திருக்கண்கள் |
| இருந்த ஆ | இருக்கிற அழகை |
| காணீர் | பாருங்கள் |
| கனவளையீர் | பொன்வளையை யணிந்திருக்கு மவர்களே |
| வந்து காணீர் | வந்துபாருங்கள். |

சுவர்க்கம் முதலான மேலுலகங்களைத்தங்களிருப்பிடமாகக் கொண்ட இந்திரன் முதலானவர்களின் பெருந்துன்பம் தீர்ந்து போகும்படி, முன்னதாக இப்பூவுலகை யிருப்பிடமாகக்கொண்டு வாழும் வசுதேவர் தமக்குத் தாம் குமாரனாக வந்து அவதாரம் பண்ணி, வலிமையைக்கொண்டு வாழும் அசுரர்களெல்லாம் மாய்

ந்து போகும்படி வளர்கிற இக்கண்ணபிரானின் திருக்கண்களி னழகிருக்கிற படியைப்பாருங்கள்; பொன் வளையையணிந்திருக்கு மவர்களே நீங்கள் வந்து பாருங்கள்.

கீழ்ப்பாட்டில் ஸமுதாயமாகத் திருமுக மண்டலத்தில் சோபையையனுபவித்துப் பேசிநிற்கவே, அவைகளில் திருக்கண் களினழகு விசேஷமாக ஈடுபடுத்த, பின்னையும் அவ்வழகிலேயே கால்தாழ்ந்து அவ்வழகின்படி இப்பாட்டிலும் பேசப்படுகிறது.

இந்திரியங்களெல்லாவற்றிலும் தலைமை கொண்டது திருக்க ண்களானதால் தனியே பின்னையும் பேசப்படுகிறபடி. மேலும், திருமாலைக்கண்டுகொள்ளத்திருக்கண்களினழகே முந்துற இன்ன படியுள்ளதெனவெங்குமேத்தப்படும் பெருமைக்கேற்ப இங்ஙனம் அநுபவங்கொள்ளப்படுகிறதென்னலாம்.

விண் கோளமரர்கள் வேதனைதீர-என்றது, எவ்வளவோயாக ங்கள் முதலியன செய்து படாதபாடு பட்டு சுவர்க்கமென்கிற ஓர் பரணை யேறி அதை சிலநாள் இருப்பிடமாகக்கொண்டு வாழக் கருதினால், அவ்வாழ்வில் ஒரு நாளாகிலும் நல்வாழ்வு வாழ்ந்தோ மென்றிருக்க வொண்ணாதே, அவ்வமரர்களைப் பலபடியும் அசுரர் கள் துன்புறுத்திப்போருவர்களாயிற்று; அப்படியமரர்க்கு நேர் ந்த கஷ்டங்களைத்தீர்க்க வெண்ணினபடியைச்சொல்லுகிறது,

முன் மண் கோள் வசுதேவர் தம் மகனாய் வந்து—என்றது, விண்கொளமரர் வேதனை தீர்க்க, மண்ணுலகில் வசுதேவ குமார னாக முன்னதாய் வந்து பிறந்தானாயிற்று; இங்கு வந்து பிறந்து உடனேயே தமக்காகக்கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த வசுதேவர் தம் கஷ்டம் தீர்த்தானாயிற்று. விண்ணிலுள்ளோர் பலர் கஷ்டம் தீர்க்க மண்ணிலுள்ள ஒருவர் கஷ்டத்தை முன்னதாகத் தீர்த்துப் பழகியபடி. இங்கொருவர் கஷ்டம் தீர்வது அங்குள்ளவர்கள் கஷ்டம் தீர அங்குரார்ப்பணமாக அமைந்ததென்னலாம். இதனை "தந்தை காலில் பெரு விலங்கு தாள விழ நள்ளிருட்கள் வந்த எந்தை பெருமானார்,, என்றும் 7—5—1) "தந்தை காலில் வில

ங்கற் வந்து தோன்றிய தோன்றல்,, என்றும் 8—5—1) இப்படி கலியனும் ஏத்திப்போந்தார். வின் கொண்டவர் வேதனை தீர்க்க தான் மன் கொண்டவர்க்கு மகனாகவும் தாழ்ந்துவந்து தோன்றி னான் காண்மின்.

திண் கோள சுரரைத்தேய வளர்கின்றான்—என்றது, வலிமை கொண்டவசுரரெல்லாம், இவன் வளரவே தேயுமவர்களாயிற்று. அசுரரை மாய்க்க ஓர் பிறவி பிறந்தும் அதற்கு மேலும் தக்கபடி வளர்ந்தானுமாயிற்று. மாயாவிகளானவசுரரைத் தொலைக்க, "உன் வளர்த்தியூடே வளர்கின்றதானுன்றன் மாயைதானே, என குலசேகரப்பெருமாள் திருமொழி 6—3) எவரும் ஏத்தும்படி வளர்ந்தபடி. இவ்விரண்டடிகளில் பேசியபடியுள்ள இவனின் பிறப்பையும், இவன் வளர்ந்த வரலாற்றையும் நினைந்து, நீ ஒருவர்க்கு ஒன்று செய்யவெண்ணினால் இருந்தவிடத்திருந்தே உன் பெருமை குன்றாது செய்யலாகாதோ? ஒரு தாய் தேடி கர்ப்ப வாஸமும் செய்து அவர்கள் தம்மகனென்று சொல்லும்படி பிறக்கவும் வேணுமோ? அதுவே போராதோ? ஒரேஇரவில் மற்றொருத்தி மகனாய்மாறி மறைந்து வளரவும் வேண்டுமோபிரானே? என்பதைக்கருத்திற்கொண்டு குருகை முனி, பிறந்த வாறும்—வளர்ந்த வாறும் (திருவாய்மொழி 5—10—1) என்று கூறி பெரிதும் துயரப்பட்டுத் துடித்ததையும் இங்கு நினைக்க. இருந்தவிடத்திருந்து நினைந்தவப்பொழுதே நீர்மையிலாதாரை நீறாக்க வல்லமையிருந்தும், தன் திருவுருவு கண்டு வாழக்கருதுமவர்களுக்கு தான் நேரில் வந்து தன்னைக்காட்டியல்லது வாழ்விக்க இயலாதே; அதற்காகவே வந்து தோன்றுகிறபடி. இதனால் அவனருளிய, பரித்ராணாய ஸாதூநாம். (ஸாதுக்களின் ரக்ஷணைத்தின் பொருட்டு) என்கிறபடியில் முன்னம் வந்தவதரித்து, பின்னரே, தன்னைப்பேறாதாரைப் பெரிதும் பிணம் படுத்துமவனாயிற்று. ஸ்வதந்திரனான தானும் ப்ரமாணத்தின் போக்கைப் பின்பற்றி நடந்ததை இங்குரைத்திருப்பதுணர்க.

கண்களிருந்தவா காணீர்—என்றது, எம்பெருமானைக்காண முக்கிய லக்ஷணமொன்றைக் காட்டுமிடத்து, ஆழ்ந்ததொரு

தடாகத்தில் பெருத்த நீரையாஸநமாகக்கொண்டு, பருத்த கொடியின் நுனியிலுள்ளதாய், சூரிய கிரணத்தால் அப்பொழுதலர்ந்த செந்தாமரையிதழ் போன்ற கண்களையுடையவன், என்றன்றோ வேதங்கள் எல்லாவற்றிலும் பேதங்களில்லாதபடி ஓதங்கிளர்ந்தாப்போல் உரைக்கப்படுகின்றது; அப்படியுள்ள திருக்கண்களினழகிருக்கிறபடியைப்பாருங்கள் என்கிறது.

கன வளையீர் வந்து காணீர்—என்றது, பொன்வளை பூண்டு பூரித்து நிற்குமவர்களே வந்து பாருங்கள் என்கிறது. கனவளையணிந்தவர்களே, கனவளையாள் கணவனுடைய கண்களைக்காணுங்கள் என்றபடி. வெள்ளி வளைக்கையைப்பற்றவே பதறிக்கிடக்குமவன் பொன் வளைக்கையைக்கண்டு கொண்டு, பொன்னே போல் போற்றுவன்; ஆகவே எல்லாவநுபவத்திற்கும் முந்தியது (சக்ஷு: ப்ரீதி:) கண்களால் கண்டுகளிக்கையானதால், அதை இழவாதே கொள்ளுங்கோள் என்கிறதாகவுமாம். (16)

பருவம் நிரம்பாமே பாரெல்லா முய்ய*
திருவின் வடிவொக்கும் தேவகி பெற்ற*
உருவுகரிய வொளி மணிவண்ணன்*
புருவமிருந்தவா காணீரே பூண் முலையீர்வந்துகாணீரே* (17)

| | |
|---|---|
| பருவம் | தக்கவயதானது |
| நிரம்பாமே | நிரம்புவதற்கு முன்னதாகவே |
| பாரெல்லாம் | பூமியெல்லாம் |
| உய்ய | உஜ்ஜீவிக்கவேண்டி |
| திருவின் வடிவு ஒக்கும் | இலக்ஷ்மியின் திருமேனிபோன்ற திருமேனியையுடைய |
| தேவகி பெற்ற | தேவகிப் பிராட்டியினால் பெறப்பட்ட |
| உருவு கரிய | திருமேனி கருமைவாய்ந்து |
| ஒளி மணி வண்ணன் | ப்ரகாசத்தையுடைய இரத்தினம் போன்ற நிறத்தையுடைய கண்ணபிரானுடைய |
| புருவம் | திருப்புருவங்கள் |
| இருந்த ஆ | இருக்கிற அழகை |

| | |
|---|---|
| காணீர் | பாருங்கள் |
| பூண் முலையீர் | ஆபரணங்களையணிந்த முலையை யுடையவர்களே |
| வந்து காணீர் | வந்து பாருங்கள் |

தருந்த வயது நிரம்புவதற்கு முன்னதாகவே, பூமியெல்லாம் உஜ்ஜீவநத்தையடையக்கருதி இலக்குமிதேவியின் திருவுருப்போன்ற உருவத்தினளான தேவகிப்பிராட்டியினால் பெறப்பட்டவனும், திருமேனி கருமைவாய்ந்துப்ரகாசத்தையுடைய இரத்தினம் போன்ற திருநிறத்தையுமுடைய கண்ணபிரானுடைய புருவ வட்டங்களின் அழகிருக்கிறபடியைப்பாருங்கள்.

கீழ்ப்பாட்டில், திருக்கண்களினழகு திருந்தக்கண்டு பேசப்பட்டதும் அவைகளின் மேலே திருபுருவத்தினழகு தோற்றவே, அவ்வழகு அநுபவிக்கப்பட்டமை இப்பாட்டில் பேசப்படுகிறது.

பருவம் நிரம்பாமே பாரேல்லா முய்ய—என்றது, ராக்ஷஸர்களால் துன்பப்பட்ட தேவர்களால் வேண்டப்பட்டு, தயரதனைப் பிதாவாகக்கொண்ட ஸ்ரீராமபிரானைப்போல் தக்க வயது வந்து வில்வித்தை முதலியவனைத்துமறிந்தபின் ஆச்ரிதவிரோதிகளை யழித்ததுபோலின்றி, இங்கு தொட்டில் பருவம்முதற்கொண்டே ஆச்ரிதவிரோதிகளாய்த் தன்னை யணுகின துஷ்டவசுர ரனைவரையுமழித்து பாரெல்லாம் பாங்குடனிருக்கச்செய்த பெருமையைப் பேசியபடி.

திருவின் வடிவொக்கும் தேவகி பெற்ற— என்றது, ஸ்வரூபத்திலும், ரூபத்திலும், அதாவது பிறர் கஷ்டம் கண்டிரங்குமதிலும், அழகைக்கொண்டிருப்பதிலும், பெரியபிராட்டியாருக்கு ஒப்புற்ற தேவகி பிராட்டி பெற்றெடுத்த பெருமையைச்சொல்லுகிறது. கீழ் 1வதுபாட்டில் தன்னாளிக்கு உவமையாக, சீதக்கடல் உள்ளமுதன்ன தேவகி என்று மட்டில் ஒருபடியாகக்காட்டிப் பேசியதை இங்கு விரித்து ரூபத்திலும் ஸ்வரூபத்திலும் இரண்டிலும் தோற்றும்படி அருளிச்செய்தவாறறிக. ஸ்வரூபத்திலும்,

ரூபத்திலும், எல்லாப் படியாலும் ஒரு குறையுமில்லாது ஒற்றுமைப் பட்டிருக்கிறபடி.

உருவுகரிய வொளிமணிவண்ணன்—என்றது, ரூபத்தால் கருத்ததாய் ஒளிமிக்க நீலரத்னம் போன்ற திருநிறத்தை யுடையவன் என்கிறது.

புருவமிருந்தவாகாணீர்—என்றது "இன்னுயிர்க் கேழையர் மேல் வளையுமிணை நீலவிற்கொல், மன்னிய சீர்மதனன் கருப்புச் சிலை கொல், மதனன்தன்னுயிர்த்தாதைக் கண்ணபெருமான் புருவமிவையே" எனப்போற்றிப் பேசப்படுகிற திருப்புருவ வட்டங்களின் அழகிருக்கிறபடியைக் காணுங்கள் என்கிறது.

பூண்முலையீர் வந்து காணீர்—என்றது, ஆபரணங்களணிந்து அழகியதாய் விளங்குகிற முலையையுடைய மாதர்களே வந்து காணுங்கள்; பூணுன முலையையுடையவர்களே வந்து காணுங்கள் என்றவுமாம். (17)

மண்ணும் மலையும் கடலுமுலகேழும்*
உண்ணுந் திறத்து மகிழ்ந்துண்ணும் பிள்ளைக்கு*
வண்ண மெழில் கொள் மகரக்குழை யிவை*
திண்ணமிருந்தவா காணீரே சேயிழையீர் வந்துகாணீரே*(18)

| | |
|---|---|
| மண்ணும் | (எல்லாவற்றிற்கும் ஆதாரமான) பூமியையும் |
| மலையும் | (அதற்கு ஆதாரமான) மலைகளையும் |
| கடலும் | (இவையெல்லாவற்றையும் சூழ்ந்திருக்கும்) கடல்களையும் |
| உலகு ஏழும் | மற்று மனைத்துலகங்களையும் |
| உண்ணும் திறத்து | (ப்ரளயம் கொண்டு போகாமே வயிற்றில் வைக்க) அமுது செய்கிறபடியில் |
| மகிழ்ந்து உண்ணும் | மிகவும் ஸந்தோஷத்துடன் அமுது செய்கிற |

| | |
|---|---|
| பிள்ளைக்கு | குழந்தையான இந்த கண்ண பிரானுக்கு |
| வண்ணம் | நல்ல நிறத்தையும் |
| எழில்கொள் | அழகையும் கொண்டு விளங்குகின்ற |
| மகரக்குழை இவை | மகரமத்ஸ்யத்தின் வடிவம் போன்ற வடிவங்கொண்ட குண்டலங்களான இவற்றினுடைய |
| திண்ணம் | ஸேவிக்குமவர் சிந்தையையும் கண்களையும் கவரவல்ல வழகு |
| இருந்த ஆ | இருக்கிறபடியை |
| காணீர் | பாருங்கள் |
| வந்து காணீர் | நீங்கள் வந்து பாருங்கள். |

பூமியையும், மலைகளையும், கடல்களையும், மற்று மனைத்துலகங்களையும் அமுது செய்வதில் யாதொரு ப்ரயாஸமுமின்றி மிக மகிழ்ச்சியுடன் அமுது செய்கிற குழந்தையான இந்தக் கண்ண பிரானுக்கு, நல்ல நிறத்தையும் அழகையும் கொண்டிருக்கிற மகர குண்டலங்களின் அழகிருக்கிறபடியைப் பாருங்கள்; அழகிய ஆபரண மணிந்தவர்களே நீங்கள் வந்து பாருங்கள்

கீழ்ப்பாட்டில் திருப்புருவத்தினழகு பேசப்படவே அங்கு அசைந்தாடுகிற மகரகுண்டலங்கள் தோற்றவே அவைகளினழகு இப்பாட்டில் பேசியநுபவிக்கப்படுகிறது.

**மண்ணும் மலையுங் கடலுமுலகேழும், உண்ணும் திறத்து மகிழ்ந்துண்ணும் பிள்ளைக்கு**—என்றது, ப்ரளய காலம் வந்தவாறே பூமி முதலான வனைத்துலகங்களிலுள்ள சேதநாசேதநங்களெல்லாவற்றையும் ப்ரளயம் கொள்ளாதபடி தன் வயிற்றில் வைத்து ரக்ஷிக்க ஸங்கல்பித்து அப்படி யதனைச்செய்ய, தான் அவற்றையுண்ணும் போது யாதொரு ப்ரயாஸமின்றியும், இவைகளை இன்று ரக்ஷிக்கும் வகைபெற்றோமே யென்றும் பெருமகிழ்ச்சிகொண்டு ரக்ஷித்தருளும் சாதுர்யத்தைச்சொல்லுகிறது.

**வண்ண மெழில்கொள் மகரக்குழையிவை**—என்றது, நல்ல

வர்ணத்தையும் அதோடு அழகையுங் கொண்டு, பார்க்கும் நம் போலியர்க்கு கண்முன்னே விளங்கிநிற்கும் சுராமீன் வடிவமாயுள்ள மகரகுண்டலங்களைச் சொல்லுகிறது. இப்பெருமையை நந்தேசிகனும் "காந்திக்கு லீலாடோலைகள் போலேயசைகிற மகர நெடுங்குழைக் காதுகளும்" என, பரமபத ஸோபாநத்தில் அருளிப்போந்தார்.

திண்ணமிருந்தவா காணீர்—என்றது, ஸேவிக்குமவர்களின் கண் முதலியதைக் கவருவதில் ஒப்பற்ற வொரு பெருமையுடைத்தாயிருக்குமாற்றைக் காணுங்களெனச் சொல்லுகிறது.

சேயிழையீர் வந்துகாணீர்—என்றது, அழகிய வாபரணமணிந்திருக்குமவர்களே நீங்கள் வந்து பாருங்களெனச் சொல்லுகிறது; நீங்கள் எத்தனையோ ஆபரணமணிந்து விளங்குகிறீர்களே, இவனணிந்து கிடக்கிற மகரகுண்டலங்களை வந்துஸேவியுங்கள்; அதன் வாசியறிவீர் என்றபடியுமாம். (18)

முற்றிலும் தூதையும் முன்கைமேல் பூவையும்*
சிற்றிலிழைத்துத் திரிதருவோர்களை*
பற்றிப் பறித்துக்கொண்டோடும் பரமன்றன்*
நெற்றியிருந்தவா காணீரே நேரிழையீர் வந்து காணீரே* (19)

| | |
|---|---|
| சிறு இல் | (மணலினால் செய்யப்பட்ட) சிறு வீடுகளை |
| இழைத்து | அமைத்துக்கொண்டு |
| திரி தருவோர்களை | அதுவே பொழுது போக்காகத் திரிந்து விளையாடும் சிறிய பெண்களை |
| பற்றி | வலுவில் அவர்களிடம் சென்று அவர்கள் கையைப் பிடித்து |
| முற்றிலும் | அவர்கள் விளையாட்டில் மணல் கொழிக்கிற சிறிய சுளகுகளையும் |
| தூதையும் | மணல் சோறாக்கும் சிறிய பானைகளையும் |

| | |
|---|---|
| முன்கைமேல் | முன்னங் கைமேல் வைத்துப் பேச்சுக் கேட்டு விளையாடுகிற |
| பூவையும் | நாகணவாய்ப் புள்ளையும் |
| பறித்துக்கொண்டு | பலாத்காரத்தாலே பிடுங்கிக்கொண்டு |
| ஓடும் | அவர் கையில் பிடிபடாதே ஓடுகின்ற |
| பரமன் தன் | தீம்புசெய்வதில் தலைவனான கண்ணபிரானுடைய |
| நெற்றி | வியர்வை நீர் பரம்பின திருநெற்றியினழகு |
| இருந்த ஆ | இருக்கிறபடியை |
| காணீர் | பாருங்கள் |
| நேரிழையீர் | நுண்ணிய ஆபரணங்களையுடைய பெண்மணிகளே |
| வந்து காணீர் | வந்து பாருங்கள். |

மணலினாலாய சிறு வீடுகளமைத்துக்கொண்டு அதுவே பொழுதுபோக்காய் விளையாடும் சிறு பெண்களை, வலுவில் அவர்களிடம் சென்று அவர்கள் கையைப்பிடித்து, அவர்கள் விளையாட்டில் மணல் கொழிக்கும் சுளகுகளையும், மணற் சோறுக்கும் சிறிய பானைகளையும், முன் கைமேல் வைத்துப் பேச்சுக்கேட்டு விளையாடும் நாகணவாய்ப் புள்ளையும், பலாத்காரத்தாலே பிடுங்கிக் கொண்டு, அவர்கள் கையில் பிடிபடாதே ஓடுகின்ற தீம்பில் தலைவனான கண்ணபிரானின், வியர்வை பரம்பின திருநெற்றியினழகிருக்கிற படியைப் பாருங்கள்; நுண்ணிய ஆபரணங்களையுடைய பெண்மணிகளே வந்துபாருங்கள்.

கீழ்ப்பாட்டில் திருமகரக் குழைகளினழகு கண்டு பேசவே அம்மகரக்குழைகளிரண்டின் சோபையாலும், தானான தன்மையிலுள்ள சோபையாலும், திருநெற்றியினழகு முன்னே தோன்ற அவ்வழகு இப்பாட்டில் பேசியநுபவிக்கப்படுகிறது.

**முற்றிலும்தூதையும் முன்கைமேல் பூவையும், சிற்றிலிழைத்துத் திரிதருவோர்களை**—என்றது, ஊரிலுள்ள ஆயர் சிறுமியர்கள் விளையாட்டிற்காக சிறுவீடுகளமைத்துக் கொண்டும் அவ்வீட்டின்

கார்யங்களுக்கு வேண்டிய சிறு சுளகு சிறிய பானை இவைகளை சேகரித்து வைத்துக்கொண்டும், அதற்கு மேலும் உல்லாஸமாகப் பொழுதுபோக்க அழகிய பேச்சுக்கள் பேசும் பூவை பைங்கிளிகள் முதலியவைகளைத் தங்கள் முன்னங்கைமேல் வைத்துக் கொண்டும் விளையாட்டாகத் திரிந்துகொண்டிருக்கு மாற்றைச் சொல்லுகிறது.

பற்றிப் பறித்துக் கொண்டோடும் பரமன்தன்— என்றது, அவ்விளவாய்ச்சியர் விளையாட்டிலூன்றின மனதையுடையவர்களாயிருக்கச்செய்தே, அவர்களிடம் சென்று அவர்கள் கையைப் பிடித்து கையிலுள்ள விளையாட்டுக் கருவிகளனைத்தையும் வலுவில் பறித்துக்கொண்டு அவர்கள் கையில் பிடிபடாதே ஓடோடியும் செல்லுமதில் உயர்ந்தவனொருவன் என்பதைச்சொல்லுகிறது,

நெற்றியிருந்தவாகாணீர்—என்றது, நெற்றியின் அழகானது எம்பெருமானைக் கண்டநுபவிக்க ஆசைப்படுமவர்களை அப்படியே தன்னிடம் மோஹமடைந்து நிற்கும் செயலைச் செய்யத்தக்க பெருமைபூண்டு விளங்குகிறது; அதைக் கண்டால் அதன் பெருமை உங்களால் அறியலாகும்; ஆகவே காணீர் என்பதைச் சொல்லுகிறது.

நாள்மன்னு வெண்டிங்கள் கோல், (பூர்வபக்ஷத்தில் வ்ருத்தியடைகிற சந்திரனோ) என்கிறபடி பல படிகளில் பலரால் பலவிடங்களில் பேசப்பட்டாலும், தன்னுடைய அநுபவத்தில் இவன் திவ்யாவயவங்களொன்றொன்றுக்கும் அனேகமாக வேறொரு உபமானமிட்டுச் சொல்லவொண்ணாதே நினைத்து நின்றநுபவிக்குமாற்றை இங்கும் காட்டிப் பேசியபடி.

நேரிழையீர் வந்துகாணீர்— என்றது, உங்களுக்குள்ள மிருந்த ஸௌகுமார்யம் தோன்ற நுண்ணிய ஆபரணமணிந்து விளங்குமவர்களே, நீங்கள் வந்து காண்மின்கள்; மேன்மைபெறுவீர் என மெச்சிப் பேசியபடி. (19)

அழகிய பைம்பொன்னின் கோலங்கைக்கொண்டு*
கழல்கள் சதங்கை கலந்தெங்குமார்ப்ப*
மழகன்றினங்கள் மறித்துத் திரிவான்*
குழல்களிருந்தவாகாணீரே குவிமுலையீர் வந்து காணீரே*(20)

| | |
|---|---|
| அழகிய | அழகுடையதான |
| பைம்பொன்னின் | பசும்பொன்னால் செய்யப்பட்ட |
| கோல் | (கன்று மேய்க்கத்தக்க) கோலை |
| அம்கை | அழகிய கையில் |
| கொண்டு | பிடித்துக்கொண்டு |
| கழல்கள் | (திருவடிகளில் சாத்தப்பட்டிருக்கிற) வீரக்கழல்களும் |
| சதங்கை | சலங்கைகளும் |
| கலந்து | ஒன்றோடொன்று சேர்ந்து |
| எங்கும் | நடந்துசெல்லுமிடங்களிலெல்லாம் |
| ஆர்ப்ப | பேரொலிசெய்ய |
| மழ கன்று இனங்கள் | இளமையான கன்றுகளின் கூட்டங்களை |
| மறித்து | (அவை தங்களிஷ்டப்படி நெடுந்தூரம் செல்லவொட்டாதே) மடக்கி |
| திரிவான் | திரிந்து விளையாடும் கண்ணபிரானுடைய |
| குழல்கள் | கேசங்களினழகு |
| இருந்த ஆ | இருக்கிறபடியை |
| காணீர் | பாருங்கள் |
| குவிமுலையீர் | குவிந்த முலையையுடையவர்களே |
| வந்துகாணீர் | வந்துபாருங்கள். |

அழகுடையதாயும் பசும்பொன்னினால் செய்யப்பட்ட கன்று மேய்க்கத்தக்க கோலை அழகிய திருக்கையில் பிடித்துக்கொண்டு, திருவடிகளில் சாத்திய வீரக்கழல்கள் சலங்கைகள் இவைகள் ஒன்றோடொன்று தம்மிலே சேர்ந்து, நடந்துபோமிடமெல்லாம் பேரொலி செய்ய, இளங்கன்றின் கூட்டங்களை தூரத்தில் செல்ல

வொட்டாமல் மடக்கி அதிலுகப்பேகாரணமாகத் திரிந்து விளையாடும் கண்ணபிரானின் குழல்களினழகிருக்கிறபடியைப் பாருங்கள்; குவிந்த முலையையுடையவர்களே வந்து பாருங்கள்.

கீழ்ப்பாட்டில், சிறு வியர்வை பரம்பி அழகியதாய் விளங்கின திரு நெற்றியினழகை அநுபவித்துப் பேசி நிற்கவே, அங்கு வந்து அலைகிற திருக்குழல்களினழகு இப்பாட்டில் அநுபவித்துப் பேசப்படுகிறது.

அழகிய பைம்பொன்னின் கோலங்கைக்கொண்டு—என்றது அழகுடைய பசும் பொன் என்றும், அழகுடைய – பசும் பொன்னினால் செய்யப்பட்ட கோல் என்றும் கொண்டு, அதைத் தரித்திருக்கிற திருக்கையினழகையும் பேசி நிற்கிறது. திருக் கையினழகு, தானான தன்மையிலேயே கண்டாரை ஆட்படுத்த வல்லதாய் விளங்கியதேயானால், கோலுங்கையுமாய்க்கொண்ட கோலத்திற்கு ஆட்பட்டுப் பேசுவது ஒரு வியப்பில்லையே; இவன் திருக்கையில் ஏந்தத்தக்க ஏற்றத்தை ஏற்றதுகொண்டே, பொன்னும் அழகு பெற்றது; கோலும் அழகு பெற்றதெனக்கொள்க. இக்கோலத்திற்குள்ள பெருமைகண்டன்றோ, கோலால் நிரை மேய்த்தாயனாய், நா. திரு (13—2) என்று கோதையும், கோலால் நிரைமேய்த்த எங்கோவலர் கோவே, பெ. திரு, (4-7-7) என்று, கொற்றவேல் பரகாலனும், கூறி நின்றதும். இவ்வநுபவங் கொண்டருளும், விட்டுசித்தன் புத்தூர்க்கோனும், இத்திருக்கோல் கொண்ட கோலத்திற்காட்பட்டு, தாமும் கோல்கொண்டு வாரர்ப்பிக்கக்கருதி (2—6)—வேலிக்கோல் வெட்டி என்று, கோல் கொண்டுவர ஆளிட்ட பருவமாகத் தனியே ஒரு திருமொழி யிட்டருளுவதும். ஆகவே அப்படிப்பட்ட கோலைக்கொண்டு விளங்குமதில் முன்னடியில் ஈடுபட்டுப் பேசியபடி.

கழல்கள் சதங்கை கலந்தெங்கு மார்ப்ப—என்றது, எம்பெருமான் திருவடிகளில் வீரக்கழல்களும், சதங்கைகளும் சாத்தப்பட்டிருப்பதினாலே அவைகள் ஒன்றோடொன்று தம்மிலேசேர்ந்து கலீர், கலீர், என்று ஒலிக்கிறபடியை உரைக்கிறது.

மழகன்றினங்கள் மறித்துத் திரிவான்— என்றது, திருக் கையில் கோலாகிய ஒரு ஆபரணமும், திருவடிகளில், கழல் கள், சதங்கைகள், முதலான திவ்யாபரணங்களும் பூண்டு, இளங் கன்றுகளை நெடுந்தூரம் செல்லவொட்டாமல் மறித்து தன்னரு கில் வரச்செய்து, எல்லாம் தன்னருகில் வந்துசேர்ந்ததும், தான் அந்த ஆனந்தம் தோன்ற விளையாடுகிருனென்கிறது. எம்பெரு மான் தன் செங்கோலால் அனைவரையும் அடக்கியாட்கொண்டு அவர்கள் வந்துசேரவேண்டியவிட மின்னதெனக்காட்ட, கலீர் கலீர் என்று சப்திக்கும் திவ்யாபரணங்களைத் திருவடிகளில் பூண்டு அவர்கள் திருவடிகளினருகில் திருந்திவந்தணுகவே, அந்த ஆனந்தம் அளவிலடங்காது திரிகிருனென்னலாம். இப் படி அழகிய திருவாபரணமிடப்பட்டுச் சப்திக்கும் திருவடிகளைத் தான், “கோலமாமேன் சென்னிக்குன் கமலமன்ன குரைகழலே, என்றும், “குரைகழல்கள் நீட்டி மண்கொண்ட கோலவாமனு, என்றும் திருவாய்— (4—3) 6—7)ல் குருகைக் கோன் சடகோ பனும், வேண்டிநின்றதும் காண்க.

குழல்களிருந்தவா காணீர்—என்று, அவன் திருமுடியில் மயிர்முடியின் மஹிமையைக் காணுங்கள் என்கிறது. ஆச்ரிதர் தன்னிடம் சேரும்படி நேர்ந்த பெருமையினுல் தலையின் முடியும் தரித்திருந்தபடி. இந்த மயிர்முடியின் மஹிமைபற்றியன்றே மூந்துறக் கேசவன் என்னப்படுகிறதும். இந்த நாமத்தினுல் ஏற்பட்டதன்றே பரதத்வ மின்னதென்கிற தெளிவும். (அதா வது, க இதி ப்ரஹ்மணோ நாம ஈசோஹம் ஸர்வதேஹி நாம் | ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவ நாமவாந் ||) (க, என்பது பிரமனின் பெயராகும்; நான் எல்லாப் பிராணிகளுக்கும் யஜமானன்; நாங்கள் தேவரீர் திருமேனியிலிருந்து உண் டானவர்கள்; ஆனதால் தேவரீர் கேசவன் எனப் பெயர் படைத்தவராகிறீர்) என்று மஹாதேவன், ஸ்ரீமந் நாராயணனை நோக்கி விஸ்ணப்பம் செய்தவரலாற்றுல் எதிரிவாயினுல் பரதத்வ மின்னதெனத் தீர்ந்ததற்கு அறிகுறியான நாமம் கேசவன் என்பது.) மேலும் இந்த நாமம் தான் பன்னிரு நாமத்திலும்

முன்னிருக்கும் நாமமாய் வாய்த்திருப்பது. தலைவன் தலையைப் பற்றிவந்ததால் தலைமை பெற்றபடி. இவ்வநுபவப்படியிலும் திருப்பாத கேசமென்பதில் தலைக்கட்டும் பாசுரமாகவும் நின்று தலைமைபெற்றதும் இந்த நாமமே. கேசவ: க்லேசநாசந, கெடுமிடராயவெல்லாம் கேசவாவென்ன என்று இந்த நாமமே, எல்லாருடைய எல்லாக் கஷ்டங்களையும் போக்கடிக்கவல்லதென்னப் புகழப்பட்டிருப்பதும். ஆகவே இதைக் காணீர் என்றபடி.

குவிமுலையீர் வந்துகாணீர்— என்றது, இப்படி அழகும் பெருமையும் நிரம்பிய ஒருவன் திருக்குழல்களின் கோலத்தைத் தகுந்த பருவமுடைய பெண்களான நீங்கள் தவிராதே வந்து பாருங்கள் என்றாராயிற்று. (20)

சுருப்பார் குழலி யசோதை முன் சொன்ன*
திருப்பாதகேசத்தைத் தென்புதுவைப் பட்டன்*
விருப்பாலுரைத்த விருபதோ டொன்று
முரைப்பார் போய்* வைகுந்தத் தொன்றுவர் தாமே * (21)

| | |
|---|---|
| சுரும்பு ஆர் | வண்டுகளாலே நிறைந்திருக்கப் பெற்ற |
| குழலி | கூந்தலையுடைய |
| அசோதை | யசோதைப் பிராட்டி |
| முன் | கண்ணன் அவதரித்திருந்த வப்பொழுது |
| சொன்ன | சொல்லி யநுபவித்ததான |
| திருப்பாத கேசத்தை | திருவடிமுதல் திருமுடியளவாகவுள்ள அழகின் பெருமையை |
| தென் புதுவை பட்டன் | அழகிய ஸ்ரீவில்லிபுத்தூருக்குத் தலைவரான பெரியாழ்வார் |
| விருப்பால் உரைத்த | மிகவாதரம் தோற்ற வருளிச் செய்ததான |
| இருபதோடு ஒன்றும் | இருபத்தொரு பாட்டுக்களையும் |
| உரைப்பார் தாம் | ஓதியுணர்ந்து சொல்லுமவர்கள் |

| | |
|---|---|
| போய் | இவ்வுலகை விட்டு நீங்கிப்போய் |
| வைகுந்தத்து | கலங்காப் பெருநகரான ஸ்ரீ வைகுண்டத்தில் |
| ஒன்றுவர் | பொருந்தி நித்யவாஸம் செய்யப் பெறுவர்கள் |

வண்டுகள் நிறைந்த கூந்தலையுடைய யசோதை கிருஷ்ணன் அவதரித்தவப்பொழுது அவன் திருவடி வழகைக்கண்டு சொல்லி யநுபவித்த திருப்பாதம் முதல் திருமுடியளவாகவுள்ள வநுபவத்தை, அழகிய ஸ்ரீ வில்லிபுத்தூருக்குத் தலைவரான பெரியாழ்வார் மிகவாதரத்தாலருளிச்செய்ததான இருபத்தொரு பாட்டுக்களையும் ஓதியுணர்ந்து சொல்லுமவர்கள் இந்நிலவுலகைவிட்டு நீங்கிப்போய் ஸ்ரீ வைகுண்டத்தில் நித்யவாஸம் செய்யப்பெறுவார்கள்.

கீழ் இருபது பாட்டுக்களினாலும் எம்பெருமானின் பாதாதி கேசமதான வநுபவத்தைப்பேசி, இப்பாட்டில், இப்படி பேசியுள்ள இப்பாட்டுக்களைக் கற்றார்க்குப் பலம் சொல்லி இத்திருமொழியைத் தலைக்கட்டுகிறார்.

சுருப்பார் குழலி—என்றது, "வண்டமர் பூங்குழலாய்ச்சி" என்கிற பாட்டில் பேசியபடி குழந்தை அன்புடன் தன்னையணுக, அழகாக அந்த அந்த ருதுக்களில் அலரும் புஷ்பங்களைத் தவிராது தரித்திருக்க, அந்தப் புஷ்பங்களில் தேன்நிறைந்து விளங்க, அதைப் பானம் பண்ண வண்டுகளும் வந்து நிறைந்திருப்பது தகுதியுடையதானதாலே எப்பொழுதும் "சுருப்பார் குழலி" யென்கிற அடைமொழியும் இவளைவிட்டகல அவகாசம் பெறாமல் அணுகி நிற்கிறபடியைக் காட்டுகிறது.

சுரும்பு—வண்டுகள்

அசோதை முன்சொன்ன—என்றது, அவதரித்த அடுத்த க்ஷணம் தொடங்கி வளர்த்தவள் யசோதையானபடியினாலே அவனுடைய பெருமையையும், அழகையும் கண்டு முழுவது மநுபவித்து அவ்வநுபவத்தின் கனம் தாங்கமாட்டாதே பிறரை

யும் குறித்து அவ்வழகெல்லாம் சொல்லிப்போந்தாள் என்கிறது இங்கு, யசோதை தனக்கே இவ்வநுபவங்களெல்லாம் கிடைக்கப் பெற்றன, என்பதற்குச் சான்றாக, திருவிலேனொன்றும் பெற்றி லேன், எல்லாந் தெய்வநங்கை யசோதை பெற்றாளே" என்றிப்படி தெய்வத் தேவகி புலம்பிய புலம்பலாக, ஸ்ரீ குலசேகரப் பெருமாள் அருளிச்செய்த, பெருமாள் திருமொழி (7)-வது திருமொழியின் அநுபவம் முழுவதையும் கொள்க.

திருப்பாத கேசத்தை—என்றது, கண்டவள் தாயாகிலும் கண்டபடியில் திருவடிமுதல் திருமுடியளவாகவே கண்டுரைத் தமையைக் காட்டுகிறது.

தேன்பதுவைப் பட்டன்—என்றது, ஒரு ஆய்ச்சி ஒரு கால விசேஷத்திலே கண்டுரைத்ததை, தாமும் தம்முடைய பாவனை யின் மிகுதியால் அப்பொழுதே நேராகக் காண்பதுபோல் அநுபவங்கொண்டுரைக்கையாலே வில்லிபுத்தூரிலுள்ளாரில் தான் தலைமைபெற்று விளங்குமவர் என்கிறது.

இங்கு, ஓர் ஊரில் அவதரித்து ஓர் ஊரில் வளர்ந்த வொரு வனின் உண்மையான பெருமை பேசப்புறப்பட்ட வொருவர் படியும், அவனைப்போல பிறந்துவளர்ந்ததில் ஒரு ஒற்றுமை கொண்டு, எனக் காட்டுமவர்போல், "தென்புதுவைப்பட்டன்" என்பதற்கு, "அவன்தான் ஸ்ரீ மதுரையிலே அவதரித்து திரு வாய்ப்பாடியிலே போந்தாப்பேலேயிறே இவர் தாமும் திருப்புத் தூரிலே அவதரித்துத் திருமாளிகையிலே போந்தபடி" என்கிற திருவாய்மொழிப் பிள்ளையின் வ்யாக்யானத்தையும் கூட்டியநு பவிக்க.

விருப்பாலுரைத்த—என்றது, இவ்வநுபவத்தை வெளியிட்டது, தன்னாதரத்தின் மிகுதியாலின்றி, மற்றொரு பேறையும் ஒரு பொருட்டாக மதியாமையை விளக்குகிறது. மேலும் "யசோதை முன் சொன்ன" வென்பதையும் "பட்டன் விருப்பாலுரைத்த" என்பதையும் உற்றுநோக்கினால், இவருடைய ஆதரம் அவளினுடைந் துநிற்குமென்பது, தனியே எடுத்துக்கூற வேண்டுவதொன்றன்று.

. இருபதோடொன்றும்— என்றது, எம்பெருமானின் திருப்பாத கேசம்வரை அநுபவம் இருபது பாட்டுக்கள் என்றும், மற்றொன்று இவை கற்றார்க்குப் பலம் சொல்லும் பாசுரமென்றும் கொண்டு ஒரு கணக்கிட்டபடி. இவ்விருபத்தொரு பாட்டுகளிலுள்ள வநுபவம் கைவந்தால் இருபத்தொரு தலைமுறையளவாக வுள்ளவர்களும் மேற்கூற நிற்கும் மேன்மையான பேறு பெறுவர்கள் என்று ஒருவாறு காட்டியபடியுமென்னலாம்.

உரைப்பார்தாம்— என்றது, இத்திருமொழியை நன்றாக ஓதி இவ்வநுஸந்தானத்தையே பொழுதுபோக்காகவுடையவர்களைச் சொல்லுகிறது. இங்கும், "விருப்பால்" என்பதைக் கூட்டிக் கொண்டும் அநுபவிக்கலாம்.

போய்— என்கிறது, இங்கிருந்த காலத்து உள்ள அநுபவங்களைக் குறையின்றிக் கொண்டு அவனை வாழ்த்தி வாழ்ந்து, இந்த சரீரம் விட்டுச்செல்லுமளவில் அவன் தான் துணைகொண்டு அழைத்துப்போக, கூடச்சென்று என்பதை யுரைக்கிறது.

வைகுந்தத்தோன்றுவர்— என்றது, அவனுடன் கூட ஸ்ரீவைகுண்டத்தில் சென்று, அவனைவிட்டு அரைக்கணமேனும் பிரியாதே, அவன் ஸ்ரீபாதத்தில் திவ்யரேகைபோலே ஒன்றாய்க் கலந்து, அவனுக்கு எல்லா விடங்களிலும், எல்லாக்காலங்களிலும் அவனுகக்குமெல்லாக் கைங்கர்யங்களையும் செய்துகொண்டு நித்யாநந்த பரிபூர்ணராய் வாழப்பெறுவர்கள், என்று பரமபுருஷார்த்தம் பெற்று வீற்றிருக்குமதை விளக்குகிறது.

தென்புதுவை............வைகுந்தத் தோன்றுவர்தாமே— என்றுரைத்திருந்து மிச்சொற்போக்கால், இவர்களுக்கு இங்கிருந்த காலத்தும், நடுவே வழியிற்செல்லுங் காலத்தும், வழியெல்லாங் கடந்து வைகுந்தபாரகரையடைந்து அங்கு வீற்றிருக்கும் காலத்தும், இப்பாதாதிகேசமதான வநுபவத்தை முன்னிட்டு, பாவலரும் தமிழ்ப் பல்லாண்டு பாடுகையைத் தவிர வேறு பரமபுருஷார்த்தமாயுள்ளது இல்லையென உணர்ந்திடுக. (21)

அடிவரவு. சீத முத்து பணை உழ பிற மத்த இருங்கை வந்த அதிரும் பெருமா நாள் மை வண்டு எந்தொண்டை நோக்கி வில் பருவம் மன் முற்றில் அழகிய சுருப்பார் மாணிக்கம்.

மடக்கு* சீத — பவளவாய், முத்தும் — ஒண்ணுதல், பணை — காரிகை, உழந்தாள் — முகிழ்முலை, பிறங்கிய - குவிமுலை, மத்த - முகிழ்நகை, இருங்கை - வாணுதல், வந்த - ஒளியிழை, அதிரும் - ஒளிவளை, பெருமா - சேயிழை, நாள்கள் - சுரிகுழல், மைத்தடம் கனங்குழை, வண்டமர் - காரிகை, எந்தொண்டை - சேயிழை, நோக்கி - மொய்குழல், விண்கொள் - கனவளை, பருவம் - பூண் முலை, மன்னும் - சேயிழை, முற்றிலும் - நேரிழை, அழகிய - குவிமுலை.

ஆழ்வாரெம்பெருமானர் தேசிகன் திருவடிகளே சரணம்

முதற்பத்து மூன்றாந் திருமொழி உரை
முற்றிற்று.

———————



ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் தேசிகன் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து—நான்காம் திருமொழி.

### மாணிக்கங் கட்டி.

மாணிக்கங் கட்டி வயிர மிடைகட்டி*
ஆணிப் பொன்னாற் செய்த வண்ணச் சிறுத்தொட்டில்*
பேணி யுனக்குப் பிரமன் விடுதந்தான்*
மாணிக்குறளனே தாலேலோ வைய மளந்தானே
தாலேலோ* (1)

| | |
|---|---|
| பிரமன் | (நான்கு முகங்களைக்கொண்ட) பிரமதேவன் |
| மாணிக்கம் | மாணிக்கத்தை |
| கட்டி | (இரண்டுபக்கங்களிலும்) கட்டியும் |
| வயிரம் | வயிரத்தை |
| இடை | நடுவில் |
| கட்டி | கட்டியும் |
| ஆணி பொன்னால் செய்த | உயர்ந்த மாற்றையுடைய பொன்னினால் செய்யப்பட்டதாயும் |
| வண்ணம் | அழகையுடையதுமான |
| சிறு தொட்டில் | சிறியதான தொட்டிலை |
| பேணி | மிகவுமாதரத்துடன் |
| உனக்கு | உன்பொருட்டு |
| விடுதந்தான் | அனுப்பிவைத்திருக்கிறான் |
| மாணி | பிரமசாரியான |
| குறளனே | வாமனாவதாரம் பண்ணினவனே |
| தாலேலோ | உனக்குத் தாலாட்டு |

வையம் — உலகங்களையெல்லாம்

அளந்தானே — { திருவிக்கிரம உருவுகொண்டு அளந்தருளினவனே

தாலேலோ — .... .... .... .... .... .... ....

நான்முகனான பிரமன், இரண்டருகும் மாணிக்கத்தையும் நடுவில் வயிரத்தையுமமைத்து உயர்ந்த மாற்றுப்பொன்னினால் செய்யப்பட்டதாய் நல்ல அழகையுடையதுமான சிறிய தொட்டிலை மிகவாதரவோடு உனக்கு அனுப்பியிருக்கிறான்; வாமனப் பிரமசாரியாக அவதாரம் பண்ணியருளினவனே! நீ துயிலமர்ந்தருளவேணும்; உனக்குத் தாலாட்டு; உலகங்களையெல்லாம் திரிவிக்கிரமனாய் மூவடியாலளந்தவனே! உன்தனக்குத் தாலாட்டு.

கீழ் இரண்டாவது திருமொழியினால் கண்ணபிரானின் அவதாரத்தைப் பேசி, மூன்றாவது திருமொழியினால் அவனைப் பாதாதிகேசமாக வநுபவித்து, நான்காவதான இத்திருமொழியினால் அப்பெருமானைத் தொட்டிலில் துயிலமரவிட்டு, அக்காலத்தில் பிரமன் முதலானோர்கள் தங்களாலியன்றவைகளை ஸமர்ப்பித்தபடிகளையும் விண்ணப்பஞ் செய்கிற கிரமமாக ஆய்ச்சி தாலாட்டியநுபவித்தபடிகள் பேசப்படுகின்றன.

முதலாவது பாட்டில், முழுமுதற் கடவுளிடம் முந்துறற் றோன்றிய நான்முகக்கடவுளின் கைங்கர்யத்தை உவந்துபேசித் தாலாட்டுகிறபடி பேசப்படுகிறது.

மாணிக்கங்கட்டி வயிரமிடைகட்டி—என்றது, இரண்டு பக்கங்களில் மாணிக்கத்தையும், அதற்கு வேறு வர்ணமாகத் தெரியும்படி வயிரத்தை நடுவிலேயுமமைத்து அழகாக இழைக்கப் பட்டிருக்குமதைச் சொல்லுகிறது. உலகளந்த மாணிக்க மொன்றைத் துயிலமர்த்தும் தொட்டிலுக்கு மாணிக்கம் கட்டுவது தகுதியுடையதுதானே; மாணிக்குறளனைவிட்டுத் தாலாட்டுவதற்கு தொட்டிலில் மாணிக்கம் கட்டினபடி.

ஆணிப்பொன்னால் செய்த—, என்றது, உயர்ந்த மாணிக்கம் முதலியன இழைத்திருந்தாலும், அவைகளுக்கு ஆதாரமாகவுள்ள திரவியம் சற்று ஒருபடி யிருக்கலாமே, அப்படிக்கின்றி, அதுவும் உயர்ந்த மாற்றையுடைய பொன்னினால் செய்திருக்கு மாற்றை யறிவிக்கிறது. இப் பொற் தொட்டிலின்மேல் இடக்கூடிய பொன் ஒன்றுமட்டில் "மற்றொருப்பொரையில்லா ஆணிப்பொன்" என்று அனைத்துலகு மறியுமொழிய, ஒருவகை உருவமுடைய பதார்த்த மாகச் செய்யக்கூடிய மேம்பட்டபொன் இதற்கு மேலில்லை யென்றபடி. இந்த ஆணிப்பொன்னைக்காட்டிலும் எம்பெரு மானுகிற ஆணிப்பொன்தான் உயர்ந்ததென்பது, ஒரு ஆணிப் பொன்னை தொட்டில் கீழும், மற்றொரு ஆணிப்பொன்னை எம்பெருமான் அதன்மேலும் விடப்பட்டிருக்கு மாற்றைக் காணவே அறியலாகும்.

வண்ணம்—என்றது, செய்த திரவியம் உயர்ந்திருந்தா லென்ன? அழகு வேண்டாவோ? என்னில், அழகையுமுடைய தென்கிறது.

சிறுத்தொட்டில்—என்றது, தொட்டில் என்று பெயர் மட்டிலிடப்பட்டு, மிகப் பெரிய வடிவுடையதொன்றோ? என்னில், குழந்தை சயனிக்கத்தக்க அளவுடன் அமைந்திருக்கிற தென்கிறது.

பேணி—என்றது, ஒரு ப்ரதி ப்ரயோஜனம் கொள்ளுகைக் காகவன்றி, மிகவு மாதாவுடன் என்பதை வெளியாக்குகிறது.

உனக்குப் பிரமன் விடுதந்தான்—என்றது, தன்னுடைய வஸ்துவாக நினைப்பிட்டிருந்தவொன்றை, இது தன்னுடைய தன்று; ஸர்வ ஜகன்னாதனை ப்ரபுவினுடையதே; என்று திண்ணமாக வெண்ணங்கொண்டு, நிசைமுகனை பிரமன் உனக்கு உபஹாரமாக அனுப்பியிருக்கிறானென்பதை யுரைக்கிறது.

மாணிக்குறளனே, வையமளந்தானே,—என்றது, உன்னு டைய, "குரைகழல்கள் நீட்டி மண்கொண்டகோலவாமனா"

என்று கொண்டாடப்படுகிற திருவடிவழகிலன்றோ திசைமுகனுன படிக்கேற்ப பிரமன் நன்றாக ஸேவித்து ஈடுபட்டதும்; ஈடுபட்டமை தோன்ற அப்பொழுது செய்த சிலபடிகளோடு நிற்காதே பின்பேயுள்ள அவதாரத்திலும் தன்னுவியன்றதைத் தந்தருள்வதும்; அவைகளைச் சுட்டிக்காட்டி அன்னையான ஆய்ச்சியும் தாலாட்டுகிறதும்; இவைகளையெல்லாம் காட்டிக் கொடுக்கிறபடி.

பிரமன், திருமால் திருவுலகளந்தருளின வப்பொழுது ஈடுபட்டுச் செய்தபடிகளை, "குறைகொண்டு நான்முகன் குண்டிகை நீர்பெய்து, மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி, கறைகொண்ட கண்டத்தான் சென்னிமேலேறக் கழுவினான், அண்டத்தான் சேவடியை யாங்கு என்று, திருமால், நான்முகன், செஞ்சடையான், என்கிற இவர்கள் படிகளைக் கசடறக் கண்டறிந்தேத்தின மஹாநுபாவரான மழிசைப்பிரானின் நான்முகந் திருவந்தாதி (9)-வது பாட்டிஞல் நன்கறியலாம்.

தாலேலோ, தாலேலோ—என்கிறது, அவனிடம் ஆதரம் தோற்ற தாலாட்டுகிறபடியையும், வாமனனுனபடிக்கும், வாமனனுய் பொற்கையில் நீரேற்றவுடனே உடலம் பூரித்து திருவிக்கிரமனுனபடிக்கும் அவ்வப்பொழுதே தோற்றுத் தாலாட்டுகிற படியையும் உணர்த்துகிற தென்னலாம்.

குழந்தையைத் தொட்டிலமர்த்தி அதைத் தூங்கச்செய்ய நாக்கை யொருபடி அசைவுறச்செய்து சீராட்டுகிறபடியைத் தாலாட்டென்பர்.

குறிப்பு:— ஆக இப்பாட்டிஞல், கீழ்த்திருமொழிகளின் அநுபவப்படி, இடைச்சேரியிலுள்ளோர் அநுபவித்தபடிகள் நிற்க, பிரமன் முதலான தேவர்கள் தாங்களும், எம்பெருமானின் இவ்வண்ணமான திருவிளையாடல்களை இழந்திருக்க வல்லரல்லர்களானதாலே, வெறுங்கையுடனே குழந்தையினிடமும், தெய்வத்தினிடமும் போகவொண்ணுது என்கிற சாஸ்திரத்தை யடி

பொற்றி தங்களாலியன்றவைகளை முன்னிட்டு வந்து தொழுது போந்தார்கள் என்பதும், அதில் பிரமன் பிரதானனானமை தோற்ற முன்னே வந்தானென்பதும், யஜமானனால் ஓரதிகாரத்திலமர்த்தப்பட்டவன், அவனதாணையின்றி வருகை தகாதாயினும் அவனுக்கே ஒரு கைங்கர்யம் செய்யும் குறியுடன் அவனுக்காளாய் சென்றணுகலாமென்பதும், தான், அவனால், நான்கு திசைகள் தோறும் முகமுடையவனாக ஸ்ருஷ்டிக்கப்பட்டவன், என்பதை யறிந்து அதற்குக் கைம்மாறாக, நான்கு பக்கங்களைக் கொண்ட தொட்டிலை அவனுக்குக் கொண்டுவந்து ஸமர்ப்பித்தருளினனென்பதும் தோற்றுகிறதெனை அநுபவங் கொள்ளலாம்.

(1)

உடையார் கன மணியோ டொண் மாதளம்பூ*
இடைவிரவிக் கோத்த வெழில் தெழ்கினோடு*
விடையேறு காபாலி யீசன் விடுதந்தான்*
உடையா யழேலழேல் தாலேலோ உலகமளந்தானே
தாலேலோ* (2)

| | |
|---|---|
| விடை ஏறு | விருஷபத்தை வாஹனமாய்க்கொண்டு ஏறுகிறவனும் |
| காபாலி | மண்டையோட்டைக் கையில் தரித்தவனுமான |
| ஈசன் | உருத்திரன் |
| உடை | திருவரைக்கு |
| ஆர் | நிறைந்திருக்கத்தக்கதான |
| கனம் மணியோடு | பொன் மணியுடன் கூட |
| இடை | நடுவிலே |
| விரவி | கலந்து |
| கோத்த | கோர்க்கப்பட்டிருக்கிற |
| எழில் | அழகுடைய |
| தெழ்கினோடு | இடைச்சுரிகையையும் |
| ஒள் | அழகியதான |
| மாதளம்பூ | மாதளம்பூ வடத்தையும் |

| | |
|---|---|
| விடுதந்தான் | அனுப்பிவைத்தான் |
| உடையாய் | உலகமனைத்தையும் உனதாளுகையி லுடையவனே |
| அழேல் அழேல் | நீ அழாதே அழாதே |
| தாலேலோ | .... .... .... .... .... .... |
| உலகம் | உலகங்களை |
| அளந்தானே | அளந்தருளினவனே |
| தாலேலோ | .... .... .... .... .... .... |

விருஷப வாஹநத்தை யுடையவனும் கையில் மண்டை யோட்டை தரித்த உருத்திரன் திருவரைக்கு நிறைந்திருக்கத் தக்கதாய் பொன்மணியுடன் நடுவே கலந்து கோர்க்கப்பட்டதாய் அழகையுடைய இடைச்சுரிகையையும், அழகியதான மாதளம்பூ வடத்தையும், அனுப்பிவைத்திருக்கிறான் ; அனைத்துலகையு முனதாளுகையிலுடையவனே நீ அழாதே அழாதே ; உனக்குத் தாலாட்டு. உலகமளந்தவனே உனக்குத் தாலாட்டு.

முதற்பாட்டில், பிரமன் ஸமர்ப்பித்தருளியதைப் பேசித் தாலாட்டி யநுபவங்கொண்டதும் அவனுக்குப்பின்னே பேசத் தக்க பிறையேறு சடையான் பேணி ஸமர்ப்பித்த படிகளைப் பேசித் தாலாட்டியபடி இப்பாட்டில் அநுபவிக்கப்படுகிறது.

உடையார் கனமணியோடு—என்றது, எம்பெருமானின் திருவரைக்கு நிறைந்திருக்கத்தக்க பொன் மணியை ஸமர்ப்பித்த மையைப் பேசுகிறது. மணியான வொருவன் திருவரைக்கும், மணியொன்று ஸமர்ப்பிக்கிறபடி.

ஒண் மாதளம்பூ—என்றது, மாதளம் பூவைப்போல் பொன் னினாலழகாகச் செய்யப்பட்ட திருவாபரணமொன்றை ஸமர்ப்பித் தமையைச் சொல்லுகிறது.

இடை விரவிக்கோத்த வெழில் தெழ்கினோடு—என்றது, நடுநடுவே உடைவாள் போன்ற திருவாபரண மொன்றையும்

கலந்து கோர்த்து ஸமர்ப்பித்தமையைச் சொல்லுகிறது. "இடை விரவிக்கோத்த, என்பதை" "கனமணியோடு, என்கிற விடத்தும்," ஒண்மாதளம்பூ, என்கிற விடத்தும், சேர்த்துக்கொண்டும் பொருள் கொள்ளலாமெனத் தோற்றுகிறது. அதாவது, ஒரு பொன்மணி, ஒருமாதளம்பூ, ஒரு உடைவாள் இவைகளை ஒன்றற்கொன்று மாற்றி மாற்றிக் கோர்க்கப்பட்டிருக்கிற தென்னலாம். அன்றியே கத்திபோன்ற ஆபரணம் குழந்தையின் ரக்ஷணத்திற்கு ஒப்பற்ற ஸாதனமென்று அது தன்னையே ஒவ்வொன்றினுடைய நடுவே கோர்க்கப்பட்டதெனக்கொள்ளும் முந்தின பொருளே கூறுதலும் பொருத்தமுடையதேயாம்.

விடையேறு காபாலி யீசன் விடுதந்தான்—என்றது, இவைகளை ஸமர்ப்பித்தவன். ஸாமான்னியனல்லன்; ஒற்றை விடையன் எனப் புகழ்பெற்றவன்; தன்னை நேரே பெற்ற தகப்பனுக்கும் அதிகமான தலைகளிருப்பதைப் பொறுதே கிள்ளிப்போகட்டவன்; எல்லா ஐச்வர்யங்களாலும் பரிபூர்ணனாய், தன்னைச் சேர்ந்தார்கட்குத் தலைவனாகத் தோற்றி நிற்கிறவன்; அப்படிப்பட்டவன், தன்னபிமானத்தை யெல்லாம் மறந்து, உனக்காட் செய்ய வொருப்பட்டு இவைகளை உனக்கு அனுப்பிவைத்திருக்கிறானெனக் காட்டிநிற்கிறது. இங்கு, விடையேறு, என்கிற அடைமொழியால், விடையேழ் வென்றவனுக்கு, ஒற்றை விடையன் உபஹாரம் ஸமர்ப்பித்தான் என்றும், காபாலி என்பதால் அவன் தன் கையை விட்டு நீங்காத கபாலம் நீங்குவதற்கு நீயன்றோ காரணமானவன், என்றும், ஈசன், என்பதால் அவன் தன்னை சிலர் ஈசனாய்ப் பேசுவதும் உன்னருளாலன்றி வேறில்லையே யென்றும் விநோதமாக விளக்கிக்காட்டியபடி. முக்கண்ணனை அவன்றனக்கு மூன்று அடைமொழிகளையிட்டுப் பேசப்பட்டிருப்பதற் கிணங்க, அவன்தானும், பொன்மணி, மாதளம்பூ, இடைச்சுரிகை, இவை மூன்றையும் உன்முன்னே அனுப்பினனெனவும் பேசப்பட்டிருப்பதாய்க் கொள்க.

உடையாய்—என்றது, நீ, அனைத்துமுடையையாதலால் ஒருவன், ஒன்றைக்கொடுத்து அது பெற்றவன்று மட்டில்,

உடையவனில்லை ; கொடுத்தவன்றும், கொடாதவன்றும், என்றும் அனைத்தையும் உனதாளுகையிலுடையவனே என்கிறது ; ஆகில், இப்படி, எல்லாவற்றையுமுடைய வொருவனுக்கு, மற்றொருவர் ஒன்று கொடுக்கவேண்டியதுண்டோ, கொடுக்கத்தக்கவர் என்று தான் சொல்லக்கூடியவர் யாரேனு முண்டோ வென்னில்? எம்பெருமானுளுண்டுமிழப்படாத வேறொன்றும் வேறொருவரும் இல்லையேயாயினும், தன்னையும், சில பொருள்களையும், தான், என்றும், தனது என்றும், அனைத்துலகும் அறியாமையால் நினைத்திருக்கும் நினைவுக்கேற்பப் பேசிப்போருகிறபடி. இங்கிவர்கள் செய்யும் செயலெல்லாம், தங்களுடையதென்கிற துரபிமானத்தை தூரவிடுத்து உனக்கே சேஷமென்று புத்திபண்ணி அனுப்பிவைக்கப் பட்டவையெனக்கொள்க!

அழேல் அழேல்—என்றது, தான் ஈச்வரனுகிலும் அவதாரத்திற்கும் பருவத்திற்குமேற்ற செயலைச்செய்ய, அதுகண்டு, நீ அழாதே நித்திரைசெய்யவேணும் என்று பரிவுடன் பேசுவதைப் பகருகிறபடி.

உலகமளந்தானே தாலேலோ—என்றது, முன் அவதாரத்தில் மூவுலகளந்த களைப்பெல்லாம் நீங்க, நீ துயிலமரவேணும் என்கிறது, இந்த அவதாரத்தின்படி முன்பாட்டில் ப்ரஸ்தாபிக்கப் பட்டதேயாகிலும், அவ்வவதாரத்தில் ஏற்பட்ட சிரமத்தை யகற்ற வேணுமென்று மதிகமான வோராதரத்திலென்பது நிற்க இப்பாட்டில் பேசப்பட்ட ஈசனுக்கும் அக்காலத்தில் ஸம்பந்தமும், அதடியா வொப்பற்ற ஈடுபாடுமுண்டெனக் காட்டுவதினும் முக்கிய நோக்கென்றுமறிக. இதற்கும் சான்ருக முன் பாட்டில் காட்டப்பட்ட நான்முகன் திருவந்தாதி (9)-வது பாட்டின், மூன்ருவது பாதம் முதலாகவுள்ளதைக் காண்க. (2)

என் தம்பிரானுரெழில் திருமாற்வற்கு*
சந்த மழகிய தாமரைத் தாளர்க்கு*
இந்திரன்றுனு மெழிலுடைக் கிண் கிணி*
தந்துவனுய் நின்ருன் தாலேலோ தாமரைக் கண்ணனே
தாலேலோ* (3)

| | |
|---|---|
| இந்திரன் தானும் | மஹேந்திரனான அவனும் |
| என் தம்பிரானார் | எனக்கு ஸ்வாமியாயும் |
| எழில் திருமார்வற்கு | அழகிய திருமார்பை யுடைவராயும் |
| சந்தம் அழகிய | நிறத்தினால் அழகிய |
| தாமரை தாளர்க்கு | தாமரை மலர்போன்ற திருவடிகளை யுடைய தேவரீருக்கு |
| எழில் உடை | அழகைக்கொண்டிருக்கிற |
| கிண் கிணி | சதங்கையை |
| தந்து | கொண்டுவந்து ஸமர்ப்பித்து |
| உவனாய் நின்றான் | சிறிது தூரத்திலே (நடுவிடத்திலே) நில்லா நின்றான் |
| தாலேலோ | .... .... .... .... .... |
| தாமரைக் கண்ணனே | செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடையவனே |
| தாலேலோ | .... .... .... .... .... |

மஹேந்திரனானவன், எனக்கு ஸ்வாமியாய் அழகிய திருமார்பையுடையவராய் நிறத்தினாலழகிய தாமரை மலர்போன்ற திருவடிகளையுடைய தேவரீருக்கு, அழகைக்கொண்டிருக்கிற சதங்கையை ஸமர்ப்பித்து, ரொம்பதூரத்திலும் ரொம்ப ஸமீபத்திலும் இராமல் நடுவான விடத்திலே நில்லா நின்றான், அப்படிக்குள்ள அப்படிக்குள்ள பெருமைபடைத்தவனே உனக்குத் தாலாட்டு; சிவந்த தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடையவனே உன்றனக்குத் தாலாட்டு.

கீழ்ப்பாட்டில் ருத்திரன் ஸமர்ப்பிவித்த படிகள் பேசியானது, இப்பாட்டில் இந்திரன் ஸமர்ப்பிவித்தபடி பேசப்படுகிறது.

என்தம்பிரானாரெழில் திருமார்வற்கு—என்றது, அவனுக்குத் தாயாய் அவனை எப்பொழுது பார்த்தாலும் தன் மார்புடனொடுத் தணைந்து கொண்டுவந்திருக்கச் செய்தேயும், அவன் தானும் திருக்கலந்து சேருமார்பனைகையாலே, அநுபவிக்கு மொவ்வொரு க்ஷணங்கள் தோறும் புதிய புதிய அழகுவாய்ந்து இவளுக்கு

ஸேவை தருகிறுனைகயாலே, அவ்வாறு அவ்வழகைத் தனக்குக் காட்டி உபகரித்தபடியை மனதிற்கொண்டு என் தம்பிரானென்றே தொடங்கி வாய்வெருவிப் பேசினபடியாயிருக்கிறது.

சந்தமழகிய தாமரைத்தாளர்க்கு—என்றது, உலகிலுள்ள தாமரை மலர்களெல்லாம் உபமானமிட்டுச் சொல்லுகைக்கு ஒப்பானதல்லாமையாலே, நிறத்தினலழகிய தாமரை மலர் கண்டக்கால் எவ்வாறிருக்குமோ, அவ்வாறு மேன்மைபெற்ற திருவடியை யுடையவனென்கிறது.

இந்திரன் தானும்—என்றது, மூவுலகங்களுக்கும் முடிசூடி, த்ரைலோக்யாதிபதி என்கிற பெருமதிப்பைப்பெற்று வாழுமவனும் ருத்திரனுக்கு அடுத்தபடியில் பேசத்தக்க அமரர் பெருமானைச் சொல்லுகிறது.

எழிலுடைக்கிண்கிணி—என்றது, உலகில் ஸாமாந்யமாகக் குழந்தைகளுக்கெல்லாம், கிண், கிண், என்று ஓசைப்படுகிற சில சதங்கைகள் கட்டுவதுண்டே, அப்படிப்பட்டதல்லாமல் எம்பெருமானுக்கு சாத்த இந்திரன் கொண்டுவந்த சதங்கையைக் காணும்பொழுதே இது தேவதேவனுக்கே தகும், என்று அறியத்தக்கதாயிருக்கிற மேன்மை மெச்சப்படுகிறது.

தந்துவனாய் நின்றான்—என்றது, தான் கொணர்ந்துவந்ததை, ஸமர்ப்பிவித்து ஸ்வாமிபக்கத்தில் நெருங்காதே, பயம், பக்தி விச்வாஸம் இவைகளைக் காட்டிக்கொண்டு அடங்கி சற்றே ஒதுங்கி நடுவிடத்தே நின்றபடியேயிருக்கிறானென்பதை நினைப்பூட்டிப் பேசுகிறது.

தாலேலோ—என்றது, இப்பெருமையெல்லாம் படைத்தவனே, எனச்சொல்லிச் சீராட்டித் தாலாட்டுகிறபடியைக் காட்டுகிறது.

தாமரைக் கண்ணனே தாலேலோ—என்றது, இந்திரன் இதனைகொண்டு ஸமர்பித்ததெல்லாம் ஒரு வியாஜமாத்திரமே

யன்றி, உன்னுடைய கண்ணழகுக்கு இதெல்லாம் போரு மானதோ, ஆகவே அவன் உன்னுடைய கடாக்ஷத்தைப் பெற வேண்டியன்றோ வந்து நிற்கிறான்; "உன் தாமரைக் கண்களால் நோக்காய், என்கிறபடி, அவனைக் குளிர நோக்கிக் கண் வளர்ந் தருள் என்கிறது. வெறும் ஆயிரங்கண்ணுடைய இந்திரனை தால், ஓர் ஆயிரம் தாமரைக் கண்ணுடைய ஒருவன் கடாக்ஷத் திற்குக் காத்திருக்கிறானென்றபடி.

குறிப்பு:— இப்பாட்டில், இந்திரன் கிண்கிணி ஸமர்ப்பித்த பெருமை பேசுமிடத்து, என் தம்பிரானாரெழில் திருமார்வற்கு, சந்தமழகிய தாமரைத் தாளர்க்கு, என்பவைகளை, அசோதை தன் பேச்சாகக்கொண்டு அநுபவித்தபடி நிற்க, இந்திரன் தானும், இன்ன பெருமையையுடைய இன்னானுக்கு இன்னது என்று சொல்லி ஸமர்ப்பித்தானென்றும் அவன்பேச்சாக வைத்தும் அப் படியே அநுவதித்துப் பேசினதாக அநுபவங் கொள்ளலா மெனத் தோன்றுகிறது; அப்படிக்கொள்வதிலும் ஓர் இனிமை புலப்படுமாறு காண்மின்; அதாவது, இந்திரன் ஒரு கால விசேஷத்தில் சாப விசேஷத்தினால், மூவுலகினாளுகையை யிழந்து, பின்பு திருமாலைச் சரணமடைய திருவின் கடாக்ஷத்தினாலும், திரு மாலின் கடாக்ஷத்தினாலும் முன்போன்ற பெருமையைப்பெற்ற படியினாலும், அப்படி சிங்காசனம் பெற்றதும், திருவை விசேஷ மாகக் கொண்டாடிப்பேசித் திருமாலையும் புகழ்ந்திருப்பதாலும் அவற்றை நினைவில் கொண்டு, இங்கு ஓர் அவதாரதசையிலும், என்தம்பிரானார், எழில் திருமார்வர், சந்த மழகிய தாமரைத் தாளர், என்று இவ்வாறெல்லாம் பேசியிருக்கிறானெனக் கொள்ள லாமன்றோ? பின்னும், தான் திருவில்லாத் தேவரைத் தெய்வ மாகக் கொள்ளாத வொருவனென வெளிப்படுத்துகிறவன் போல், கண்ணன், குழந்தையாகத் தோன்றினாலும், யார் தெரியுமா அவர், எழில் திருமார்வரன்றோ? அப்படித் திரு மகளார் பிரியாத தெய்வத்தின் பாதாரவிந்தங்களை, அந்த விட்டுப் பிரியாத சேர்த்தியில் பணிந்து பணிவிடை செய்கையன்றோ படித்தவன் செயல், என்று ஒப்பற்ற ஒரு மந்திரத்தின் மஹிமை யையும் மனதிற்கொண்டு பேசியிருக்கிறானெனக் கொள்வது

சால அழகியதன்றோ? இந்திரன் இந்திரையை (லக்ஷ்மியை) ஏத்தியிருக்கிறபடியை ஸ்ரீ விஷ்ணுபுராணம் ஒன்றாவது அம்சம், ஒன்பதாவது அத்தியாயத்தில் பரக்கக் காணலாம். அங்கு, உன்னாலும் உனக்குப் பதியான விஷ்ணுவினாலும் அனைத்துலகும் சூழப்பட்டிருக்கிறதெனப் பேசியிருப்பதற்கிணங்க, திருமார் வனை அவனைக் கண்டு அவன் திருவடிக் கீழ் குற்றேவல்செய்ய ஆசைப்படுவதை, தாமரைத்தாளர்க்கு எனக் குறிப்பிட்டிருக்கிற தென வுணர்க. இங்கு, சொற்போக்கு அமைந்திருப்பதிலும் ஒரு அநுபவம் கொள்ளலாம்; என்தம்பிரானார், எழில் திருமார்வன், சந்தமழகிய தாமரைத்தாளன், என்கிற மூன்று பதங்களில் நடுவே யமைந்திருக்கும் பதத்தின் பெருமையறியின்; உலகில், குற்றம் செய்யாதார் யாரேனு மொருவருண்டோ? இருந்தால் சொல்லிக் காணும் என்று பரிவுடன் பேசி சேதனர்களின் பிழையைப் பொறுப்பிக்கவல்ல பிராட்டி ஒருவன் மார்வில் விளங்குகையாலே அவன் பிரானெனப் பேசப்படுகிறான்; அப்படியே, தாமரைத் தாளாய்த் தானான தன்மையிலேயே தோற்றி யிருந்தானே யாகிலும், எப்பொழுதும் செவ்விமாறாதே விளங்குவதும் அவளுடைய சேர்த்தியினால் தான் என்று, விநோதமாகவும் ஒருபடி பேசியநுபவிக்கலாமெனத் தோன்றுகிறது; ஏனெனில், பிராட்டி, தான், தாமரையை விட்டு அரைக்கணமேனும் வெளி யேறி வீற்றிருக்கப் பொருத தன்மையளானதாலே, இவன் மார்வில் வந்து வாஸம் செய்வதற்குத் தகுதியாக, இவனே, "கண்ணும் செந்தாமரை கையுமவையடியோயவையே என்றும், கருமாணிக்கக் குன்றத்துத் தாமரைபோல் திருமார்பு" என்றும், "தாமரைக் காடுகள்" போல் திருமார்பு என்றும், இப்படியெல்லாம் பேசப்படுகிறபடி ஒரு தாமரைக் காடாக்கி வந்து வீற்றிருந்து தாமரையாள் கேள்வனெனப்பலரும் பேசும் படி செய்து போந்தானென்னலாமானதாலே, தானும் தாமரைத் தாளாயிற்றென்னலாமன்றோ? மேலும், புருஷோத்தமனென் பதை வெளியாக்கிப் பேசுவதுபோல புண்டரீகாக்ஷன், என்பதை தாமரைக் கண்ணனேயெனப் பேசியிருக்கிறபடியை யடியொத்தி ஸ்ரிய:பதியான புருஷோத்தமனிடம், மற்றும் புருஷ வேஷம் பூண்ட இந்திரன் முதலான தேவர்கள் அனைவரும் பயந்து

நின்று தங்கள் தங்களுடைய ஏவல் தேவைகளை செய்து போரு கிறார்களென வடமொழி யுபநிடதம் விளம்பி நின்றதை, "இந்திரன் தானு மெழிலுடைக் கிண் கிணி தந்து—உவனாய் நின்றான்" என, இங்கும் பேசப்பட்டிருக்கிறதெனவும் அறிய லாம். (3)

சங்கின் வலம்புரியும் சேவடிக் கிண் கிணியும்*
அங்கைச் சரிவளையும் நாணுமரைத்தொடரும்*
அங்கண் விசும்பிலமரர்கள் போத்தந்தார்*
செங்கட் கருமுகிலே தாலேலோ தேவகி சிங்கமே தாலேலோ* (4)

| | |
|---|---|
| அம்கண் | அழகியதாய் விசாலமாகவுமுள்ள |
| விசும்பில் | ஸ்வர்க்கத்தில் வஸிக்கின்ற |
| அமரர்கள் | தேவர்கள் |
| சங்கில் | சங்குகளிற் சிறந்ததான |
| வலம்புரியும் | வலம்புரிச் சங்கத்தையும் |
| சே அடி | செவ்விய திருவடிகட்குச் சாத்தத் தக்கதான |
| கிண் கிணியும் | சதங்கையையும் |
| அம் கை சரி | அழகிய முன் கையில் அணியத்தக்க வளைகளையும் |
| வளையும் | தோள்களிலணியத்தக்க வளைகளையும் |
| நாணும் | அரை நாணையும் |
| அரைத்தொடரும் | அரை வடத்தையும் |
| போத்தந்தார் | அனுப்பிவைத்தார்கள் |
| செம் கண் | சிவந்த திருக்கண்களையும் |
| கருமுகிலே | கார்கொண்ட மேகம்போன்ற திரு மேனியையு முடையவனே |
| தாலேலோ | .... .... .... .... |
| தேவகி சிங்கமே | தேவகிப் பிராட்டி திருவயிற்றிலுதித்த சிங்கக் குட்டியே |
| தாலேலோ | .... .... .... .... |

அழகு வாய்ந்ததும் விசாலமுமாயும் விளங்குகிற ஸ்வர்க்கத் திலுள்ள தேவதைகளெல்லாம், சங்குகளிற் சிறந்த வலம்புரிச்

சங்கம், சேவடிகட்குச் சாத்தத் தகுதியான சதங்கை, அழகிய முன் கையிலணியத்தக்கவளை, அரைநாண், அரைவடம் இவை யெல்லாவற்றையும் அனுப்பிவைத்தார்கள்; சிவந்த திருக் கண் களையும், கார்மேகம் போன்ற வடிவையு முடையவனே உன்ற னக்குத் தாலாட்டு; தேவகி பெற்ற சிங்கக்குருகே உன்றனக்குத் தாலாட்டு.

கீழ்ப்பாட்டில் ஒரு மூவுலகாளிக்கு, ஒரு மூவுலகாளியான இந்திரன் ஸமர்ப்பித்தபடிகளைப் பேசினதும், இப்பாட்டில் முப்பத்து முக்கோடி மற்றைத் தேவர்களெல்லாம் திரண்டுவந்து, எம்பெருமானுக்கு சில திருவாபரணங்களை அவர்கள் தாங்களும் ஸமர்ப்பித்தபடிகள் பேசப்படுகிறது.

சங்கின் வலம்புரியும்—என்றது, சங்குகளில் ச்ரேஷ்டமான சங்கைச் சேகரித்து வந்தமையைச் சொல்லுகிறது. சங்கில், இப்பி ஆயிரம் சூழ்ந்தது, இடம்புரி யென்றும், அதைக்காட்டிலும் ஆயிரமடங்கு பெருமைகொண்டது வலம்புரிச் சங்கமென்றும் நூல்களில் நுவலப்பட்டிருக்கும். இப்பெருமைகொண்ட சங்கைத் தான் எம்பெருமான் ஏந்தி நிற்குமவன்; இதற்குச் சுழி வலது பக்கமாயுள்ளது; இதன் பெருமையை ஆழ்வார் திருமகளாரான ஆண்டாள் ஸூக்தியான "கருப்பூரம் நாறுமோ" என்கிற, நாச்சி யார் திருமொழி, (7)-வது திருமொழியில் விசதமாகக்காணலாம். அங்கு, "வலம்புரியே இந்திரனு முன்னோடு செல்வத்துக் கேலானே" என்றும், "செங்கண்மால் தன்னுடைய வாய்த்தீர்த்தம் பாய்ந்தாடவல்லாய் வலம்புரியே" என்றும், வலம்புரியின் பெரு மையைப் பற்றிப் பேசும் பேச்சின் இனிமைதான் என்னே? ஆகவே, கீழ்ப்பாட்டில் இந்திரன் சில ஸமர்ப்பித்தான் என்றால், அவனைக்காட்டிலும் பெருமைபடைத்த வலம்புரிச் சங்கை முன் னேந்தி, முப்பத்து முக்கோடி தேவர்களும் வந்து நின்றார்கள் என்றபடி.

சேவடிக் கிண் கிணியும்—என்றது, சிவந்த திருவடிகளுக்கு அநுகுணமாய், திருவடிகள் அசையும்பொழுது கிண் கிண் என ஆரவாரிக்கும் கிண் கிணி யென்கிற திருவடியிலணியும்

திருவாபரணத்தைச் சொல்லுகிறது. இத் திருவாபரணம் திருவடியில் பூண்டுகொண்டு விளங்கும் பெருமை (1—3—20)ல் முன்பே விளக்கப்பட்டிருக்குமிடத்தே காண்க.

அங்கைச் சரிவளையும்—என்றது, அழகிய முன்னங் கையில் அணியத்தக்க வளைகள் என்கிறது.

நாணும்—என்றது, திருவரையில் கட்டிக்கொள்ளும் அரை நாணைச் சொல்லுகிறது.

அரைத்தோடும்—என்றது, அவ்வரையிலேயே அணியத் தக்க ஒப்பற்ற அரைவடம் என்கிற திருவாபரணம் என்பதைப் பேசுகிறது.

அங்கண் விசும்பில் அமரர்கள்—என்றது, இவை யெல்லாத் திருவாபரணங்களையும் இன்றூர் கொண்டு ஸமர்ப்பித்தருளினூர் என்பதைப் புலப்படச் செய்கிறது. அங்கண் விசும்பிலமரர்கள் என்பதால், தேவலோகம் முழுவதும் எத்தனை பேர்களிருக்கிறார்களோ, அவர்களில் ஒருவரேனும் விடாதே அனைவரும் திரண்டுவந்து இத்திவ்யாபரணங்கள் எல்லாவற்றையும் ஸமர்ப்பித்துப் போந்தார்கள் என்றபடி.

இப்படி சில திருவாபரணங்களைப் பேசினது, பின்னும் பல திருவாபரணங்களையும் ஸமர்ப்பித்தபடிக்கு உபலக்ஷணமென்னலாம்.

செங்கட் கருமுகிலே—என்றது, சிவந்த கண்ணுடைய ஒரு காளமேகந்தானே இது, என்னலாம்படி யிருக்கிற ஒப்பற்ற ஓர் முகை உவந்து பேசி நிற்கிறது. இந்தத் திருவாபரணங்கள் கொண்டு உனக்கு ஒரு அழகில்லை, புகழில்லை; உன்னுடைய தானான தோற்றமே ஏற்றம் பெற்று விளங்கி நிற்கும் என்றபடி.

அவர்கள், இப்படி ஒன்றிரண்டு என எண்ணிக்கை யிடக் கூடியவற்றை ஸமர்ப்பித்தால், நீ, குளிரக் கடாக்ஷித்து, காள மேகம்போல் அருள்மாரி பொழியுமவனன்றோ என்று ஹாவய்.

தாலேலோ—என்றது, உன்னுடைய திருக்கண்ணழகும், திருமேனியழகும் வாட்டமுறாதே கண்வளர்ந்தருள்வாய் என்கிறது.

தேவகி சிங்கமே தாலேலோ—என்றது, ஒருத்திவயிற்றிலும் வந்து பிறந்து அருள்செய்யுமவனன்றோ? இதனை வடமொழியுபநிடதம் வாய்வெருவி நிற்கும்படியன்றோ செய்தருளியதும்; ஆனால், ஒரு அபலையிடம் பிறந்து பலங்குன்றப் பெற்றனையோ நீ; பிறக்கப் பிறக்கப் புகர்பெற்று விளங்கி நிற்கிறான் என்கிறபடி, அவளிடத்தே பிறந்த பிறப்பினாலன்றோ, நீசிங்கமாய் நின்றதுவும். எங்கு, எவளிடத்தில், எப்படிப் பிறந்தாலென்ன, உன்தனி வீரம் எங்குபோயொளிக்கும் என்றபடியாம்.

இங்கு, யசோதை பாசுரமாக வநுபவத்திலும் சில விடங்களில் போல இவ்விடத்தும், "வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை விரித்த விட்டுசித்தன் வார்த்தையும் வெளிப்பட நடுவே கலசி வருவதுபோல் இதனையும் கொள்க.

அன்றி, வடமொழி யுபநிடதம் விளம்பிய "தேவகீ புத்திரன்" என்றுமதையடியொத்தி, "தேவகி சிங்கமே" என வேறு யாரே எத்திக் குனிக்க வல்லார். (4)

எழிலார் திருமார்வுக் கேற்கு மிவை யென்று*
அழகிய வைம்படையு மாரமுங் கொண்டு*
வழுவில் கொடையான் வயிச்சிரவணன்*
தொழுதுவனாய் நின்றான் தாலேலோ தூமணிவண்ணனே
தாலேலோ* (5)

| | |
|---|---|
| வழு இல் கொடையான் | யாதொரு குற்றமுமின்றி தானம் செய்யும் தன்மையையுடைய |
| வயிச்சிரவணன் | குபேரனானவன் |
| எழில் ஆர் | அழகினால் நிறைந்த |
| திருமார்வுக்கு | திருமார்பின் ப்ரதேசத்திற்கு |
| இவை | இந்த திவ்யாயுதங்களும் திவ்யாபரணங்களும் |
| ஏற்கும் என்று | பொருத்தமுற்றதாக விருக்குமென்று |

| | |
|---|---|
| அழகிய | அழகுபொருந்தின |
| ஐம்படையும் | ஐந்து திவ்யாயுதங்களையும் |
| ஆரமும் | மணிமுத்து முதலானதுகளினாலாகிய ஹாரத்தையும் |
| கொண்டு | கையிலேந்திக்கொண்டு |
| தொழுது | உன்னை ஸேவித்து கூப்பினகையுடன் |
| உவனாய் நின்றான் | உனக்கு வெகு ஸமீபத்திலும், வெகு தூரத்திலுமின்றி நடுவேயுள்ள இடத்தில் நிற்கின்றான் |
| தாலேலோ | .... .... .... .... |
| தூமணி வண்ணனே | பரிசுத்தமான நீலரத்னம்போன்ற திருமேனியை யுடையவனே |
| தாலேலோ | .... .... .... .... |

குற்றமொன்று மின்றிக்கொடுக்கும் குணசீலர்களில் தலைவனான குபேரன், அழகினால் பரிபூர்ணமான திருமார்பின் ப்ரதேசத்திற்கு இந்த திவ்யாயுதங்கள் திவ்யாபரணங்கள், எல்லாம் பொருத்தமுற்றவைகளாயிருக்குமென்று, அழகு பொருந்திய ஐந்து திவ்யாயுதங்களையும், மணிகளாலும் முத்துக்களினாலும் கோர்க்கப்பட்ட மாலையையும் கையிலேந்திக்கொண்டு வந்து உன்னைச் சேவித்து நடுவிடத்தே நில்லா நின்றான்; அப்படி, குபேரனும் வந்து கை தொழ நின்ற பெருமையையுடையவனே, நீ துயிலமர்ந்தருள்வாய்; பரிசுத்தமான நீலரத்னம் போன்ற திருமேனி சோபையை யுடையவனே நீ துயிலமர்ந்தருள வேணும்.

கீழ்ப்பாட்டில், தேவர்களெல்லாரும் சேர்ந்து ஸமர்ப்பித்த படி பேசி, இப்பாட்டில் குபேரன் சிறிது விசேஷமாக ஸமர்ப்பித்தபடிகள் பேசப்படுகிறது.

எழிலார் திருமார்வுக்கு—என்றது, பெரிய பிராட்டியாரும், ஸ்ரீ கௌஸ்துபம் முதலானவைகளும் சேர்ந்து ஒரு புகரை யூட்டியிருக்கு மதன்றிக்கே தானான தன்மையில் தானே அவ்வழகைக் காணு மாசரிதர்களை, இவ்வழகிற்கு எப்பொழுது என்ன தீங்கு

நேரிடுமோ என்று கலங்கிப் பல்லாண்டு பாடி நிற்கும்படி செய்து போருகிற ஒப்பற்ற ஓரழகுவாய்ந்த திருமார்பைச் சொல்லுகிறது.

ஏற்கு மிவையென்று—என்றது, தான் கொண்டு சாத்த நினைத்திருக்குமவை, தகுதியுடையதாயிருக்குமென்று நிர்த்தாரணம் பண்ணிக்கொண்டமையைக் குறிப்பிடுகிறது.

அழகிய ஐம்படையும்—என்றது, சங்கு, சக்கரம், தண்டு, வாள், வில், என்கிற இந்த ஐந்து திவ்யாயுதங்கள், தங்களுக்கு முக்கியமான வாஸஸ்தான மென்றேற்பட்ட திருக்கைத் தலங்களில் திகழ்ந்து தோற்றி நின்றாலும், இந்த திவ்யாயுதங்கள் போலவமைத்து, குழந்தையான பருவத்தில், ரக்ஷணத்தின் பொருட்டு குழந்தையின் கழுத்தில் கட்டுவது முண்டானதால், அப்படிப்பட்ட ஐம்படையை ஆதரவுடன் செய்து கொண்டு வந்தமையைக் குறிப்பிடுகிறது. எம்பெருமானின் திவ்யாயுதங்களெல்லாம், "கனலாழிப்படை என்றும்," "நடலைப்பட முழங்கும் சங்கு, என்றும்," நாணொலிச் சார்ங்கம், என்றும், இப்படி ஆச்ரித விரோதிகளை அழிக்கத்தக்க பாரிப்போடு விளங்கியிருக்கச் செய்தேயே, அவை ஆச்ரிதர்களுக்கு ஆபரணங்கள் போலத் தோற்றி தங்கள் அழகினால் அகமகிழச் செய்தலென்றால், திருவாபரணமாகவே அமையச்செய்து சாத்தத்தக்க விவைகளின் அழகை அளவிடவும் முடியுமோ என்றபடி.

ஆரமும்—என்றது, பார்வையில் திவ்யாயுதங்களாய், இட்டுக் கொள்ளுமதில் திவ்யாபரணங்களாய் விளங்குகிற ஐம்படைகளைக் காட்டிலும், விலக்ஷணமாய், அவன் சாத்திக்கொள்வதற்கு முன்பும், பின்பும், ஒரு படியே திருவாபரண மென்றே தோற்றி நிற்குமதான மணிமாலை முதலியவைகளைச் சொல்லுகிறது. கீழ், அழகிய என்கிற பதத்தை இங்கும் கூட்டிக்கொண்டநுபவிக்க.

கோண்டு—என்றது, இவைகளை தான் எடுத்துக்கொண்டு ஸமர்ப்பிக்க வந்தான் என்கிறது. தான் செய்யவேண்டிய வொரு பகவத் கைங்கர்யத்திற்கு, தன் சக்தி குன்றிருக்க, தான்

நடுவே அதற்கொரு ஆளை தன் இறுமாப்பினாலேவிவிட்டு தான் அக் கைங்கர்யம் செய்யும் பெருமையை இழவாமல், எம்பெருமானும் இக் கைங்கர்யத்தை நம்மையிட்டுச் செய்து கொள்ளும்படி நமக்கு வாய்த்த பாக்கியம் தான் என்னே! என உடலம் பூரித்து, அவ்வுகப்பு முகத்தே தோற்ற தன் தலையாலே தானே சுமந்துகொண்டு வந்தானென்றபடி.

இங்கு, "சுமந்து மாமலர் நீர் சுடர்தூபங்கொண்டு" என்கிற, நம்மாழ்வாரின் அருளிச்செயலான, திரு. (3—3—7) பாசுரத்தை நினைக்க.

வழுவில் கொடையான்—என்றது, இவைகளை ஸமர்ப்பிக்குமவன்தான், தான் ஒன்று கொடுக்க அவனொன்று கொடுக்கக்கூடுமென்றும், நீ ஒன்றை எனக்குக் கொடுத்தனையே, அதற்காக இதை நீ, கொள், என்றும், நாமன்றோ கொடுக்கப் பிறந்தவன்; நாம் கொடுக்கும்படி தான் என்னே; என்றும், இப்படியாக, கொடுக்குமதில் உள்ள துர்க்குணங்கள் பல உண்டன்றோ? அவைகளில் சிறிதேனு மில்லாது விளங்குகிற கொடுக்கும் தன்மையையுடைத்தானமையைக் கூறுகிறது.

வயிச்சிரவணன்—என்றது, இப்பெருமை படைத்தவன் பூண்ட பெயர் இன்னதெனப் போற்றி நிற்கிறது. சக்கிரவர்த்தியின் திருமகனாரான ஸ்ரீ ராமபிரானின் ஔதார்ய குணத்தின் பெருமையைப்போற்றிப் பேசினவோரிடத்து அம்மாமுனிவனும், "தநதேந ஸம: த்யாகே," (கொடுக்குமதில் குபேரனுக்கு ஒப்பாவான்) என்றன்றோ பேசிப் போந்ததும்.

தொழுது உவனாய் நின்றான்—என்றது, கீழில் "வழுவில் கொடையான், என இட்ட அடைமொழியிலுள்ள சில பெருமைகளை விளக்குகிறது. உலகில் கொடுக்குமவன் உயர்ந்தவன், கை நீட்டி வாங்குமவன், தாழ்ந்தவன், என்றும், பொதுவான சில சொற்கள் வழங்குவதுண்டு; அவ்வண்ணம் சிறிதேனுமின்றி, அடியேன் கொண்டுவந்து ஒன்றை உனக்கு ஸமர்ப்பிக்குமது தக்கதோ? அவ்வளவு தன்மை அடியேனிடம் இல்லையே; ஆகவே, நீயே உன் திருவருளால் இவையனைத்தையும் உன்ன

தாகவே கொண்டு திருவுள்ளம் பற்றவேணும்; என்கிற மனத் தூய்மையினோடு தண்டனிட்டு விண்ணப்பித்து உன் பெருமைக் குத்தக்க பயபக்தியுடன் உன்னிடம் ரொம்ப நெருங்கி வந்து நிற்காதே, சற்று தூரத்திலேதானே, வாய்புதைத்துக் கை கட்டி நிற்கின்றான் என்பதை வெளிப்படுத்துகிறது, என்றபடி.

தாலேலோ—என்றது, குபேரனும் வந்து கும்பிட்டு நிற்கும் குணப்பெருமை கொண்டவனே, நீ, துயில்கொண்டருள் என்கிறது.

தூமணி வண்ணனே தாலேலோ—என்றது, ஓராபரண மிட்டு அதனால் உனக்கு ஓரழகை யுண்டுபண்ணிக் காணத்தக்க வனோ நீ, உன்னுடைய நீலரத்னம் போன்ற திருமேனியின் உள்ள திரு நிறத்தின் அழகொன்றையே அநுபவித்துக் கொண் டிருந்தால் அதுவே போராதோ; ஆகவே, அத்திருமேனி நிறம் வாட்டமுறாதே நீ துயிலமர்ந்தருள்வாய் என்கிறது. மேலும், வாரி வாரிக் கொடுக்கும் குபேரனும், இவ்வாறு வணங்கிக் கொடுப்பதே! இப்படி யொரு ஆச்ரிதனைக் காண்கையன்றோ தக்கது; என, திருமேனியில் முன்னிலும் அழகியதான ஒரு புகர்கொண்டாளென்றும் கொண்டு "தூமணி வண்ணனே," எனப்பட்டதென்றும் கொள்ளலாம்.

பின்னும், முன் அவதாரத்தில் பத்துத் தலையுடையானைப் பதறவடித்து வென்று தன் பக்தன் ஸமர்ப்பித்த புஷ்பக விமானத்திலேறிப் பதறியோடிவந்து நந்திக் கிராமத்தில் பரித பித்து நிற்கும் ப்ரதனைப் பார்த்ததுமே, இதுகாறும் விமானத்தைப் பற்றிகொடுத்து நின்றவன் துயர்தீர அக்கணமே அதனை அவனிடம் அணுகும்படி ஆணையிட்டனுப்பிய அழகான தன்மையையே அறிவித்தபடியென்றே போற்றலாம். (5)

ஓதக் கடலி லொளிமுத்தி னாரமும் *
சாதிப் பவளமுஞ் சந்தச் சரிவளையும் *
மாதக்கவென்று வருணன் விடுதந்தான் *
சோதிச் சுடர்முடியாய் தாலேலோ சுந்தரத் தோளனே
தாலேலோ * (6)

| | |
|---|---|
| வருணன் | வருணதேவனானவன் |
| ஓதம் கடலில் | அலையெழுகிற கடலில் உண்டானதும் |
| ஒளி | காந்தியை யுடையதுமான |
| முத்தின் | முத்துக்களினால் கட்டப்பட்ட |
| ஆரமும் | மாலையையும் |
| சாதி பவளமும் | நல்ல சாதியான பவழ வடத்தையும் |
| சந்தம் | அழகிய |
| சரி | முன்னங்கையில் அணியத்தக்க வளைகளையும் |
| வளையும் | திருத்தோள்களிலணியத்தக்க வளைகளையும் |
| மாதக்க என்று | உன் பெருமைக்குத் தக்கபடி மிகவும் சிறந்தவை என்று கொண்டு |
| விடுத்தான் | அனுப்பியிருக்கிறான் |
| சோதி சுடர் | மிக்க ஒளி வீசுகிற |
| முடியாய் | கிரீடத்தை யுடையவனே |
| தாலேலோ | .... .... .... .... |
| சுந்தரம் தோளனே | அழகிய திருத்தோள்களை யுடையவனே |
| தாலேலோ | .... .... .... .... |

வருணதேவன், அலையெழுங் கடலிலுண்டானதாய், ஒளி மிக்க முத்துக்களினாலாகிய மாலை நல்ல சாதிப் பவழவடம், அழகிய முன்னங்கை வளைகள், தோள்வளைகள் இவைகளை யெல்லாம் உனக்குத் தக்கபடி மிகவும் சிறந்தவை என்று வரவிட்டிருக்கிறான்; ஒளி வீசும் கிரீடத்தை யுடையவனே, நீ துயிலமர்; அழகிய தோள்களையுடையவனே, நீ, துயிலமர். உன்றனக்குத் தாலாட்டு.

இப்பாட்டில் குபேரன் ஸமர்ப்பித்தபடி பேசினதும் அதுவேபோல விசேஷ கைங்கர்யம் செய்த கடலரையனான வருணன்படி இப்பாட்டில் பேசப்படுகிறது.

ஓதக்கடலிலொளி முத்தினாரமும்—என்றது, க்ருத்ரிமமான முத்துக்களின்றியே, ரத்னங்கள், முதலியனவைகளுக்கெல்லாம்

இருப்பிடமாய், ஆழமான அலையெழுங் கடலிலே உண்டானதாய் ஆகவே மிக்க ஒளியுடன் விளங்குகிற முத்துக்களினாலாகிய மாலையைச் சொல்லுகிறது. சக்கிரவர்த்தித் திருமகனாருக்கு ஸீதாப்பிராட்டி, அடையாளமாக தன்னுடைய சூடாமணியைக் கொடுத்தனுப்பும் போது, ஸமுத்திரத்தில் உண்டானதாய், ஆகவே ஒளியுடன் விளங்குமதான, இந்த மணி, உன்பொருட்டு அனுப்பப்பட்டதெனக் கூறுமிடத்துள்ள, "ஏஷ நிர்யாதித: ஸ்ரீமான் மயாதே வாரிஸம்பவ: |" என்பதை இங்கு நினைக்க.

சாதிப்பவளமும்—என்றது, சூதான பவழமின்றியே, நல்லதாய், அந்த முத்துக்கள் வெளுப்பென்றால் அதற்கு மற்றொரு பாகமாய், நல்ல சிவப்புநிறத்துடன் அம்முத்துக்களில் நிழலெழும்படியான நற்பவழத்தினாலாகிய மாலையையும் என்கிறது. அன்றியும், அம்முத்து வடத்தில் முத்துக்களின் நடுவே கலந்து கோர்த்திருக்கிற நற்பவழத்தைச் சொன்னபடியாம்.

சந்தச் சரிவளையும்—என்றது, அழகியதான முன்னங்கை வளைகளையும், அழகியதான தோள்களிலிடக்கூடிய வளைகளையும் சொல்லுகிறது.

மாதக்கவென்று—என்றது, இவைகளின் அழகையும், எம்பெருமானின் அழகையும் ஒருங்கே சிந்தை செய்து பார்க்குமளவில், இவையெல்லாம் அவனுக்கே ஸமர்ப்பித்தல் சிறப்பையுடைத்தானதாக்கும், எனத் தேர்ந்தபடியைத் தெரிவிக்கிறது.

வருணன் விடுதந்தான்—என்றது, இவைகளை அனுப்பினவன் வேறொருவருமல்லன்; ரத்னம் முதலானவைகள் தங்குகின்ற கடலுக்கு அதிபதியாயும் மேற்கு திக்பாலகனாகவும் விளங்குமவன் என்கிறது.

சோதிச் சுடர்முடியாய்—என்றது, உபயவிபூதி யெங்கும் பரம்பக்கூடிய காந்தியோடு கூடின கிரீடத்தை யுடைத்தானவன் என்கிறது. இப்படி அனைத்துலகையும் ஆளக் கவித்திருக்கும் முடியையுடையவனுக்கு, அவன் ஸ்வரூபாநுரூபமாக சேஷவ்ருத்தி செய்தான் என்றபடி.

தாலேலோ—என்றது, ஜடாசயம் என்று சொல்லப்படுகிற கடலுக்கு அரசனான வருணனும், உன்படி அறிந்து வந்து வணங்கும் வைபவத்தை யுடைத்தானவனே நீ துயிலாய் என்கிறது.

சுந்தரத்தோளனே:— என்றது, உன் அதிகாரப்பெருமை கண்டுதான் உனக்கு ஆட்படவேண்டுமோ? உன்னுடைய தோள பூகைக்கண்டால் அதுவே போராதோ? "சுந்தரத்தோளுடையான் சுழலையில் நின்றுய்துங்கொலோ, என்றன்றோ, நாய்ச்சியாரின் பாசுரமும்; அப்படிப்பட்ட திருத்தோள்களுக்குத் திருவாபரணமிட்டு ஸேவிப்பதன்றோ அவனடியாரின்பணி. காட்டில், கிளைக்குக்கிளை தாவிக் குதிக்கிற குரங்கும், ஸ்ரீ ராமபிரானை ஸேவித்து, "ஆயதா: ச ஸுவ்ருத்தா: ச பாஹவ: பரிகோபமா: | ஸர்வ பூஷண பூஷார்ஹா: கிமர்த்தம் நவிபூஷிதா: || (முழந்தாளளவும் நீண்டும், நன்றாய் திரண்டுருண்டும் பரிகம் போன்றவைகளும், எல்லாத் திருவாபரணங்களாலும் அலங்கரிக்கப்பட வேண்டியது களுமான திருக்கைகள், என்ன காரணத்தை முன்னிட்டு அலங்கரிக்கப்படவில்லை) என்று விம்மி விம்மி அழுது அரற்றிற்றன்றோ? அவ்வாறு பெருமைகொண்ட தோளுடைமையைச் சொல்லுகிறது. பூஷணங்களுக்கெல்லாம் அழகுகொடுக்கும் ஒப்பற்ற ஒரு அழகு பொருந்தின தோளுடையவன் நீ, என்று பாவம்.

முன் அவதாரத்தில் தோளழகுகாட்டித் தன்னை வசீகரித்தாய், அதன் வலியைக்காட்டி தன் விரோதிகளை வென்றதையும் வருணன் நினைந்தால் வாய்வெருவாநிருக்கவொண்ணுமோவென சுந்தரத்தோளனே, என்று ஒருபடி பேசப்பட்டிருக்கலாமெனவும் கொள்க.

தாலேலோ:— என்றது, இவ்வழகு குன்றாதேயிருக்க, நீ சற்றுத்துயிலவேணுமென மன்றாடுகிறபடி. (6)

காணார் நறுந்துழாய் கைசெய்த கண்ணியும்*
வானார் செழுஞ்சோலைக் கற்பகத்தின் வாசிகையும்*
தேனார் மலர்மேல் திருமங்கை போத்தத்தாள்*
கோனேயழேலழேல் தாலேலோ குடந்தைக்கிடந்தானே
[தாலேலோ* (7)

| | |
|---|---|
| தேன் ஆர் | தேன் நிறைந்துள்ள |
| மலர் மேல் | செந்தாமரைப்பூவின்மேல் நித்யவாஸம் செய்துகொண்டிருக்கிற |
| திருமங்கை | பரிபூர்ணையான இலக்குமிதேவியானவள் |
| கான் ஆர் | காட்டில் நிரம்ப உண்டானதாய் |
| நறு | நல்லமணம் வீசுமதான |
| துழாய் | திருத்துழாயினால் |
| கை செய்த | கட்டப்பட்ட |
| கண்ணியும் | மாலையையும் |
| வானார் | சுவர்க்கத்தில் நிரம்ப உண்டானதாய் |
| செழு | வளர்த்தியைக்கொண்ட |
| சோலை | சோலையாகத் தழைத்த |
| கற்பகத்தின் | கற்பக விருக்ஷங்களின் புஷ்பங்களினால் தொடுக்கப்பட்ட |
| வாசிகையும் | திருநெற்றிமாலையையும் |
| போத்தந்தாள் | அனுப்பியிருக்கின்றாள் |
| கோனே | அனைவர்க்கும் தலைவனாய் விளங்குமவனே |
| அழேல் அழேல் | நீ அழாதே, அழாதே |
| தாலேலோ | .... .... .... .... |
| குடந்தை | திருக்குடந்தை யென்கிற திவ்ய தேசத்தில் |
| கிடந்தானே | (யாவரும்வந்து ஸேவிக்கும்படி ஸுலபனாய்) பள்ளிகொண்டிருக்கிறவனே |
| தாலேலோ | .... .... .... .... |

பத்மவாஸிநியான பெரிய பிராட்டியார், தன் நிலத்திலுண்டானதாய் அதனாலே வாஸனைமிக்கிருந்துள்ள துளஸியினால் கட்டப்பட்ட மாலை, தேவலோகம் முழுவதும் ஓங்கி வளர்ந்திருக்கிற கற்பகத்தின் பூவினால் தொடுத்த திருநெற்றிமாலை, இவைகளை உன்பொருட்டனுப்பியிருக்கின்றாள்; ஸர்வஸ்வாமியாய் விளங்குமவனே நீ அழாதேகொள்; அழாதேகொள்; உனக்குத் தாலாட்டு; ஸர்வருக்கும் ஸுலபனாகவேண்டி திருக்குடந்தையில் அரவினணையில் கண்வளருமவனே உன்றனக்குத் தாலாட்டு.

கீழ் ஆறு பாட்டுக்களில், பிரமன் சிவன் இந்திரன் முதலாக வருணன்வரையிலுமுள்ள தேவதைகளெல்லாம் ஸமர்ப்பித்தபடிகள் பேசியானதும், மேல் மூன்று பாட்டுக்களால், ஸ்ரீ பெரிய பிராட்டி, ஸ்ரீ பூமிப்பிராட்டி, துர்க்கை முதலியவர்கள் செய்து போந்த ஸமர்ப்பணையின் பெருமைகளைப் பேசித் தாலாட்டி யநுபவிக்கக்கோலி, அவர்களில் ப்ரதானையான பெரியபிராட்டியார் பேணியனுப்பினபடியின் பெருமை இன்னது இன்னது என்பது இப்பாட்டில் பேசி யநுபவிக்கப்படுகிறது.

கீழ்ப்பாட்டில் கடலுக்கு அதிபதியொருவன் அனுப்பினதை அனுபவித்தானதும், ஒரு கடலின் கன்னி அனுப்பினபடி இப்பாட்டில் பேசப்படுகிறதாகவுமாம்.

காஞர் நறுந்துழாய் கைசெய்த கண்ணியும்:— என்றது, திருத்துழாய், கன்னிலமான காட்டிலே வளருகையாலே, அக்காடெல்லாம் பரிமளம் பரிபூர்ணமாக விளங்கி நிற்கிறது; அப்படிப் பரிமளம் மிக்க துளஸியைக்கொண்டு கட்டப்பட்ட மாலையைச் சொல்லுகிறது. எத்தனையோ உலகில் வஸ்துக்களிருக்கச்செய்தேயும், திருத்துழாய் என்றால் அவன் திருவுள்ளம் பற்றும் பரிசுதான் என்! "தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும், தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மான்," என்றன்றோ அவன் ஏத்தப்படுவதும்; அப்படியுள்ளகருத்தறிந்து செய்யும் கைங்கர்யமிருக்கிறபடி.

வாஞர்செழுஞ்சோலைக் கற்பகத்தின் வாசிகையும்:— என்றது, ஒரு கற்பகவிருக்ஷமே தேவலோகமெங்கும் ஒரே சோலையாக நிற்குமாயிற்று; அந்தக் கற்பகமலரினால் கட்டப்பட்ட திருநெற்றிமாலையைச் சொல்லுகிறது.

தேஞர்மலர்மேல் திருமங்கைபோத்தந்தாள்:— என்றது, இவைகளை வரவிட்டவள், தேன் நிறைந்த செந்தாமரை மலர்மேல் நித்யவாஸம் செய்யும் பரிபூர்ணையான பெரியபிராட்டியார் என்கிறது. "குடந்தைக் கிடந்த கந்தமைந்தனேன்றே ஏத்தப்

படுகிறவவன் பெருமைக்குத்தக்கபடி, அனுப்பினவளும் "யுவதி:ச குமாரிணீ" என்கிறபடியில், ஒரு பரம ரஸிகையான, நித்ய யுவதி யென்றும் காட்டியபடி.

கோனே:— என்றது பெரிய பிராட்டியாரும் வந்து பரிசர்யை பண்ண நின்ற நீ, ஸாமான்னியனோ? திருவுக்கும் திருவாய் விளங்குமவனன்றோ? அனைத்துலகையும் உனதாளுகையில் கொண்டிருக்குமவனன்றோ? என்கிறது.

அழேல் அழேல்:— என்றது, நீ, அழலாமோ பிரானே, அழாதேயிரு; நீயும் உள்ளபடியே அழ ப்ரஸக்தி தானுண்டோ? என்கிறது.

தாலேலோ:— என்றது, பெரியபிராட்டியாரும் மிக விருப்ப முடன் மேவும் தன்மை கொண்டவனே நீ துயிலயர் என்கிறது.

குடந்தைக்கிடந்தானே:— என்றது, பெரிய பிராட்டியாரும் நீ இருக்குமிடந்தேடி வரக்கூடிய பெருமை யொருபுறமிருக்க, யாவரும் வந்தடி வணங்கும்படி மிகவும் ஸுலபனாய், எல்லாருக் கும் வந்தேத்தி வணங்கப் பாங்கான தேசமான, "சீரார் செந் நெற் கவரிவீசும் செழுநீர் திருக்குடந்தை யென்கிற திவ்யதேசத் திலே உன்கிடையழகைக்காட்டிக்கொண்டு சயனித்திருக்குமவ னே என்கிறது.

தாலேலோ:— என்றது, 'வாழிகேசனே, என்றப்போதே, நீ தூங்கும்போதுள்ள அழகே காண் நாங்கள் காணக்கருதியிருப் பது; ஆகவே, நீ அழகான அந்த யோக நித்திரையைக் கொள்ள வேணும் என்கிறது. (7)

கச்சோடு பொற்சுரிகை காம்பு கனவளை*
உச்சிமணிச்சுட்டி யொண்டாணிணைப் பொற்பூ*
அச்சுதனுக்கென்றவனியாள் போத்தந்தாள்*
நச்சுமுலையுண்டாய் தாலேலோ நாராயணா அழேல்
[தாலேலோ. (8)

| | |
|---|---|
| அவனியாள் | ஸ்ரீ பூமிப்பிராட்டியானவள் |
| கச்சொடு | (அரையில் திருப்பரிவட்டம் நழுவாமைக்குக்கட்டும்) பட்டையான கச்சையும் |
| பொன்சுரிகை | ஸுவர்ணத்தினால் செய்யப்பட்ட உடைவாளையும் |
| காப்பு | கரைகட்டின சேலையையும் |
| கனம் | பொன்னினால் செய்யப்பட்ட |
| வளை | தோள்வளைகளையும் |
| உச்சி | தலைமேல் அணியுமதான |
| மணி சுட்டி | இரத்தினமிழைத்த சுட்டியையும் |
| ஒள் தாள் | அழகான காம்புகளையுடையதாய் |
| நிரை | ஒழுங்காயமையப்பெற்ற |
| பொன் பூ | பொன்னினால் பண்ணின பூவையும் |
| அச்சுதனுக்கு என்று | ஆச்ரிதரை நழுவவிடாத கண்ணபிரானுக்குச் சாத்தத் தக்கவையென்று |
| போத்தந்தாள் | அனுப்பியிருக்கின்றாள் |
| நஞ்சு முலை உண்டாய் | விஷத்தினால் சேர்ந்திருக்கப்பெற்ற பூதனையின் முலைப்பாலைப் பானம் பண்ணினவனே |
| தாலேலோ | .... .... .... .... |
| நாராயணா | நாராயண சப்தத்தினால் சொல்லப்படுமவனே |
| தாலேலோ | .... .... .... .... |

ஸ்ரீ பூமிப்பிராட்டி, பட்டுக்கச்சையும், பொன் உடைவாளையும், கரைகட்டின சேலையையும், பொன்னினாற் செய்த தோள்வளைகளையும், உச்சியிலணியும் சுட்டியையும், அழகான பொன் பூவையும், ஆச்ரிதரை நழுவவிடாத கண்ணனுக்குச் சாத்தவேணுமென்று வரவிட்டிருக்கிறாள்; பூதனையின், விஷம் கலந்த முலைப் பாலை அமுதுசெய்தவனே உனக்குத் தாலாட்டு; நாராயண சப்த வாச்யனே உனக்குத் தாலாட்டு.

இப்பாட்டில், பெருமானின் வலது பக்கத்தில் வஸிக்கும் தன்மையளான பெரிய பிராட்டியனுப்பினபடிகளின் பெருமை

பேசி யனுபவித்தானதும், இப்பாட்டில், இடது பக்கத்தை இருப்பிடமாகக்கொண்டு வாழும் ஸ்ரீ பூமிப்பிராட்டி அனுப்பி வைத்த படிகளின் பெருமை பேசி அனுபவிக்கப்படுகிறது.

கச்சோடு—என்றது, பெருமாள் திருவரையில் பீதாம்பரத்தை யணியும் பொழுது, அது இடுப்பிலிருந்து நழுவாமல் நிற்கவேணுமே, அதற்காக பட்டினால் செய்யப்படும் பட்டையான நீண்ட வஸ்து ஒன்று உண்டு, அதைக் கச்சு என்கிறது.

பொற்சுரிகை—என்றது, திருவரையில் பீதாம்பரத்திற்கும் கச்சுக்கும் மேலே சொருகிவிடப்பட்டதாய் சுவற்றில் பல்லி தொக்கிக் கிடந்தால் எப்படிக் காணலாகிறதோ, அதுபோன்ற தோற்றத்துடன் விளங்கும் உடைவாளை (சிறிய கத்தியை) சொல்லுகிறது.

சாம்பு—என்றது, கரைகட்டின சேலை என்பர்.

கனவளை—என்றது, திருத்தோள்களிலணியத்தக்கதாய், பொன்னினால் செய்த வளையல்களைச் சொல்லுகிறது.

உச்சிமணிச்சுட்டி யொண்டாணிரைப் பொற்பூ—என்றது, சிரஸிலணியத்தக்க கல்லிழைத்த சுட்டி, பொன்னினால் ஒரு வகைப் புஷ்பம்போல் அமைக்கப்பெற்ற ஆபரணம், இவைகளைச் சொல்லுகிறது. ஸாதாரணமாக உலகில் இப்பொழுதும் குழந்தைகளுக்கு அணிய, உச்சிப்பூ, சுட்டி, சுழி, என்றெல்லாம் சில ஆபரணங்களை வழங்குவதும் காண்க.

அச்சுதனுக்கென்று—என்றது, இவையெல்லாம், ஆச்ரிதரை யொருபடியாலும் நழுவ விடாதவனும், தானும் ஒருபடியாலும் நழுவுதலில்லாதவனுமான கண்ணனை உன்றனக்கு என்கிறது. ஆச்ரிதரை நழுவவிடாமல் காக்கும் பேருதவிக்கு, அவனுக்கு ஏதேனுமொன்றைச் செய்யவேண்டுமெனக் கருதி, இவைகளை அவாவுடன் அனுப்பியபடி. இதில், ஒரு விநோதமும் காணலாம்; குழந்தையான கண்ணபிரானுக்கு இவ்வாபரணங்களிட்டால்,

குழந்தையான தன் தன்மைக்கேற்ப இவைகளை நழுவவிட்டு விடாமல் காத்துக்கொள்வாளோ; மாட்டாளோ; என்கிற பயமின்றி, தன்னிடமணுகுமொன்றையும் தான் நழுவவிடான் என்பதற்கே அனுப்பினதற்கு அறிகுறியாக, அச்சுதனென்று அறிந்து சொன்னபடி யென்னலாம். ஆபரணஸ்தானீயர்களான வர்களையே நழுவவிடாது நிற்க, ஆபரணங்களாகவேயமைந்த வைகளைக் கைவிட எங்ஙனே ப்ரஸக்தியுண்டென்று உட்கருத்து என்றும் கொள்ளலாம்.

அவனியாள் போத்தந்தாள்:— என்றது, இவையெல்லாவற்றையும் அனுப்பிவைத்தவள் ஸாக்ஷாத் ஸ்ரீ பூமிப்பிராட்டி என்கிறது. அவனியாள் "அச்சுதனுக்கு, என்று சொல்ல பல காரணங்களுண்டென்றலாம். தன்னை, ஹிரண்யன் கொண்டுசென்றவன்று, தன்னை அவனிடம் நழுவவிடாதே, அவனைச் சென்று கொன்று வென்றிகொண்டுவந்த வீரனானமையாலே, அதனை நினைந்தும், பூமியில் பாரம் தாங்கவில்லையென தான் சென்றறிவித்து வந்ததும் கண்ணனாய்க்கோலம் பூண்டுவந்தவதரித்தபடியை நினைந்தும், வந்தவதரித்தவுடனேயே, பூதனை முதலாகவுள்ள ஆச்ரித விரோதிகளை மாய்த்து, தன்னையும் தன்னடியாரையும் நழுவவிடாது காத்துக்கொண்ட பெருமையை நினைந்தும், இப்படியெல்லாம் பல காரணங்கள் கொண்டு அச்சுதன் என்று அழகாகப் பேசியிருக்கலாமன்றோ?

நச்சுமுலையுண்டாய்:— என்றது, வந்தவதரித்தவுடன் ஆச்ரிதரக்ஷணத்துக்கு தானுண்ட அமுது, இன்னதென்கிறது. பசித்த குழந்தை முலையுண்ணுமாப்போலே, விஷங்கலந்த அவளின் முலைப்பாலும் பரமபோக்யமாயிருந்தபடி. ஆச்ரிதரை ரக்ஷிக்க நீ, விஷத்தை உண்டனையே? உன்னுடைய ஆச்ரிதரக்ஷணத்தின் சீர்மைதான் என்னே! இப்படியெல்லாம் உண்டுதான், உன்னையும் உன்னடியார்களையும் உளராய்ச்செய்து, நீ, நாராயணசப்த வாச்யனாக ஆகவேணும் போலும்.

தாலேலோ:— என்றது, ஸ்ரீ பூமிப்பிராட்டியும் பரிவுடன், பல படிகளை அனுப்பிவைக்கும் பெருமைவாய்ந்தவனே, நீ, துயிலமர் என்கிறது.

நாராயணா அழேல்:— என்றது, திசைமுகன் முதல், இவ் விபூதியிலுள்ளாரும், திருமடந்தை மண்மடந்தை என்கிற அவ் விபூதியிலுள்ளாரும், ஒருங்கே வந்து ஏத்தும்படியிருக்கிற நீ, நாராயணன், என்கிற திருநாமம் படைத்தவனன்றோ? ஆகவே அழாதேகொள்.

தாலேலோ—என்றது, "நின்னீரடியொன்றிய மனத்தால், ஒரு மதிமுகத்து மங்கையர் இருவரு மலரென, அங்கையில் முப்பொழுதும் வருட அறிதுயிலமர்ந்தனை, என்றேத்தக் கிடந்தவனே, நீ துயிலமராதிருக்கையழகோ? ஆகவே உன் திருமேனி வாட்டமின்றி நீ துயிலமர், என்கிறது. (8)

மெய்திமிரு நானப்பொடியோடு மஞ்சளும்*
செய்ய தடங்கண்ணுக் கஞ்சனமும் சிந்துரமும்*
வெய்ய கலைப்பாகி கொண்டுவளாய் நின்றாள்*
ஐயா வழேலழேல் தாலேலோ அரங்கத்தணையானே
தாலேலோ (9)

| | |
|---|---|
| வெய்ய | கொடியதான |
| கலை | ஆண்மானை |
| பாகி | வாஹநமாக வுடைய துர்க்கையானவள் |
| மெய்திமிரும் | திருவுடம்பில் நன்றாய் அமர்த்திப் பூசத்தக்க |
| மஞ்சளும் | மஞ்சள் பொடியையும் |
| செய்ய | சிவந்ததாயும் |
| தட | விசாலமாகவுமுள்ள |
| கண்ணுக்கு | திருக்கண்களுக்கு |
| அஞ்சனமும் | மையையும் |
| சிந்துரமும் | நெற்றியிலணிய சிந்துரப்பொடியையும் |
| கொண்டு | தன் கையில் எடுத்துக்கொண்டு வந்து |
| உவளாய் | நடுவிடத்திலே உள்ளவளாய் |
| நின்றாள் | நில்லா நின்றாள் |
| ஐயா | ஸ்வாமியே |

| | |
|---|---|
| அழேல் அழேல் | .... ... .... .... |
| தாலேலோ | .... .... .... .... |
| அரங்கத்து | திருவரங்கமாநகரில் |
| அணையானே | திருவனந்தாழ்வானைத் திருப்பள்ளி மெத்தையாகக் கொண்டிருக்கிறவனே |
| தாலேலோ | .... .... .... .... |

கொடிய ஆண்மானை வாஹநமாகவுடைய துர்க்காதேவி, திருவுடம்பில் நன்றாய்ப் பூசத்தக்க வாஸனைப்பொடி, மஞ்சள் பொடி, சிவந்து விசாலமாய் விளங்கும் திருக்கண்களுக்கு மை, திருநெற்றியிலணியச் சிந்துரம், இவைகளைக் கொண்டுவந்து நடுவிடத்தே நில்லாநின்றாள். ஸ்வாமியே, நீ, அழாதேகொள்; அழாதேகொள்; உனக்குத் தாலாட்டு; திருவரங்கமாநகரில் திருவனந்தாழ்வானைத் திருப்பள்ளி மெத்தையாகக் கொண்டிருக்கிறவனே நீ,துயிலமர், உனக்குத் தாலாட்டு.

கீழ்ப்பாட்டில், ஸ்ரீ பூமிப்பிராட்டி ஸமர்ப்பித்த படிகள் பேசினதுப், ஸ்ரீ, பூமி, இவ்விருவருக்கும், நாத்தனார் முறைமை யுள்ள துர்க்காதேவி, கண்ணன் தன்னுடன் பிறந்தவன் என்கிற பேரன்பினால், தான் சில வஸ்துக்களைக் கொண்டுவந்து நின்றமை இப்பாட்டில் பேசியநுபவிக்கப்படுகிறது.

மெய்திமிரு நானப் பொடியோடு மஞ்சளும்—என்றது,இவன் திருமேனிதான், "புழுதியளைந்த பொன்மேனி" எனப் போற்றப் படுவதற்கேற்றிருக்கு மொன்றானதாலே, அத்திருமேனியைத் திருமஞ்சனமாட்டுவிக்க, திருமேனியில் அழுந்தப் பூசத்தக்க சில வாஸனைப்பொடிகளும் வேண்டுமே; அவைகளையும், இவன் தான், "பற்றுமஞ்சள் பூசி, உகக்குமவனானதாலே," அதற் கேற்ப, நல்ல மஞ்சள் பொடியையும் கொண்டு வந்தமையைக் குறிப்பிடுகிறது.

செய்ய தடங்கண்ணுக் கஞ்சனமும் சிந்துரமும்— என்றது. "செவ்வரியோடி நீண்டவப் பெரியவாய கண்கள், எனப் போற் றப் படுவதற்கேற்ப, ஸ்நானமானால், விசாலமான செந்தாமரை போன்ற திருக்கண்களுக்கு மை இடவேண்டுமே; அதற்காக

நல்ல, மையையும், அதன்மேல் திருநெற்றியில் சாத்த, சிந்தூரத்தையும், சேகரித்து வந்தமையை விளக்குகிறது. சிந்தூரம் நெற்றியிலணியத்தக்கதென்பது, 'சிந்தூர மிலங்கத்தன் திருநெற்றிமேல்'' என்று, மேலே (3—4—6) பாசுரத்தில் பேசப்படப் போவதனால் காண்க

வெய்ய கலைப்பாகி கொண்டுவளாய் நின்றாள்— என்றது, இவைகளைக் கொண்டுவந்தவள், கண்ணபிரானுக்கு உடன் பிறந்தவளாகத்தோன்றி, கலைமானை வாஹநமாகவுடைய துர்க்கா தேவி, எனத் தெரிவிக்கிறது. அன்றியும், "நாவினுள் நின்று மலரும் ஞானக் கலைகளுக்கெல்லாம், ஸரஸ்வதி, நிர்வஹிக்கும் பெருமைவாய்ந்தவளாகப் பேசப்படுவதாலும், இந்த முதற் பாட்டில் பிரமனின் பிரஸ்தாவத்தைப்பற்றிப் பேசினபடிக்கேற்ப, ஸமர்ப்பிக்கும்படிகளைப் பேசுமதில் முடிவான பாட்டாகவமைந்த விதில், பிரமனின் பெண்சாதியைக் குறிப்பிட்டுப் பேசினதாகவும் கொள்ளலாமென்பர் முன்னுரையாளர்கள்; அப்படிக்கொள்ளும் போது, வெய்ய என்கிற பதத்திற்கு, விரும்பப்படும், எனப் பொருளும் காட்டினர்.

ஐயா— என்றது, அனைத்துலகுக்கும் அதிபதியாயிருக்குமாற்றை அறிவிக்கிறது. மற்றொரு அநுபவ ரஸிகரும், "ஐயனே" என்பதுடன், "அரங்கனே" என்றும் சேர்த்துப்பேசி நிற்குமாற்றையும் நினைக்க.

அழேலழேல் தாலேலோ— என்றது, நீ, அழாதேகொள் பிரானே, நீ துயிலமர்ந்தருளாய் என்கிறது.

அரங்கத்தணையானே தாலேலோ— என்றது, அவ்வவதார தசையில், தன்னை அநுபவியாதார் குறை தீர்க்கவும், மற்று மனைவரையும் உனக்காக்கிக்கொள்ளவும், திருவரங்கமாநகரில், திருவனந்தாழ்வானுகிற திருப்பள்ளி மெத்தையின்மேல் உறங்குவான்போல், பரம ஸௌலப்யம் தோற்ற சயனித்திருக்குமவனே நீ துயிலமர் என்கிறது.

இப்படிக் கண்ணனுகக்கிடந்த பெருமையும் கோலமும் பாருமே, அரங்கனும் வந்து கிடந்தானென, நம் ஆகம மௌலி யாசிரியரான ஸ்ரீ தேசிகன் அநுபவித்து, "ப்ருந்தாநிய: ஸ்வ வசயந் வ்ரஜ ஸுந்தரீணும் ப்ருந்தாவநாந்தர புவாம் ஸுலபோ பபூவ | ஸ்ரீ மாநசேஷஜநஸங்க்ரஹணய சேதேரங்கேபுஜங்க சயநே ஸமஹாபுஜங்க: ||" (இடைச்சேரியிலுண்டான ஆயரிள மாதர்களின் இனத்தையெல்லாம் தன் வசமாக்க, தன்னை அவர்களுக்கு ஸுலபனுக வைத்துப்போந்த அவனே, இன்னுரினியாரென்கிற வாசியின்றி அனைவரையு மகப்படுத்த அரங்கத்தரவணையின் மேலே அமர்ந்து கிடக்கிறன்) என வெளியிட்ட அழகான ச்லோகமொன்றையும் இங்கு நினைவிற்கு வரச்செய்கிறது. (9)

வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலையுண்ட*
அஞ்சன வண்ணனை யாய்ச்சி தாலாட்டிய*
செஞ்சொல் மறையவர் சேர்புதுவைப்பட்டன்சொல்*
எஞ்சாமை வல்லவர்க் கில்லை யிடர்தானே* (10)

| | |
|---|---|
| வஞ்சனையால் வந்த | தாயுருவைக் கபடத்தினுல் பூண்டு கொண்டு வந்தவளான |
| பேய்ச்சி முலையுண்ட | பேய்மகளான பூதனையினுடைய முலையை யமுதுசெய்த |
| அஞ்சன வண்ணனை | மைபோல் கருத்த நிறத்தையுடைய கண்ணனை |
| ஆய்ச்சி | இடைச்சியான அசோதை |
| தாலாட்டிய | தாலாட்டின படிகளை |
| செஞ்சொல் மறையவர் சேர் | செம்மையான சொற்களால் நிறைந்ததான வேதங்களை ஓதி யுணர்ந்திருக்கு மவர்கள் சேர்ந்திருக்கிற |
| புதுவை | ஸ்ரீ வில்லிபுத்தூரில் அவதரித்த |
| பட்டன் | பெரியாழ்வார் அருளிச்செய்ததான |
| சொல் | இப் பாட்டுக்களை |
| எஞ்சாமை வல்லவர்க்கு | குறைவுபடாமல் ஓதி உரைக்க வல்லவர்களுக்கு |

| | |
|---|---|
| இடர் | யாதொரு துன்பமும் |
| இல்லை | இல்லை |

மாயத்தினால், தாய்போல் தன்னைப் பேணிவந்த பூதனையின் முலையுண்ட மைவண்ணனை அசோதை தாலாட்டின படிகளையெல்லாம், செஞ்சொல் மறையவர் வாழும் ஸ்ரீ வில்லிபுத்தூரிலவதரித்த பெரியாழ்வார் தாமுமநுபவித்து. அப்படியே வெளியிட்டவைகளான இப்பாசுரங்களை, குறைவின்றி ஓதியுரைக்க வல்லவர்க்கு எவ்விதத்துன்பமுமில்லை.

கீழ்ப்பாட்டுக்களினால் பேசப்பட்ட அநுபவங்களைத் தாமும் உள்ளபடியே கொண்டு அநுபவிப்பார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிறது இப்பாட்டு.

வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலையுண்ட— என்றது, "மாய்த்தலெண்ணி வாய்முலைதந்த மாயப்பேய்" என்றும், "தாயாய் வந்த பேய்" என்றும் சொல்லுகிறபடியே, தன் பேயுருவை மறைத்து, பொற்றொடித்தோள் மடமகள் தன் வடிவைத் தான் பூண்டுகொண்டுவந்த பொல்லாத பூதனையை, தானும், ஒன்றுமறியாத குழந்தைபோல் வஞ்சனையாலணுகி, முலையுண்ணும் பாவனையிலே அவளை முடித்திட்டமையை மொழிந்தபடி.

அஞ்சன வண்ணனை— என்றது, உலகிலுள்ள மற்றைக் குழந்தைகள் விஷங்கலந்த அம்முலையை உண்டக்கால், மேனி கருத்து, மேனி மெலிவெய்தி, மேலுலகம் சென்றிடுமே; அப்படிக்கின்றி, அவள் முலையூடவளையுயிருண்டபடியினாலே, ஆச்ரித விரோதியை அழிக்கப்பெற்றோமென்கிற பெருமைக்கீடாக, தன் உடலம் பூரித்து கருப்போடி, "குன்றொடு கொழுமுகில்போல். குவளைகள்போல் குரைகடல்போல், நின்றொடு கணமயில்போல் நிறமுடைய நெடுமால், என" மேலே ஏத்த நிற்கும் பெருமைக்கேற்ப அதற்கறகுறியாக, ஒருபடி இனிதுரைத்திருக்கிறபடி.

ஆய்ச்சி தாலாட்டிய— என்றது, ஒருத்தி மகனாய்ப் பிறந்தவொருவனை, தன் மகனாகப் பெறும் பாக்கியம் பெற்ற அசோதை தொட்டிலிலிட்டு, அங்கு தான் கண்ட புதுமைகளையெல்லாம் சொல்லித் தாலாட்டுப் பாடினமையைப் பேசுகிறது.

செஞ்சொல் மறையவர் சேர்புதுவைப் பட்டன்சொல்— என்றது, பரதத்வ நிர்த்தாரணம் பண்ணத்தக்க பெருமைவாய்ந்த ஆழ்வார் அவதரித்து விளங்குவதற்கு அநுகுணமாக, வேதம் வல்லார்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் திரண்டுவந்து சேர்ந்து வஸிப்பராயிற்று ஸ்ரீ வில்லிபுத்தூரில்; அப்படி அவர்களெல்லாம் கொண்டாடி வஸிக்கிறபுதுவைக்கு, நிர்வாஹகராய்ஆப்ததமரான பெரியாழ்வார், யசோதை தாலாட்டினபடியைத் தாமும் ஸம காலம்போல் அநுபவங்கொண்டு, அப்படியே அப்பெருமைகளை யெல்லாம் வெளியிட்டருளினாராயிற்று இப்பாட்டுக்களினால், என்கிறது.

எஞ்சாமை வல்லவர்க்கில்லை யிடர்தானே—என்றது, சொல்லாலும், பாவத்தினாலும், மற்று மொருபடியினாலு மொருகுறைவுமின்றிக்கே, இப்பாட்டுக்களை ஓதி யுணர்ந்து உரைக்கும் பெருமை வாய்ந்தவர்க்கு, பகவதநுபவ விரோதியான இடரொன்றும் முன்உளதோ! என்றே சொல்லும்படியாக ஸமஸ்த துக்கங்களும் மாய்ந்துபோம் என்றபடி.

இங்கு, இடர் ஒன்று உளதாய், அது இதனால் கழிந்தது என்று கூட சொல்வது தகாது என்று கொண்டு, "இடர்—இல்லையெனச் சொல்லாதே, இல்லை—இடர் தானே, என எதிர்க் குனித்திருக்கிற சொல்லின் சுவையும் அமைந்திருக்குமாறறிக.

குறிப்பு:— கண்ணனைத் தாலாட்டினபடிகளை அநுபவித்திருக்குமதான இத்திருமொழியில், முதல் ஆறு பாசுரங்களினால், ப்ரஹ்ம ருத்ர இந்திராதி தேவர்கள், குபேரன், வருணன், திவர்கள், சில வஸ்துக்களை ஸமர்ப்பித்தருளியதாகவும், அதிலும் சில விபவாவதாரங்களை மட்டில் காட்டிப் பேசிஅநுபவங்கொண்டு, இவ்விபவாவதாரங்களையெல்லாம் அர்ச்சையில் சேர்த்துப்பேசப் பாங்கான, திருக்குடந்தையில் முதலில் கண்வளர்ந்தட்டங்கொண்டு பேசி, அங்கு, பெரிய பிராட்டியார், இரு மாலைகளை ஸமர்ப்பித்து வரவிட்டருளியதாக, ஏழாம்பாட்டில் அநுபவங்கொண்டு, எட்டாம் பாட்டில் ஸ்ரீ பூமிப்பிராட்டியும் ஸமர்ப்பித்தபடிகளையும்

பேசித் தீர்ந்து, ஒன்பதாம் பாட்டில், அரங்க நகரப்பனையும் சேர்த்து, "நாகத்தணைக்குடந்தை" "நாகத்தணையரங்கம்" (நான்முகன் திருவந்தாதி (36) என்கிறபடியே, அரவணையில் பள்ளி கொண்ட இருபெருமானையும், ஒன்றாய்த் தொட்டிலில் சேர்த்து "நசதே ந விநா நித்ராம் லபதே புருஷோத்தம: | ம்ருஷ்ட மந்ந முபாநீத மச்நாதி நசதம் விநா || (புருஷோத்தமனான எம்பெருமான் இளைய பெருமாளைத் தன்னுடன் படுக்கையில் சேர்ந்தாற்போல் விட்டுக்கொள்ளாமல், தான் தூக்கத்தை யடைகிறதில்லை; ஸமீபத்தில் கொண்டு வைக்கப்பட்ட அறுசுவை யடிசிலையும் அவனைவிட்டுத் தான் மாத்திரம் அமுதுசெய்கிறதில்லை) என்கிற படியே ஒரு அநுபவத்தை வெளியிடுகிறாற்போல், அநுபவித்து, ஏழாம்பாட்டில், "குடந்தைக் கிடந்தானே, என்றும், எட்டாம் பாட்டில் "நச்சு முலையுண்டாய்" என்றும், அவ்வர்ச்சையுடன், கண்ணனை விபவாவதாரத்தையும் கலந்து பேசினாற்போல், ஒன்பதாவதில், "அரங்கத்தணையானையும்" பத்தாவதில், "வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலையுண்ட" என்று, அதே சேஷ்டிதத்தில், கண்ணனை விபவாவதாரத்தையும் சேர்த்துப்பேசி, மற்றுமோர் திவ்யார்ச்சாவதாரங்களுக்கு, இத்தொட்டிலில் இடம் விட்டு வைக்காதே, இது இவ்விரு அர்ச்சா திவ்ய மங்கள விக்கிரஹங்களின், அநுபவமேயெனத் தோற்றுமாறு, தொட்டிலிலிட்டுத் தாலாட்டும் பருவம் தலைக்கட்டப்பட்டிருக்கிறது; ஆகவே, "சேஷதர்மம்" "கும்பகோணம் ஸ்தலபுராணம்" இவைகளில் அமுதனும், அரங்கனும், வேறுபட்டவர்களல்லர் என்றும், இரு விமானங்களும், ஒரு கால விசேஷத்தில் ஒன்றாய் கூடியிருந்து ஓரிடத்தில் கொண்டாடப்பட்டதென்றும், பெரிய பிராட்டியாரே குடந்தைப் பொற்றாமரைக்கயத்தில் வந்து தோன்றி ஸ்ரீ ஆராவமுதாழ்வானுக்கு மாலையிட்டனள், என்றும், திருவுள்ளத்தில் கொண்டு, ஆழ்வார் இத்திருமொழியின் அநுபவத்தை இனிதாகக் கொண்டிருப்பரென்று கொள்ள மிகவும் ஔசித்யமுளதெனத் தோற்றுகிறது. உலகில் தொட்டில் பழக்கத்தையே உத்தமமான பழக்கமென்றும், அது என்னாளும் விட்டு நீங்காது, என்றும், உரைப்பதற்கநுகுணமாக, ஆழ்வாரும் தொட்டிலிலேயே முதலில்

இவ்விருவருமான சேர்த்தியின் சுவையை அநுபவித்துப் போந்தார், என்னலாம். இப்படி, அமுதனிடமும், அரங்கனிடமும் சேர்ந்த ஒரு அநுபவக்கிரமம் நிற்க, அரங்கனுக்கு, வெய்ய கலைப்பாகி, சிலவற்றை ஸமர்ப்பிப்பதாகப் பேசுவதால், வெகு நாளாகவே, சமயபுரத்து, அந்நங்கை, அரங்கனுக்கு அனைத்தையும் அனுப்பிக்கொண்டிருக்கிறாளோவென்றும், அதுகொண்டு ஆழ்வாரும், அதனை வெளியிடுகிறாப்போல் பேசியிருப்பரோ என்றும் தோற்றுகிறது.

9-வது பாட்டில், இவ்வைதிஹ்யங் குறிக்கொள்ள, "வெய்ய கலைப்பாகி" என்பதற்கு, 'துர்க்கை' என்கிற முந்தின பொருளே பொருத்தமுற்றதாயிருக்கும். (10)

மாணி உடை என் சங்கு எழில் ஒத காளுர் கச்சு மெய் வஞ்சனை தன்.

ஆழ்வாரெம்பெருமானுர் தேசிகன் திருவடிகளே சரணம்.

முதற்பத்து நான்காந்திருமொழி உரை

முற்றிற்று.



ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் தேசிகன் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து—ஐந்தாந் திருமொழி.



### தன்முகத்துச்சுட்டி.



தன்முகத்துச்சுட்டி தூங்கத் தூங்கத் தவழ்ந்துபோய்*
பொன்முகக் கிண் கிணி யார்ப்பப் புழுதி யளைகின்றான்*
என்மகன் கோவிந்தன் கூத்தினை யிளமாமதீ*
நின்முகங் கண்ணுளவாகில் நீ யிங்கே நோக்கிப்போ* (1)

| | |
|---|---|
| இள | இளமைப்பருவத்தைக்கொண்டு விளங்குகிற |
| மாமதீ | அழகான சந்திரனே |
| தன் முகத்து | தன்னுடைய திருமுகத்தில் கட்டப்பட்டிருக்கிற |
| சுட்டி | சுட்டியென்கிற திருவாபரணமானது |
| தூங்க தூங்க | பல்காலும் அசையும்படியாகவும் |
| பொன்முகம் | அழகான முகத்தோடு கூடின |
| கிண் கிணி | சதங்கைகள் |
| ஆர்ப்ப | சப்திக்கும்படியாகவும் |
| தவழ்ந்துபோய் | தவழ்ந்துகொண்டுபோய் |
| புழுதி | (தெருவில் படிந்திருக்கிற) புழுதி மண்ணை |
| அளைகின்றான் | அளையாநிற்கின்றான் |
| என் மகன் | என்னுடைய பிள்ளையான |

| | |
|---|---|
| கோவிந்தன் | கோவிந்தன் என்னும் பெயர்பூண்ட கண்ணனுடைய |
| கூத்தினை | திருவிளையாடல்களை |
| நின் முகம் | உன்னுடைய முகத்தில் |
| கண் | (பார்க்கும் கருவியான) கண்ணானது |
| உள ஆகில் | உண்டாயிருந்ததேயாகில் |
| நீ | நீயானவன் |
| இங்கே | இவ்விடத்தே வந்து |
| நோக்கி | பார்த்துவிட்டு |
| போ | பின்பு செல்லக்கடவாய். |

பாலனாய் அழகான சந்திரனே, தன் திருமுகத்தில் கட்டப்பட்ட சுட்டி பல்காலும் அசையவும், அழகிய முகமுடைய சதங்கைகள் ஒலிக்கவும், தவழ்ந்துகொண்டு தெருவில் சென்று அங்கு படிந்துகிடக்கிற புழுதி மண்ணை அளையாநிற்கின்றான்; என் பிள்ளையான கோவிந்தன் திருவிளையாடல்களை உன்முகத்தில் கண் உண்டேயாகில் நீ, இங்கேவந்து பார்த்துச்செல்வாய்.

கீழ் நான்காந் திருமொழியில், அசோதை கண்ணனை தொட்டிலில் துயிலமரவிட்டுத் தாலாட்டினபடியையும், அப்பொழுது நான்முகன் முதலானோர் சிலவற்றை ஸமர்ப்பித்தருளினபடியையும், அவ் யசோதைதான் அநுபவித்தவண்ணமே பேசி மகிழ்ந்தமை அநுபவிக்கப்பட்டது. தொட்டில் பருவம் ஆனால், மேலே தூங்கிலா முற்றத்தே தவழ்ந்து போந்து விளையாடுவதும், சந்திரனைப் பார்ப்பதும், அவனை விரும்புவதும், தெருவில் புழுதி மண்ணை யளைவதும், நடுவே நடுவே, நினைத்தபடி பரிமாறப் பெறாதே சிறிது அழுவதும், இப்படியெல்லாம் சில சேஷ்டிதங்கள் நடக்குமே; அத்தருணத்தில், தாய்மாராவார், தம் குழந்தையை அழுகையைமாற்றி உகப்பிக்க, சந்திரனைப்பார்த்து, அவனைக் குழந்தையிடம் விளையாடப் பிடித்துக்கொடுப்பதாக ஒரு பாவனையிட்டு. அம்புலிமாமே, வா, வா, என்று உலகில் சொல்லுகிற விநோதமான பேச்சுண்டே; அப்படி அசோதை, கண்ணனை இடுப்பில் வைத்துப் பேசினபடிகளை, இவ்வவதார சேஷ்டிதங்

களில் அணுவளவும் அகலவிடாதே அநுபவிக்க ஆசையுடைய இவ்வாழ்வார் தாமும் விரிவாக அநுபவித்த அநுபவம், இவ்வைந் தாந் திருமொழியில் பேசப்படுகிறது. யசோதை தனக்கும், அவனுடைய உயர்ந்த தன்மையும் தாழ்ந்த தன்மையும் தோற்று வது தக்கதே யென்றும், அதனையடியொத்திப் பேசப்பட்ட தென்க; அன்றி அவள் பேச்சைப் பேசுமவர் பெரியாழ்வாரான தால் பேசும் பேச்சில் உள்ள பெருமைகளெல்லாம் பொருத்த முற்றதே யென்க.

**தன்முகத்துச்சுட்டி**— கண்ணபிரானின் திருமுக மண்டலத் தின் தானான தன்மையிலுள்ள ஒப்பற்ற வொருவழகே அனை வரையும் அங்கு வைத்த கண்ணை வாங்க வொண்ணாதே செய்ய வல்லதாயிருக்க, உலகவியற்கையை யொட்டி, சுட்டி என்கிற ஒரு திருவாபரணத்தைக் கட்டப்பட்டிருக்கு மதைக் காட்டு கிறது.

**தூங்கத் தூங்கத் தவழ்ந்துபோய்**— தவழும் காலத்தில் தலை குனிக்கப்படுமானதாலே திருமுகத்திலே தொங்குகிற சுட்டி அசைந்தாடுகிற அழகை அறிவிக்கிறது.—தவழுகை = முழந்தாள் களால் செல்லுகை.

**பொன்முகக் கிண் கிணி யார்ப்ப**— கண்ண பெருமான் சாத் திக்கொள்ளுமதானதாலே அக் கிண் கிணியின் முகமும் அழகு பெற்று விளங்குமதாயிருக்கிறது. கண்ணுக்கு அழகாயிருக்கு மதற்கு மேலே காதில் கேழ்க்கவும் இனிதாகவிருக்கும்படி ஒலியா நிற்கின்றது. கிண்—கிண் என ஒளிக்குமதை யொட்டி கிண் கிணி என்னப்படுகிறதென்க. இதுதான் திருவரையிலும் திருப் பாதங்களிலும் சாத்தத்தக்கபடி ஒவ்வொருபடி அமைப்பைக் கொண்டிருக்கும் தவழும்போது திருவரையிலிருந்தாலும் திருப் பாதங்களிலிருந்தாலும் ஒலிக்கத்தட்டில்லையே? இரண்டிடத் துள்ளதும் ஒலித்ததாகக்கொள்ளிலும் அழகுடைத்தே. இப்படி தவழும்காலத்தே, அடியார்கள், செவியால் கண்ணால் பருகுவோம் என்று இறைஞ்சும்படி இன்புறு மிவ்விளையாட்டுடையானாயிருக் கிறபடி.

புழுதியளைகின்றான்— புழுதியளைந்த பொன்மேனியைப் போற்றுவதற்குத் தக்கபடியாகத் தெருப்புழுதி மண்ணை பருவத்துக் கிடான விளையாட்டிலமைத்து அளைகிறபடியைச் சொல்லுகிறது.

என்மகன்— இவனழகையும், செய்கையையும் கண்டு உள்ளம் பூரித்து, என் பிள்ளை இப்படிச் செய்யா நிற்கிறான் என உகப்புத்தோற்ற உரைக்கிறபடி.

கோவிந்தன்— நான் பெற்ற பிள்ளையென இவ்வாறு உரைக்கிறேனல்லேன்; பசுக்களெல்லாம் பரவிவந்து கிடக்கிறபடியைப் பாரீர். இத்தால் அனைவரும் காண அரிதாயிருக்கும் ஓரிருப்புப் போலன்று இவ்விருப்பு; அனைவரும் வந்து காண எளிதாயிருக்குங்காண் இவ்விருப்பு என்றபடி. ஒளிக்கெல்லாம் ஓர் உறைவிடமாக விருக்கையாலே அவனைக்காணத் தனியே ஒரு உதவி வேண்டுவதில்லை; தானே விளங்கி நிற்கு மவ்விருப்பே, விருப்பமுடன் தன்னைக் காணவேண்டி நிற்பாரனைவருக்கும் வேண்டிய வளவுக்கும் மேலே காட்டிக்கொடு நிற்கும். பின்னும் பேசும் பேச்சுக்கெல்லாம் வேறு புகலிடமற்று தான் புகலிடமாக விளங்கும். ஆக, பசுக்களினால் அடையப்படுகிறவன்; கிரணங்களினால் அடையப்படுகிறவன்; எல்லா வாசகங்களினாலும் அடையப்படுகிறவன் என்கிறபடிகளைக் காட்டி, அவனின் மேன்மையையும், தாழ்மையையும் ஒரே பதத்திலே எளிதாக உணரும்படி உரைத்தருளிய உத்தமனின் ஒரு பேச்சின் உறுதி உணர்க.

கூத்தினை— இவன் செய்யும் விளையாடல்களைப், பொதுவாக, விளையாடல் என்னலாமத்தனை போக்கி, மனத்தையும் கண்களையும் கொள்ளைகொள்ளத் தக்கதான இவன் திருவிளையாடல்களுக்குத் திருந்த வொரு திருநாமமிட்டுப் பேசவொண்ணாதபடியாயிருக்கை.

இளமாமதீ—இவன் விளையாட்டைக் கண்டு விரும்பிநிற்கும் ஒத்த பருவத்தையும் பெருமையையும் கொண்ட சந்திரனை என்கிறது. இவனை "மிகுஞானச் சிறு குழவி" என்னுமாப்போலே

இவனை அநுபவிக்க அழைக்கப்படுமவனையும் பேசுகிற அழகிருக்கிறபடி. மதி, என்றால், அறிவு; இச்சொல்லே அறிவைப் படைத்தவனையும் சொல்லும்; மிகுந்த அறிவு படைத்து சொல்லிக்கொடுக்குமதிலும் திறமைவாய்ந்து விளங்கவேண்டும். இப்படியெல்லாம் பெருமைபடைத்தாலும் தன்படியை மறைத்து பார்ப்பவர்களுக்கு பாலர்களின் தன்மையினராய் தோற்றி நிற்றலே தக்கதென்று எழுதாமறைத்தலையில் விரித்துரைத்தவற்றையெல்லாம் இங்கு நினைப்பூட்டுகிறபடி.

நின்முகம் கண்ணுளவாகில் நீ இங்கே நோக்கிப்போ—உலகில் ஒரு கார்யப் பிரஸ்தாவ காலத்தில், அங்கு அருகில் செல்லும் அக்கார்யத்துக்குத்தக்க ஒருவரைக் கூப்பிட்டாலே, நம்மை இக்கார்யத்தில் ஈடுபடவன்றோ இவர் கூப்பிடுகிறார், என்று கொண்டு அக்கார்யத்தில் அவர் தானாகவே ஈடுபடவேண்டியது இயல்பாகவிருக்கும்; இதற்குப் பேரறிவாளர், சிற்றறிவாளர் என்கிற வேற்றுமையில்லை; அப்படிக்கிருக்க, இவனையோ, நாம் எவ்வளவோபெருமைபடப் பேசிக் கூப்பிட்டோம்; இவன் வரவில்லையென ஒருபடி எண்ணமிட்டு, உன்முகத்தில் கண் உண்டாகில் நீ, இங்கே வந்து பார்த்துப்போ, என்கிறது; அன்றியே கண்ணனைக் கண்டு கண்படைத்த காரியம் தலைக்கட்டுவாய் என்றபடி. "காணாதார் கண்ணென்றும் கண்ணல்ல கண்டாமே" என்றும், "க்ருஷ்ணம் லோகய லோசநத்வய" (கண்ணின் இரண்டே கண்ணனைக் காண்பாய்) என்றும் திவ்ய ஸூக்திகளை இங்கே நினைக்க. (1)

என் சிறுக் குட்டனெனக் கோரின்னமுதெம்பிரான் *
தன் சிறுக் கைகளாற் காட்டிக் காட்டி யழைக்கின்றான் *
அஞ்சன வண்ணனோடாடலாட வுறுதியேல் *
மஞ்சில் மறையாதே மாமதீ மகிழ்ந்தோடிவா * (2)

| | |
|---|---|
| மாமதீ | அழகான சந்திரனே |
| என் சிறுகுட்டன் | என்னுடைய சிறிய குழந்தையாய் |
| எனக்கு | என்தனக்கு |

| | |
|---|---|
| ஓர் | ஒப்பற்ற |
| இன் | போக்யமான |
| அமுது | அம்ருதம் போன்றவனாய் |
| எம் பிரான் | எனக்குப் பல்படிகளாலும் உபகாரகனாய் விளங்குகிற கண்ண பெருமான் |
| தன் | தன்னுடைய |
| சிறு | (பருவத்துக்கேற்ப) சிறியதான |
| கைகளால் | திருக்கைகளினால் |
| காட்டி காட்டி | (பலதடவை உன்னையே, சுட்டிக் காட்டி |
| அழைக்கின்றான் | அழையா நிற்கின்றான் |
| அஞ்சனம் | மைபோன்ற |
| வண்ணனோடு | திருமேனியின் திருநிறத்தையுடைய இவனுடன் |
| ஆடல் ஆட | விளையாட்டுச் செய்கைகளைச் செய்ய |
| உறுதியேல் | எண்ணினையேயாகில் |
| மஞ்சில் | மேகத்தினுள்ளே |
| மறையாதே | மறைந்துபோகாமல் |
| மகிழ்ந்து | ஸந்தோஷமாக |
| ஓடிவா | விரைந்து வந்தருள்வாய். |

அழகான சந்திரனே, என் சிறு குழந்தையாய் எனக்கு ஒப்பற்ற போக்யமான அமுதம் போன்றவனாய், எனக்கு உபகாரகனான கண்ணன், தன் சிறிய கைகளினால் உன்னையே பலதடவை குறிப்பாகக் காட்டிக் கூப்பிடுகிறான்; மை வண்ணனான அவனுடன் விளையாடவேணுமென எண்ணினால் மேகத்தில் மறையாதே உகந்தோடி வந்தருள்வாயாக.

என் சிறுக்குட்டன்— தனக்கு, தன் குழந்தையான சிறிய வடிவைக்காட்டி உகப்பிக்கிறவன் என்றபடி.

எனக்கோரின்னமுது-உலகில், தேவர்கள் சாவாமைக்கு மருந்தாக கடல்கடைந்து எடுத்த அமுது ஒன்றுண்டு; அவ்வமுதினும் இனியளாய் பிராட்டியான பெண்ணமுது மொன்றுண்டு;

அவள் தமக்கும் அமுதாய், "அமுதிலுமாற்ற இனியன், என்று கொண்டாடப்படும் ஒப்பற்ற ஓரின்னமுதமும் உண்டன்றே? அவ்வமுது" "எனக்கே தன்னைத் தந்தகற்பகம்" "எனக்கே இன்னமுதம்" என்னுமாப்போலே, எனக்கு போக்ய பூதனாய் விளங்கும்பெருமை இது என்றபடி.

எம்பிரான்— அவன்தான் போக்ய பூதனாய் விளங்குமது முன்னுரைத்தபடி குழந்தையான தன் வடிவைக் காட்டியதோடு மட்டுமல்ல; அவதரித்து மலடுதீர்த்தபிரான்; மனதையும் கண் களையும் கவரவல்ல அழகிய விளையாடல்களைக் காட்டி எனக்கு உபகரித்தவன்; அவன் செய்தபடிகளை இன்னவாறு, எனத்தனித் தனியே சொல்ல மாட்டுகிறிலேன்; "எம்பிரான்" என இவ் வாறே பொதுவாகச் சொல்லலாமித்தனை என்றபடி. அம்ருத சப்தத்தால் சொல்லப்படுமவன், அபலையான இவள் கட்டவும், அடிக்கவும், அடங்கினவனாய், இவளைப் பலபடியும் அநுபவிப்பித் தானென்றால், அவ்வவபடிகளைப் பிரியச் சொல்ல வொண்ணாமை இயல்புதானே; இதற்குச் சான்றாக, "குலசேகரன்" "தொழு கையு மிவைகண்ட வசோதை தொல்லையின்பத்திறுதிகண் டாளே" எனக் கூறிப்போந்த பெருமாள் திருமொழி (7—8)வது, பாசுரங்களின் அநுபவத்தைக் குறிக்கொள்க.

தன் சிறுக்கைகளால் காட்டிக்காட்டி யழைக்கின்றான்— "முகிழிளம் சிறுத்தாமரைக் கையும்" என்னப்படும் தன் கைகளின் வடிவின் சிறுமை, புகழின் பெருமை, இவைகளைப் பாராதே, உன்னைச் சுட்டிக்காட்டிக் கூவுகின்றானென்கிறது.

அஞ்சன வண்ணனோடாடலாட வுறுதியேல்— மைபோன்ற வண்ணனான கண்ணனுடன் மெய்யாக விளையாட விரும்பினாயே யாகில் என்கிறது. இருவர் ஒருமனப்பட்டுச் செய்யவேண்டிய கார்யத்தில் ஒருவர் ஆசைமட்டும் போராதல்லவா? இவனோ, கண்டவர் சிந்தை கவருமவன்! ஆகவே, உன் மனதையும் கவர்ந்திருப்பனென்பதில் ஐயமொன்றில்லை; அப்படி விளை யாடும் விருப்பம் விளங்கிநிற்குமத்தனையே இங்கு வேண்டிய ஸாதனமென்றபடி.

மஞ்சில் மறையாதே— சந்திரன், தன் கதி வசத்தில் மேகத்தில் மறைந்தும் வெளிப்பட்டும் சென்று கொண்டிருக்க, அது கண்டு, விளையாட வேண்டுமவன் மேகத்தில் மறைவது தக்கதோ? என்று சொல்லுகிறபடி.

மாமதீ— நினைத்த கார்யத்துக்குத் தக்கபடியான செயலைச் செய்ய, அறிவு அயலார் யாரிடத்தேனும் தேடி வாங்க வேண்டியிருக்கிறதோ உன்றனக்கு; நீ மிகவும் அறிவுபடைத்தவனன்றோ என்றபடி.

மகிழ்ந்தோடிவா— விளையாட்டிலுள்ள உகப்பு முகத்தே தோன்ற விரைந்தோடி வருவாய் என்கிறது.

இங்கு, அஞ்சன வண்ணனோடு விளையாட விரும்பினால், மஞ்சில் மறையாதே, என்னுமதில், நீ மறைந்து விளையாட மேகந்தான் வேண்டியிருந்ததோ? அங்கு செய்யும் விளையாட்டை இவனின் நிழலில் ஒதுங்கிச்செய்ய வமையாதோ ? இவனுடன் விளையாட விரும்பினபிறகு இவன் நிழலைக்காட்டிலும், மேகத்தில் மறைவது ஒரு பொருளாகத் தோன்றுமோவுன்றனக்கு; எனவும் ஒரு விநோதமாகப் பொருள்கொள்ளலாம்.

குறிப்பு:— இப்பாட்டில் அமைந்துள்ள பதங்களில் வெளிப்படையாகக் காணும் பொருள்கள் இப்படியிருந்தாலும், இதிலுள்ள ஒவ்வொரு பதங்களையும் சிறிது ஆராய்ந்தால், எந்தப்பதம் எவர் பேச்சாக விருந்தாலும், பதங்களின் ஸ்வாரஸ்யத்தால் பரமபோக்யமான பல உள்ளுறை பொருள்களையும் ஊஹித்துணர்ந்துகக்கலாமெனத் தோன்றுகிறது. பொதுவாக மாமதீ என்று விளித்து சந்திரனை விளையாடவழைக்கும் அநுபவமான இத்திருமொழியே, "க்ஷணேபிதேயத்விரஹோதிதுஸ்ஸஹ:" (எவர்களுடைய பிரிவானது எட்டுணைப் பொழுதுகூடப் பொறுக்க முடியாததோ) என்கிறபடியுள்ள மஹாத்மாக்களான ஞானிகளைத் தன்னுடன் சேர்ந்தநுபவிக்கக் கூப்பிடுகிற பாவனையைக் குறிப்பிடுகிறது. மற்றும், தன்னிடம் பக்தியுள்ளவர்களுக்குத் தானும் குழந்தைபோல் அநுபவிக்க போக்யபூதனும், அவர்கள்

வேண்டாதேயிருக்க, அவர்கட்குத்தக்க அனைத்துபகாரங்களையும் அவன், தன் பேறாகவே, செய்து போருகிறானென்றும், அம்ருத சப்தத்தால் சொல்லப்படுகிற தான், தன் அநுபவத்தை அரைக் கணமும் அகலாதேயிருக்கும் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைத் தந் தருளுகிறானென்றும், அவனால் வரித்து அழைக்கப்படுமவன் எவனோ, அவனால் தான், அப்பரமபுருஷன் அடையத்தக்கவ னென்றும், அப்படி அவனால் வரிக்கப்பட்டவன் அவனுடன் அனைத்து போகங்களையும் அவனைப்போலவே ஒற்றுமையாக வநுபவித்து விளையாடலாமென்றும், அவனுடன் சேர்ந்தநுப விக்கும் பெருமை வாய்ந்தவனுக்குப் பின்னை மாயையினால் மறைபடக் காரணமேயில்லையென்றும், அவன், தன்னிடம் வர ஒருவனுக்கு அருளப்பாடிட்டு விட்டானேயாகில், அவன் இங் கிருந்து புறப்படும் பொழுது முதற்கொண்டே பெருமகிழ்ச்சி யோடே புறப்பட்டுச் சென்று, பரிபூர்ண ப்ரஹ்மாநுபவம் பண்ணுவன் என்றும், இவ்வாறுள்ள அரும்பெரும் பொருள்க ளெல்லாம், அடைவே இப்பாட்டில் பதங்களில் அமர்ந்திருக்கும் அழகை யறிமின். இப்படியே, ஆழ்வார்களருளிச் செயல்களி லெல்லாம், பெரும்பாலும் ஆழ்ந்த பொருள்களளவிட முடியாத தானதால், அறிஜ்ஞர்களான அவன் மெய்யடியார்களின் அடி பணிந்து ஆதரவோடு சொல்லக்கேட்டு அகமகிழ ப்ராப்தம். (2)

சுற்று மொளிவட்டஞ் சூழ்ந்து சோதி பரந்தெங்கும்*
எத்தனை செய்யிலு மென் மகன் முகம் நேரொவ்வாய்*
வித்தகன் வேங்கட வாணனுன்னை விளிக்கின்ற*
கைத்தலம் நோவாமே அம்புலீ கடிதோடிவா* (3)

| | |
|---|---|
| அம்புலீ | சந்திரனே |
| ஒளி | ஒளியைக்கொண்ட |
| வட்டம் | மண்டலமானது |
| (எப்போதும்) | |
| சுற்றும் | நான்கு பக்கங்களிலும் |
| சூழ்ந்து | வியாபித்து நின்று |
| எங்கும் | எல்லாவிடத்திலும் |

| | |
|---|---|
| சோதிபரந்து | ஒளி நிரம்பியிருக்கும்படியாக |
| (இப்படி உன்னை) | |
| எத்தனை செய்யினும் | எவ்வளவு அழகுபண்ணிக்கொண்டாலும் |
| என்மகன் | என் குழந்தையான கண்ணபிரானின் |
| முகம் | திருமுக மண்டலத்துக்கு |
| நேர் ஒவ்வாய் | முழுவதும் ஒப்பானவனாக ஆகமாட்டாய் |
| வித்தகன் | குண சேஷ்டிதங்களால் ஆச்சர்யப்படத்தக்கவனாய் |
| வேங்கடம் வாணன் | திருவேங்கடமாமலையில் வாழுமவனான இவன் |
| உன்னை விளிக்கின்ற | உன்னை அழைக்கிற |
| கை தலம் | திருக்கையின் ப்ரதேசம் |
| நோவாமே | நோவு உண்டாகாதபடி |
| | வேகமாக |
| ஓடிவா | ஓடிவந்தருள்வாய் |

சந்திரனே, ஒளிமயமான உன் மண்டலமானது ஏற்றக் குறைவின்றி எப்போதும் நான்கு புறமும் வியாபித்து எங்கு பார்த்தாலும் ஒளி பரம்பி நிற்கும்படியாக உன்னை நீ எவ்வளவு அழகு பண்ணிக்கொண்டபோதிலும் என் குழந்தை முகத்துக்கு ஒத்தவனாக ஆகமாட்டாய்; தன் குணங்களாலும் செய்கைகளினாலும் அதிசயப்படத் தக்கவனும் வேங்கடமாமலையில் வாழுமவனுமான இவன் உன்னை யழைக்கிற கைத்தலம் நோவு உண்டாகாதே நீ உடனே ஓடி வரவேணும்.

சுற்றும் ஒளிவட்டம்.......... நேரொவ்வாய்— சந்திரனுக்கு உள்ள பதினாறு கலைகளில், க்ருஷ்ண பக்ஷம் ப்ரதமை முதல் பதினைந்து தினங்களில், நாள் தோறும் ஒவ்வொரு கலையாக அக்நி, சூரியன், முதலான தேவர்களால், பானம் பண்ணப் பட்டு, அமாவில் ஒரே கலையுடன் தோற்றி, பிறகு சுக்லபக்ஷம் ப்ரதமை முதலாக மறுபடியும் பதினைந்து தினங்களில் முன்

குறைந்த வண்ணமே கூடப்பெற்று, பூர்ணிமையன்று, பதினாறு கலையை யுடைய பூர்ண சந்திரனைத் தோற்றி நிற்கிறனென்பது இயல்பு. இப்படி ஏறுவது இறங்குவது என்கிற தன்மை நிற்க, எப்பொழுது பார்த்தாலும் களங்கமு மொன்றுண்டு. ஆகவே தான், அவனைப்பார்த்து, நீ எப்படியுன்னை யழகு பண்ணிக் கொண்டாலும் என் கண்ணன் திருமுகத்துக்கு ஒப்பாகமாட்டாய் என்று இங்கு ஓங்கிப் பேசப்படுகிறது. "திருவாய் மொழி" (7—7—8)ல், எம்பெருமானின் திரு முக மண்டலப் பிரஸ்தாவம் நடக்கிற பாட்டிற்குப் பொருளிட்ட தூப்புற் புனிதன், "அமலமுக சசிநா" என்று அழகாகப் பேசினதும், இவ்விடத்து அநுபவத்துக்குத் தக்கபடி தோற்றுவ தொன்றேயாகும்.

வித்தகன்— ஏதோ சிறிது ஒளியைக்காட்டி உலகை ஏதோ சிறிது உகப்பிக்கின்றாய் நீ; இவனோதன்னுடைய திருக்கல்யாண குணங்களினாலும் திவ்ய சேஷ்டிதங்களாலும், அனைத்துலகையும் அகமகிழச் செய்யுமவன் என்றபடி.

வேங்கடவாணன்— "கண்ணாவானென்னும் மண்ணோர் விண்ணோர்க்கு" என்கிறபடி, உபய விபூதியிலுள்ளாருக்கும் ரக்ஷகனாய், அது கொண்டு, "விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வெற்பு" என்கிறபடி, அவர்கள் தாங்களும் விருப்பமுடன் மேவும் வேங்கட மாமலையில், எல்லாரையும் நன்றாக வாழ்வித்துக் கொண்டு, தானும் நல்வாழ்வு வாழுமவன். இதனால், அனைவரில் அடங்காதவனே நீ; பின்னும், "மதிதவழ் குடுமி என்கிறப் போலே நீ புறப்பட்டால், பொழுது போக்கும் தலங்கள் திருமலைகளல்லவா? அதுவும் நிற்க, இங்கு வாழுமவன், "திரு வேங்கடம் மேய விளக்கே" என்கிறபடி, நந்தா விளக்காமவனை தாலும், நீ இவனிடம் வந்தே ஒளிபெற்று உலகிற்கு உதவவேண்டு மவனன்றோ?என்றும் உட்கருத்துடன் உரைத்தபடி என்னலாம்.

உன்னை விளிக்கின்ற— நீ தானாக வரவேண்டியது நிற்க, உன்னை விரும்பி யழைக்கும்படி உன் பாக்கிய மிருந்தபடிதான் என்? என்றபடி.

கைத்தலம் நோவாமே— "அங்கைகளும் பங்கயமே" என்கிறபடி, மிகவும் ஸுகுமாரமான திருக் கையை யுடையவன் அவன்; அப்படிப் பட்டவன் உன்னை அக்கை கொண்டு கூப்பிட்டால் நோவுபடாதோ? ஆகவே அதற்கு இடங்கொடுக்காதே என்றபடி.

அம்புலீ கடிதோடிவா— சந்திரனே, நீ சடக்கென வருவாய் என்கிறது. (3)

சக்கரக் கையன் தடங் கண்ணால் மலர விழித்து*
ஒக்கலை மேலிருந்துன்னையே சுட்டிக் காட்டுங் காண்*
தக்கதறிதியேல் சந்திரா சலஞ் செய்யாதே*
மக்கட் பெறாத மலடனல்லையேல் வாகண்டாய்* (4)

| | |
|---|---|
| சந்திரா | சந்திரனே |
| சக்கரம் | திருவாழியை |
| கையன் | திருக் கையிலேந்திய கண்ணபிரான் |
| தடம் | விசாலமான |
| கண்ணால் | திருக்கண்களால் |
| மலர | நன்றாய்த் திறந்து |
| விழித்து | முழு நோக்காக நோக்கி |
| ஒக்கலைமேல் | இடுப்பின் மேல் |
| இருந்து | உட்கார்ந்துகொண்டு |
| உன்னையே | (வேறொன்றில் நோக்குவைக்காமல்) உன்றன்னையே |
| சுட்டி | குறிப்பிட்டு |
| காட்டும் | காண்பியா நிற்கும் |
| தக்கது | அதன்மேல் செய்யத்தக்கது இன்னதென்பதை |
| அறிதியேல் | நீ, உணர்ந்திருப்பாயாகில் |
| சலம் | கபடமான கார்யத்தை |
| செய்யாதே | பண்ணாதே. |
| மக்கள் பெறாத | பிள்ளை குட்டிகளைப் பெறாத |

| | |
|---|---|
| மலடன் | மலடனாக |
| அல்லையேல் | இல்லாதிருந்தாயே யாகில் |
| வா கண்டாய் | வந்து எதிரே நிற்கவேணும். |

சந்திரனே, திருவாழியைக் கையிலேந்தியிருக்கிற கண்ணன், பரந்த தன் திருக் கண்களால் அலரவிழித்து, என் இடுப்பின் மேலிருந்துகொண்டு உன்றன்னையே குறிப்பிட்டுக்காட்டி நிற்கின்றான்; ஆகவே இனிச் செய்யவேண்டியது இன்னதென அறிவாயே யாகில் வஞ்சனை பண்ணாதே; பிள்ளை பெறாதவனன்றாகில் வந்து நின்றருள்வாயாக.

சக்கரக் கையன்— "அங்கைத் தலத்திடையாழி கொண்டான்" என்கிறபடி, மிகவும் ஸுகுமாரமாய் அழகான திருக் கைகளை யுடையவனேயாகிலும், ஆச்ரிதர்களை ரக்ஷிக்கவேண்டி "ஆழி" யொன்றையும், "கைகலந்த வாழியான்" என்றும், "எப்போதும் கைகழலா நேமியான்" என்றும், ஓதிப் போருகிற படியே விடாது ஏந்தி நிற்குமவன் என்கிறது.

தடங்கண்ணால் மலரவிழித்து— "விசாலாக்ஷ:" என்றும், "எம்பிரானை தடங்கண்களே" என்றும், "நீண்டவப் பெரிய வாய கண்கள்" என்றும், பெருமை பேசப்படுகிற திருக்கண்களால், "பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேல் ஒருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம்" என்று கொண்டாடும்படியன்றோ முழு நோக்காய் நோக்குகிறான் என்றபடி.

ஒக்கலை மேலிருந்துன்னையே சுட்டிக்காட்டுங்காண்— தான் வீற்றிருப்பதோ, தாயின் மடியேலே; சுட்டிக்காட்டுவதோ வானின்மேலுன்றனையே; ஆகவே அன்னை மடிமீதிருந்தும் உன்னையே உன்னித்து நோக்கிக் காட்டுகின்றானென்றால் உன் பாக்கியத்தினளவு ஒருவரால் பேசப்போமோ என்றபடி.

தக்கதறிதியேல்— கையு மாழியுமாகக் காத்திருக்கிறானென்பதறிந்து, இனிச் செய்யத்தக்கவற்றை நீயே அறியாயோ? அறிந்திருந்தாயாகில் அதற்குத்தக்கபடி செய்கையன்றோ அழகு.

“ஆழியும் சங்கும் சுமர்ப்பார் தாம்” என்கிறபடி இருக்கும் இக் கோலத்திலே நீ நைந்துருகவேண்டிய படிகள் பலபல உண்டே? அதெல்லாம் கிடக்க, இங்கே வருகையை இசைவதும் மிகையா யிற்றே உன்றனக்கு என்றபடி. மேலொரு பாட்டிலே, “ஆழி கொண்டுன்னை எறியும்” என்று நேரே பேசப்போவதால், இங்கு அதனை வெளிப்படையாகக் காட்டாமல் உள்ளே கருத்தை ஊன்றவைத்து உரைக்கிறபடி.

சந்திரா— எவருக்கும் ஸந்தோஷத்தைச் செய்குமவன் என்கிற ஒரு தாதுவின் பொருள் பொதிந்து நிற்கும் பதத்தை யிட்டும் உன்னைப் பேசுகை, பொருத்தமுற்றதாயமையுமாறறிந்து நடந்துகொள் என்கிறது.

சலம் செய்யாதே— உன் கபடமான கார்யத்தை யெல்லாம் இங்கு காட்டவேண்டா, என்கிறது.

மக்கட் பெறாத மலடனல்லையேல் வாகண்டாய்— சந்திரா என்று இயற்கையான தன்மையை முன்னே பேசி, இதனால் செயற்கையான ஒரு தன்மையைப் பின்னே பேசி நிற்கிறது. பிள்ளைகளைப் பெற்று அவைகளின் ஸுக துக்கங்களில் ஈடுபட்டிருக்குமவர்கள் உடனே வருகையன்றோ அழகு. ஆகவே அவ்வினத்தாரிலகப்பட்டாயே யாகில் நீயும் உடனே வந்து நிற்கவேணும். என்றுரைக்கிறபடி. (4)

அழகிய வாயிலமுதவூறல் தெளிவுறா*
மழலை முற்றாத விளஞ்சொல்லாலுன்னைக் கூவுகின்றான்*
குழகன் சிரீதரன் கூவக்கூவ நீ போதியேல்*
புழையில வாகாதே நின் செவி புகர்மாமதீ* (5)

| | |
|---|---|
| புகர் | ஒளியையும் |
| மா | (மற்றும்) பெருமையையும் கொண்ட |
| மதீ | சந்திரனே |
| அழகிய | அழகையுடைத்தான |

| | |
|---|---|
| வாயில் | திருவாயில் |
| ஊறல் | ஊறுகின்ற ஜலமான |
| அமுதம் | அம்ருதத்தோடு சேர்ந்து |
| தெளிவு உறா | தெளிவை அடையாத தாயும் |
| மழலை | மழலைச் சொல்லாகப் பேசும் தன்மையும் |
| முற்றாத | முற்றாததாகவு மிருக்கிற |
| இள | மிகவும் இளமை தங்கின |
| சொல்லால் | வார்த்தையினால் |
| உன்னை கூவுகின்றான் | உன்னை அழையா நிற்கின்றான் |
| குழகன் | எவருடனும் கலந்து நிற்கும் தன்மையனையும் |
| சிரீதரன் | இலக்குமியைத் திருமார்வில் தரித்துக் கொண்டிருக்குமவனை இவன் |
| கூவ கூவ | கூப்பிடக் கூப்பிட |
| நீ போதியேல் | காதுகேளாதவன்போல் நீபோவாயே யாகில் |
| நின் செவி | உன்னுடைய காது |
| புழை இல | துளையை உடைத்தாகாததாக |
| ஆகாதே | ஆகிவிடாதோ. |

ஒளியையும் பெருமையையுங் கொண்ட சந்திரனே, அழகான திருப்பவளத்தில் ஊறுகிற அமுதத்துடன் கலந்து தெளியாததாய் மழலைத் தன்மையும் முதிராததான இளமையான பேச்சினால் உன்னைக் கூப்பிடுகிறான். எல்லோருடனும் கலந்து பழகும் தன்மையனாய், திருவைத் திருமார்பில் தரித்து விளங்குமவனை இவன் கூப்பிட்டுக்கொண்டிருக்க நீ போனாயே யாகில் உன்னுடைய காது துளையில்லாததாக ஆகிவிடாதோ?

அழகிய வாயில்— "செந்துவர் வாய்" என்றும், "செம்பவளத் திரள்வாயன்" என்றும், "செங்கனி வாயொன்றினோடும்" என்றும், "செம்பவளவாயான்" என்றும், இவ்வண்ணம் மிகப் பெருமையுடன் எவரும் ஏத்தி நிற்கிற திருவாயின் அழகை அளவிட்டுச் சொல்லமுடியாதே பொதுவாகச் சொன்னபடி.

அமுத ஊறல் தெளிவுறு— "ஆராவமுத மனையான்றனமுத வாயிலூறிய நீர்" என்கிறபடியே, அத்திருவாயில் அமுதமாய நீர் பெரூற்றாக ஊறிப்பெருகா நிற்கிறது; இப்பெருமை, மேல் திருமொழியிலும், "நின்கனி வாயமுதமிற்று முறிந்து விழ" என்று அநுபவிக்கப்படப் போகிறது. அத்தன்மையில் பேச வாரம்பிக்க, அவ்வமுத ஊறல் தெளியாத நிலைமையிலிருக்கிற தென்கிறது.

மழலைமுற்றாத விளஞ்சொல்லால்— மழலைச்சொல், என்றால், சொல்லும் சொல் இன்னதெனத் தெளிவாய் அறிந்துகொள்ள முடியாதபடியும், கேட்பார் செவிகட்கு இன்பமூட்டுவதாயும் விளங்கும் வார்த்தை. இச்சொல்லின் சுவையறிந்தோர், தம் குழந்தைகளின் மழலைச்சொல் எதுவரையில் செவிப்படவில்லை யோ, அதுவரையில்த்தான், குழலினுடையவும், வீணையினுடை யவும், ஒலியின் சுவை உயர்ந்ததென்றிருப்பர்கள் என்றார். ஆகவே, அப்படிப்பட்ட மழலைச்சொல்; அதிலும் முற்றாத மழலைச் சொல், அது தன்னிலும் முற்றாத இளம் மழலைச் சொல்; இவ்வண்ணம் பெருமைபடைத்த பேச்சாய் விளங்குகிறபடி.

உன்னைக் கூவுகின்றான்— அம்ம, அப்ப, என்று எங்களைக் கூவி யழைக்கவேண்டிய காலத்தே உன்னைக் கூப்பிடுகின்றான்; உனது பாக்கியமே பாக்கியம்; என்கிறது.

குழகன்— கூப்பிடுகிறது உண்மைதான்; வந்தால் நம்மொடு பொருந்திப் பேசுவனோவென நினைக்கவேண்டாம்: தன்னைப் பேணுவார் எவரேனும், அவர் தம்மொடெல்லாம் அவர்கள் நினைத்தபடியே அநுபவங்கொடுத்து, தன்னை அவர்கட்காக்கி வைக்கும் தன்மையுடையவன் என்றபடி.

சிரீதரன்— அவனின் நீர்மைகண்டு இவன்தானோ வென இருக்கவேண்டாம்; "ச்ரிய:பதி" என்னப்படுகிற அவனே இவன். ஆகவே அவனின் மேன்மையையும் கண்டு மேவி வாழ்வாய் என உரைக்கிறது.

கூவக் கூவ நீ போதியேல்— ஒரு மேன்மை தங்கியவன் உன்னுடன் தாழ்ந்து கலந்து பரிமாற நினைப்பிட்டுக் கூப்பிட்டால் வாராதே போவதுதான் தக்கதோ? அப்படிப் போனாயாகில் என்கிறது.

புழையில வாகாதே நின்செவி— எல்லாருடனும் இனிது கலக்கிற உன்னை, அப்படிப்பட்டவன் கூப்பிடுகிறான்; வாரா தொழிந்தால் உன் காதில், கேழ்க்கும்கருவியான துளை இல்லையென்று சொல்லத் தட்டுண்டோ? என்கிறபடி.

புகர்மாமதீ— உனது தேஜஸ்ஸுக்கும் மற்றும் பெருமைக்கும், இதுதான் தக்கதோ? உன் ஒளி கண்டுகொண்டே உரைக்கத் தக்கதாயிருக்க, இவ்வாறு செய்வதுதான் அழகோ? என்றபடி.

குறிப்பு:— சிரீதரன் கூவ நீ வாராது போவது தக்கதோ, எனப் பேசுவதில் ஓர் இனிமையறிமின். நீயும், இலக்குமியும் பாற்கடலில் பிறந்த பிறப்பால், ஸஹோதரர்களல்லவா? உன் ஸஹோதரியை அவன் வைத்துக்கொண்டு வாழ்விக்க வேண்டாவோ? உனக்கு மாப்பிளையென்றால், அவன் மைத்துனனான நீ, அவன் கூப்பிட மதியாதுபோவது தகுதியோ? உலக நடத்தை அறியாயோ? மதி மதி என்றே எவரும் உன் செவிப்பட உன்னைச் சொல்லினும் இவனை மதியாதே போவதுதான் மிகுதி போலும்; என்றெல்லாம் ஒருபடி விநோதமாய் இங்கு அநுபவிக்கலாமெனத் தோன்றுகிறது. (5)

தண்டொடு சக்கரஞ் சார்ங்கமேந்துந் தடக்கையன்*
கண்டுயில் கொள்ளக் கருதிக் கொட்டாவி கொள்கின்றான்*
உண்ட முலைப்பாலறா கண்டாயுறங்காவிடில்*
விண்டனில் மன்னிய மாமதீ மகிழ்ந்தோடிவா* (6)

விண்தனில் — ஆகாயத்தில்
மன்னிய — நிலையாய் வசிக்கிற

| | |
|---|---|
| மாமதி | பெருமை பொருந்தின சந்திரனே |
| தண்டொடு | கதையுடன் கூட |
| சக்கரம் | திருவாழியையும் |
| சார்ங்கம் | சார்ங்கமென்கிற வில்லையும் |
| ஏந்தும் | தரித்துக்கொண்டிருக்கும் |
| தட | விசாலமான |
| கையன் | திருக்கைகளை உடையவனான இவன் |
| கண் | திருக்கண்கள் |
| துயில் | நித்திரையை |
| கொள்ள | அடைய |
| கருதி | நினைப்பிட்டு |
| கொட்டாவி | (அதற்கு அறிகுறியான) கொட்டாவியை |
| கொள்கின்றான் | விடுகின்றான் |
| உறங்காவிடில் | (இப்பொழுது இவன்) கண் வளராதொழியில் |
| உண்ட | அமுது செய்த |
| முலைப்பால் | ஸ்தந்யமானது |
| அறா | ஜீர்ணமாகாது |
| (ஆகவே) | |
| விரைந்து ஓடிவா | மிகவும் வேகமாக ஓடிவந்து சேரவேணும் |

ஆகாயத்தில் நிலையாக நிற்கும் பெருமைவாய்ந்த சந்திரனே, கதை, திருவாழி, சார்ங்கவில், இவைகளை ஏந்தத்தக்க விசாலமான திருக்கைகளையுடைய இவன் நித்திரைபோக வெண்ணி கொட்டாவி விடுகின்றான்; நித்திரை போகாவிட்டாலோ இவனுண்ட முலைப்பால் ஜீர்ணமாகாது; ஆகவே நீ, வேகமாக ஓடிவரவேணும்.

தண்டொடு சக்கரம் சாங்கமேந்துந் தடக்கையன்—கௌமோதகி என்னும் கதையையும், ஸுதர்சனமென்கிறசக்கரத்தையும், சார்ங்கம் என்கிற வில்லையும், விளையாட்டாகப் புஷ்பத்

தை ஏந்துமாப்போலே எப்போதும் ஏந்தி நிற்கிற விசாலமான திருக்கைகளை யுடைத்தாயிருக்கிறபடியை இனிதுரைக்கிறது. இம் மூன்று திவ்யாயுதங்களையுடையவன் என்று சொன்னது கொண்டே, மற்றும், சங்கு, வாள், என்கிற ஆயுதங்களையும் கொண்டவன் எனக் கூறினபடியாம். இங்கும், இதனை, "சக்கரக் கையன்" என்னுமிடத்திற்போல, நீ வந்து வந்தித்து வாயார வாழ்த்தி வாழ்ந்துபோ; அன்றேல், ஒன்றுக்கு மூன்றாய் உன்னை முடிக்கும் கருவிகள் கையில் வைத்திருக்கிறான்; உன்னை முடித்தேவிடுவன்; என்கிற முக்கியமான கருத்தொன்றை உள்ளே அடக்கிக்கொண்டு விளங்கும் அடைமொழியென அறிக. இதுவே போன்று ப்ரயோகமுள்ள விடம் பல பல உண்டு; இதனை "ஹேது கர்ப விசேடணம்" என்பர் வடநூலார்.

கண்டுயில் கோள்ளக் கருதி கொட்டாவி கோள்கின்றான்— கொட்டாவி கிளம்பிற்றென்னில் நித்திரைக்கு ஆரம்பமென்று கொள்ளவேண்டுமானதாலே, கண்ணன் கொட்டாவி விட, அது கண்ட யசோதை குழந்தைக்கு நித்திரைவரப்போகிறது; கொட்டாவி விடுகின்றான் எனக் கூறுகிறபடி.

உண்ட முலைப்பாலறா கண்டாயுறங்காவிடில்— குழந்தை நித்திரை போகாவிட்டால் என்ன? நான் வருமளவும் விழித்திருக்கலாகாதோ? என்னில், ஐயோ, குழந்தை முலையுண்டு எத்தனை பொழுதாயிற்று; இன்னமும் உறங்காதிருக்கைதான் உசிதமோ? உறங்காவிட்டால் உண்ட பால்தான் ஜீர்ணமாகுமோ? ஆகாதே; என்று அளவற்ற அன்பினால் வயிறுபிடித்துப் பேசுகிறபடி.

விண்டனில் மன்னிய மாமதீ மகிழ்ந்தோடிவா— ஆகில் செய்யவேண்டுவதென் என்னில், விண்ணில் வீற்றிருந்தபடியே விரைந்தோடிவரவேணும்; இத்தனை விவேகிப்பதற்கும் உனக்கு அறிவு போராதோ? என்கிறபடி. (6)

பாலகனென்று பரிபவஞ்செய்யேல் ⁎ பண்டொருநாள்
ஆலினிலை வளர்ந்த சிறுக் கனவனிவன்
மேலெழப் பாய்ந்து பிடித்துக்கொள்ளும் வெகுளுமேல்*
மாலை மதியாதே மாமதீ மகிழ்ந்தோடிவா ⁎ (7)

| | |
|---|---|
| மா | பெருமை தங்கிய |
| மதீ | சந்திரனே |
| பாலகன் என்று | இவன் ஒரு சிறு குழந்தை என்று நினைத்து |
| பரிபவம் | அவமதிப்பை |
| செய்யேல் | பண்ணாதே |
| பண்டு | முன்பு |
| ஒரு நாள் | ஒரு காலவிசேஷத்தில் |
| ஆலின் | ஆலமரத்தின் |
| இலை | இளந்தளிரில் |
| வளர்ந்த | திருக்கண் வளர்த்தியைக் கொண்ட |
| சிறுக் கன் அவன் | அச்சிறுவனான அவன் தான் |
| இவன் | இந்தக் கண்ணபிரான் |
| வெகுளும் ஏல் | கோபம் கொள்வானேயாகில் |
| மேல் எழப் பாய்ந்து | உன்மேல் கிளம்பி பாய்ந்து |
| பிடித்துக்கொள்ளும் | உன்னை ஒரே பிடியாகப் பிடித்துக் கொண்டு விடுவன் |
| மாலை | அடியாரிடம் அளவில்லா அன்பு கொண்ட இவனை |
| மதியாதே | அலக்ஷ்யம் பண்ணாமல் |
| மகிழ்ந்து | பெருமகிழ்ச்சியோடு |
| ஓடி வா | ஓடி வந்தருள் |

பெருமையனான சந்திரனே, இவனை சிறு குழந்தையென வெண்ணி அவமதியாதே. முன்னொரு காலத்தில் ஆலினிளந்தளிரில் கண்வளர்ந்த அவனே இவனென்றறிவாய். இவன் கோபங் கொள்வானேயாகில் ஒரே பாய்ச்சலாக உயரப்பாய்ந்து உன்னைப் பிடித்துக்கொண்டு விடுவன்; அடியாரிடம் அளவற்ற அன்புடன் வாழும் இவனை இவ்வளவுதான் இவன்படியென்று ஓரளவிட்டு அலக்ஷ்யமாயிராமல் பேருவகையுடன் ஓடி வந்தருள்வாயாக.

பாலகனென்று பரிபவம் செய்யேல்:— வடிவில் குழந்தை யாகக் காண்கிறானென்றுகொண்டு இவன் திறத்து, ஓர் அவ மதிப்பைப் பண்ணாதே என்கிறது.

பண்டோருநாள் ஆலினிலை வளர்ந்த சிறுக்கனவனிவன்: — ஏனெனில், முன்னொரு ப்ரளயகாலத்தில், பிரமன் சிவன், இந்திரன் முதலாக அனைத்துலகிலுள்ளாரையும் கடலரையன் விழுங்கிப் போகாமே, அனைத்துலகும் உய்யத் தான் விழுங்கித் தன் திருவயிற்றில் ஒன்றோடொன்று நெருங்கி வருத்தப்படாமே விசாலமாக வாழும்படி வைத்து, அப்பொழுதுதான் முகிழ் என்கிற பெயர் மாறி, சிறிய இலை, என அறிய ஆரம்பிக்கத் தக்க ஆலின் இளந்தளிரில் கண்வளர்ந்த அம்மிடுக்கையுடைய ஸர்வஜகந்நாதனான அவனே இவன், என்றறிந்திடுவாய்; என்கிறது.

மேலெழப் பாய்ந்து பிடித்துக்கொள்ளும் வெகுளுமேல்:— ஆறெலென்னவெனில், "வ்யஸநேஷு மநுஷ்யாணும் ப்ருசம்பவதி துக்கித:" (மனிதரென்று சொல்லப்படுகிறவர்களின் கஷ்டங்களிலெல்லாம் தான் மிகவும் துயருற்றவனாகவே இருக்கிறான்) என்றும், "க்ஷமயாப்ருதிவீஸம:" (பொறுமையில் பூமிக்கு ஒப்பானவன்) என்றும் பேசப்பட்டாலும், தனதாணை கோணக் காணில், "காலாக்நி ஸத்ருச: க்ரோதே" (கோபத்தைக்கொள்ளும் போது ப்ரளயகாலத்தில் உலகை எறிக்கும் அழலையொக்குமவன்) என்கிறபடியே பெரிய சீற்றத்தோடே மேலே பாய்ந்து உன்னை விடாது ஒரே பிடியாய் பிடித்துக்கொண்டு விடுவன் என்றபடி.

மாலை மதியாதே— அவன், அடியார்களிடம் அளவுகடந்த அன்பு பூண்டு வாழுமவன்; அவனை எவ்வளவைத்திலும் இவ்வளவுதான் இவன்படியென்று ஓரளவிட்டு மெள்ளப் போகிறோமென்று அலக்ஷ்யமாய் இருந்துவிடாதே என்கிறபடி.

மாமதீ மகிழ்ந்தோடிவா— இவ்வளவெல்லாம் அறிந்து எத்தும்படி பேரறிவு வாய்ந்திருக்குமவனே, அறிந்தபடிக்கேற்ப அகமகிழ்ந்து இவன் நம்மை அழைக்கும்படியான ஒருபாக்யமும் பெற்றோமே, ஆகவே சடக்கெனக் கிட்டப்பெறவேணுமென, அவனருகில் விரைந்தோடி வந்தருள்வாய் என்கிறது. (7)

சிறியனென் றென்னிளஞ் சிங்கத்தை யிகழேற் கண்டாய்*
சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச் சென்றுகேள்*
சிறுமைப் பிழைகொள்ளில் நீயுமுன் தேவைக்குரியைகாண்*
நிறைமதீ நெடுமால் விரைந்துன்னைக் கூவுகின்றான்* (8)

| | |
|---|---|
| நிறை | பரிபூர்ணனான |
| மதீ | சந்திரனே |
| என் | என்னுடைய |
| இள | இளமை தங்கிய |
| சிங்கத்தை | சிங்கக்குட்டிபோன்ற கண்ணனை |
| சிறியன் | இவன் ஒரு சிறிய குழந்தையே |
| என்று | என நினைத்து |
| இகழேல் | அவமானம் பண்ணாதே |
| சிறுமையில் | இளம்பிராயத்தில் நடந்தேறின |
| வார்த்தையை | செய்கையின் விசேஷத்தை |
| மாவலி இடை | மஹாபலி பக்கலில் |
| சென்று | புறப்பட்டுப் போய் |
| கேள் | கேட்டுத் தெரிந்துகொள். |
| சிறுமை பிழை | மிகப்பெரியனான பெருமானிடம் சிறுமையை நினைத்தவிது தவறுதல்தான் என்று |
| கொள்ளில் | அபராதக்ஷாபணம் பண்ணிக்கொள்ளக் கருதினையே யாகில் |
| நீயும் | அவனால், ஒரு அதிகாரத்தில் முன்னே நிறுத்தப்பட்ட நீயும் |
| உன் தேவைக்கு | அவன் உனக்கிட்டுவைத்திருக்கிற அடிமைத்தனத்தை ஆளுகைக்கு |
| உரியை | தக்கவனாக ஆகுவாய் |
| நெடுமால் | மிகப் பெருமைவாய்ந்த அவன் |
| விரைந்து | வேகமாக வரும்படி |
| உன்னை | உன்னை |
| கூவுகின்றான் | அழைக்கின்றான் |

மகிழ்ந்தோடிவா.

பூர்ணசந்திரனே, என் இளஞ்சிங்கத்தை சிறு குழந்தை யெனக் கருதி அலக்ஷ்யம் பண்ணாதே; இளம் பருவத்தில் நடந்த கார்யத்தை மஹாபலி பக்கல் சென்று கேட்டுக்கொள்; நாம், பெரியவனை சிறியவனாய் நினைத்தது குற்றமேயென்று கொண்டு இக்குற்றம் பொறுக்கவேணுமென வேண்டிக்கொண்டால், உனக்கு ஏற்பட்ட கைங்கர்யம் நிலைத்து நிற்கும்; மிகப்பெருமை வாய்ந்தவன் வேகமாக வரும்படி உன்னை அழைக்கின்றான்; ஆகவே நீ உகந்தோடிவரவேணும்.

சிறியனென்றென்னிளஞ் சிங்கத்தை யிகழேல் கண்டாய்— வடிவில் சிறியனாயிருக்கிறானிவன், இவனொரு சிறிய குழந்தை தானே, என்று, என் சிங்கக்குட்டியை இகழ்ச்சிசெய்யாதே என்கிறது. சிங்கம் குட்டியே யாகிலும் வீர்யத்தில் வந்தால் மதயானையும் மயங்கித்தானே நிற்கவேண்டும்; ஒரு முயலை முக்கிய அடையாளமாகக் கொண்டிருக்கிற நீ, இவனை இகழ முயலுவதும் ஓரியல்பாமோ? மேலும் பெற்ற தாய்மார்கட்கு சிறுவனேயன்றி, உன்போன்ற தேவசாதிக்கெல்லாம் அவன் சிங்கமேகாண்; என்றும், ஒருவாறு உணர்த்தியபடியாம். பெற்ற தாய்க்குச் சிறுவன் என்பதும், தேவர்கட்குச் சிங்கமே யென்பதும், மேலே, "தேவகி சிறுவன் தேவர்கள் சிங்கம்" (3—6—6) எனக் கூறப்போகுமிடத்தே குறிக்கொள்க. இங்கு, அசோதை தன் வார்த்தையாக "என்னிளஞ்சிங்கம்" என ஸூக்தி வெளிவந்ததை நினைந்தே, ஆண்டாளும் திருப்பாவை முதற் பாட்டிலேயே, "அசோதை யிளஞ்சிங்கம்" என மிக்க அழகுடன் அநுபவங்கொண்டாள் என்னலாம் போலும்.

சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச்சென்று கேள்— அவன் சிறுமைக்கு எவ்வளவு பெருமையுண்டென்பதை அவன் சிறியவனாயிருந்த ஓரவதாரத்தில் கண்டுகொண்ட மஹாபலியிடம் சென்று கேட்டுக்கொள் என்கிறது. அக்காலத்தில், "ஒருகுறளா யிருநிலம் மூவடி மண்வேண்டி யுலகனைத்து மீரடியா லொடுக்கி, ஒன்றும் தருகவென மாவலியைச் சிறையில் வைத்த" அது உலகில் ப்ரஸித்தமானாலும் பட்டவன்பால் நேரில் சென்று அவன்

சொல்லக் கேட்கை மிக அழகியதென்று கொண்டு இவ்வாறு உரைத்தபடியென்க. உன்றன்னை முதலாக தேவசாதியெல்லாம் கைக்கொண்டு அடக்கியாண்ட அம்மஹாபலி பட்ட பாட்டை நினைந்தால், உன்படி, ஒரு பொருட்டாக மதிக்கவும் தக்கதோ! என்றும் சுட்டிக்காட்டியபடியாம்.

சிறுமைப்பிழைகோள்ளில் நீயுமுன் தேவைக்குறியைகாண்— ஆகில் செய்வதென், என்னில் "க்ருதாபராதஸ்யஹிதே நாந்யத் பச்யாம்யஹம் க்ஷமம் | அந்தரேணாஞ்ஜலிம்பத்வா லக்ஷ்மண ஸ்யப்ரஸாதநாத் | (ராமாபராதம் பண்ணியிருக்கிற உனக்கு, லக்ஷ்மணனுடைய அருகில் சென்று கை கூப்புதலைச் செய்து கொண்டு அவரை நல்ல வார்த்தை சொல்லிக் கேட்டுக்கொள்வதை விட்டு வேறு தக்க உபாயத்தைப் பார்க்கிறேனில்லை) என்கிறபடியைக் கேட்டு, "யதி கிஞ்சிததிக்ராந்தம் விச்வாஸாத் ப்ரணயேந வா | ப்ரேஷ்யஸ்ய க்ஷமிதவ்யம் மே நகச்சிந்நாபராத்யதி || (விச்வாஸத்தினாலோ ப்ரணயத்தினாலோ தவறுதல் கொஞ்சம் உண்டாயிருந்ததேயாகில், உனது வேலைக்காரனான என்னுடைய அக்குற்றத்தைப் பொறுத்துக்கொள்ளவேணும்; உலகில் இன்னான் ஒருவன் பிழை செய்கிறதில்லை, என்பதில்லையன்றோ) என்கிறபடியே, ஸுக்ரீவ மஹாராஜர் இலக்குமணனிடம் செய்து போந்த செயலைக் குறிக்கொண்டு, நீயும், நான் உன்னை சிறியவனாக நினைத்தது குற்றமேதான்; என்று அவனிடம் வந்து அடிபணிந்து பொறுத்துக் கொள்ளவேணுமென வேண்டிக்கொண்டால், அவனும் அப்பிழை பொறுத்து உன்னைக் குளிரக் கடாக்ஷிப்பன்; அப்போது நீயும், அவனிட்ட வேலையை விட்டு விலகாமே அமரலாம் என்கிறது.

நிறைமதீ— இந்த சாஸ்த்ரார்த்தம் நீ அறியாதிருக்கப் போமோ! அறிவினால் பூர்ணனன்றோ நீ என்கிறபடி.

நெடுமால்— நான் அப்படிச் செய்தால் தான் போருமோ அவன் நம்பிழை பொறுக்கும்படி அவனுக்கு நம்மிடம் அன்பு

பாராட்டக் காரணமல்லவோ என்னில், உன் ஒருவனிடம் மட்டிலோ அவன் வ்யாமோஹம்; உன்னையும் தாண்டி நெடுந்தூரம் சென்று அடியாரனைவரிடமும் அவனன்பு அணுகிநிற்குமதன்றோ? என்கிறது.

விரைந்துன்னைக் கூவுகின்றான்— அப்படிப்பட்ட ஸ்வாமி உன்னைக் கூப்பிடுகின்றான்; உன்னிடம் பிழையிருந்தும் உன்னைத் திருத்திப் பணிகொள்ள விரைவுடன் கூப்பிடுகின்றான்; ஆனதால் நீயும் அவன் நியமனத்தை சென்னிமேற் சூடி ஓடிவா, ஓடிவா, என்றுரைக்கிறபடி. (8)

தாழியில் வெண்ணெய் தடங்கையார விழுங்கிய*
பேழைவயிற்றெம்பிரான் கண்டாயுன்னைக் கூவுகின்றான்*
ஆழிகொண்டுன்னை யெறியும் ஐயுறவில்லைகாண்*
வாழவுறுதியேல் மாமதீ மகிழ்ந்தோடிவா* (9)

| | |
|---|---|
| மா | பெருமைபடைத்த |
| மதீ | சந்திரனே |
| தாழியில் | தடாக்களில் நிரப்பிவைத்துள்ள |
| வெண்ணெய் | வெண்ணெயை |
| தட | விசாலமான |
| கை | திருக்கையானது |
| ஆர | நிறையும்படியாக அள்ளி |
| விழுங்கிய | அமுதுசெய்த |
| பேழை | பெரியதான |
| வயிறு | வயிற்றையுடையவனான |
| எம்பிரான் | எனக்கு உபகாரகனான கண்ணன் |
| உன்னை | உன்னை |
| கூவுகின்றான் | கூப்பிடுகிறான் |

(அவன் இப்படிக் கூப்பிட, நீ, வாராதொழியில்)

| | |
|---|---|
| ஆழிகொண்டு | (உன்னைக் கொல்வதற்காக)த் திருவாழியைக் கையிலேந்திக்கொண்டு |
| உன்னை | உன்னைநோக்கி |

| | |
|---|---|
| எறியும் | வீசுவன் |
| ஐயுறவு இல்லை | இதில் யாதொரு ஸம்சயமும் கிடையாது |
| வாழ | (இவ்வபராதத்துக்கு ஆளாகாமே) பிழைத்துப்போக |
| உறுதியேல் | உறுதிகொண்டாயே யாகில் |
| மகிழ்ந்து | ஸந்தோஷமாக |
| ஓடிவா | ஓடிவரவேணும். |

பெருமைபடைத்த சந்திரனே, தடாக்கள் நிறைந்த வெண்ணெயை திருக்கையெல்லாம் நிறையும்படி அள்ளி அமுதுசெய்த பெருவயிற்றாளனாய், எனக்கு உபகாரகனான கண்ணன் உன்னைக் கூப்பிடுகிறான்; நீ வாராதொழியில் சக்கரங்கொண்டு உன்னை நோக்கி வீசுவன்; ஸந்தேஹமில்லை; பிழைத்துப்போக வேணுமென எண்ணினையே யாகில் பெருமகிழ்ச்சியோடு பெருநடையிட்டு வந்தருள்வாயாக.

தாழியில் வெண்ணெய்— "உறிமேலைத் தடாநிறைந்த" என்கிறபடியே, பெரிய பாத்திரத்திலேகாணும் இடைச்சேரியில் வெண்ணெய் சேமித்து வைப்பர்களாயிற்று; அதனைச் சொன்னபடி.

தடங்கையார விழுங்கிய— வெண்ணெயைக்கண்ட மகிழ்ச்சியாலே, திருவுலகளந்தருளப் பாரித்தபோது திருவடி அகன்றாப்போலே திருக்கையும் விசாலமாய்ப் போந்தபடி. எடுத்ததும் "காரார் தடந்தோள்களுள்ளவும் கை நீட்டி" என்றாப்போலே கை நிறைய அள்ளி விழுங்கவேண்டும் ஸாதனம் செய்து, அந்தக்கை வெண்ணெயினால் பரிபூர்ணமாக விளங்கும்படி பண்ணியருளினனாயிற்று. எடுத்ததும் கைநிறைய; உண்டதும் வயிறு நிறைய; இக்கோலத்தைக் கண்ட கோபிமார்கள், "வெள்ளிமலையிருந்தாலொத்த வெண்ணெயை வாரி விழுங்கியிட்டு, கள்வனுறங்குகின்றான் வந்துகாண்மின்கள் கையெல்லாம் நெய், வயிறு பிள்ளை பரமன்றிவ்வேழுலகுங் கொள்ளும்" எனப்பேசிப் போந்

தார்கள் எனக் கலியனும் (பெ. திரு. 10—7—3) அநுபவம் கொண்டாரன்றோ?

பேழை வயிற்றெம்பிரான் கண்டாயுன்னைக் கூவுகின்றான்— இப்படிப் பெரிய வயிற்றைப் படைத்த பெருமானாய் எனக்கு உபகாரகனாய் நிற்கிற கண்ணபிரானன்றோ உன்னைக் கூவுகிறதும் என்கிறாள்.

ஆழிகொண்டுன்னை யெறியும்— இருந்தாலென்ன, கூப்பிட்டால் வரவேணுமென்றொரு நிர்ப்பந்தமுண்டோ? என்னில், வாராதொழிந்தாயாகில், உன் தலையைப் பாராதொழிவாய்; அவனின் ஆஜ்ஞா சக்கிரத்துக்கு ஆட்படாதே மீறப்பார்த்தாலும், அவன் திருக்கைத் திருச்சக்கிரத்தால் தலையறுப்புண்கைக்கு உன்னால் மீறிப்போகமுடியாது. "ஆழிகொண்டன்றிரவிமறைப் பச் சயத்திரதன் தலையைப் பாழிலுருள" விடுமவன், இன்று, ஆழிகொண்டு இரவின் பதியான உன் தலையைப் பாழிலுருளப் பார்த்திடுவன். இதுவரையில் மறைபொருளாய்ப் பேசிவந்தபடியையெல்லாம் இப்பாட்டில் வெளியிட்டுப் பேசுகிறபடி.

ஐயுறவில்லைகாண்— இதிலொரு ஸம்சயம் உனக்கு வேண்டாம், தான் பெற்ற பிள்ளையேயாகிலும் தனதாணைகோணா நடக்கில் தலையையறுத்திடும் குலத்திலெல்லாம் அவன் பிறந்தவன்காணும்; அவனைப்பெற்ற வயிறுடைய என் வார்த்தையும் அப்படியே பொய்யாமொழியன்றோ? என்கிறபடி.

வாழவுறுதியேல்— அப்படிமாள்வதற்கின்றி, வாழ்வதற்கு விரும்பினையேயாகில், தக்கபடி செய்குவாய் என்கிறது.

மாமதீ— இதுதானும் உனக்கு அயலார் எடுத்துரைக்கும்படியாயிருந்ததோ! உன்மதியெல்லாம் உள் கலங்கி மயங்கிற்றோ?

மகிழ்ந்தோடிவா— உன் புத்திகொண்டு நன்மை தீமைகளைப் பகுத்தறிந்து, அது புலப்படுமாறு அப்பெருமகிழ்ச்சி பிடரிபிடித்துத் தள்ள ஓடி வந்தருள்வாய் என்று இனிது உரைக்கிறது. (9)

மைத்தடங் கண்ணியசோதை தன் மகனுக்கு* இவை
ஒத்தன சொல்லியுரைத்த மாற்றம்* ஒளிபுத்தூர்
வித்தகன் விட்டுசித்தன் விரித்த தமிழிவை*
எத்தனையுஞ் சொல்லவல்லவர்க்கிடரில்லையே (10)

| | |
|---|---|
| மை | மையினால் அலங்காரம் செய்யப்பெற்றதாய் |
| தட | விசாலமான |
| கண்ணி | கண்களையுடைய |
| அசோதை | யசோதை பிராட்டியானவள் |
| தன் மகனுக்கு | தன்னுடைய பிள்ளையான கண்ண பிரானுக்கு |
| ஒத்தன இவை | ஒத்திருக்குமதான இவைகளை |
| சொல்லி | பாவித்துப் பேசி |
| உரைத்த | (சந்திரனைக் குறிப்பிட்டுச் சொன்னதான |
| மாற்றம் | வார்த்தைகளை |
| ஒளி | தேஜஸ்ஸுமிக்கிருந்துள்ள |
| புத்தூர் | ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவவதாரம் செய்தருளினவராயும் |
| வித்தகன் | (மங்களாசாஸனம் பண்ணுமதில்) ஸாமர்த்யத்தை யுடையவராயுமிருக்கிற |
| விட்டுசித்தன் | பெரியாழ்வாராலே |
| விரித்த | விஸ்தாரமாக அருளிச் செய்யப்பட்ட |
| தமிழ் | தமிழ் பாஷையினாலாகிய |
| இவை | இப்பத்துப் பாட்டுக்களை |
| எத்தனையும் | ஏதேனுமொருபடியினாலாவது |
| சொல்ல | ஓதுவதற்கு |
| வல்லவர்க்கு | ஸாமர்த்தியமுடையவர்களுக்கு |
| இடர் | யாதொரு துக்கமும் |
| இல்லை | இல்லை |

மை தீட்டி அகன்ற கண்களையுடைய யசோதை தன் பிள்ளைக்குத் தக்கபடியானவைகளை பாவித்துப் பேசி, சந்திரனை

நோக்கிச்சொன்ன வார்த்தைகளை யடியொற்றி, ஒளிமிக்க ஸ்ரீவில்லிப்புத்தூரில் அவதரித்த மங்களாசாஸன ஸமர்த்தரான பெரியாழ்வார் விரிவுடனருளிய தமிழினாலாய இப்பத்துப் பாட்டுக்களையும் ஏதேனுமொருபடியினாலாவது ஓதவல்லமை வாய்ந்தவர்களுக்கு யாதொரு துயரமுமில்லை.

இத்திருமொழி கற்றார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிறது இப்பாட்டு.

மைத்தடங்கண்ணி யசோதை— மைதீட்டப்பெற்று, உத்தம ஸ்திரீகளின் லக்ஷணத்துக்கொப்ப விசாலமான கண்களையுடையளாயிருக்கிறாள் யசோதை என்கிறது. மைவண்ணனை இமையாது பார்த்துக்கொண்டிருப்பதால் கறுத்தும், பார்க்கும் பெருமையால் அதுதானே காதளவும் நீண்டும் அகன்றும் விளங்குகிறதுகள் அசோதையின் கண்கள் என்னலாம்.

தன்மகனுக்கு—தேவகி பெற்றாளேயாகிலும், ஓரிரவிலேயே அசோதையை யணுகிவளர்ந்தானாகையாலே, இங்ஙனம் உரைத்தபடி.

இவையொத்தன சொல்லி— அவன் எண்ணும் எண்ணத்துக்கும், செய்யும் செய்கைக்கும் சொல்லும் சொல்லுக்கும், ஒத்தபடியெல்லாம் பாவித்துப் பேசினபடியைச் சொல்லுகிறது.

உரைத்த மாற்றம்—இப்படிகளையெல்லாம், சந்திரனை நோக்கி நல்ல வார்த்தையாகவும், சிறிது அச்சமுறுத்தியும் பேசிப்போந்தபடியைக் காட்டுகிறது

ஒளிபுத்தூர்—"சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு" என்கிறப்போலே, ஒளியின் நடுவே காணலாயிருக்கிறது ஸ்ரீ வில்லிபுத்தூர் என்கிற திவ்ய நகரி என்கிறது. "ஆழ்வாரும்" "ஆண்டாளும்" அவதரித்த க்ஷேத்ரமானதாலே அதன் புகழ் அளவிடமுடியாததன்றோ? இப்பெருமை கண்டுகொண்டே பின்புள்ளாரும் "மின்னார் தடமதிள்சூழ் வில்லிபுத்தூர்" என விரும்பி நின்றேத்தியதும்.

வித்தகன்— பெருமாளுக்கு மங்களம் பாடுவதில் பரம ஸமர்த்தர் என்கிறது. ச்ரிய:பதியே பர தேவதையென்று நிர்த்தாரணம் பண்ணின பரமஸமர்த்தர் என்கிறது. ஆண்டாளைப் பெற்றெடுக்கும்படியான ஆச்சர்யமான குணங்களையுடையவர் என்கிறது. கண்ணனின் அவதாரந்தொடங்கி பால லீலைகளை யெல்லாம் பரக்க அநுபவிப்பதில் பரம ஸமர்த்தர் என்கிறது. பின்னும் பலபடிகளாலும் போற்றலாம்.

விட்டுசித்தன்— "நானுன்னை யன்றியிலேன் கண்டாய், நீ யென்னை யன்றியிலை" என்கிறபடியே, ஆழ்வாருடையவும், எம்பெருமானுடையவும், சித்தங்களில் ,"எம்பெருமானும்" "ஆழ்வாரும்" அகலாதுவீற்றிருக்கும் ஏற்றத்தைப்போற்றி நிற்கிறது. எவர், எவர் மனதைவிட்டு நீங்கினாலும், "ஜலாங்மத்ஸ்யா விவோத்ருதௌ" (நீரிலிருந்து நீக்கித் தூக்கிப்போடப்பட்ட மீன்களைப்போலவே) என்கிறபடியே இருவர் நிலையும் உள்ளதாயிருக்குமென உணர்க.

விரித்த— அசோதை, அக்காலத்திலே ஒருபடிகொண்ட அநுபவ விசேஷங்களை அகல் ஞாலத்தவரனைவருமறியத் தான் நன்கு அநுபவித்தவண்ணமே விரிவாக வெளியிட்டருளினமையை விளக்குகிறது.

தமிழ்— அவ்வநுபவந்தன்னை வெளியிட்டதும், இனிய தான பாஷையினால் என்கிறது. தமிழ் என்னச் செய்தேயே ஓர் இனிமை புலப்படுகிறவாறு அறிமின்; தமிழில் உள்ள ஓர் பெருமைகொண்டே முன்னோரும் பின்னோரும் இதனைப் பெரிதும் போற்றிப்பேசிப் புகழ்கிறபடி. முதலில் ஆழ்வார்களின் அநுபவங்களை ஆராய்வோம்; முதலாழ்வார்கள் மூவரில் "பூதத்தார்" "யானே தவஞ்செய்தேன் ஏழ்பிறப்பு மெப்பொழுதும், யானே தவமுடையேனெம்பெருமான், யானே இருந்தமிழ் நன் மாலை யிணையடிக்கே சொன்னேன், பெருந்தமிழன் நல்லேன் பெரிது" (இர. திரு. 74) என்று, தான் தமிழ் பாஷையினால் எம்பெருமானைப் பேசப்பெற்ற பாக்கியமடைந்த காரணத்தால், "எனக்கார் நிகர் நீணிலத்தே" என்கிறபடியேயுள்ள ஒரு

ஸாத்விக அஹங்காரத்தைப் பூண்டு நின்றமையைக் கூறி நின்றார்; பிறர் மதங்களிலெல்லாம் உள்ளேபுக்கு ஆராய்ந்து, அவைகளை அஸாரங்கள் எனப் புறக்கணித்து, வைஷ்ணவமதத்தில் வேறான்றி விளங்கின "பக்திஸாரனும்" பிறர் மதங்களின் கொள்கைகளால் அவனையேத்துவது எப்படி அழகுபடாதோ, அப்படியே வட மொழி கொண்டு ஏத்துவதுகூட அழகுபடாததே, என ஒரு நினைவுகொண்டவரெனத் தம்மை அனைவரும் ஊஹித்தறியலாம்படி "விதையாக நற்றமிழை வித்தியென்னுள்ளத்தை நீ விளைத்தாய்" (நான்முகன் திரு. 81) (உள்ளமாகிற கழனியில் பக்தியாகிற பயிர் செழிக்க, நல்ல தமிழாகிற விதையை நீ விதைத்தாய், அதுவும் பலிக்கக்கண்டேன்) ஆகவே இனியெனக்கொரு இடரு மில்லையென்று இனியராகிறார். பக்தி முளைக்க, தமிழாகும் விதையல்லது வேறு விதை இல்லை; தமிழ் விதைத்த கழனியிற் தான் பக்தி விளையும், என்றும், மற்றும் எந்த பாஷைகளும் பக்தியாகும் பயிரை முளைப்பிக்கத்தக்க ஸாதனமன்றென்றுங் கூடத் திருவுள்ளங்கொண்டார் போலும். மஹாநுபாவரான இத் "திருமழிசைப் பிரானை", "செழுமாமணிகள்" என்கிற செவிக் கினிய செஞ்சொல்லுக்கு நேர் விஷயமாகக்கொண்டு மகிழ்ந்தேத் தின, மகிழ்மாலை மார்பினனை, மாறன் "சடகோபனும்" எம் பெருமான் காட்டுவித்த தமிழ் வேதத்தைத் தாம் பாடும்பாக்கியம் பெற்றதைப் பேசுமிடங்களில் அதற்குள்ள பெருமையை, "பாலேய்தமிழ்" என்றும், "தமிழ் மாலை" என்றும், "பண்டலையிற் சொன்னதமிழ்" என்றும், பலபடி பல விடங்களில் பரக்கப்பேசி, இத்தமிழ் வேதத்தை அவனுடன் ஏத்தின இப்பெருமை கொண்ட எனக்கு நிகராவார் நீணிலத்தில் எவருமில்லையென ஏத்தும் ஒரு திருவாய் மொழியில், வண் என்கிற ஒப்பற்ற ஒரு அடை மொழியையிட்டு, "வண்டமிழ் நூற்க நோற்றேன்" திரு. (4—5—10) என்று வெகு பெருமையுடன் வெளியிட்டுப் போந் தார். இங்கு, "திருவாறாயிரப்படியும்" "இத்திருவாய் மொழியை எம்பெருமானுக்கு நல்லராயிருப்பார் கேட்டால் என்படுவரோ என்கிறார்" என்று. இருமொழி கொண்டும் இனிதேத்தும் பெருமைவாய்ந்தவரென வழங்கப்படும் "குலசேகரப் பெருமா ளும்" இருமொழிகளாய் நிற்குமவனும் இலக்குமீநாயகனை,

என்றேத்துகிறவோரிடத்து, இருமொழிகளில் தமிழை முன்னே வைத்தும், அதனை "அந்தமிழ்" என்று ஓரழகு படுத்திப் பேசியும் போந்தார். மாறன் தமிழ் மறைக்கு ஆறங்கம் கூற வந்த "கலியனும்" தன் அநுபவ க்ரந்தங்களில், "செந்தமிழும்" என்றும், "வண்ண வொண்டமிழ்" என்றும், அருளிப்போந்ததோடு நில்லாமல், "கண்ணமங்கை நின்றானைக் கலைபரவும் தனியானையைத், தண்டமிழ், அப்யஸிக்கக் கருத்துண்டாகில் ஓதவாருமென்று உறைப்புடன் பேசினர். மாறனையல்லால் மறந்தும் தெய்வம் மற்றறியேனென்கிற "மதுரகவியும்" "அருள்கொண்டாயிரம் இன்தமிழ் பாடினான்" என்றேத்திநின்றார். மற்றும் ஆழ்வார்கள் படியும் ஆராய்ந்தால், இப்படியே பெருமையுள்ளதாய் விளங்குமென்பதில் ஓர் ஐயமில்லை. அமுதனாரும் தன் அநுபவத்தில் "பசுந்தமிழ்" என்றும், "சேந்தமிழ் ஆரணம்" என்றும், "ஈரத் தமிழ்" என்றும், இவ்வண்ணம் பலபடி போற்றி, தம் ஆசிரியரான இராமாநுசனுக்கும் இதனில் அவா அளவிலடங்காததே என்றும் அருளிப்போந்தார். உபயவேதாந்தாசார்யரென்று உலகமெங்கும் ப்ரஸித்திபெற்ற "ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன்" ஆழ்வார்களை அபிநவ தசாவதாரமென்றும், அவர்கள் மொழியும் செய்ய தமிழ், ஸர்வோப ஜீவ்யமான தண்ணீர், என்றும், வடமொழி வேதத்துக்கே, ஸமுத்ர ஜலத்தை, ஒத்ததென, ஒருபடி விநோதமாகப் பேசியும் போந்ததோடு நிற்காதே, தமிழாகும் விதையன்றி எம்பெருமானைக்கிட்டி அநுபவிக்க ஸாதனமான பக்தியாகும் பயிர் விளையாதென்று "பக்திஸாரர்" பணித்தாப்போலே, செய்ய தமிழினாலாய மறையை அறிந்தால் தான், தெளியாத மற்றும் மறைநிலங்களெல்லாம் தெளியலாகும் என்றும், தமிழ் வேதந் தன்னை ஓதி யுணர்ந்தவர்கட்கே, இந் நிலவுலகில் தானே, அவ் விண்ணுலகில் மேவிப் பெறத்தக்க அந்தமில் பேரின்பமெல்லாம் அநுபவிக்கும் பாக்கியம் உண்டாகும் என்றும், இங்கு தமிழ் கொண்டு அநுபவிப்பதுபோலவே, அங்கு சென்றாலும் தமிழ்ப் பல்லாண்டே இசையுடன் பாடக் கூடியது என்றும், பரக்கப் பேசியும், "பரமபதஸோபாநம்" என்கிற ரஹஸ்யப்ரபந்தத்தில் எம்பெருமானைக்கிட்டி அவன் திவ்யாவயவங்களைப், பாதாதி கேசமதாகக் கண்டு ஏத்தி நிற்பதற்கு, செந்தமிழாரணத்தில்

சொன்ன அந்த அந்த சப்தங்களையேயிட்டு அநுபவிப்பது என்றும் உபதேசித்து, இது, பரோபதேசத்தில்தான் முடிவு பெற்றதோ என எவரும் என்னைங்கொள்ள இடங்கொடாமல் தன்னையும், "சந்தமிகு தமிழ் மறையோன்" என்றே அஸாதாரண மாகப் பெருமையுடன் பேசி மிகவும் அகமகிழ்ந்தாரன்றோ? பின்னும் இதனை சிறிது பேச ஆரம்பித்தாலும் மிகப் பெருகு மித்தனை; ஆகவே தமிழின் பெருமையைத் தனியேபேசப் புறப்படும்போது அங்கே கண்டுகொள்க. ஆகவே முன்னும் பின்னும் எக்காலத்தும் எவரும் இனிதேத்தும் தமிழ் பாஷை கொண்டு, "செந்தமிழ்த் தென்புதுவை விட்டுசித்தன்" எனத் திருநாமம் பூண்ட இவரும் அருளிச்செய்தாராயிற்று.

இவை— இப்படி அவன் அம்புலியை யழைக்கிறதாகப் பேசின பருவத்தில் அமைந்த அநுபவமான ஒரு பத்துப் பாட்டுக்களையும் என்றபடி.

எத்தனையும்சொல்ல வல்லவர்க்கு— தகுந்த மனோபாவத் துடன் அவர்கள் தாங்கள் பேசவேண்டாம்; "ஹரிர்ஹரதி பாபாநி துஷ்டசித்தை ரபிஸ்ம்ருத: | அநிச்சயா பி ஸம்ஸ்ப்ருஷ்டோ தஹத்யேவஹிபாவக: ||" (கெட்ட மனதுடையவர்களாலும் நினைக்கப் பட்ட பெருமாள், பாபத்தைப் போக்கடிக்கிறார்; எண்ணமில்லாமே தொடப்பட்டாலும் அக்நியானது கொளுத்திவிடுகிற தல்லவா) என்கிறப்போலே எப்படிப் பேசினாலும் பாதகமில்லை; பேசும் திறமை பெற்றிருக்குமதுவே வேண்டுவது; என்கிறபடி.

இடரில்லையே— யாதொரு பகவதநுபவ விரோதியான துயரமும் அவர்கட்கில்லை என்கிறது.

தன் என் சுற்றும் சக்கரம் அழகிய தண்டு பாலகன் சிறியன் தாழியில் மைத்தடம் உய்ய.

ஆழ்வாரெம்பெருமானுர் தேசிகன் திருவடிகளே சரணம்.

முதற்பத்து ஐந்தாம் திருமொழி உரை முற்றிற்று.